மாறு கேட்டுக் கொண்டு வந்துவிடு. சுகமே போய்வா" என்று கட்டளையிட்டு அனுப்பினர்.

**அக்கட்டளையைச்** சிரமேற்றாங்கி, **இளைய இராமலிங்கரும்** கையில் பெரிய புராணத்தை எடுத்துக்கொண்டு, செட்டியார் வீட்டிற்குச் சென்று வணங்கி, தமயனர் உடல் நலமின்மையைப் பற்றித் தெரிவித்து அவருக்குப் பதிலாகத் தாம் இரண்டொரு பாடல்களைச் சொல்வதாகத் தெரிவித்தார். செட்டியார் வருந்தி 'சும்மா விட்டுவிடாமல் இதுவாகிலும் நடக்கிறதே' என ஒருவாறு தேறி ஆரம்பிக்கச் செய்தார்.

**பெருமான் தொடங்கினர் பிரசங்கத்தை** — இரவு ஒன்பது மணிக்கு முடிவுபெறும் பிரசங்கமானது **பனிரண்டாவது மணிக்கு இரண்டு வரிகளே முடிவுற்றன.** பிள்ளைப் பெருமான் பிரசங்கமோ செவிக்கு இன்பமளிக்கும் அவ்வளவிலில்லை; ஊனுக்கும் இன்பமளித்தது, உயிருக்கும் இன்பமளித்தது. இவ்வளவு மதுரமான இப்பிரசங்கத்தைக் கேட்ட அவ்வவையினர் அளவில்லாத ஆனந்தத்தை யடைந்தனர். அவருடைய இனிய குரலோசை எங்கும் ஒலித்து ஆங்காங்கு இருந்தவர்களும் ஆச்சரியத்துடன் ஓடிவந்து பெருங்கூட்டமாகக் கூடினர். ஆறறிவிற் குறைந்தகீழ்ப்பறவைச் சாதிகளும் அப்பிரசங்கத்தைக் கேட்டிருப்பின்,— வேட்டமுறும்; பொல்லாப் புலி, கரடி போன்ற விலங்கினங்களும் — மெய்ஞ்ஞான நாட்டமுறும் என்னில், **அருட்குமரனருள் பெற்று விளங்கும் நம் அருட்பிரகாசனர் அமுத வாக்கைக்** கேட்ட அவர்கள் அடைந்த ஆனந்தம் ஒரு **வியப்போ !**



## 14. தமயனர் உண்மை உணர்தல்

**ஆனந்தங்கொண்ட** அவ்வவையினர் பிள்ளைப் பெருமானரே அப் புராணத்தை முடித்தருளல் வேண்டுமெனச் சபாபதி பிள்ளையை வேண்டினர். அதற்கு அவரும் இசைந்தார். எனினும் அவருக்கு ஐயந் தோன்றியது. "என்ன இது? ஒரு புதுமையா யிருக்கிறதே! நம்முடைய தம்பியோ, நம் கல்வி பயிலவிட்ட காலத்துக் கருத்தில்லாதவனய் அதனைப் பயிலாது பொழுது போக்கினவனயிற்றே; அவனுடைய பிரசங்கம் எவ்வாறு இனிமை யுடையதாயிருக்கும்; இதனை நாமும் ஒரு நாள் ஆராய்ந்தறிதல் வேண்டும்" என்று துணிந்து ஒருநாள் பிள்ளைப் பெருமானர் பிரசங்கம் செய்யும் இடத்தில் ஒருசார் மறைவாக வீற்றிருந்து பிரசங்கத்தைக் கேட்டார்; கேட்ட அவர்க்குப் பிரசங்கஞ் செய்பவர் "**தமது தம்பிதான ?**" என்னும் ஐயமுண்டாயிற்று.

**உண்டான** ஐயத்தால் மறுபடியும் உற்றுநோக்கி "**தம்பியார் தான்**" எனத் தீர்மானித்தார். அதன்பின்பு தெய்வத்தன்மை பொருந்திய அவரைத் '**தணிகாசலமாந் தலத்தமர்ந்த சைவமணியாம் சண்முகனே !**—தம்பியல்ல,'—என்னும் முடிவுக்கு வந்தார். உடனே தமது மனைக்குச் சென்று அருமைமிக்க மனைவியாரை அழைத்தார். "ஆருயிரனையாய்! நான் இதுவரை நமது இராமலிங்கத்தைத் தம்பியென நினைத்

திருந்தேன்; அதனால் பல தவறுகளுமிழைத்தேன் தணிகைக் குமரனே தம்பியாய் அவதரித்திருக்கிறார் இன்றல்லவோ அவ்வுண்மையினை உள்ளவா றுணர்ந்தேன் ஓதாதுணரவல்ல அவ்வுத்தமரை ஓதிவர விடுத்தேன், ஓதாமையைக் கண்டு உள்ளங் கசந்தேன், உணவளிக்கவும் மறுத்தேன், உடையளிக்கவும் வெறுத்தேன் ஐயோ! என்னுடைய அச் செய்கைகளெல்லாம் அவர் பெருமையை யறியாத உன்மத்தரின் செயல்களாக முடிந்தனவே" என்று பற்பலவாக வியந்தும் வருந்தியும் கூறித் தமது தம்பியாரைத் தெய்வமாகக் கொண்டு சீர்பெற்றுய்யுமாறு அவருக்கும் பணித்தார் அக்கட்டளையைச் சிரமேற்கொண்ட அவ்வம்மை யாரும் நம் பிள்ளைப் பெருமானாரிடத்து அன்றுமுதல் பெரும் பயபக்தி யோடு நடந்துகொள்வாராயினர் ஆனால் அவர் செய்கை நம் பெருமானா ருக்கு அருவருப்பாகவே யிருந்தது

# 15. ஒற்றியூர் பெருமான் உபாசனை

செல்வ மிகுந்தோங்கும் சென்னைக்கு அணித்தாயும், ஆளுடைய நம்பி, ஆளுடைய பிள்ளையார், ஆளுடைய அரசு எனும் மூவர்களின் பாடல் கொண்ட முதுமை யுடையதாயும்,—சுந்தரமூர்த்தி சுவாமிகளைச் சங்கிலி நாச்சியார் மணவாள ராகக் கொண்ட மாண்புடையதாயும்,—மாணிக்கத் தியாகர், இளமைதந்த தியாகர், **எழுத்தறி பெருமானார்**, வியாகரண ஈசுவரர் முதலாய மூர்த்தி களையுடையதாயும்,—விளங்குவது **திருவொற்றியூர்த் திருத்தலம்.**

**அத்தகு** திருப்பதியின் சிறப்பை யறிந்த நம் பிள்ளைப் பெருமான் நாள்தோறும் மகிழ்வோடு அத்தலத்திற்குச் சென்று, ஆங்கு எழுந்தருளி யிருக்கும் எழுத்தறி பெருமானும் **தியாகப் பெருமானுக்கு** அருட்பா வெள்ளத்தால், உள்ளங்குளிர இன்பநீராட்டினார்.

சிந்தை மயங்கித் தியங்குகின்ற நாயேனை
முந்தை வினைகொலைகத்துஉன் மொய்கழற்கா ளாக்காதே
நிந்தையுறும் நோயால் நிகழ்வைத்தல் நீதியதோ
எந்தைநீ யொற்றி எழுத்தறியும் பெருமானே

பூமாந்தும் வண்டெனநின் பொன்னருளைப் புண்ணியர்கள்
தாமாந்தி நின்னடிக்கீழ்ச் சார்ந்துநின்றா ரையோநான்
காமாந்த காரமெனுங் கள்ளுண்டு கண்மூடி
ஏமாந்தே னொற்றி எழுத்தறியும் பெருமானே.

மன்னு ருத்திரர் வாழ்வைவேண் டினையோ?
மால்வன் பெறும் வாழ்வுவேண் டினையோ?
அன்ன வூர்திபோ லாகவேண் டினையோ?
அமையு மிந்திர னாகவேண் டினையோ?
என்ன வேண்டினுந் தடையிலை நெஞ்சே!
இன்று வாங்கிநா னீகுவ னுனக்கே
வன்னி யஞ்சடை யெம்பிரா னொற்றி
வளங்கொ ளூரிடை வருதியென் னுடனே

**என்பனவாகிய** பல அருமைப் பாடல்களைப் பாடி வருவா ராயினர். (**இரண்டாந் திருமுறை முழுதும் கவனிக்கவும்**) ஆங்கு எழுத்தறி பெருமானுடைய பிராகாரத்தில் எழுந்தருளி யிருக்கும் **முருகப்பெருமானிடம்** நின்று நெடுநேரம் தியானிப்பது வழக்கம்.

## 16. நூலாசிரியரானது

**இங்ஙனமாகத்** திருவொற்றியூர்த் தியாகராய வள்ளலைத் தினமுந் தொழுது திருவருளுடையாராய்த் திகழும் பிள்ளைப் பெருமானைச் சூழ்ந்திருந்த பல வித்வான்களுள் அந்நாளிலிருந்த **காஞ்சீபுரம் மகாவித்வான் சபாபதி** முதலியார் என்பவர், சுவாமிகளின் ஆற்றலை நன்கு அறிந்தவராதலால், 'அவர் திருவாக்கால் ஓர் உரை நடை வெளிவரவேண்டும்' என்னும் எண்ணங்கொண்டு, சிறுவர்கள் படித்தற்கு அரியதொரு நூலை ஆக்கிக்கொடுக்க வேண்டுமென வேண்ட, அவரின் வேண்டுகோட் கிணங்கி, நம் அருட் பிள்ளையாரும், பெரிய புராணத்துள்ள மனுவெனும் வேந்தனுடைய அருமைச் சரித்திரத்தை **'மனு முறை கண்ட வாசகம்'** என்னும் பெயரோடு உரைநூலாகப் பண்டிதரும், பாமரரும் படித்துணர்ந்து, பயன்பெறத்தக்க நிலையில் மிக அழகாகச் **செந்தமிழ்ச் சுவைசெறிய, நவரசம் ததும்பப், கல்லுங் கரைய, ஜீவதயவு விளங்க** எழுதிக் கொடுத்தார். அந் நூலைப் படித்துப் பார்ப்போருக்கு அதன் அருமை மிக நன்றாக விளங்கும். காஞ்சி - மகாவித்வான் சபாபதி முதலியாரும் அந்நூலைப் பெரிதும் புகழ்ந்துரையாடி அதனைப் போற்றிப் படித்துப் புண்ணியம் பெறுமாறு மற்றையோருக்கும் அறிவுறுத்தி வந்தார். அந்நூலை வாங்கிப்படித்து அருட்பிள்ளையாரின் அருமையையும் பெருமையையும் உணர்ந்துகொண்டு அவர்களின்மீது அன்பு செலுத்தத் தலைப்பட்டவர்கள் அநேகர்.

## 17. தொண்டமண்டலமா? தொண்டைமண்டலமா?

**அவ்வநேகருள்** சென்னைமா நகரிலிருந்த புலவர்களும் பலர். ஆதலால் அவர்களுள் நிகழ்ந்த ஓர் ஐயத்தினை, அருட் பிள்ளையாரி னிடத்துத் தீர்த்துக் கொள்ளுவதென அனைவரும் ஒருங்குகூடி முடிவு செய்துகொண்டு, பெருமானிடத்து வந்து தங்களின் ஐயத்தை அகற்றி உண்மையை விளக்க வேண்டுமென வேண்டினர். அதற்கவர்களும் இசைய, "அருள்வலியுடைய ஐயா! அடியேங்கட்குத் **தொண்ட மண்டலமா? தொண்டை மண்டலமா?** என்னும் ஐயம் நேர்ந்திருக் கிறது. அதனைத் தங்களே விளக்கி யருளல் வேண்டும்" என்று வினயத்தோடு வேண்டினர். அவர்கள் வேண்டியாங்கு, ஒல்காப் பெரும் புகழ்த் **தொல்காப்பியம்** முதலாய பேரிலக்கண நூல்களின் சான்று களைக் கொண்டும் பிற இலக்கியங்களைக் கொண்டும் "**தொண்ட மண்ட லம்**" எனவே வழங்கல் வேண்டுமென எவரும் ஏற்றுக் கொள்ளும் வண்ணம் சென்னை, தங்கசாலை வீதி 361-வது எண்ணுள்ள **தொண்ட மண்டலம் துளுவ வேளாளர் உயர்தரக் கலாசாலையில்** நிரம்பிய அறிஞர்கள் அவையில், எடுத்துரைத்தனர் அப்புலவர்களும் அவ்வுண

மைச் சமாதானத்தை முகமலர்ச்சியோடு ஏற்று, அவ்வாறே அதனை வழங்கத் தொடங்கினார். **தொண்டமண்டலம் துளுவ வேளாளர் இயற்றமிழ்ப் போதகசாலை** இரட்சகக் கர்த்தாவாகிய **கொண்ணூர் ஐயாசாமி முதலியாரவர்கள்** அவ்வாறு பிள்ளைப் பெருமான் - **தொண்டமண்டலம்** என்று வழங்குவதே முறை என்று நிறுவிய பேருரையைப் புத்தக வடிவமாக்கித்தரப் பெருமானை வேண்டினார். பெருமானும் வேண்டியபடியே அவ்வுரையினைப் புத்தகமாக்கித் தந்தார்கள். 'அதுவே **தொண்டமண்டல சதகம்**' என்னும் நூல். இதனைத் திருவருட்பா—வசனபாகத்தில் காண்க.

**தொண்டமண்டல** சதகமென்னும் அந்நூலிற்குக் காஞ்சீபுரம்-மகா வித்வான் சபாபதி முதலியாரும், புரசை-அஷ்டாவதானம் சபாபதி முதலியாரும், விருத்தாஜலம்-தியாகராஜக் கவிராயரும், புதுவை-சுப்பராய முதலியாரும், மற்றுமுள்ள அக்காலத்திருந்த பெரும் புலவர்களும் **சாற்றுகவி** யளித்தார்கள்.

**இந்நூல்** வெளியீட்டிற்குப் பின், பிள்ளைப் பெருமான் "**ஒழிவிலொடுக்கம்**" என்னும் உயரிய நூலின் **சிறப்புப் பாயிரமாகிய** ஒரு பாட்டிற்கு மட்டும் ஒரு அரிய பேருரை எழுதி அனைவரும் அந்நூலின் கருப் பொருளை உள்ளவாறுணருமாறு வெளியிட்டார்கள். இதனையும் திருவருட்பா—வசனபாகத்தில் காண்க.

**இதுவரையில்** பெருமான் **சிவநேசவெண்பா, நெஞ்சறிவுறுத்தல், மகாதேவ மாலை, இங்கித மாலை** முதலிய விழுமிய பொருள்களையுடைய பாமாலைகளையும் **இரண்டாந் திருமுறையையும்** திருவாய் மலர்ந்தருளினார்கள்.

## 18. மாணவர் தொழூவூர் வேலாயுத முதலியார்

**இவ்வண்ணமாகப்** பல அரும்பெரும் பாடல்களைக் கருணைமேலீட்டால் உலகோருய்யும் வண்ணம் திருவாய் மலர்ந்தருளுகின்ற நம் பிள்ளைப் பெருமானுடைய பெருமையை யுணராதிருந்த, **தொழூவூர்: வேலாயுத முதலியார்** என்னும் செந்தமிழ் வித்வான் மிகக் கடினமான நடையில் நூறு சிலேடைப் பாட்டுகளைப்பாடி, "இப் பாடல்கள் பழைய ஏட்டுச் சுவடியிலிருந்து எனக்குக் கிடைத்தன" வென்றும், அவைகளைச் 'சங்க காலத்துப் புலவர்கள் பாடினார்' என அவ் வேட்டில் குறிக்கப்பட்டிருக்கின்றது என்றும் நம் பிள்ளைப் பெருமானிடங் கொண்டுவந்து காட்டினார்.

**மூன்று காலங்களையும்** உணரவல்ல நம் பிள்ளைப் பெருமான், 'இப் பாடல்களைப் பாடியவர் இவரேயாகல் வேண்டும்' என்பதை உணர்ந்து, 'இவர்க்குள்ள முனைப்பை யொழித்துச் சன்மார்க்கத்தில் இவரைத் திருப்பவேண்டும்' எனத் திருவுளத் தெண்ணியவராய், "**அப்பா!** இப் பாடல்கள் பொருளிலக்கணந்தேறாக் **கற்றுக்குட்டி பாடியவை**; சங்கப் புலவர் பாடியவை யல்ல; அவர்கள் பாடி யிருப்பரேல் இவ்வளவு பெரும்பிழைகளிரா" என்று கூறினார்.

**அவ்வுரைகளைக் கேட்ட தொழுவூர் வேலாயுத முதலியார்** பெருமானுடைய ஆற்றலைக் கண்டு உள்ளம் நடுங்கி தம்முடைய முனைப்பை இழந்து, அப்பொழுதே பிள்ளைப் பெருமானரின் அடி பணிந்து, தம்மை மன்னித்து, ஆட்கொண்டருளல் வேண்டுமென வேண்டினார். பெருமானும், முதலியார் பரிபக்குவ நிலையையுணர்ந்து, **'புதியவ னல்லன், பழையவன்றான் — நம் பிள்ளை நமக்கே கிடைத்தான்'** — எனத் தேறுதல் கூறி ஆட்கொண்டார். அன்றுமுதல் அவரைத் **நல்ல மாணவ ராகக்** கொண்டு, அவர்க்குத் தமிழ் மொழி நூல்களில் ஏற்பட்ட ஐயங்களை அடிக்கடி அகற்றியும், அவ்வவற்றின் உண்மைப் பொருள்களை உணர்த்தியும், **ஆரியமொழி** நூல்கள் பலவற்றைப் போதித்தும் வந்தார்கள். அடிகளின் திருவருளுக் கிலக்காகிய நாள் முதலாக அம் முதலியாருக்குக் கலவிப் பெருக்கம் முன்னையினும் பன்மடங்கு அதிகமாக, அதனால் அவருக்குப் பிரபலமான பேரும் புகழும் உண்டாயின. அதோடு நம் பிள்ளைப் பெருமானார், அம் முதலியாருக்குக் **குமரவேள்** திருவருள் உபாசனையையும் உபதேசித்தருளி, **'உபய கலாநிதிப் பெரும் புலவர்'** என்னும் பட்டமு மளித்தார்கள்.

**பிறகு,** சென்னை — நரசிங்கபுரம் — வீராசாமி முதலியார், **பொன்னேரி-சுந்தரம் பிள்ளை**, ஸ்ரீநிவாச வரதாச்சாரியார், ஞானசுந்தர ஐயர், கிரியா யோக சாதகராய பண்டார ஆறுமுக ஐயர் * முதலியோரும் பெருமானரின் சிறந்த மாணவர்களானார்கள்.

**பின்னர்,** தமிழ் நாட்டில் எங்குமுள்ள பண்டிதர்களும், தம்பிரான் முதலியோரும், பெருமானரின் பெருமையைக் கேட்டுத் தங்கட்கு ஏற்படும் ஐயங்களையும் வந்து கேட்டுத் தெளிந்து செல்வார்களானார்கள்.

**இப்படியாகப்** பெருமானார், சென்னையம்பதியிலும் பிற ஊர்களிலுமுள்ள அநேகருக்கு அவரவரின் பக்குவ நிலைக்கேற்றவாறு, அறிவு கொளுத்தி, அளவிலாப் புகழுடன் விளங்கிவந்தார். அந் நாளிலுங்கூட நகரத்திலிருக்கும் அவ்வாழ்க்கை தமக்குப் பிடியாது, பல வேளைகளில் சென்னைக்கு வெளியிலே தனிமையாகச் சென்று விடுவார். சென்று, ஆங்குள்ள மணமேடுகளிலும், சிறு குன்றுகளிலும் அமர்ந்து **உள்ள நிறைவினை—உண்மை நெறியினை—ஒருமைப் பாட்டினைக்** கடைப்பிடிப்பார். அவ்வளவோடு மட்டுமில்லை, இரவு வந்து விடின் அம் மண மேடுகளிலேயும், குன்றுகளிலேயும் இருந்துவிடுவார். இதனை நம பெருமானரே,

தேட்டிலே மிகுந்த சென்னையி லிருந்தால் சிறுகுறும் என்னுளம் பயந்தே
நாட்டிலே சிறியவூர்ப் புறங் களிலே நண்ணினேன் னூர்ப்புற மடுத்த
காட்டிலே பருக்கைக் கல்லிலே புன்செய்க் களத்திலே திரிந்துற்ற இளைப்பை
ஏட்டிலே எழுத முடியுமோ இவைகள் எந்தைநீ யறிந்தது தானே.

என்றெடுத் தோதுமாற்றாற் றெளியலாகும்.



---

* பண்டார ஆறுமுக ஐயர் அவர்கள் பெருமானிடம்
விநாயக புராணம் முழுதும் பாடம் கேட்டவர்.

## 19. பெருமானரின் திருவிளையாடல்கள்

இவ்வாறிருந்து வரும் நாளில், ஒரு நாள் இரவு, சென்னை இலக்ஷ்மணப்பிள்ளையும், திருமழிசை கந்தசாமி முதலியாரும் தொடர்ந்துவரப் பெருமானர் திருவொற்றியூருக்குச் சென்று கொண்டிருந்தார். அப்பொழுது இடையில் ஒரு மோகினி வந்து பின் வந்த இருவரை மாத்திரம் வழிமடக்கியது. அது கண்ட நம் பெருமான் "பிச்" என்று கூற, உடனே அது அவ்விடத்தை விட்டு மறைந்து போயது.

மற்றொருநாள், தம்முடைய மாணவர்கள் பலரும் தம்மைச் சூழ்ந்துவரத் திருவொற்றியூருக்குச் செல்லும்போது, இடைவழியில் மழை வந்தமையால் பெருமானர் குறுக்கு வழியாக ஒரு சந்து வழியில் நுழைந்து ஒரு கணத்தில் திருவொற்றித் தலத்தை அனைவரும் அடையும்படி செய்தார். அக்கூட்டத்தில் சோமு செட்டியார் முதலிய அன்பர்களும் இருந்தனர்.

அன்றிரவு தரிசனம் முடிந்தபின், மழையினல் வெளிவர முடியாமல், வாகன மண்டபத்திலேயே தங்க நேர்ந்தது. அதனல் அனைவரும் பசியினல் வருந்த, வடிவாம்பிகை சன்னிதிக்குச் சென்று அம்மையார் திருவருளால் அனைவருக்கும் அன்னமளிக்கப்பட்டது. பெருமான் அன்னையார் கருணையை நினைந்து 'வடிவுடை மாணிக்க மாலை'யைத் திருவாய் மலர்ந்தருளினர்கள்.

> தீதுசெய் தாலுநின் னன்பர்கள் தம்முன் செருக்கிநின்று
> வாதுசெய் தாலுநின் றுண்மறந் தாலு மதியிலியேன்
> ஏதுசெய் தாலும் பொறுத்தருள் வாயொற்றி யின்னிடைப்பூ
> மாதுசெய் தாழ்குழன் மானே வடிவுடை மாணிக்கமே.

[அக்காலங்களில் ஒற்றியூருக்குச் செல்லும் வழி தகுந்த பாதையின்றி மணல் வெளியாகவே யிருந்ததால் தரிசனர்த்தமாகப் போய் வருவதே கஷ்ட சாத்தியமாகும்.]

பெருமான் ஒருநாள் ஒற்றியூர் சென்று தரிசித்தபின் அன்றிரவு ஒரு சத்திரத்திலேயே தங்கி அயர்ந்தபோது, ஒருவர் குருக்கள்போல் வந்து அன்னமளித்துச் சென்றார். பின்னர் குருக்கள்தானே? என்று விசாரித்தபோது அவர் வெளியூர் சென்று இரண்டுநாட்காயிற்று எனத் தெரிந்தது. தியாகப் பெருமானே குருக்களாக வந்து அன்னமளித்ததாகத் தெரியவந்தது.

பின்னெருநாள், ஒற்றியூர்ப் பெருமானைத் தரிசித்து விட்டுப் பெருமானர் ஓரிடத்தில் படுத்திருக்க, அதனை யறிந்த கள்வனெருவன், இவரருகில் வந்து வலது காதிலிருந்த கடுக்கனைக் கழற்றினன். அதனை யறிந்துகொண்ட பெருமானர், அறியாததுபோலவே யிருந்து தமது இடது காதினையும் திருப்பிக் காட்ட அக்கள்வன் இடக்காதிலுள்ள கடுக்கனையும் கழற்றிச் சென்றான்.

## 20. வைணவப் பிரசங்க வன்மை

**இங்ஙனமாக அருட்பெருஞ்ஜோதி ஆண்டவனர்** அருளமுத மாந்தி—அருள விளையாட்டயரும நமபெருமானை, ஒருகால சில வைணவாகள தமமுடைய சமயச சாாபாக ஏதாவது அருமபொருளகளைப் பறறிய உபநியாசமொனறைச செய்தருளித தஙகளை உயவிககவேண்டுமென வேணடினர் பெருமானும அவாதம விருபபிறகிணஙகி, அச சமயச சார்புடைய **'குரு பரம்பரை பிரபாவம'** எனனும அரிய நூலினை விளககிப் பலவகை வைணவப் பிரபநதங்களின மேறகோளகளுடன எடுத்துரைதது அவாகளுளளததைக களிபபிததனர் அநநாளிலிருநது **வைணவர்கள்** அனைவரும நமபெருமான சைவ சமய உணமைகள மடடும அறிநதவர் எனறு கொணடிருநத எணணததை அறவே விடுத்தாகள

## 21. பொருள் நயவாமை



ந**ம் பெருமானுக்குப்** பொருள விருபபு ஒரு சிறிதுங கிடையாது அதனிடத்திலிருககிற வெறுபபு மிகுதியினுல, அப பொருளுடையாாபால அணுகுவதையும அவர்கள வெறுத திருநதார்கள. அவ் வுணமையினை,

பொருளிலே யுலகம இருபப தாதலினுல புரிநதுநாம ஒருவாபாற பலகால
மருவிறை பொருளின இசசையால பலகால மருவுகின றுனெனக் கருதி
வெருவுவ ரெனநான அஞசி யெவவிடததும மேவிலேன எநதைநீ யறிவாய
ஒருவு மபபொருளை நினைததபோ தெலலாம உவட்டினேன இதுவுநீ யறிவாய.

**பணத்திலே** சிறிதும ஆசையொன றிலைநான
    படைததஅப பணஙகளைப பலகால
**கிணற்றிலே யெறிந்தேன் குளத்திலும எறிந்தேன்**
    **கேணியி லெறிந்தனன் எந்தாய்!**
குணததிலே நீதான கொடுககின்ற பொருளை
    யெறிகலேன கொடுககினறேன பிறாககே
**கண**ததிலே யெலலாங காட்டுகின னருளை
    கணடன னினிசசொலவ தெனனே.

**சடமாகி** யினபந தராதாகி மிகுபெருஞ
    சஞசலா கார மாகிச
  சறறுகி வெளிமயற பறறுகி ஓடுமித
    தனமைபெறு செல்வம் அநதோ
விடமாகி யொருகபட நடமாகி ஆறறிடை
    விரைநது செலும வெளளமாகி
  வேலையலை யாகிஆங காரவலை யாகிமுதிா
    வேனிலுறு மேக மாகிக
**கட**மாய சகடமுறு காலாகி நீடுவாயக
    காலோடு நீரா கியே
  **கற்பிலா மகளிர்போற்** பொறபிலா துழலுமஇது
    **கருதாத வகை யருளுவாய்**

தடமேவு சென்னையிற் கந்தகோட் டத்துள்வளர்
சலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே.

என்னும் அருமைப் பாடல்கள் **செல்வ நிலையாமையை** மிக அழகாக விளக்கிக் காட்டுகின்றன. இவ்வண்ணம் **பொருளிச்சையை வெறுத்திருந்தார்** நம்பெருமானுக்குச் சென்னையிலிருந்த சோமு செட்டியாரும் இன்னும் பல பொருளாளர்களும் தங்கள் தங்கள் வீடுகளில், பெருமானார் பிரசங்கங்கள் புரிவதற்குப் பிரதியாகப் பொருள் கொடுப்பார்கள். அதை இவரும் வாங்குவார்போல வாங்கிச் சிறிது தூரம் வந்ததும் **ஓட்டின் மேலூர், தெருவிலுமாக** எறிந்துவிடுவார். இந்நிகழ்ச்சியை அறிந்துகொண்ட அச்செல்வர்கள், பொருளைப் பெருமானரிடங் கொடாது மூத்தவராகிய சபாபதிப் பிள்ளையினிடஞ் சேர்ப்பித்து விடுவார்கள். பெருமான் சிறுவயதுமுதல் உலகபோகங்களைத் துச்சமாகக் கொண்ட பெரியார் என்றும், **செப்பமாகப் பாடும் செந்நாப்புலவர்** என்றும் அடக்கமே பொருளெனத் தேர்ந்த அருளாள ரென்றும் பலர் அதிசயித்த உணர்விலராய்ப் பழகிவந்தனர்.

**பெருமான்** சிறுவயதில் நடந்து கொண்ட முறைகளைக் கீழ்க் கண்ட பாடல்களே தெளிவாக விளக்கும்.

கையுற வீசி நடப்பதை நாணிக் கைகளைக் கட்டியே நடந்தேன்
மெய்யுறக் காட்ட வெருவி வெண் துகிலால் மெய்யெலா மையகோ மறைத்தேன்
வையமேற் பிறர்தங் கோலமு நடையும் வண்ணமு மண்ணலே சிறிதும்
பையநா னூன்றிப் பார்த்ததே யில்லை பார்பபனேல் பயமிகப் படைப்பேன்.

காட்டுய ரணைமே லிருக்கவும் பயந்தேன் காலின்மேற் கால்வைக்கப் பயந்தேன்
பாட்டயல் கேட்கப் பாடவும் பயந்தேன் பஞ்சணை படுக்கவும் பயந்தேன்
நாட்டிய வுயர்ந்த திண்ணைமே லிருந்து நன்குறக் களித்துக்கால் கீழே
நீட்டவும் பயந்தேன் நீட்டிப் பேசுதலை நினைக்கவும் பயந்தன னெந்தாய்.

## 22. மக்களைப் பாடாத மாண்பு

**கந்தசாமி முதலியாரென்பார்** தாங்கொணு வறுமையினல் அடிகளிடமணுகி, "எனது வறுமையை நீக்கிக் கொள்ளும் பொருட்டாகச் சுவாமிகள் சில பிரபுக்களுக்குச் சீட்டுக் கொடுத்தருள வேண்டும்" என வேண்டினார். வள்ளலாரோ, அவரைநோக்கி,

"ஏட்டாலுங் கேளயலென்பாரை நான்சிரித்து என்னை வெட்டிப்
போட்டாலும் வேறிடங்கேளேன் என்னுணைப புறம் விடுத்துக்
கேட்டாலும எனனையுடையா னிடஞ்சென்று கேட்ப னென்றே
நீட்டாலும் வாயுரைப் பாட்டாலுஞ் சொல்லி நிறுத்து வலே"

என்னும் திருப்பாடலைக் கூறி "நாம் எதற்கும் **எல்லாம்வல்லவராகிய அருட்பெருஞ்ஜோதி இறைவரையே வேண்டுவமல்லது**, இவ்வுலக மாந்தரை மதித்து ஏற்கமாட்டோம்; நீரும் அவ்வழியே பற்றி ஆண்டவரையே வேண்டினல் அவனருளால் உமது வறுமை, சூரியனைக் கண்ட பனிபோல் விலகிவிடும்" என்று உபதேசித்தனுப்பினர்.

## 23. சாற்றுகவி யளித்தல்

**திருமழிசை முத்துசாமி முதலியார்** என்பார் நம் பெருமானாரிடத்துப் பெரிதும் அன்புடையவரும், அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரிடத்து நிறைந்த பக்தியுடையவரும், தமிழ்மொழி ஆராய்ச்சியில் மிக்க வல்லவரும் ஆவார். அத்தகு நல்லார் தாம் பாடிய பாடல்களுக்குப் பெருமானாரிடம் **சாற்றுகவி** வாங்குதல் வேண்டுமென்னும் விருப்பம் பல நாட்களாக இருந்து வர, அவர்கள் ஒருகால் சுவாமிகளை அணுகி "பெருமானே! அடியனேன் பாடிய இவ் வருளில் பாடல்களைத் தேவரீர் கண்ணுற்று, அவைகள் அருட்பாடல்களாக ஆதற்பொருட்டு ஓர் **அருட்கவி** திருவாய் மலர்ந்து ஏழைமீது திருவருள் பாலிக்க வேண்டும்" என வேண்டினர்.

**பின்னைப் பெருமானும்** அப்பாடல்களைக் கண்ணுற்று அவைகள் ஆண்டவரின் திறங்களை எடுத்தோதுதலை யறிந்து அவற்றிற்கு, **'ஒருவகைப் பொருடெரித'** தென்னும் தலைப்பினையுடைய சாற்றுகவி ஒன்றை அளித்தார்கள்.

## 24. திருமணம்



**பிள்ளைப் பெருமானின்** அருமைக்காலம் இவ்வாறாகக் கழிந்து வரும் நாளில், பெருமானுக்குத் **திருமணஞ் செய்து** காண வேண்டுமென்று அன்னையார், அண்ணனார் முதலியோருக்கும் அவா அதிகரிக்க, அவர்களும் பலகால் நம்பெருமானை அதற்கு உடன்படும்படி வேண்டினர் எவ்வளவு வேண்டியும், பெருமான் அதற்கு இசையவில்லை. பின்னர் ஒருகால் ஒற்றியூரில் நம்பெருமான் நேசித்துவந்த ஒரு சிவயோகியாரைக் கொண்டு அடிகளாரைத் திருமணஞ் செய்துகொள்ள வற்புறுத்தக, அடிகளும் அதற்கு ஒப்புக்கொண்டார். ஆகவே பெருமானாரின் சிறிய தமக்கையாராகிய உண்ணாமுலையம்மாளின் அருமை மகளாகிய **தனக்கோட்டியம்மாள்** எனனும் சீரிய வொழுக்கமுடைய உத்தமியைத் திருமணஞ் செய்**வித்தனர்.**

**நம்பெருமானாரின்** கருத்தினை உணராத மற்றையர், பெருமானை உலகவாழ்வில் ஈடுபடும்படி எவ்வளவோ முயன்றும் தம்முடைய அருளானந்தப் பொதுவாழ்விற்குச் சிறிதும் தடையின்றித் தம் எண்ணத்தின் வழியே நின்றார்.

**பள்ளியறையில் திருவாசகமென்னுஞ்** சீரியநூலைக் கரத்து ஏந்திக் கருங்கல்மனமும் கரைந்துருக்க, கண்கள் தொடுமணற் கேணியிற் சுரந்துநீர் பாய, மெய்ம்மயிர் பொடிப்ப, விடிய விடியப்பெய்தி யாவரும் அன்பராகும் அந்நிலையில் அதனைப் பாடிக்கொண்டே பரமானந்தத்திலிருந்துவிட்டார். அவ்வாறே பெருமான் ஒவ்வொருநாளும் நடந்துகொண்டிருக்க, உறவினரும் மற்றவரும் தாம்செய்த தவறினை—அறியாமையை—உணர்ந்து வருந்தினர்.

## 25 மணலைச் சிவலிங்கமாக்கிய மாண்பு



இவ்வாறாக நம்முடைய வாழ்வின் பொருட்டாகத் திருக்கோலம்பூண்ட, கருணாநிதியாகிய தனிப்பெருஞ்செல்வர், சுவாமி நிஷ்டை கூடிச் சகச வாழ்விலிருந்து வருநாளில், ஒரு நாள் திருவொற்றியூரிலுள்ள பட்டினத்தடிகள் ஆலயத்திற்கு அருகிலிருக்கும் குளத்தருகே சென்றார்கள். அங்குப் பல நாட்களாகப் பட்டினத்தடிகள் ஆலயத்தொண்டு புரிந்துவந்த ஒரு வயது சென்ற அம்மையார், நம்பெருமானாரை அடிபணிந்து "ஐயனே! அடியேனுய்யுமாறு ஓர் அற்புதங்காட்டியருளல் வேண்டும்" என வேண்ட, உடனே நம்பெருமானாரும், அம் முதியவளின் அரிய பக்குவ நிலையையுணர்ந்து ஒரு பிடி மணலைவாரி அவர்கையிலே கொடுத்து மூடிக்கொள்ளுமாறு பணித்தார்கள். அம்மையாரும் அவ்வாறே மூடிக்கொள்ளத் தாம் அவ்விடத்தைவிட்டு அகன்று விட்டார். பின் அம்மையார் தமது கரத்தைத் திறந்து பார்க்க, அம்மணலெல்லாம் சிவலிங்கங்களாகத் தோன்றின. அவ்வம்மையாரும் அகமிக மகிழ்ந்தவராய் அன்று முதல் நம்பெருமானாரிடத்து அளவிலா அன்புடையவர்களானார்கள்.

## 26. பாம்பும் பணிந்த பண்பு

அதற்குப் பிறகு ஒருநாள் தம்முடைய நண்பர்கள் பலர் சூழச் சென்னையை யடுத்துள்ள வியாசர்பாடிக்குப் பெருமானார் பிரசங்கஞ் செய்யச் சென்று, பிரசங்கத்தை முடித்து இரவுநேரத்தில் ஆங்கிருந்து நண்பர்களோடும் திரும்பி வரும்பொழுது, நடுவழியில் ஒரு பெரிய பாம்பு இவர்களை நோக்கி வர, எல்லோரும் பயந்து ஓடிவிட்டனர். அடிகளார் மட்டும் அவ்விடத்தைவிட்டு அகலாது அச்சமற்று நின்றுகொண்டிருந்தார்கள். அப்பாம்பும் அடிகளுடைய திருவடிகளில் சற்றுநேரம் சுற்றிக்கொண்டிருந்து பின்னர் பெருமான் ஏகுமாறு கூற ஏகிவிட்டது.

## 27. குறை இறையினிடத்துக் கூறலாம்

மற்றொருகால், தமது தமையனார் சபாபதிப்பிள்ளை மருகரும் தமது மாணவருமாகிய, புராணிகர் - பொன்னேரி - சுந்தரம்பிள்ளை தனது வறுமையைத் தீர்த்தருள வேண்டுமெனக் குறையிரந்தபொழுது, அடிகள் அவருக்கு,

"திருவோங்கு பொற்சபையுஞ் சிற்சபையு நம்பெருமான் செய்யா நின்ற
உருவோங்கும் ஆனந்தத் தாண்டவமுங் கண்டினிதாங் குறைக யானுந்
தருவோங்கு தில்லைநகர்க் கோரிருப்பா ளவரைக்கூட சாரகின் றேனம்
திருவோங்கள் குறையுமிறைக் குரைத்தகற்றிக் கொள்ளலாநீ யிளையேலையா"

எனனும் பாடலைக்கூறி அவரை அனுப்பி வைத்தனர்.

## 28. அடிப்பது கூடாதென்றது

**பின்னும்** ஒருகால், **அப்புராணிகர், பொன்னேரி சுந்தரம் பிள்ளை** தம்மது தமயனார் குமாரராகிய **வடிவேற்பிள்ளை** * முதலாயினோருக்குப் பாடஞ் சொல்லிக் கொடுக்கும்பொழுது அடித்ததாகக் கேள்விப்பட்டு **நம் பெருமானார்,** அவருக்கு,

'படிப்பதுநன் றெனத்தெரிந்த பாங்குடையாய் மன்றுள்வெளிப் பரமன் அன்பே
தடிப்பதுநன் றெனத்தெரிந்த சதுருடையாய் அறநவின்ற தவத்தாய் வீணில்
துடிப்பதிலாத் தூயமனச் சுந்தரப்பேர் உடையாய் என் தோழ! கேள்நீ
அடிப்பதுமச் சிறுவர்களை யடிப்பதுநன் றலவென்மேல் ஆணை யாணை

எனனும் பாடலைக் கடிதமூலமாக எழுதி விடுத்து அவரை அத்தவறினின்றும் உய்வித்தருளினர்.

## 29. ஆடம்பரங்களை யகற்றல்

**சபாபதி முதலியார்** என்ற செங்குந்த மரபினர் ஒருவர் வேண்டுகோட் கிணங்க, அவரில்லத்தில் நடைபெற்ற **திருமணத்திற்குச் சென்று,** ஆங்குள்ள அனைவரும் ஜோடு அணிதல், சொக்காயிடுதல், சரிகைத் தலைப்பாகை யணிதல் முதலாய **வீண் ஆடம்பரங்களில்** கருத்தைச் செலுத்துவோராகவும், அம்மாதிரி ஆடம்பரங்களோடு வருவோர்க்கே அதிக மரியாதை செலுத்துவோராகவும் இருத்தலையுணர்ந்து, தாம் அவ்வீட்டினுள் நுழையாது, எதிர்வீட்டுத் திண்ணையிலேயே அமர்ந்துகொண்டு அவருக்கு **அறிவுகொளுத்தும் பொருட்டாக,**

"சோடில்லை மேல்வெள்ளைச் சொக்காயில்லைநல்ல சோமனில்லை
பாடில்லை கையிற் பணமில்லை தேகப்பருமனில்லை
வீடில்லை யாதொரு வீறுப்புமில்லை விவேகமது
நாடில்லை நீநெஞ்சமே! யெந்தவா றினிநண் ணுவையே.

எனனும் பாடலைத் திருவாய் மலர்ந்து, அம் முதலியாருக்கும், ஆங்குள்ளோருக்கும் அவ்வாடம்பரங்களி லிருந்த மயக்கினை யொழித்துச் சன்மார்க்கந் தெரித்தாட்கொண்டார்.

## 30. சதுர்வேத சார சங்கிரகம்

**சிறிது** காலஞ்சென்ற பிறகு ஒருநாள் நம்பெருமான் திருவொற்றியூர் வடிவாம்பிகையம்மன் சன்னிதிமுன் நின்று தோத்திரஞ் செய்து கொண்டிருக்கிற வேளையில் ஓர் அன்பர் தோன்றி "சதுர்வேத சார சங்கிரகம்" என்னும் ஓர் ஏட்டுச் **சுவடியைக்** கொடுத்து மறைந்தார்.

---

* சென்னையில் பிரபல புராணிகராக இருந்த **பிரசங்க ரத்நாகரம் சிதம்பரம் வடிவேற்பிள்ளை** இவரே யாவர்.

## 31. உத்தம மனிதன்

**நம்பெருமான்** எப்பொழுதும் திருவொற்றியூருக்குக் கீழண்டை மாடவீதி வழியாகச் செல்லாது அங்குள்ள நெல்லிக்காய்ப் பண்டாரச் சந்து வழியாகச் செல்லுவது வழக்கம். ஒருநாள் மட்டும் வழக்கத்திற்கு மாறாகத் தேரடி வீதி வழியாகச் சென்றுகொண்டிருந்தார். அத்தெருவிலுள்ள திண்ணையொன்றிலிருந்த நிர்வாண சந்நியாசி ஒருவர், அப்பக்கம் போகிறவர்களையெல்லாம் 'கழுதை போகிறது மாடு போகிறது' என்று சொல்லுவது வழக்கம். அச் சந்நியாசியும் அன்று தம் வழக்கத்திற்கு மாறாக நம்பெருமான் போவதைக்கண்ட மாத்திரத்தில், "இதோ உத்தம மனிதன் போகிறான்" என்று உள்ளங் களிசிறக்க உரைத்தார். அதைக்கேட்ட நம்பெருமானார், அவர் பக்கலிற் சென்று ஏதோ சில உரைகளைக் கூற, அன்றிரவே அச் சந்நியாசி அவ்விடத்தைவிட்டு அகன்றுவிட்டார்.

## 32. சங்கராச்சாரியாரின் சந்தேகம்

**சங்கராச்சாரியார்** ஒருகாலத்துச் சென்னைக்கு வந்திருக்கும் பொழுது "தமக்கு **ஆரிய நூலில்** ஏற்பட்ட ஐயங்களை நிவர்த்திக்க வல்ல ஆரியமொழி வல்ல புலவர்களுளரோ?" என வினவப் பக்கத்திலிருந்த பிராமணரொருவர் **நம் பெருமானைச்** சுட்டிக் காட்டினர். உடனே அச்சங்கராசாரியாரும், அந்நூலைப் பெருமானிடத்துக் கொடுத்துத் தமக்கு ஐயமேற்பட்ட இடத்தைக் காட்டவும், அதை நம் பெருமான் ஒருமுறை பார்த்துவிட்டுத் தம் முதல் மாணவராகிய, **தொழுவூர் வேலாயுத முதலியாரைச்** சந்தேக நிவர்த்தி செய்யுமாறு பணித்தார், பணியினைச் சிரமேற்கொண்ட முதலியாரும், சங்கராசாரியாரின் சந்தேகங்களின் நிவர்த்திகளைச் சாங்கோபாங்கமாக எடுத்துரைத்து அமைந்தனர்.

## 33. வாதநோய் தீர்த்தமை

**மற்றொருநாள்,** வித்வான் **கன்னடி - சுப்பராய முதலியார்** என்பார், பல ஆண்டுகளாகத் தம்மை வருத்தும் **வாத நோயைத்** தீர்த்தருள வேண்டுமென நம்பெருமானை வந்தித்து வேண்ட, பெருமானும் அவ்வாறே **அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரின் அருள் வலங்கொண்டு,** அப்பெருநோயினைத் தீர்த்து அவருக்கு உய்வு அளித்தார். அப்பொழுது அகமிக மகிழ்ந்த அவ்வித்வான் நம்பெருமான் மீது,

> "அகத்தியனோ வான்மிகியோ ஆதிசேடன் றானோ
> மகத்துவமாஞ் **சம்பந்த** மாலோ—சகத்திலுஞ்
> சச்சிதா னந்தத்தின் றண்ணளியோ என்னென்பேன்
> மெச்சுமதி **ராமலிங்க வேள!**

என்னும் புகழ்ப் பாமாலையைப் பாடினர்.

## 34. அருளம்மை தந்த அன்னம்



ஒரு நாள் இரவு, நம பெருமான திருவொற்றியூருககுச சென்று சிறிதுகாலந தாழததி வநதமையினால, தமகககையாா வீட்டின உளதாளிட்டுக கொணடு உறஙகிவிட்டத தாம திண்ணையின மீது பசியோடு படுததுறஙகினாகள. அடியவா பசியோடு உறஙகுவதைம ஒயறிநத அருளாமமையாகிய ஒற்றி வடிவுடைய நாயகியே, நம பெருமானாின தமகககையார் திருவுருவோடு அருகே வநது தட்டி எழுபபினா எழுபபலும எழுநத பெருமானை நோககி அவவமமையாா, தாமரை யிலையில பொஙகல சோறறினை அளிததுச "சாப்பிடு" எனறு கூறினா அடிகள தமககையாரே எனறெண்ணியவராய் உணவை யருநதிப பினனா உறககஙகொணடாா. சிறிது நேரததிற கெலலாம, உளளே உறஙகிக கொணடிருநத தமககையார் திடுககிட்டு எழுநது 'தமபியார் இத்துணை நேரம பசியோடு எஙகிருககினறாரோ தெரிய விலலையே' எனறு பலவாறுகக கூறிக கொணடே கதவைத் திறநது கொணடு வெளியில வநது பாாததது, உறஙகுகினறவரை உணவளிக கலாமென எண்ணி எழுபப, அவா "ஏனமீணடும எழுபபுகினறீாகள? இபபொழுது தானே உணவளிததுச சென்றீர்" எனறு வினவினா.

அம்மையாருக்கு அதிகமான வியப்புத் தோனறவே "ஈதெனன மாயமா யிருககின்றதே, நான இபபொழுது தானே நினனை உணவருந துதற் பொருட்டாகத தட்டி எழுபபினேன, முனனெருகால வநததாகக கூறுவது வியபபாக இருககிறதே" எனறு கூறினா அடிகளும பெரிதும வியபபடைநது "ஓ! நம அருளம்மையின் அருள் விளையாட்டே" என உணாநது கொண்டவராய், ஆனநத பரவசமெய்தி அமாநதிருநதார். இதனை நமபெருமானாா, நெஞசறிவுறுததலில,

> "அனறொரு நாள நமபசிகண டநதோ தரியாது
> நனறிரவில சோறளிதத நறறாய காண

எனக கூறியிருததல காணக.

## 35. அழுக்குக் கந்தைக்கு ஆற்றுதிரங்கினர்

சின்னாட்கள் கழிநதபின் ஒருகால பெருமானர், திரு முல்லை வாயில் முதலிய திருததலஙகளை வணஙகிககொண்டு, பாடி என வழஙகும திருவலிதாயத்திற்குச் சிவபெருமானைத தரிசிககச் சென றார். சென்றகாலத்து அச் சிவலிஙகததிறகு ஆஙகுளளவர்களின கவனககுறைவினால, அககோயில குருககள ஒரு அழுக்குக் கந்தை யைச் சுறறி வைததிருநதனர். அதைக கணணுறற அடிகட்கு மனம் தாஙகாது மிக வருததததோடு,

* சென்னை, ஏழுகிணறு வீராசாமி பிளளை வீதி 39 வது இலலம

"சிந்தை நினற சிவானநதச் செலவமே
எநதை யேயெமை யாடகொண்ட தெயவமே
தநதை யேவலி தாயத் தலைவநீ!
கந்தை சுற்றுங் சுணகாது வென்கொலோ !"

எனனும் பல செநதமிழப பாடலகளைப பாடி ரீணடனர். தெய்வீகம் பொருநதிய இவா திருவாககாலது சில காலத்திற கெலலாம அவ வலிதாயத திருததலம மிகவுஞ சீருஞ சிறபபுமபெறறு விளஙகத தொடஙகி, இனறும பெருஞ சிறபபோடு நடநது வருவது உலக மறிநததே.

## 36 சென்னை கந்தகோட்டம்

**இது போலவே,** சென்னை கநதப்பெருமான ஆலயஞ்செனறு,

திருவோங்கு புணணியச செயலோஙகி அனபருள
திறலோஙகு செலவம ஓஙகச
செறிவோஙக அறிவோஙகி நிறைவான இனபந
திகழந தோஙக அருள கொடுதது
மருவோஙகு செஙகமல மலரோஙகு வணமோங்க
வளாகருணை மயமோஙகி யோா
வரமோஙகு தெளளமுத வயமோஙகி ஆனநத
வடிவாகி யோஙகி ஞான
உருவோஙகும உணாவிலநிறை யொளியோஙகி யோஙகுமயில
ஊாநதோஙகி யெவவு யிாகதம
உறவோஙகும நினபதமஎன உளமோஙகி வளமோஙக
உயகினற நாளெநத நாள ?
தருவோஙகு சென்னையிற் கநதகோட் டத்துளவளர்
தலமோஙத கந்த வேளே
தணமுகத தூயமணி உணமுகச சைவமணி
சணமுகத தெயவ மணியே

முதலிய **31 பாடல்கள் கொண்ட தெய்வமணி மாலையைப் பாடியபின்னர் ஸ்ரீகந்தப்பெருமானுர் ஆலயமா** தெனனுடு முழுது மிலலாப் பெருஞசிறப்புப பெறறு விளஙகிவருகினறது நாமனைவரும அறிநததேயாகும

## 37 அன்னையார் பிரிவு

**இத்நருவாயில்** தனனையினற **சின்னம்மையார்** தம வாழுள நீககவும, **பரசுராம பிள்ளை** தேகம மெலிவுறறுப பிணியால வருந துவ ளுணாநது, அவா விருபபபபடி சிதமபரத தலததிறகுககொணடு செனறு, தில்லை நடராஜாவின தரிசனஞ செயது வைகக எணணங கொணடனா

## 38 புதுவை அன்பர்கள் ஐயம்

**அவ்வாறே** தம நணபாகள பலா தமமைச சூழநதுவரக கால நடையாகவே வழியிலுளள பலதிருததலஙகளை வணஙகிச செலகினற

போது புதுவை மாநகரில், ஒரு சில அடியார்களின விருப்பினால தங்கி யிருநத காலத்தில, அவ்வூரிலுள்ள பல பிரமுகாகளும அடிக களிடத்து வநது, தமககு ஏறபடும ஐயங்களை யகறறிச செலல ஆரம பிககலாயினர். அடிகளும அவரவா கொண்டுள்ள ஐயஙகள அடியோடு நீஙகுமாறு, அழுததமான விடைகளை பசுமரததாணி போல கூறிவரலாயினர் இவவாறு அவவூா முழுவதும அதறகடுததுள்ள பிறவூாகள முழுதும அடிகளுடைய புகழ பகலவனொளிபோல பரவியது.

## 39 தில்லைப் பெருமான் தரிசனம்

பின்னர்ச் சிலநாள, அஙகு தஙகி யிருநத பிறகு, அப் பதியினையும் அணிததேயுள்ள பல தலஙகளையும தரிசித்துக கொண்டு அனபர்களோடும தம தமயனா பரசுராம பிளளை யுடனும **அம்பலவாணன் ஆனந்தத் தாண்டவம் பயிலும்** அமபலததை யடைநதாா. ஆங்குச சிறசபேசனைத் தரிசித்து ஆனநதக கணணீர்வாரப் பறபலவாகப பாடியாடித துதிததுப பரவசமடைநது, சுற்றுப பககஙகளிலுள்ள திவய க்ஷேததிரங்களையும தரிசித்து, ஆஙகாஙகும பாமாலைகள சாததிப பினனும சிதமபரம வநது, ஆனநதகடன தரிசனம செயதருளினர். அநதத் தருணந தான் **நான்காந் திருமுறை இயற்றியருளிய காலம்.**

## 40. சுந்தர சுவாமிகள் தோழமை

**பெருமான்** அம்பலவாணரை அனபர்கள பலருஞ சூழத் தரிசித்துப் பலவகையாகத தோத்தரித்துவிட்டு, வடககுச சனனிதி வீதியிலெழுநதருளி யிருநதார் அப்பொழுது அஙகு கிழககுச சனனிதி வீதியில **கோடகநல்லூர் சுந்தர சுவாமிகள** எனபார் ஒருவர் தஙகியிருகக—அவரைச் சென்று பார்க்க விருப்பமுடையவராய், நம பெருமான ஒரு சிலரை, அவரிருப்பிடததிறகு அனுபபிச சமயம பார்த்து வரக கட்டளை யிட்டனர். அனபாகளும அவ்வாறே சென்று அசசுவாமிகளை வினவ, அவர்கள உடனே தமமுடைய அடியவர்கள, சூழ, "அவர்கள சமயம பார்த்து இங்கு வரவேண்டியதிலலை, நாமே வநது அவர்களைக காண்கினறோம" எனறு அவவனபர்களுடனேயே வநதார்கள. **சுந்தர சுவாமிகளோடு வள்ளலாரும்** அளவளாவிக கொணடு, இருவருமாக மூனறு நாட்களவரை ஒருவரைவிட்டு ஒருவர் பிரியாமல **ஆலய வழிபாடு** முதலியன செயத நேரம போக, மீதி நேரஙகளை யெலலாம பல வகையான ஞான விஷயஙகளைப் பற்றி, உரையாடுவதிலேயே செலவழித்தனா.

**இங்ஙனமாக** உரையாடியதில அச சுவாமிகட்கு அடிகளாமீது அளவுகடநத அனபும, பகதியும உணடாயின அதோடு அருகே யிருநத அனபரொருவா அடிகள அருளிச செயத "**மகாதேவ மாலையில**" சில பாடலகளைக கூறி, 'இபபாடலகளையும, இவைபோனற

இன்னும் அநேக பாடல்களையும் பெருமானார் திருவாய் மலர்ந்தருளி யுள்ளார்கள்” என்று கூற, அதைக் கேட்டவுடன் அவர்கள் முன்னையினும் பன்மடங்கு மகிழ்ச்சியோடு “எங்களை ஆட்கொள்ள வந்த தெய்வமும் நீரே இவ்வருவரா” என்று அடிகளைப் போற்றிப் புகழ்ந்து விடைகொண்டு பிரிந்தார்.

அவரை வழி யனுப்பச்சென்ற அன்பர்களிற் சிலர், சுவாமிகள் எதிரே யிருந்து பேசவேண்டி யிருக்கப் பகலிலேயே யிருந்து பேசிய தன் காரணம் என்னையென வினவ, அதற்குச் சுந்தர சுவாமிகள், “எதிரேயிருந்து பேசுவோர் ஆற்றலை இழுத்துக் கொள்ளும் சக்தியுடையவர்கள் அவர்கள். ஆதலினாலேயே யாம் பகலி லிருந்து பேசினோம்” என்று விடை பகர்ந்தார்.

சுவாமிகள் சென்றதும், நம்பெருமானார் கண்களிலிருந்து கண் ணீர் ததும்பலாயிற்று. அதைக்கண்ட அன்பர்கள் ‘என்ன கார ணமோ?’ என ஏக்கமுற்றவர்களாய், “சுவாமிகள் வருந்துவது எதன் பொருட்டாக?” என்று வினவவும், பெருமானார், “இப்பொழுது நம் மோடு அளவளாவிச்சென்ற சுவாமிகள் இன்னும் ஆறுமாதங்கட் குள் மறைந்து விடுவார்கள்” என்று கூறி மேலும் வருந்தினார்கள். அவ்வாறே முடிந்தது.

அங்கிருந்தும் புறப்பட்டுச் சீர்காழிக்கு நம்பெருமானார் சென்று, அங்குள்ள அம்மன் சந்நிதியில் பல அன்பர்களின் வேண்டுதலுக்கிணங்கி, பிரசங்கத்தை அருண்மாரியாகப் பொழிந் தார். அதனைக் கேட்ட அன்பர்கள் உடலகுளிர, உயிர்தழைக்க உணர்ச்சி ஓங்கப் பெற்றவர்களாய் அடிகளினிடத்து நீங்கா அன் புடையவர்களானார்கள்.

## 41. குன்ம நோய் தீர்த்தல்

அங்கொருநாள் பல வருடங்களாகக் குன்ம நோயினால் வருந்து கின்ற ஒருவர், அடிகளை வந்து வணங்கித் தம் நோய் நீங்கப் பெருங் கருணை புரிதல் வேண்டுமெனக் குறையிரந்து கொள்ள அருட் பெருஞ்ஜோதி ஆண்டவரின் அருள் வலத்தால் திருநீறு கொடுத்து அப் பெருநோயை நொடிப்பொழுதில் தீர்த்தருளினார்கள்.

அங்கிருந்தும் வயித்தீச்சுரன் கோயிலுக்குச் சென்றபொழுது, அக்கோயிலின் தருமகர்த்தராகிய வித்வான் உலகநாதத் தம்பி ரான் தம் பெயரும் வருமாறு வயித்தீச்சுரன் பேரில் பதிகமொன்று திருவாய் மலர்ந்தருளல் வேண்டுமென, அவ்வாறே, அடிகளும்,—

கல்லையு முருக்கலாம் நாருரித் திடலாம்
கனிந்தகனி யாச்செய் யலாம்
கடுவிடமு முண்ணலாம் அமுதாகக் லாங்கொடுங்
கரடிபுலி சிங்க முதலா

வெல்லு மிரு கங்களையும வசமாக்கலா மன்றி
வித்தை யுங்கற பிக்கலாம்
மிக்கவா ழைத்தணடை விறகாக்க லாமணலை
மேவுதேர் வடமாக் கலாம
இல்லையொரு தெயவமவே றிலலையெம பாலினபம
ஈகினற பெணகள குறியே
எங்களகுல தெயவமெனு மூடரைத தேறறவெனில
எத்துணையு மரிதரிது காண
வல்லையவ ருணாவற மருந்தருளக தவசிகா
மணியுலக நாத வள்ளல்
மகிழவரு வேளூரி லனபர்பவ ரோகமற
வளா வயித்திய நாதனே.

என்று அப்பதிகத்தில் அவர் பெயரையும அமைத்து 12 பாடல்களை பாடி அவரைத் தீயநெறியினின்றும உயவித்தருளினர்.

**பின்னர்** பெருமானர், மதுரை முதலிய அரும் பதிகள் பலவற்றைத் தரிசித்துககொண்டு, தமது சிறிய தமயனராகிய **பரசுராம பிள்ளை** யிருநத கருங்குழி எனனும் ஊருககு வநது சேர்நதார்கள. சில தினங்களுக கெலலாம், அப்பரசுராம பிளளை பரனடி யடைய, அவ வூரை விட்டுப்பிரிய நம பெருமான் புறபபடுமபொழுது, அவ் வூரிலுள்ள **வேங்கட ரெட்டியார்** எனனும அனபர் ஒருவா "எமமுடைய வீட்டிலேயே இருந்தருளல வேண்டும; வேறெஙகும செல்லுதல வேண்டாம்" எனறு அனபோடு வற்புறுத்த, அப்படியே அவருடைய வீட்டிலேயே தங்கி யிருந்தார்.

**அக்காலத்தில்,** சுவாமிகள் பகதிமார்ககமே சிறந்ததென்றும் **கொல்லா விரதமே** மேமபட்டதெனறும, பலருககும நனகு போதித்து நல்வழி யடையச செய்து வநதனர். இதுவுமன்றி இவர்களது மேமபாட்டைக கேளவியுறற கறறறிவாளா பலரும வெகுளி கொண்டு பிளளையவர்களிடம வாதிடலும், அனனவாகளை **அருள் வலத்தால்** வென்றும, அவர்களையும நன்னெறி யடைவித்தும வநதனர் இவ்வண்ணம் நிகழு நாளில, சென்னைககு அடுத்த திருமயிலை யென்னும் க்ஷேத்திரத்தில், தமது மூத்த சகோதரா **சபாபதி பிள்ளை ஆண்டவர் திருவடி யடைந்த** செய்தியைப் பிறர் உணர்த்தா முனனமே உணர்ந்து அவ் விஷயத்தில் நுழையாது சுவானுபூதிலேயே தஙகி யிருந்தார்.

## 42. தண்ணீர் விளக்கு எரிந்த தன்மை

**அங்கிருக்கும்** நாட்களில ஒருநாள் இரவு ரெட்டியார் வீட டினர் அனைவரும வெளியூருககுப் போகவேணடிய நிமித்தமாக ஒரு விளககினை **எண்ணெயவிட்டு** ஏறறி அருகில ஒரு **புதிய மண்பாத்திரத்தைப்** பழககுவதறகாக அதனுள தண்ணீர் விட்டு

வைத்துச் சென்றனர். பெருமான் வழக்கம் போல அவ்விளக்கண்டை அமர்ந்துகொண்டு பாக்களை வரைந்து கொண்டிருந்தவர்கள் எண்ணெய் என எண்ணி அதை எடுத்து அவ்விளக்கில் ஊற்றினர்கள். அம்மா திரியே அன்று இரவு முழுதும் ஐயா அவர்கள் அந்நீரையே விட்டுக் கொண்டிருந்தார். **அந்நீரிலேயே விளக்கும் எரிந்துகொண்டிருந்தது, [சுவாமிகள் தண்ணீரில் விளக்கெரித்த அந்த அறையினை யின்றும் தைப்பூச காலத்தில் அன்பர்கள் தரிசித்து வருவது யாவரும் அறிந்ததே.]**

**விடியற்காலையில்** வீடுவந்துசேர்ந்த அம் மனைக் கிழத்தியாகிய **மூத்தாலம்மாள்** விளக்கு நிறைய நீர் இருப்பதையும், அந்த விளக்கு எரிந்துகொண் டிருப்பதையும் நோக்கினர். அதன் பின்னர் அடிக ளிடத்துப் பெரிதும் அன்பும் பக்தியும் ஏற்பட்டு அன்று முதல் சுவாமி களைத் தெய்வமாகக் கொண்டாடத் தலைப்பட்டனர்.

## 43. ஞானியார் உபதேசம் பெற்றநிலை

**திருச்சிற்றம்பல ஞானியார்** என்பவர் ஒருவர் அடிகளின் அருமை பெருமைகளை யறிந்து அவர்களிடத்து **அருளுபதேசம்** பெறுதல் வேண்டுமென்னும் விருப்பமுடையாராய்க் கருங்குழிக்கு வந்து, ஆங்குள்ள நம்பெருமானை அடிவணங்கித் தமது கருத்தைத் தெரிவித்தார். அதற்குப் பெருமானர், "துறவுநிலை மேற்கொண்ட தங்கட்குக், கொள்ளாத அடியேன் **உபதேசஞ் செய்தல் ஒவ்வாது" என்று மறுத்தும்** அவர் கேளாமை கண்டு,

> **நின்னிலைமை என்னருளால் நீயுணர்ந்து நின்றடங்கில்**
> **இந்நிலையே யந்நிலையை யெய்துதிகாண் — முன்னிலையில்**
> நிற்குருவி னட்டாதே யென்றுரைத்தான் ஏரகம்வாழ்
> சற்குருவென் **சாமி நாதன்.**

என்னும் வெண்பா வொன்றினை அவர்க்கு வரைந்து கொடுத்தனுப்பி னர். அதனைப் பெற்றுக்கொண்டு அந்த ஞானியாரும் மதுரையிலுள்ள திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள் மடத்திற்குச் சென்று விட்டனர்.

**பின் ஒருகால்,** (கடந்த அக்ஷய ஹு) **கருங்குழி புருஷோத்தம ரெட்டியார்** என்பவர், மதுரையிலுள்ள அச்சம்பந்த மூர்த்தி சுவாமி களது மடத்திற்குப் போய்விட்டதை யறிந்த அவருடைய தாய் தந்தையர், நம்பெருமானிடத்து வந்து, தம் மகனை ஆங்கிருந்து அழைப்பித்தருள வேண்டுமெனக் குறையிரந்து கொண்டனர். அவர்களுடைய கருத்தை நிறைவேற்றி வைத்தற் பொருட்டாகப் பெருமானர் அம்மடத்திலுள்ள **தம்முடைய மாணவராகிய திருச்சிற்றம்பல ஞானியாருக்கு** எளிய நடையில் அந்தப் புருஷோத்தம ரெட்டியாரை அனுப்பிவைக்குமாறு கடித மொன்று எழுதினர்.

**அக்கடிதமானது,** அந்த ஞானியாரும், **கணக்கிலவதானி— தேவிபட்டினம்: முத்துசாமி பிள்ளையுமாக உரையாடிக்** கொண்

டிருக்கின்ற வேளையில் போயச் சேர்ந்தது. அக்கடிதத்தை அம் மூத்து சாமி பிள்ளையும் படித்துப் பார்த்தார். பார்த்ததும் 'பெரிய மேதாவி யொருவர் எழுதிய கடிதம் இலக்கண இலக்கியச் செறிவின்றி இவ்வா றிருக்கின்றதே' என்று பதறி ஞானியாரைக் கேட்டார். அதற்கு ஞானி யார் "வள்ளலார் வார்த்தைகளைத் தடையாடியிருக்கும் காலங்களில் சிந்திய இலக்கணமே இந்த உலகில் பரவியிருக்கின்றது" என்று அவ் விடையை மறுக்க, அந்த அவதானியார் "அங்ஙனமாயின் அம்மாதிரி ஒரு கடிதம் அவரிடமிருந்து வரவழையுங்கள்" என்று கூறினர்.

உடனே ஞானியாரும், அவ்வாறே ஒரு கடிதமெழுதி யனுப்புமாறு நடந்த வரலாற்றையும் உடன் கூட்டி எழுதி அடிகட்கு அனுப்பி வைத்த னர். அக்கடிதத்தைக் கண்ட சுவாமிகள் வெறுப்புடன் அதனை "பிச" என்று சொல்லி கீழே வைத்துவிட்டனர். ஆனால் அச்சமயம் உடனிருந்த தொழுவூர் - வேலாயுத முதலியாருக்கு ஆற்றாமையா யிருக்க அவர் சுவாமி களிடத்து அதனை எழுதி முடிக்குமாறு விண்ணப்பஞ் செய்துகொள்ள, சுவாமிகள் இரண்டு வரி மாத்திரம் எழுதி அவரிடந்தந்து மீதத்தை "நீரே எழுதி விடும்" என்று கூறி விட்டனர். அவ்வாறே அக்கடி தத்தைத் தொழுவூர் வேலாயுத முதலியார் எழுதி முடித்து அனுப்பினர்

☞ அக்கடிதம் வருமாறு காண்க :—

## இலக்கண வியனடை

### வழக்கப்பாடுறுத்துவிக்கும் பத்திரிகை

உணர்ந்தோரானியில் வகையவின்ன வென்றவற்றிற் பின் மொழிமதிக்கு முன்மொழி மறைக்கு முதலீறு விளங்க முடிப்பதாய பின்மொழி யடைசார் முன்மொழி - ஞாங் கர் விளங்கிய ஞானிகட்கு :—

**பொய்யாற்** கெதிர்சார்புற்ற மூலியொன்று வளைத்து வணக்கஞ் செய்த ககன நீரெழிலென்றும், வான வழங்கு பண்ணிகாரமென்றும், நாகச்சுட்டு மீனென்றும் வேறு குறிப்பதொன்று.

**அண்மைச்** சுட்டடுத்த வேழாவதன் பொருண்மை யும்மையடுத்த பலலோர் வினைப் பெயர்ப் பொருள் குறிஞ்சி யிறைச்சிப் பொருளொன்ற னோடு புணர்ப.

### சேய்மைச் சுட்டடுத்த வத்திறத்தியல் யாது ?

**இரண்டனுருபொடு** புணர்ந்த தன்மைப் பன்மை யாறுவதன் பொருட்டாகின்றாக் குயத்த கற்பிய லதிகாரிப்பின் வருந் தலைமகட் பெயர் விரண்டனோ டிரண்டிரண்டுகேக கழிவில்லைப் பெயரவு மாகார வீற்று முதனி லைத் தனிவினைச் செயவென வாய்பாட்டு வினையெச்சத்தவாக்க கலம் பகச் செய்யுளுறுப்பாற சிறத்தும.

இருவகைக முதற்பொரு ளொன்றன் பாகுபாட் டுறுப்பிற் குறித்த, வைம்பெரும் பூதத்தோர் விசேடணத் தெதிர் மறை நடுக்குறை யியற்சொற் பெயரவுயிர்ப் பெயராக வெதிர்காலங் குறித்து நின்றது:

சில வினைச் சார்பான், விலங்கு சூடிய வரையில் வெளியாம்.

இதனே டிருவகைப்பட்ட வோர்சார் புதுநிலஞ்செல வுய்த்தனம்.

வேண்டுழி வேண்டியாங் குய்க்க, மற்றைய பின்லர் வரைதும்.

**இற்றே விகுப்பிற் கணைச்சலப்.**

பார்வபுரம்,
சுக்கில ஸஹ
துலா ரவி 27உ

இங்ஙனம் :
நங்கோச் சோழன்
**வீரமணிச் சூடியார் திருவாணைப்படிக்கு அடிமை**

## தொழூவூர் - வேலாயுதம்

**இப்பத்திரிகையை** ஞானியார் அவ் வவதானியாரிடங் காட்டினர். அவர் அதைப் பன்முறை படித்துப் பார்த்தும் பொருள் விளங்காமை கண்டு "வேண்டுமென்றே ஒரு வித்வான் பூட்டுப்போட்டால் அந்த வித்வான் தான் அதைத் திறக்கவேண்டும்" என்று கூறினர். அதைக் கேட்ட ஞானியார் புன்னகையுடன், அங்ஙனமாயின் தாங்களும் "வேண்டுமென்றே ஒரு பூட்டுப்போடுங்கள் பார்ப்போம்" என்றார்கள்.

**அவ்வாறே** அவதானியாரும்,

தகர வரிக்குழல்கா மாதியைந்திற் றங்கும்
தகரவரி நாலைந்து சாடும் — தகரவரி
மூவொற்றி யூர்பதங்கள் மூன்றுமங்கை யேந்துமொரு
சேவொற்றி யூர்பதத்தைச் சேர்.

என்ற கவியினை எளிதில் பொருள் விளங்காவாறு எழுதித் தந்தனர்:

**அக்கவியினை** ஞானியார் நம் பெருமானருக்கு அனுப்ப அவர்கள் அதற்குரிய உரையினையும், அவர் உணராத மற்றோர் தத்துவ உரையினையும், எழுதி அனுப்பினார்.

**அந்த** உரையினைக்கண்ட அவதானியார் புறப்பட்டு சுவாமிகள் வீற்றிருக்கும் **கருங்குழிக்கு** வந்து சேர்ந்து சுவாமிகள் இருக்குமிடத்தை விசாரித்துக்கொண்டு அவ்வீதிக் கோடியிலேயே கரங்களைச் சிரமேற் குவித்துக்கொண்டு ஆங்குவந்து சுவாமிகளின் திருவடிகளில் அடியற்ற மரம்போல் **விழுந்து வணங்கி** "யான் செய்த பிழைகளை யெல்லாம் பொறுத் தருளல் வேண்டும்; **வித்வான்** என மதித் திருந்தேன்—**பரிபூரண ஞானியென உணர்ந்திலேன்**" என்று அழுது அரற்ற, தாயினும் தயவுடைய நம் பெருமான் அவரை மன்னித்து ஆட்கொண்டார்.

## 44. குஷ்டப்—கண்மறைவு நீக்கினர்

**மற்றொருநகால்**, அக்கருங்குழியிலுள்ள **பாலு ரெட்டியார்** என்பார் **குஷ்ட நோயினால்** துன்பம் ஆற்றாராய்ச் சுவாமிகளை யடுத்துத் தம் குறைகளைத் தீர்த்தருள வேண்டினர். சுவாமிகளும் அவர் வேண்டியாங்குத் **திருநீறு** கொடுத்துத் **தீரா நோயைத்** தீர்த்தருளினர். அப்படியே முத்து நாராயண ரெட்டியார் என்பவருக்குற்ற **கண் மறைவினைத்** தீர்த்தருளினர். அதனால் மனமிக மகிழ்ந்த அம் **முத்து நாராயண ரெட்டியார்** தம்முடைய நிறைந்த செல்வ முழுவதையும் சுவாமிகட்கு எழுதி வைப்பதாக விளம்ப, அடிகள் அதனை மறுத்து "வேண்டுமாயின், இவ்வூரிலுள்ள **ஸ்ரீநிவாஸப் பெருமாள்** கோயிலுக்கு எழுதி வைத்து விடுங்கள்" என்று இயம்பினர். அங்ஙனமே அவரும் அக் கோயிலுக்கு எழுதி வைத்துவிட்டார்.

**தைப்பூச** காலங்களில், திருக்கூட்டம் வடலூரிலிருந்து **சித்திவளாகம்** செல்லும் மூன்றாம்நாள், ஷை ஸ்ரீநிவாஸப் பெருமாள் சன்னிதியில் தங்கி, பிரசாதங்கள் பெற்றுப்போவது இன்றும் நடந்துகொண்டு வருகிறது.

**கருங்குழியிற்றானே** மற்றொரு நாள் மாலையில் ஐயா அவர்கள் தம்முடைய அன்பர்கள் பலருஞ் சூழ இயற்கைக் காட்சியைக் கண்ணுற, **தெய்வீக மாமரத் தருகில்** சென்றனர். அப்பொழுது இடைவழியில் மழை பொழிய எல்லோருடைய ஆடைகளும் நனைந்துபட்டன; ஆனால் **ஐயா** அவர்களுடைய ஆடைமட்டும் ஒரு சிறிதும் **நனையவில்லை.** அதைக்கண்ட அவ்வன்பர்கள் பெரிதும் வியப்படைந்தனர். இங்ஙனமாகச் சுமார் பதினாறு ஆண்டுகள் ஐயா அவர்கள் **கருங்குழி** என்னும் அக்கிராமத்திலேயே யிருந்து வந்தார்கள்.

**அவ்வூரில்** கோயில் கொண்டிருக்கும் **விநாயகப் பெருமான் மீது,**

நாவி னாலுனை நாடொறும் பாடுவார் நாடு வார்தமை நண்ணிப் புகழவும்
ஓவி லாதுனைப் பாடவுந் துன்பெலாம் ஓட வும்மகி ழோங்கவுஞ் செய்குவாய்
காவி நேர்களத் தான்மகி ழைங்கரக் கடவுளே நற் கருங்குழி யென்னுமூர்
மேவி யன்பர்க் கருள்கண நாதனே விளங்குஞ் சித்தி விநாயக வள்ளலே.

என்ற பதிகம் முழுதும் திருவாய்மலர்ந் தருளினர்கள்.

---

## 45. கூடலூரில் குருவாயின நிலை



பின்னர் நம் பெருமானைக் கூடலூர் **அப்பாசாமி செட்டியார்** என்னும் அன்பரொருவர் அழைக்க, அவ்வழைப்பினை மறுக்காது ஆங்குச் சென்றார்கள். சென்று அங்குவந்து கூடிய அன்பர்கட்கு, உய்யும் அறநெறியினை எடுத்துரைத்து, **அமைந்திருந்தனர்.** இது நிற்க,

**கூடலூர்** தேவநாயகம் பிள்ளை என்றோரன்பர்க்குச் சிலவருடங்கட்கு முன் இறந்துபோன அவருடைய தந்தையார் "அப்பா! நான் இறந்துபோன பிறகு ஒரு மனிதர், முக்காடிட்டுக் கொண்டுவந்து கைதனிலிருக்கும் பிரம்பினால் **"இது நானே உன் தகப்பன் வியோகஸ்தானார்"** என்று தட்டிக் கேட்பார்; அவ்வுத்தமரையே நீ ஞானாசிரியராகக் கொண்டு அருள்நெறியில் நிற்கக்கடவை" என்று கூறி தேக வியோகமாயினர்.

**அவர்** கூறியபடியே, நம் பெருமானார் அத் தேவநாயகம் பிள்ளை இல்லத்திற்குச் சென்று அவரை யழைத்துக் கையிலிருந்த பிரம்பினால் தட்டி வினவினர். வினவலும், அத் தேவநாயகம் பிள்ளை தமது தந்தையார் கூறிப்போன அடையாளங்கள் அனைத்தும் சரியாயிருப்பதைக்கண்டு, அடிபணிந்து தமது தந்தையார் இறுதிக்காலத்திற் கூறிப் போயினமையைச்சொல்லி தம்மை ஆட்கொள்ளுமாறு வேண்டினர். அப்படியே அவரைத் தமது மாணவராகக் கொண்ட நம் பெருமானார், அவர் **இரசவாதத்தில்** மயக்குற்றவராய்த் தம்முடைய செல்வத்தைச் சிதறடித்தவர், என்பது தெரிந்தமாத்திரத்தில் அவருடைய மயக்கை யொழித்து அருள் நெறி காட்ட, **இரும்பைப் பதினாறு மாற்றுப் பொன்னாக மாற்றிக் காட்டி "இது இச்சையற்றவர்களுக்குச் சித்திக்கும், ஆதலால் இனி நீ இதில் மயங்காதே"** என்று அதனை மறைத்து விட்டனர்.

## 46. செஞ்சிமலை வாசம்

**மற்றொரு** சமயம் பெருமான் **செஞ்சி மலையில்** சஞ்சரிக்குங்கால் அத் தேவநாயகம் பிள்ளை **செஞ்சி மலைக்கும்** பெருமானைப் பார்க்கப் போனபோது தம்மோடு வந்தவர் பசியினால் மிகவும் வருந்த அவர் பசி தீரும்பொருட்டாகச் சுவாமிகள் லட்டு ஒன்றும், செம்பு நிறைய **நீரும்** திடீரென வரவழைத்துக் கொடுத்தார். அவர் அதை உண்டு அருந்திய பின்னர், அச்செம்பினைக் கொண்டுபோய்க் கொடுத்து வருவதாகக்கூறிச் சிறிது தூரம் சென்று மீண்டார்.

## 47. தீண்டிய பாம்பே மாண்டது

**கூடலூர்** அப்பாசாமி செட்டியார் வாழைத் தோட்டத்தினுள் நம் பெருமானார் ஒருகால் சென்றபொழுது, அத்தோட்டத்தில் ஒரு பேயன்வாழை மரத்தின் மீதிருந்த **ஒரு பாம்பு காலையில் தீண்டிவிட்டது**. அதனைக் கண்ட மற்றையோர், "சுவாமிகளைப் பாம்பு கடித்து விட்டதே" என்று பதறியவர்களாய்ச் சிகிச்சை செய்யவும், அப்பாம்பினைக் கொல்லவும் முயன்றார்கள் நம் பெருமானே அவர்களை நோக்கி "அவ் விஷம் நம்மை ஒன்றும் செய்யாது, அப்பாம்பும் இறந்து போவதற்காகவே நம்மைத் தீண்டியது, அதுவும் இன்னும் சிறிது நேரத்தில் தானாகவே மடிந்து விடும். ஆகவே அதனை நீங்கள் அடித்தலும் வேண்டாம்" என்று கூறினர். அடிகள் கூறியபடியே விஷமும் அடிகளை ஒன்றுஞ் செய்யவில்லை. அப்பாம்பும் சிறிது நேரத்திற்கெல்லாம் இறந்தது.

அப்பொழுது கூடலூரில் முறையே ஒவ்வொருநாள் இரவிலும் நம் வள்ளற்பெருமானுர் பிரசங்கம் நடைபெற்று வந்தது. அப்பிரசங்கத்திற்கு நாள்தோறும் மஞ்சகுப்பத்திலிருந்து வந்துபோகும், இராம கிருஷ்ணப் பிள்ளைக்கு இடைவழியில் எங்காவது அச்சமேற்படின் உடனே அங்கு ஒரு மனிதன் ஒரு விளக்கைக் கரத்தேந்திக்கொண்டு நடப்பதும், பிள்ளைக்கு அச்ச மொழிந்ததும் மறைந்து போவதுமாகப் பல நாட்களாக நடந்து வந்தது. அங்ஙனமாகத் தோன்றுகின்ற மனிதனை எத்தனையோ முறை இராமகிருஷ்ணப் பிள்ளை பார்க்க முயன்றும் பார்க்க முடியவில்லை. ஆதலால் அவர் அம்மனிதர் வருவது போவதில் ஐயங் கொண்டு நம் அடிகளாரிடத்து வந்து அதனைக் கூறினர். செவி மடுத்த அருட்செல்வரும் தெரியாதவரைப்போல **"எல்லாம் திருவருட் செயலே"** என்று கூறிவிடுத்தனர்.

இக் கூடலூருக்கடுத்துள்ள திருப்பாதிரிப்புலியூரில் அப்பொழுது நடந்த ஆற்றுத்திருவிழாவில் **"பிரம்ம சமாஜத்தார்"** என்னும் ஒரு கூட்டத்தார் விக்கிரக ஆராதனை கூடாதென, அதனைக் கண்டித்து உரை நிகழ்த்தினர். அதனை யறிந்த நம் பெருமானுர் அந்த சமாஜத்தினருக்குத், "தாங்கள் விக்கிரக ஆராதனையை மறுப்பது இன்னின்னவகைகளினுல் தகுதியன்று" என்று ஒரு கடிதம் அனுப்பினர். அக்கடிதத்தைக் கண்ட சமாஜத்தினர், அடிகளுடைய கடிதம், உண்மையும், உறுதியுமுடையதா யிருப்பதைக்கண்டு அதை மறுக்க முடியாதவராய் அடிகளின் மீது போலி மறுப்பொன்றை அவர்களுள் ஒருவராகிய **ஸ்ரீதர ஸ்வாமி நாயகரைக்கொண்டு எழுதுவித்தனர்.** இது சம்பந்தமான பிறவற்றைக் கீழ்க்காணும் பகுதியில் காண்க.

## 48. நடந்தவண்ணம் உரைத்தல்

### கல்வி கேள்விகளால் சிறந்த அறிவுடையவர்களுக்கு வந்தனஞ் செய்து வெளிப்படுத்துகை



அக்ஷய வருஷம் தைமீ 5உயில் கூடலூரைச் சார்ந்த திருப்பாதிரிப் புலியூருக் கடுத்த பெண்ணைநதித் தென்கரையில் உண்ணுமலை செட்டிச் சாவடிக்குச் சமீபத்தில், ஓர் நைமித்தியத் திருவிழா வைப்பற்றி அறிவுடையோ ரனேகர் கூடினர். அவ்விடம் **சிதம்பரம் - இராமலிங்க சுவாமிகளு மிருந்தனர்.** அப்போது பிரம்ம சாஜம் **சம்பேடு ஸ்ரீதர ஸ்வாமி நாயகர்** சிலருடன் வந்திருந்தார்.

அதற்குமுன் திருப்பாதிரிப்புலியூரில், ஸ்ரீதர ஸ்வாமி நாயகர் செய்த பிரசங்கத்தினுல் சந்தேகத்தி லழுந்திய சிலர், தமது சந்தேகத்தை நீக்கிக் கொள்வதற் கிதுவேதோர் தருணமென்று கருதி, அக்கூட்டத்தில், **சிதம்பரம் - இராமலிங்க சுவாமிகளை** நோக்கி, "ஐயா! பிரமத்தை நினைப்பது தகுதியென்றும், விக்கிரக ஆராதனை செய்வது தகுதியல்ல வென்றும், இங்கே வந்திருக்கின்ற **ஸ்ரீதர ஸ்வாமி நாயகரவர்கள்** எங்கள் முன்பாகப் பலமுறை பிரசங்கித்தார். அதனுல் எங்களுக்குச் சந்தேக முண்

டாகியிருக்கின்றது; அந்தச் சந்தேகத்தை நிவர்த்தி செய்விக்க வேண்டும்." என்று கேட்டுக் கொண்டார்கள்.

அப்போது, **சிதம்பரர் - இராமலிங்க சுவாமிகள்**, "பிரம்மத்தை யறியத் தொடங்கினோர் அறிதல் வேண்டும்: விக்கிரக ஆராதனை செய்யத் தொடங்கினோர் செய்தல் வேண்டும்; இவ்விருவகையும் அததற் குரிய பக்குவர்களுக்கு அடுத்த வகைகளென் றறிய வேண்டும்" என்று சொல்லினார்.

அப்போது அங்கிருந்தவரிற் சிலர், நாயகரைப் பார்த்து, "இது விஷயத்தில் தங்கள் கோட்பாட்டை வெளிப்படுத்தி, நிறுத்தல் வேண்டும்" என்றார்கள். நாயகர், "லிகித மூலமாய் வெளிப்படுத்துவேன்" என்றார்.

**அதுகேட்டு**, "ஒரு சபையில் மாறுபட்ட இருவர், தங்கள் தங்கள் கோட்பாடுகளை அந்தச் சபையி லறிஞரறிய எடுத்துரைத்து, அதற்குத் தக்க காட்சி, அனுமானம், உவமானம், சத்தம் முதலிய பிரமாணங்களும் — உடன்படல், மறுத்தல்; — ஒரு சாருடன்பட்டு மற்றொரு சாருடன்படாமை;—முற்றும் உடன்படல் போன்று உடன்படாமை,— முதலிய கோட்பாடுகளுக் கமைந்த பலவகை யுக்திகளும்,—அனுபவத் தோடு தர்க்க வுபதர்க்க,—லக்ஷண உபலக்ஷணங்களுக்குப் பொருந்த விவகரித்து—அந்த விவகாரத்தில் சந்தேக விபரீத மயக்கத்திற்கு இடங் கொடாமல், முடிந்த நிச்சயத்தைப், பின்னர் லிகிதமூலமாய்ப் பிறரறிய வெளிப்படுத்தல் மரபே யல்லாது;—மாறுபட்டோர் இருவரும் வேறு வேறிடங்களிலிருந்து அறிஞர் சப்ரதிபத்திய மின்றித் தங்கள் தங்கள் மனஞ் சென்றவழி அளவை—யெல்லையைக் கடந்தெழுதிக் கொள்வதில் நியாயந் தோன்றாது", — என்றும், "ஒழியாத லிகிதச் சண்டையாக முடியும்" என்றும்,—"அது தர்க்க லக்ஷண மரபல்ல" என்றும்,— சுவாமிகள் சொல்லினார்.

அங்கிருந்தவரிற் சிலர், நாயகரைப் பார்த்து, "ஐயா! தங்கள் கோட்பாட்டை வெளியிட்டுப் பிரமாணத்தால் நிலைபெறச் செய்து, எங்களையும் அவ்வழியில் நடத்துவிப்பதற்கு அடுத்த தருண மிதுவாக விருக்க, இத்தருணத்தி லிப்படிச் சொல்வது தங்கள் கோட்பாட்டிற் கழகல்ல" என்றார்கள்.

**உடனே** நாயகர் "நித்திய - நிரஞ்சன - நிர்மல-நிராமய - நிராலம்ப - சொருபமும் - அவாங் மனோ கோசரமுமான பிரமத்தை நினைப்பது தக்க தென்பதும், விக்கிரக ஆராதனை செய்வது தகாதென்பதும் எங்கள் பிரமசமாஜ வேதசமாஜ கோட்பாடு" என்று வெளியிட்டார்.

"அவாங் மனோகோசரமான பிரமம்; மனதினலெப்படி நினைக் கப்படும்? ஆகாயம் அடியாலும் படியாலும் அளக்கப்படும் - காற்று

கையாற் பிடிக்கப்படும் - என்பவைபோல், வார்த்தை மாத்திரத்தாலன்றி, அர்த்த லக்ஷயானுபவங்களுக்கு இடம்பெற வில்லையே!" என்று சுவாமிகள் வினவினர்.

"மிதக்கியானமுள்ள நம்முடைய மனத்திற்குப் பரிமித வத்து வைப்போ லடங்காதென்று சொன்னதல்ல" என்று நாயகர் உத்தரித்தனர்.

"மனத்திற்கு அகோசரமென்பது, மனத்திற்கு விஷயம் படாததென்று பொருள்படுமே யல்லது, சிறிது விஷயமாகிப் பெரிது விஷயமாகாதென்று பொருள் படாது" என்றும்,—"அவ்வாறு பொருள் கொள்வது லக்ஷண வுபலக்ஷண விதியல்ல" என்றும்,—"ஒரு காலத்தில் ஒரு பொருள் சிறிது விஷயமானால், மற்றொரு காலத்திற் சிறிது விஷயமாகும்; பிறிதொரு காலத்திற் சிறிது விஷயமாகும். இவ்வாறு முழுவதும் விஷயமாகும்" என்றும்; — "அவாங் மனோ கோசரமென்றதில் மனத்திற்குச் சிறிது விஷயமானபடி வாக்குக்குஞ் சிறிது விஷயமாதல் வேண்டும்" என்றும்,—' இங்ஙனம் மனவாக்குகளுக்குச் சிறிது விஷயமாகுமென்று கொண்டபோது, கண், காது, மூக்கு, மெய், வாய், கை முதலிய மற்ற இந்திரியங்களுக்கும் விஷயமாகுமென்பதும் தானே விளங்குதலால், பிரம லக்ஷணத்தோடு விரோதப்படும்" என்றும்,—"மனம் முதலான அந்தக்கரணங்களுக்கும், கண்முதலான இந்திரியங்களுக்கும், நாம ரூபக்கிரியைகள் விஷயமாகுமல்லது, தத்துவாதீதமாகிய பிரமம் விஷயமாகு மென்பது விபரீதவுணர்ச்சி" என்றும், — "மனோலயங்கிடைத்த பின்னர் பிரமானுபவங் கிடைக்கும்" என்றும் — "மனஞ் சிறிது தோன்றினும் ஆத்மஞானம் விளங்காது" என்றும், — "மனம் : அசத்து, சடம், அநித்தியம், துக்கம், அசுத்தம் உடையது ; — பிரமம் : சத்து, அறிவு, நித்தியம், இன்பம், சுத்தம் உடையது — ஆகலின், மனத்திற்குப் பிரமம் எவ்வகையிலும் விஷய மாகாது" என்றும்,—"இவ்வாறே வேத முதலிய கலைகளிலும், ஆப்த வாக்கியங்களிலும், ஆணையிட்டுள்ளது" என்றும்,—'பிரமம் மனத்திற்கு விஷயப்படாததென்பது அனுபவத்திற்கும் மற்ற ஹேதுக்களுக்கும் யூகங்களுக்கும் பொருந்துகின்ற பக்ஷம்" என்றும்,-- சுவாமிகள் சொல்லினர்.

பின்னர், சிலபொழுது நாயகர் சும்மாவிருந்தனர். அங்கிருந்தவரிற் சிலர், நாயகரைப் பார்த்து, "சும்மாவிருக்கப்படாது, உத்தரிக்க வேண்டும்"என்றார்கள். நாயகர், சற்று நேரஞ் சென்று மீளவும் ' மனத்தினால் பிரமத்தை நினைக்கக் கூடும்" என்று முன் சொல்லியதையே சொல்லினர்.

"தங்களிஷ்டப்படி விதியைக் கடந்த விவகாரமுந் தடைபடுகின்றது, பிரமம், மனத்திற்கு விஷயமாகுமானால் கண்ணுக்கும் விஷயமாகும் ; இவைகளுக்கு விஷயமாகுமானால், மற்ற இந்திரியங்களுக்கும் விஷயமாகும் என்று நான்முன் சொல்லியதைத் தாங்கள் சிறிது உய்த்துணர வேண்டும்" என்று சுவாமிகள் சொல்லினர்.

நாயகர், சற்றுநேரஞ் சென்று 'மனத்திற்கு விஷயமாவதெல்லாங் கண்ணுக்கு விஷயமாகுமோ?' என்றார். அதற்கு சுவாமிகள் "ஆகும்" என்றார்கள்.

நாயகர் "மற்ற இந்திரியங்களுக்கு விஷயமாகாமல் மனத்திற்கே விஷயமாகத் தக்கது ஒன்றுமில்லையோ! ஒன்றுமில்லையோ!" என்று பலமுறை வியந்து வினவினர்.

"மனத்திற்கே விஷயமாகத் தக்கது யாது? அதனைத் தாங்களே வெளிப்படுத்தல் வேண்டும்" என்று சுவாமிகள் கேட்டனர்.

"ஆனந்தம் மனத்திற்கே விஷயமாவது" என்று நாயகர் சொல்லினர்.

"ஒரு ரூப விஷயத்தைக் கண்கள் கண்டு அந்த ரூப விசேஷத்தால் ஆனந்த விருத்தி யடைந்து, பின்னர் அதன் வழியாக மனத்திற்கும் அவ்வானந்தத்தை யடைவிக்கும்" என்றும்,—"கண்கள், முன்னர் ஆனந்தத்தை யடைதற்கு அடையாளம், அக்கண்களி லிருந்து சிந்துகின்ற பாஷ்பங்களே" என்றும்,—"அதை யானந்த பாஷ்பமென்று வழங்குவதே போதுமான பிரமாணம்" என்றும், —"இஃதன்றி, நேத்திரானந்தம், சிரவணானந்தம்—என்று அறிவுடையோர் பிரயோகிப்பதை யூகிக்க வேண்டும்" என்றும்,—இங்ஙனம் கண்முதலிய இந்திரியங்களும், மனம் முதலிய கரணங்களும் ஆன்மாவுக்கு உபகாரக் கருவிக ளாதலால், அவைகள் ஆனந்த மடைந்தன வென்பது உபசரிப்பு" என்றும்,—"ஆனந்த, பிரத்தியேக ஆன்மஞான விஷயமென்பது உண்மை" என்றும்—சுவாமிகள் சொல்லினர்.

**பின்னர்** சற்றுநேரஞ் சென்று, "ஓரிந்திரியத்திற்கு விஷயமாவது வேறோ ரிந்திரியத்திற்கும் விஷயமாகு மென்றது எப்படி? காதுக்குப் புலப்படுவது மூக்குக்குப் புலப்படாது, கருத்துக்குப் புலப்படுவது கண்ணுக்குப் புலப்படாது" என்று நாயகர் சொல்லினர்.

"**முன்னர்** அவாங் மனோகோசர மென்றதற்குத் தாங்கள் கொண்ட கருத்தின்படி வாக்குக்கும் மனத்திற்கும் பிரமம் சிறிது விஷயமாகுமானால், கண்களுக்குங் கைகளுக்குஞ் சிறிது விஷயமாகுமென்று தாங்களே யூகித்தறியலாம்" என்றும்,—"ஒருபொருள் மனத்தினால் நினைக்கப்படுமானால் காதினாலுங் கேட்கப்படும்; காதினாற் கேட்கப்பட்டது கண்ணினாலுங் காணப்படும்; கைகளாலும் பிடிக்கப்படு மென்பது உபதர்க்க-உபலக்கணம்" என்றும் —'ஸ்தூல சூக்கும காரண பூதங்களால் உருவாகித் தோன்றுகின்ற பொருளினிடத்து, மன முதலான கரணங்களுக்கும், கண் முதலான இந்திரியங்களுக்கும் விஷயங்களாகத் தக்க பண்புகள் உண்டாயிருக்குமென்று அறிந்த பக்ஷத்தில், ஒரு பொருள் ஒரு பண்பினால் ஓரிந்திரியத்திற்கு விஷயமாகுமானால் அந்தப் பொருள் மற்றொரு பண்பினால் மற்றோ ரிந்திரியத்திற்கும் விஷயமாகு மென்று சாதாரண ஜனங்களாலும் அறியப்படும்" என்றும்,—"அக்ஷயோக ஞாயத்தாலும், இந்திரியங்களின் சொரூப ரூப சுபாவ வியத்தி விசேஷ சாமானிய முதலியவைகளையும், மன முதலான கரணங்களின் சொரூப ரூப சுபாவ வியாபக வியத்தி விசேஷ சாமானிய முதலானவைகளையும் வெளிப்படுத்துகின்ற தத்துவ சாத்திரங்

களாலும், பிரகிருதி சாத்திரங்களாலும், உய்த்துணர்ந்து தெளியப்படும்' என்றும்,—"கண்களும் மனமும்,—அதிகரணே பாதமான சம்பந்த முடையது" என்றும்,—"மத்திய, பூத, தூல, சூக்கும காரியம்" என்றும், "இதனால் மனத்திற்கு விஷயமாவது, கண்களுக்கும் விஷயமாகும்" என்றும்,—"கண்களுக்கு விஷயமாவது, மனத்திற்கும் விஷயமாகும்"—என்றும் சுவாமிகள் சொல்லினர்.

**அந்தச் சமயத்தி** லிவைகளைக் கேட்டுச் சூழநின்ற திருவயிந்திரபுரம் வைஷ்ணவப் **பிராமண** பண்டிதர்களும், ஸ்மார்த்த பண்டிதர்களும் அந்தச் சபையினுட் புகுந்திருந்து சுவாமியை நோக்கி, "மனத்திற்குப்புலப்படுவது கண்களுக்கு எப்படிப் புலப்படும்?" என்று வினவினர்.

"**ஒருபொருளில்**, ஸ்தூலப் பிரகிருதி-சூக்குமப் பிரகிருதி-காரணப் பிரகிருதி-மகா காரணப் பிரகிருதி-மூலப் பிரகிருதி-என ஐவகைப் பிரகிருதி அங்கங்க ளுண்டு" என்றும்,—"அவைகளில் காரணப் பிரகிருதி மகா காரணப் பிரகிருதி யங்கங்கள் மனத்திற்கு விஷயமாகும்" என்றும்;—"ஸ்தூல சூக்குமப் பிரகிருதி அங்கங்கள் கண்களுக்கு விஷயமாகும்" என்றும்;—"இவைகளைச் சாதாரண லக்ஷணம்" என்றும், "அசாதாரண லக்ஷணத்தில், கண்ணறிவு பலமுறை சாதன லக்ஷியத்தால் நுட்பவறிவாகி மனத்திற்கு விஷயமாகின்ற காரண மகாகாரணப் பிரகிருதி யங்கங்களையும் அறியும்" என்றும்,—"இவ்வா றறிவது, அசாத்தியமல்ல, சாத்தியமே" என்றும்,—"இதனை **அக்கயோகசாதனம்** முதலிய வழிகளாலும்,—தத்துவ சாத்திரங்களாலும்—அநுமான முதலிய பிரமாணங்களாலும்,—அறிந்து கொள்ளலாம்"—என்றும்—"அன்றி, மனத்திற்குப் புலப்படுவது பிரபஞ்சம் அது கண்களுக்கும் புலப்படும்" என்றும் சுவாமிகள் சொல்லினர்.

"**மனத்திற்குப்** பிரமம் புலப்படாதோ!" என்று பண்டிதர்கள் வினவினார்கள்.

"**பிரமம்** மாயாதீதமாதலால் மாயாகாரியமாகிய மனத்திற்குப் புலப்படாது" என்று சுவாமிகள் சொல்லினர்.

**ஆனல்**, "பிரமத்தை யெப்படி யறியலாம்?" என்று பண்டிதர்கள் வினவினார்கள்.

"**ஆன்ம ஞானத்தால் அறியலாம்**" என்று சுவாமிகள் சொல்லினர். பின்னர் **சம்மதித்தவர்களாக**, பண்டிதர்கள் சும்மா விருந்தார்கள்.

**அதன்மேல்** அங்கிருந்தவர்களிற் சிலர் நாயகரைப்பார்த்து, "சும்மா விருக்கப்படாது. தருணம் நேரிட்டபோதே உத்தரிக்க வேண்டும்" என்றார்கள். நாயகர், ஆரம்பத்தில் சொன்னது போலவே 'லிகித மூலமாய் உத்தரிக்கின்றேன்" என்று சொல்லினர். அதுகேட்டு அந்தச் சபையிலிருந்தவர்களும், அதன் புறத்து நின்றவர்களுஞ் சிரித்தனர். அதுபொறுமல், நாயகர் "இன்னும் எட்டுத்தினத்திற்குள் இவ்விடத்தில் என்னைச் சிரித்தவர்களையெல்லாம் நான் சிரிப்பிக்கச் செய்கின்றேன்" என்று சபதங் கூறினர்.

அதுகேட்டு அந்தச்சபையில் உணர்வுந் தயவுமுடைய வொருவர், "இதென்ன கெர்வித வார்த்தை!" என்றனர்.

அது பொறாமல், நாயகர் அளவிறந்த கோபாவேசத்தோடுங் கண்கள் சிவப்பத் தேகம் பதைப்ப, வாயாற் சில பழிபடு வார்த்தைகளைச் சொல்லிக் கொண்டே திடீரென் றெழுந்து, இடி முழங்கினாற்போல் ஆரவாரித்தனர். இவருக்குச் சகாயமாய், பின்வந்தவர்களும், நெருப்பில் நெய்விட்டதுபோற் கோபமூண்டு கோஷித்தனர்.

அத்தருணத்தில் சுவாமிகள், நாயகருக்கும் மற்றவர்களுக்குங் கோபந் தணியத்தக்க நல்ல வார்த்தைகளைச் சொல்லி, எழுந்தவரை மீளவும் உட்காரவைத்து, "ஐயா நாயகரவர்களே! கெர்வித வார்த்தை யென்ற சத்தத்தின் லக்ஷியத்தை நாம் உள்ளபடி யறிந்தால், இவ்வளவு தீவிரம் நேரிடுமென்று எனக்குத் தோன்றவில்லை. ஆயினும் போனது போக, இனியாவது இச்சபையாரறிய பிரமம் மனத்திற்கு விஷயமாகா தென்று நான் தெரிவித்தபடி, தாங்களுஞ் சம்மதிக்கின்றபக்ஷத்தில், சம்மதமென்று சொல்லிச் சும்மா விருக்கவேண்டும்; அவ்விதம் சம்மதி யாத பக்ஷத்தில் பிரமாணத்தாலும், யுக்தியாலும், அனுபவத்தாலுந் தங்கள் கோட்பாட்டை நிறுத்துவீர்களாக!" என்று சொல்லினர்.

நாயகர் "இப்போது என்னை விட்டுவிட்டால், பின்பு லிகித மூல மாக வாதிக்கின்றேன்" என்று சொன்னார்.

"எதிர்நின்று வாதிப்பதற்குக் கூடாமையால், லிகித மூலமாய் வாதிப்பீர்களென்பதில் நம்பிக்கை யில்லையென்றும், லிகித மூலமாய் வாதிப்பது தர்க்க லக்ஷண மரபல்லவென்றும் முன்னரே குறித்திருக் கின்றேன்" என்றுஞ் சொல்லி முடித்துப் பின்னர், அந்தச் சபையிலுள் ளோரை நோக்கி, "பிரம்மானுபவமானது, விக்கிரக ஆராதனை செய்தா லல்லது வாராது" என்றும், "விக்கிரகம் என்பது விசேட இடம் என்று பொருள்படும்' என்றும், "ஆன்மா இருப்பதற்குக் கிரகம் மனிதர் முதலிய ஜீவதேகங்கள்" என்றும், "பிரமப் பிரகாசமிருந்துவெளிப் படுவதற்கு விக்கிரகம் தேவ தேகங்கள்" என்றும், "அத் தேவ தேகங்களாகிய விக்கிரகங்களில் விதிப்படி பக்தியோடு உபாசிக்கில் பிரமப் பிரகாசம் எளிதில் வெளிப்பட்டு அனுக்கிரகிக்கும்" என்றும், "அவ்வாறு விசேட இடமென்று சொல்லப்படுகின்ற விக்கிரகங்களில், பிரமப் பிர காசம் வெளிப்பட்டு அனுக்கிரகித்ததற்கு அடையாளம், சில காலத் திற்குமுன் விக்கிரகாராதனை செய்த பக்தர்கள், குஷ்டம், குன்மம் முதலான தீரா‌த வியாதிகளைத் தீர்த்தும், இறந்தவர்களை எழுப்பியும், இன்னும் செயற்கரிய அநேக மகத்துவங்களை நடத்தியும் இருந்ததே போதுமானது" என்றும், "இப்போதும் விக்கிரகாராதனை செய்கின்ற பக்தர்கள் சில மகத்துவங்களைச் செய்து வருகின்றார்கள்" என்றும், "பிரம சமாஜத்தார்-வேத சமாஜத்தார் அந்த அடையாளங்களை யுடைய வர்களாகத் தோன்றவில்லை' யென்றும், "நாயெல்லாம், நமது பக்குவத் திற்குத் தக்கபடி விக்கிரகாராதனை செய்து, அதனால் அருளைப்பெற்று, அதனால் அறிவுவிளங்கி, அதனால் பிரம சுகத்தை யனுபவிக்கலாம்" என்றும்,—சுவாமிகள் சொல்லிக் கொண்டே எழுந்தனர். இவ்வண்ண மாக அவ்விவாதம் வெற்றியோடு முடிவுற்றது.

## 49. புலவர்களின் விவாதம்



பின்னொருகால், இரண்டு புலவர்கள் தங்களுக்குள்ள விவாதத்தைத் தீர்த்துக்கொள்ள அடிகளிடத்து வந்தனர். அவர்களை அடிகள் அமரச்செய்து 'என்ன காரணம்?" என்று வினவினர். அதற்கவ் வித்வான்கள் "அருளானந்தப் பொதுவாழ்வுடைய ஐய! உலக நிகழ்ச்சிகளனைத்தும் (நல்லவையும் கெட்டவையும்) ஆண்டவனாலேயே நடக்கின்றன '**அவனன்றி ஓரணுவும் அசையாது**'—என்பது எங்களுள் ஒருவருடைய வாதம்;

இந்தச் சீவனால் வரும்அறு பகையெலாம் இவன் செயல் என்னாமல்
அந்தத் தேவனால் வருமென்ற மூடர்கள் அதோகதி அடைவார்கள்
இந்தச் சீவனால் வரும்அறு பகையெலாம் இவன் செயல் அல்லாமல்
அந்தத் தேவனால் அன்று எனும் விவேகிகள் அமலவீடு அடைவாரே.

(கைவல்யம் — சங் - 59 - ம் பாடல்)

என்பது மற்றொருவருடைய வாதம். ஆகவே, இவ்விரண்டு கொள்கைகளுள் எக்கொள்கை சிறந்தது? என்பதைத் தேவரீர் திருவாய்மலர்ந்தருளல் வேண்டும். அதற்காகவே இங்கு வந்தோம்" என்று கூறினர். அதற்கு சுவாமிகள் "ஒரு நிர்வாண சந்நியாசி நடுத்தெருவில் போய்க்கொண்டிருக்கும் பொழுது அவரைக்கண்ட ஒருவன் 'மிகநல்லவர்'; என்று எண்ணியவனாய் அவருக்கு ஒரு கனிந்த வாழைப்பழங் கொடுத்தான்: மற்றொருவன் 'பெண்கள் நடந்து செல்கின்ற வழியில் நிர்வாணத்தோடு செல்கின்ற இவன் மிகப்பொல்லாதவன்,' என்று கல்லால் அடித்தான், இவ்விருவருடைய செய்கைகளையும் ஓரிடத்திருந்து பார்த்த மூன்றாவது மனிதனொருவன், உடனே அங்குவந்து சந்நியாசியையும், அவருக்கு வாழைப்பழங் கொடுத்தவனையும், கல்லாலடித்தவனையும் ஒருங்கே அழைத்துச்சென்று நியாயாதிபதியிடம் விடுத்து "இச்சந்நியாசியை இத்துஷ்டன் இந்த மனிதர் கொடுத்த பழத்தை வாங்கும் பொழுது கல்லாலடித்தான்" என்று அடித்தவனைக்காட்டி அந்தவனைச் சாக்ஷியாகக் கூறினன். அப்பொழுது அந்நீதிபதி சந்நியாசியாரை நோக்கி "யார் உம்மை அடித்தது?"என்று கேட்டார். சந்நியாசியார் வாழைப்பழங் கொடுத்தவனைக்காட்டி. "அடித்தவன் இவன்" என்றார், கொண்டுவந்துவிட்டவர், "பழங்கொடுத்தவர், இவர்-கல்லாலடித்தவன் இவன்" என்று அவ்விருவரையும் நீதிபதியிடம் காட்டிக்கூறி யிருக்கும்பொழுது சந்நியாசியார் இவ்வாறு பழங்கொடுத்தவனும் கல்லாலடித்தவனும் ஒருவனே' என்று கூறுகின்றாரே', என்று தெளியாதவராய், மீளவுஞ் சந்நியாசியாரை நோக்கிப் "பழங்கொடுத்தவர் யார்?"என்று வினவினர். கல்லாலடித்தவனைக் காட்டி "பழங்கொடுத்தவன் இவன்" என்றே அப்பொழுதுஞ் சந்நியாசியார் கூறினர். அப்பொழுதும் தெளிவுறாத நீதிபதி பின்னுஞ் சந்நியாசியாரை நோக்கிக், "கல்லாலடித்தவன் யார்?" என்று வினவ, அதற்கவர் அழைத்துக்கொண்டு வந்தவனைக் காட்டி, "கல்லாலடித்தவன் இவன்" என்று பதிலளித்தார். நீதிபதி, உடனே உண்மைதெளிந்து

கல்லாலடித்தவனைச் சிறைப்படுத்திவிட்டுச் சந்நியாசியாரையும், பழங் கொடுத்தவரையும், அழைத்து வந்தவரையும் அனுப்பிவைத்தார். கதை இவ்வளவே.

இக்கதையில் உள்ள சந்நியாசியை ஒத்தவர்கட்கு **'எல்லாம் ஆண்டவன் செயல்களே: அவனன்றி ஓரணுவும் அசையாது'** என்னுங் கொள்கை ஏற்றது. ஏனெனில் அடித்தவன் — அடியாதவன் ஆகிய இருவரையும் வேறு பிரிக்கவில்லை: வேற்றுமை செய்யவில்லை. அதுபோல 'இது என்னுடைய செயல்' 'இது கடவுளுடைய செயல்' என்று பிரித்துக் காணாமல் எல்லாம் இறைவன் செயலே என்று, எல்லாவற்றையும்,

> அன்றே யென்றன் ஆவியும் உடலும் உடைமை யெல்லாமுங்
> குன்றே யனையாய் எனையாட் கொண்டபோதே கொண் டிலையோ
> இன்றோ ரிடையூ றெனக் குண்டோ எண்டோண்முக்க ணெம்மானே
> நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகமே.

என்று கூறியாங்கு ஒப்படைத்து உயிர் தாங்குபவர்கள் அவர்களாதலால் அவர்கள் செய்வினையும் ஆண்டவனுடைய வினையேயாகும்.

சந்நியாசியும் மற்றிருவரையும் நீதிபதியிடத்து அழைத்துச் சென்றவரை ஒத்தவருக்குக் கடவுள் செயல்கள் சில, ஜீவர்கள் செயல்கள் சில என்னும் கொள்கை ஏற்புடையது. ஏனெனில் அவர்கள் **"வேற்றுமை மயக்கில் விழுந்து கிடப்பவர்கள்,"** என்று அவர்களைத் தேற்றி அனுப்பி வைத்தனர்.

## 50 சித்தரின் வருகை

**மற்றொரு நாள்** இரவு கூடலூர் அப்பாசாமி செட்டியார் வீட்டினுள்ளிருக்கும் அறையொன்றில் ஐயா அவர்கள் தனித்திருக்கிற காலத்தில், திடீரென யாரோ ஒரு மனிதர் தங்கு தடையின்றி அவ்வீட்டினுள் பிரவேசித்தார் அதனைக் கண்ட அவ்வீட்டுத் திண்ணையிலிருந்த சிலர் அப்புது மனிதரைப் பின்தொடர்ந்தனர். ஆனால் அவர்கள் உள்ளே சென்றதும் முன்னால் சென்ற அம்மனிதர் மாயமாய் மறைந்துவிட்டனர். ஆதலால் இவர்கள் 'அம்மனிதர் எங்கேயாவது ஒளித்துக் கொண்டாரோ!' என்னும் ஐயமுடையவர்களாய் அவ்வீட்டிலுள்ள ஒவ்வொரு அறைகளையும் பரிசோதிக்கத் தொடங்கி, ஐயா அவர்கள் இருக்கும் அறை நீங்கலாக மற்றைய அறைகளையும் இடங்களையும் பரிசோதித்தும் அம்மனிதர் புலப்படாது போகவே கடைசியாக ஐயா அவர்களிருக்கும் அறைக்குச் சென்று அவர்களிடத்து இந்நிகழ்ச்சி முழுவதையும் எடுத்துக்கூற, பெருமானார் புன்னகையோடு அவர்களை நோக்கி "வந்தவர் மனிதரல்ல அவர் ஒரு சித்தர்: அவர் நம்மைக் காணவே இங்கு வந்தார். இந்நேரம் அவர் காசியிலிருப்பார், அவர் கொடுத்துப் போனதே இந்த லட்டு" என்று அவர்களுடைய

சந்தேகத்தை விளக்கியருளினர். அவ்வருள் மொழிகளைக் கேட்ட அன்பர்கள் பெரிதும் மகிழ்ச்சி அடைந்தனர்.

## 51. தாசில்தாரின் தருக்கு

மஞ்சகுப்பம் என்னும் ஊருக்கு தாசில்தாராக இருந்த வேங்கடசுப்பு ஐயர் என்பவர், இரக்கமின்றித் தாம் ஊர்திகளில் ஏறிக் கொண்டு செல்கின்ற இடங்களுக்கெல்லாம் ஊது கொம்பு வைத்து ஊதிக்கொண்டே வருவதற்கென ஒரு சக்கிலியை நியமித்துப் பலநாட்களாக அம்மாதிரியே நடத்திவந்தார். இதனை யறிந்த நம் ஐயா அவர்கள், அவ்வேங்கடசுப்பு ஐயர் பிரசங்கத்திற்கு வந்தபொழுது அவரை யழைத்து "நீர் வண்டியிலேறிச் செல்லும்பொழுது நும்போன்ற ஒரு மனிதன் பல மைல்கள்தூரம் நடந்து ஓடி வருவதென்றால் இதைவிட வேறு ஜீவகாருண்யமற்ற செயல் என்ன விருக்கிறது! அல்லாமலும் இந்த வாழ்வு எத்தனை நாளைக்கு நிலைத்திருக்கப் போகிறது. ஆதலால் இனி அவ்வழக்கத்தை அறவே விட்டு விடுங்கள். இல்லையானாலும், தாங்கள் செல்லவேண்டிய ஊருக்கு முன்னமேயே அவனை அனுப்பி வைத்து, அந்த ஊருக்கு அருகே நீங்கள் போனதும் அவன் ஊதுவதை வைத்துக் கொள்ளுங்கள்" என்று அறிவுறுத்தினர்.

## 52. உண்ணாக்கும்—கண்ணோயும்

ஒருகால் உண்ணாக்கு வளர்ந்து அதனால் பெருந்துன்புற்ற சேலம் வாசியாகிய ஒரு ஜவுளி வியாபாரி பெருமானை அடுக்க, பெருமானர் அத்துன்பத்தைத் திருநீறு கொடுத்தே தீர்த்தருளினார்கள். அப்படியே, கண்ணோயினால் முகம்வீங்கித் துன்புற்ற ஒருமனிதன், ஐயா அவர்கள் விவகாரஞ் செய்து கொண்டிருக்கும் வேளையில் அவ்வழியேபோக, அச்சமயம் பெருமானர் அம்மனிதனைப் பார்த்து சும்மா இருக்கச் சகிக்காமல் உடனே அவனை அழைத்துப், பக்கலிலிருந்த ஒரு வாழைப் பழத்தைக் கொடுத்து "இதை வைத்துக்கட்டு; உன் நோய் தீர்ந்து விடும்" என்றுகூற, அவனும் அவ்வாறே அப்பழத்தினைக்கட்டி குண மடைந்தான்.

## 53. வடலூர்

### சத்திய தருமச்சாலை

இங்ஙனமாக எம்போல்வார் மயக்கொழித்து இன்னருள் சுரந்து வரும் ஏந்தலார்க்கு எல்லா உயிர்களும் பசியற்று இன்புற்று வாழவும், ஜீவகாருண்யமே கடவுள் வழிபாடு என்பதையும் — ஜீவகாருண்யமே மோக்ஷ வீட்டின் திறவுகோல் என்பதையும், மக்கள் உணர்ந்து பேரின்பசித்திப் பெருவாழ்வடையும் பொருட்டும், ஓர் தருமச்சாலை இயற்றல்

வேண்டுமென்னும் எண்ணமுண்டாக, அதனைத்தம் அருமை மாணவர்களிடத்தும் அன்பர்களிடத்தும் அறிவித்தார்கள். அவர்களும் "அப்படியே செய்யக் காத்திருக்கின்றோம்." என்று கூறிப் பல இடங்களைக் குறிப்பிட்டு 'அங்கே ஏற்படுத்தலாம்—இங்கே ஏற்படுத்தலாம்'—என ஒவ்வொருவரும் ஒவ்வோரிடத்தைக் குறிப்பிட்டார்கள். வள்ளலார், ஒரு நாள் காலை, திடீரென தமது மெய்யன்பர்களுடன், புறப்பட்டு திருச்சிற்றம்பலம், திருக்கூடலையாற்றூர், திருமுதுகுன்றம், திருவதிகை, திருவிரும்பைமாகாளம், திருப்பாதிரிப்புலியூர், தியாகவல்லி ஆகிய இச்சிவதலங்களுக்கு நடுவேயும், தென்பெண்ணை, திருக்கெடிலம், வெள்ளாறு, மணிமுத்தாநதி ஆகிய நதிகள் நாற்புறமுஞ் சூழப்பெற்றதாயும், வடற்பெரு வெளியாய்ப் போவார் வருவார்க்குப் பசிதீர்க்கப் போதியதாயும், எவ்வகை விவகாரங்களுமில்லாது தனித்திருந்து இன்புறுதற்கு ஏற்றதாயும், உள்ள **வடலூர்** என்னும் தெய்வத் திருப்பதியில் ஒரு பரந்த இடத்திலே — தற்போது தருமச்சாலையுள்ள இடத்தில் — வந்து நின்று, '**இதுவே தகுதியான ஞானபூமி**' என்று தீர்மானித்தார்கள்.

அத் தீர்மானத்தைச் சிரமேற்கொண்ட அன்பர்கள், அவ்வாறு செய்ய முயற்சிக்க அதன் பயனாக அவ்வூரிலுள்ளவர்களே, ஐயா அவர்களது தருமச்சாலைக்கு **எண்பதுகாணி நிலத்தைப்** பட்டா செய்து கொடுத்தனர்.

தருமச்சாலைத் திருப்பணி நடந்துவரும் நாட்களில் ஒருநாள், ஐயா அவர்கள், பின்னலூர் சாலையில் போய்க்கொண்டிருக்கும் பொழுது, அம்பாள்புரம் வேம்பையர் என்னும் பாகவதர் யாரோவென அறியாதவராய், தூரத்திலிருந்துகொண்டே "போகிறது யார்" என்று கேட்க, அதற்கு நம் ஐயா அவர்கள் "**நான்தான் நீல வியாபாரி**" என்று கூறினார். நீலம் என்றால்—மாயை [அஞ்ஞானம்] என்றும், வியாபாரி யென்றால் வாங்க வருபவர் என்றும் பொருள் கொண்டால், அடிகளுடைய நிலைக்கு அது ஒருவாறு பொருந்தக் காணலாம். எனினும் ஐயா அவர்கள் எப்பொருள்பட அதனைக் கூறினரோ? அறியேம்.

## 54. வேட்டவலம் — ஜமீன்தார்

**வேட்டவலம்** என்னும் ஊருக்கு ஜமீன்தாராகிய அப்பாசாமி பண்டாரியாருக்கு மனைவிமார் இருவர். அவருள் ஒருவரை **பிரம ராக்ஷஸம்** என்கிற பேய் பிடித்துக்கொண்டது; மற்றொருவரை **மகோதர நோய்** அடுத்துவிட்டது. பிரம ராக்ஷஸம் என்னும் பேயும் நீங்காத பேய்; மகோதரம் என்னும் நோயும் தீராதநோய். தனது செல்வமெல்லாம் செலவழிந்தாலும் செலவழியட்டும், தம்முடைய இரு மனைவியரும் குணப்பட்டால் போதுமென ஜமீன்தார் ஏராளமான பொருட்செலவு செய்து பூசாரிகளையும், மந்திரவாதிகளையும், வைத்திய நிபுணர்களையும் கொண்டு பரிகாரஞ்செய்து பார்த்தார். அவர்கள் பேச்சைக் கேட்டு, ஊர்களிலுள்ள கிராமதேவதைகள் எனச் சொல்லுகின்ற சிறு தெய்வங்களனைத்திற்கும் அளவில்லாத ஆடு கோழிகளைப் பலி கொடுத்

தார். ஐயோ! பாவம். ஜமீன்தாருடைய மனைவியர் இவ்வாறாக வேண்டுமென்று அந்த ஆடு கோழிகள் மனத்தினாலும் எண்ணி யிருக்குமா? அதற்குப் பதிலாக அவருக்குப் பாவ மூட்டையே சேர்ந்தது. எனவே அவர் எண்ணம் எவ்வகையிலும் ஈடேறவில்லை. அப்படி யிருக்கும் பொழுது, அவ்வூரிலுள்ள ஆடு கோழிகள் அழிந்ததுபோக அழியாதிருப் பவை செய்த அருந்தவத்தாலோ,—**மருள்நெறி யொழிந்து அருள் நெறி ஓங்கும் அருமைக்காலம் அணுகியதாலோ** — ஐயா அவர்களின் பெருமை விளங்க ஆண்டவர் திருவுள்ளத்தெண்ணியதாலோ,— அல்லது ஜமீன்தார் அடுத்தடுத்தெடுத்த அநேக முற்பிறப்புகளில் செய்த அருந்தவத்தின் பயனாலோ, — நம் ஐயா அவர்களிடத்து அப்பெருந் துயரத்தை அகற்றிக் கொள்ளலாம் என்னும் அருமை எண்ணம் அந்த ஜமீன்தாரின் உள்ளத்தில் உண்டாயது. ஆகவே, அவர் தம் ஏவலாளர் சிலருடன் ஐயா அவர்களிடத்துவந்து அடிபணிந்து, "எம்மை யாட் கொள்ளவந்த அருளுருவே! தேவரீர் பெரிதுந் தயைசெய்து எம் இல்லத்திற்கு வந்து எம்மை ஆட்கொள்ளல் வேண்டும்" என வேண்டினர்.

ஐயா அவர்களும் ஆண்டவனின் திருவருள் தூண்டுதலால் அதற்கிசைந்தவராகி ஜமீன்தார் முன்னதாகச் செல்லவும், அவர் தம் ஏவலாளருடன் அவருடைய அரண்மனைக்குச் சென்றார்கள். பெருமானார் வருகைக்காக ஜமீன்தார், நகரை அலங்கரித்து, அரண்மனையைச் சிங்காரித்து, பெருமான் வந்து அமர்வதற்கென இரண்டு நாற்காலிகளை அமைத்து வரவை எதிர்நோக்கிக் கொண்டிருந்தார். இரண்டு நாற்காலிகளை அமைத்ததன் காரணம், யாதெனில்:—அவ்விரண்டில் ஒன்றைத் தாம் மனதிலே எண்ணிக்கொண்டு தாம் எண்ணி யிருக்கிற அந்நாற்காலியிலேயே சுவாமிகள் அமர்வாராயின் அவரே நம்மை ஆட்கொள்ளவந்த பெரியார் என்பதைத் தீர்மானிக்கக்கூடும்: என அந்த ஜமீன்தார் மனத்தில் எண்ணியதேயாம். இஃதிவ்வாறிருக்க,

பெருமான், ஜமீன்தாரின் ஆட்கள் அழைத்துவர அப் பதியை யடைந்து, அவர் மாளிகைக்குள் நுழைய ஆரம்பித்த அப்பொழுதே பிரம ராக்ஷஸம் பிடித்திருந்த ஜமீன்தாரின் முதல் மனைவியார் வீட்டினுள்ளிருந்து வெளிவாயிலை யடைந்து ஐயாவை வணங்கி, "ஐயா அவர்களே! நான் போய் வருகிறேன்; விடைகொடுத் தருளல் வேண்டும்" என்று திருநீறு வாங்கித் தரித்துக்கொண்டனர். அப்பொழுதே அவரைப் பற்றியிருந்த பிரம ராக்ஷஸம் அவரை விட்டுப் பிரிந்துபோயது.

அதன்பின், ஐயா அவர்கள் உள்நுழைந்து ஜமீன்தார் மனத்தில் **எண்ணங்கொண்டிருந்த நாற்காலியிலேயே** அமர்ந்தருளினார்கள். இவ்விரு நிகழ்ச்சிகளையுங் கண்ட ஜமீன்தார் ஆனந்தக்கடலில் மூழ்கினர். உடனே வள்ளலாரின் திருவடிகளில் விழுந்து வணங்கினர்; எழுந்தார். இன்னது சொல்வதென்றே அவருக்குத் தெரியவில்லை. கண்களினின்றும் ஆனந்தக் கண்ணீர்பெருக "அடியேனது குறை தவிர்த்தாண்டு கொண்ட ஆண்டவரே! அடியனேன் தங்கட்கு என்ன கைம்மாறியற்றப் போகின்றேன்? என்னுடைய செல்வ முழுவதும் எடுத்துக் கொடுத்தாலும், எம் பெருமானே! தாங்கள் எளியேற்குச் செய்த பேருதவிக்கு அது இணையா

காதே. ஆதலால் **நானும் எனது வழிவழி வருபவர்களும் தேவரீருக்கே அடிமை பூணுகின்றேம்.** அதுவே நாங்கள் செய்யுங் கைம்மாறாகும். இது நிற்க, எனது இளைய மனையாளும் மகோதர நோயினல் பல வருடங்களாக வருந்துகிறுள். அவளையும் தேவரீர் ஆட்கொண்டு அவளுடைய அத்தீராப் பிணியையும் தீர்த்தருள வேண்டும்", என மேலுங் குறையிரந்து கொண்டார். இரக்கம்கொண்ட ஐயா அவர்கள், ஜமீன்தாருடைய இளைய மனைவியாரின் மகோதர நோயையும், மூன்றுவேளை திருநீறு கொடுத்துத் தீர்த்தருளினர்கள்.

## 55. பலி நிறுத்தம்

பின்னர், அவ்வூரிலுள்ள பாம்பு தேள் முதலிய விஷ ஜந்துக்களைப் பிடித்து ஊருக்குப் புறத்தேயுள்ள காடுகளில் கொண்டுபோய் விடும்படி பிடாரனை நியமித்து அவனுக்கு ஊதியங்கொடுக்கச் செய்தனர். அவ்வாறே அவனும் அனேகமாக அவ்விஷ ஜந்துக்களை ஊருக்கு அப்புறப் படுத்தினன். அப்படியே அவ்வூரில் அதுவரை நடந்த **பலியிடும் வழக்கத்தை அறவே மாற்றி** எல்லோரும் பாற்பொங்கலிட்டுப் பரவிப் புகழும் புண்ணியமும் அடையச் செய்தனர்.

**நலிதரு** சிறிய தெய்வமென் றையோ நாட்டிலே பலபெயர் நாட்டிப்
பலிதர ஆடு பன்றிகுக் குடங்கள் பலிக்கடா முதலிய வுயிரைப்
பொலிவுறக் கொண்டே போகவுங் கண்டே புந்திநொந் துளநடுக் குற்றேன்
கலியுறு சிறிய தெய்வவெங் கோயில் கண்டகா லத்திலும் பயந்தேன்.

துண்ணெனக் கொடியோர் பிறவுயிர் கொல்லத்
　　தொடங்கிய போதெல்லாம் பயந்தேன்
கண்ணிற ஐயோ பிறவுயிர் பதைக்கக்
　　கண்டகா லத்திலும் பதைத்தேன்
மண்ணினில் வலையுந் தூண்டிலுங் கண்ணி
　　வகைகளுங் கண்டபோ தெல்லாம்
எண்ணியென் னுள்ளம நடுங்கிய நடுக்கம்
　　எந்தைநின் திருவரு ளறியும்.

**பிறகு**, ஆங்கிருந்தும் புறப்பட்டுத் தமது அன்பர்களாய கூடலூர் தேவநாயகம் பிள்ளை, தொழூர்: வேலாயுத முதலியார் முதலானேருடன் ஐயா அவர்கள் **விருத்தாஜலத்மத** யடைந்து ஆங்கு திருக்கோயில் கொண்டெழுந்தருளி யிருக்கும் பரசிவத்தின் மிது பல பாடல்களைப் பாடி மகிழ்ந்து உறைவாராயினர்.

## 56. கல்பட்டு ஐயா

**பின்னர்**, நம் ஐயா அவ்வூரில் உள்ள **கல்பட்டு ஐயா** (கல்பட்டு இராமலிங்க சுவாமிகள்) என்னும் உத்தம யோகியாருடைய விருப்பின்படி அவருக்குச் **சட்சுதீக்ஷை** செய்து அவரையும் அழைத்துக் கொண்டு **வடலூர்** வந்து சேர்ந்தார்கள். அக்கல்பட்டு ஐயாவுக்கு வடலூரிலேயே ஓர் ஆசிரமமும் அமைத்துக் கொடுத்தார்கள். அவரும்

ஐயா அவர்கள் சத்திய தருமச் சாலையில் பிரசங்கம் செய்யும் வேளைகளில் வந்து செவிமடுத்துச் செல்லுவார்.

## 57. சத்திய தருமசாலைத் திறப்புவிழா

**இஃதிவ்வாறாக,** இதற்குள் **சத்திய தருமசாலை கட்டி முடிவு பெறப் பிரபவ ஆண்டு, வைகாசித்திங்கள், 11-ஆம் நாள் வியாழக்கிழமை** யன்று அச்சாலையினுள் பிரவேசமாகி அப்பொழுதே சன்மார்க்க விளக்கத்தின் முதற்பிரிவாகிய **ஜீவகாருண்ய ஒழுக்கத்தின் முதற் பாகத்தை** வரைந்து முடித்தனர். முடித்து அப்பகுதிக்குச் **சிதம்பரம் வேங்கடசுப்பு தீக்ஷிதர்** அவர்களைக்கொண்டு **வழிபாடு** முதலியன செய்வித்து அதனை வாசிக்கச்செய்தார். செய்ததோடு **சமரச வேத பாடசாலை** ஒன்றையும் அதன்கண் ஸ்தாபித்தனர். ஸ்தாபித்த நாள்முதல் மூன்று நாட்கள்வரை ஒவ்வொரு நாளிலும் **பதினாயிரம்** பேருக்கு மேற்பட்டவர்கட்கு அன்னமளிக்கப்பட்டது. அத்துடன் நிற்காமல், எப்பொழுதும் அச்சத்திய தருமச்சாலையை நோக்கிப் பசியோடு வருவோருக்கு எவ்விதக் குறைவுமில்லாது அன்னதானம் ஐயா அவர்களுடைய கட்டளைப்படி நடந்தேறிவந்தது. "**எப்போதும் அடுப்பு புகைந்துகொண்டே இருக்கவேண்டும்**" என்ற ஐயா அவர்கள் வாக்கின் படி இன்றைக்கும் அவ்வாறே நடந்துவருவது எல்லோரும் அறிந்ததே.

சத்திய தருமச்சாலைத் திறப்புவிழா தினத்தன்று வள்ளற் பெருமானால் வெளியிடப்பட்ட பத்திரிகை வருமாறு:—

## 58. ஜீவகாருண்ய ஒழுக்க விளம்பரம்

**அருட்பெருஞ்ஜோதி**



**கல்வி** கேள்விகளால் பகுத்தறியத்தக்க அறிவையுடைய உயர் பிறப்பாகிய மனிதப்பிறப்பைப் பெற்றுக் கொண்டவர்கள் அனைவர்க்கும் வந்தனஞ்செய்து அறிவிக்கை.

உலகத்தில் மனிதப்பிறப்பைப் பெற்றுக் கொண்டவர்கள் இந்தப் பிறப்பினால் அடையத்தக்க பிரயோஜனத்தைக் காலமுள்ளபோதே அறிந்து அடையவேண்டும்.

**அந்தப் பிரயோஜனம் யாதோ? எனில்:—**

எல்லா அண்டங்களையும் எல்லாப் புவனங்களையும், எல்லாப் பொருள்களையும், எல்லாச் சீவர்களையும், எல்லாச் செயல்களையும், எல்லாப் பயன்களையும், தமது பரிபூரண இயற்கை விளக்கமாகிய அருட் சத்தியால் தோன்றி விளங்க விளக்கஞ் செய்விக்கின்ற இயற்கையுண்மை வடிவினராகிய கடவுளின் பூரண இயற்கையின்பத்தைப் பெற்று எக்காலத்தும்,—எவ்விடத்தும்,—எவ்வளவும்,—தடைபடாமல் வாழ்கின்ற ஒப்பற்ற

பெரிய வாழ்வை அடைவதே இந்த மனிதப் பிறப்பினுல் அடையத்தகக் பிரயோஜனம் என்று அறியவேண்டும்.

**இயற்கை யின்பத்தைப் பெற்றுத் தடைபடாமல் வாழ்கின்ற அந்தப் பெரிய வாழ்வை எதனுல் அடையவேண்டும்? எனில்;—**

கடவுளின் இயற்கை விளக்கமாகிய அருளைக்கொண்டே அடைய வேண்டும், என்றறியவேண்டும்.

**கடவுளின் இயற்கை விளக்கமாகிய அருளை எதனுல் பெறக் கூடும்? எனில்:—**

ஜீவகாருண்ய ஒழுக்கத்தினுல் கடவுளருளைப் பெறக்கூடுமல்லது வேறெந்த வழியாலும் சிறிதும் பெறக் கூடாதென்று உறுதியாக அறிதல் வேண்டும்.

**ஜீவகாருண்யத்தின் முக்கிய லக்ஷியமாவது எது? எனில்:—**

எந்த வகையிலும் ஆதாரமில்லாத ஏழைகளுக்குண்டாகின்ற பசி யென்கின்ற பெரிய ஆபத்தை நிவர்த்தி செய்கின்றதே முக்கிய லக்ஷிய மென் றறிய வேண்டும்.

**பசியின் கொடுமை:**—உலக முழுவதும் ஆளுகின்ற சக்கரவர்த்தி யாகிய **அரசனுக்கும்**—உலகமுழுவதும் ஒரு நிமிஷத்தில் வெல்லத்தக்க **சுத்தவீரனுக்கும்**—மூன்றாசைகளையும் ஒழித்து உண்மையறிந்து பிரமானுபவத்தைப் பெற்ற சீவன் **முக்தர்களுக்கும்** பசி நேரிட்டபோது மனமிளைத்தும்—வலி குலைந்தும்—அனுபவந் தடைப்பட்டும்—வருந்துகின்றார்களென்றால் எந்த வகையிலும் **ஆதாரமில்லாத ஏழைகளுக்குப் பசி** நேரிட்டால் என்னபாடு படார்கள்!

பசி அதிகரித்த காலத்தில் முகம் புலர்ந்துபோகின்றது—உச்சி வெதும்புகின்றது—பிரமரந்திரம் அடைபடுகின்றது—காது கும்மென்று செவிடுபடுகின்றது—கண் பஞ்சடைந்து எரிந்து நீருலர்ந்து குழிந்து போகின்றது—நாசி அழன்று கலைமாறி பெருமூச்சுவிடுகின்றது—நாக்கு நீருலர்ந்து தடிப்பேறுகின்றது—மெய் முழுதும் கருகி சத்தியற்று ஸ்மரணை கெடுகின்றது—வாக்குக் குழறித் தொனி மாறுகின்றது—கைகளும் கால்களும் தடதடத்துச் சோர்ந்து தடுமாறுகின்றது—மல சல வழி வெதும்பி வேறுபடுகின்றது—உரோமம் வெறிக்கின்றது—பற்கள் கருகித் தளர்கின்றன—இரத்தமும் சலமும் சுவறுகின்றது—சுக்கிலம் தன்மை மாறி வறளுகின்றது—எலும்புகள் குழைந்து நோக்காடுண்டாகின்றது—நாடி நரம்புகள் வலியிழந்து மெலிந்து கட்டுவிடுகின்றது—வயிறு பகீரென்கின்றது—மனம் தளர்ந்து நினைவு மாறுகின்றது—புத்தி கெட்டு நிலை மாறுகின்றது—சித்தம் கலங்கித் திகைப் பேறுகின்றது—அகங்காரம் குலைந்து அச்சமுண்டாகின்றது—பிரகிருதி சுருங்குகின்றது—**கடவுள் விளக்கமும், ஆன்ம விளக்கமும் மறைபடுகின்றது**—தாப சோபங்கள் மேன்மேலுண்டாகின்றன—இவ்வளவு அவத்தைகளும் ஏககாலத்திலுண்டாகின்றன. இது எல்லாச் சீவர்களுக்கும் பொதுவாகவே யிருக்கின்றது. ஆகாரமுண்டு பசிநீங்கிய தருணத்தில் தத்துவங்களெல்லாந் தழைத்து கடவுள் விளக்கமும் ஆன்ம விளக்கமும் அகத்திலும் முகத்திலும் வெளிப்பட்டு திருப்தி இன்ப முண்டாகிறது.

ஆதலின் நாமனைவரும் எந்தவகையிலும் ஆதாரமில்லாத ஏழைகளுக்குப் பசி நேரிட்டபோது மிகவும் கருணையுள்ளவர்களாகி நம்மாற் கூடிய மட்டில் அந்தப் பசியென்ற ஆபத்தைப் பெரும்பாலும் நிவர்த்திப்பதற்கு முயற்சி செய்வதே ஆன்ம லாபமென்று அவசியம் அறியவேண்டும்.

ஆகலில், இந்த ஜீவகாருண்ய ஒழுக்கத்தை நடத்தும் பொருட்டு, கூடலூர் ஜில்லா, கூடலூர் தாலுக்காவைச் சார்ந்த **வடலூரென்கிற பார்வதிபுரத்தில், சமரசவேத தருமசாலை** * யென்றொரு தருமச் சாலை யேற்படுத்தப் பட்டிருக்கின்றது. அது **பலர் சகாயத்தினலேயே** நிலைபெற வேண்டுமாதலால், ஜீவதயையுடைய புண்ணியர்கள், தங்கள் தங்களாற் கூடியவரையில் பொருள் முதலிய உதவி செய்து அதனல் வரும் **லாபத்தைப் பாகஞ் செய்துகொள்ள வேண்டுமென்பது எங்கள் கோரிக்கை.**

இப்படிக்கு,

*பிரபவ ஆண்டு*
*வைகாசித் திங்கள் 11-ம் நாள்*
*சத்திய தருமசாலை, வடலூர்.*

சிதம்பரம்
இராமலிங்கம்

## 59. வேம்பையரின் விஷமம்

இப்படியிருக்கிற காலத்தில் ஐயா அவர்கள் அன்பர்களின் வேண்டுகோளுக்கிரங்கி, செம்பு, ஈயம், இரும்பு முதலிய உலோகங்களைப் பொன், வெள்ளி முதலிய உயர்ந்த உலோகங்களாக மாற்றிக் காட்டி அவற்றை எவருக்குங் கிட்டாதபடி கேணிகளிலுங் குளங்களிலுமாக எறிந்துவிடுவார். ஐயா அவர்கள் அவைகளை மாற்றுவதற்குச் செய்த செய்கைகளையும், சேர்த்த பொருள்களையும் அருகிருந்து பார்த்திருந்த வேம்பையர் என்பவர் அப்பொருள்களைச் சேகரித்துக்கொண்டு யாருமறியா விடத்தில் தாமும் அவ்வாறே செய்ய ஆரம்பித்தார். அங்ஙனம் ஆரம்பிக்கவே திடீரென அவருடைய கண்களிரண்டும் ஒளி மங்கிப் போயின. எவ்வளவோ சிகிச்சைகளைச் செய்தும் கண்ணொளி வராமையினல், கடைசியாக ஐயா அவர்களிடமே வந்து நடந்தவற்றை மறைக்காது கூறித் தம்முடைய பிழையை மன்னித்தருள வேண்டி நின்றார். ஐயா அவர்களும் புன்னகை புரிந்து **தண்ணீரைக்கொண்டு** அவருடைய கண்களில் ஒளி மேவுமாறு செய்தனுப்பினர்.

---

* **ஆன்மநேய சகோதரர்காள்! சத்திய தருமசாலைக்கு வருடச் சந்தா ரூபாய் ஒன்று அனுப்பித் தங்கள் பெயரைப் பதிவு செய்துகொண்டு பேரின்ப லாபத்தில் பாகங்கொள்ள வேண்டுமென்பது எங்கள் கோரிக்கை.**

## 60. தரும சத்திரம்

ரெட்டிச் சாவடியில் அமீனா உத்தியோகம் பார்த்துவந்த மயூரம் சிவராமய்யர் என்னும் மிகுந்த செல்வமுடைய ஒருவர் தமக்குப் பிள்ளைப்பேறு இல்லாமையால் வருந்தி, வடலூருக்குவந்து, ஐயா அவர்களை அடிபணிந்து தமக்கு மகப்பேறு கிட்டுமாறு திருவருள் பாலிக்க வேண்டுமென வேண்ட, அவரிச்சையின்படியே ஓர் **ஆண் மகவு பிறக்க அருள் செய்து,** அவரைக்கொண்டு பண்ணுருட்டிக்கும் வடலூருக்கும் மத்தியில் பெண்ணையாற்றின் கரையிலுள்ள கோட்டைப் புலவனூரில் ஒரு தரும சத்திரமும் கட்டுவித்தனர்.

## 61. ஐயர் அடிமை பூண்டது

விருத்தாஜலத்திலிருந்த வக்கீல்: வேங்கடேசய்யர் என்பவர், ஒவ்வொரு சனிக்கிழமை இரவுகளிலும் வடலூருக்கு வந்து, ஞாயிற்றுக்கிழமைகளில் நடைபெறும் பிரசங்கத்தைக் கேட்டுவிட்டுத் திரும்பிப்போவது வழக்கம். அவர், இரவு நேரங்களில் வடலூருக்கு வரும்பொழுது இடையிலே மூன்று மைல் தூரமுள்ள காட்டைக் கடக்க நேரிடும். அப்படிக் கடக்க நேரிடும்பொழுது அவருக்கு முன்னே இரண்டு தீவர்த்திகள் ஆள் உருவமோ பிறவோ தெரியாது போய்க்கொண்டிருக்கும். இந்நிகழ்ச்சியை இரண்டு மூன்று முறைகளில் பார்த்த அவ் வேங்கடேசய்யர், இவ்வாறு நிகழ்வது ஐயா அவர்களின் அற்புதமே யென்பதை உணர்ந்து தாமும் தம்மனைவியருமாக வடலூருக்கு வந்து, அங்கேயே தங்கி ஐயா அவர்கட்கு அடிமைபூண்டு அவர்களுடைய பூரண அருளுக்குப் பாத்திரரானார்கள்.

## 62. வினவிற்குமுன் விடை

சாதாரணமாக நம்போல்வார் எத்துணைச் சிறந்த கல்வி கேள்விகளில் மிக்கவரா யிருந்தாலும், மற்றவர்கள் தங்களை ஏதாவது கேட்டால்தான் அதற்குத் தக்க விடையளிப்பர்; சில வேளைகளில் பதிலளிக்கவும் ஆற்றலில்லாதவர்களாய்த் திகைப்பர். நம் ஐயா அவர்களோ, அவ்வளவு தூரம் வரை வைத்துக் கொள்வதில்லை. **திரிகால முணர்ந்தவராதலால்** பிறர் தம்மிடம் வந்து வினவுதற்கு முன்னரேயே, அவர்கள் மனத்தில் எண்ணி வருகின்ற கேள்விகட்குத் தகுந்த பதிலையே பிரசங்கிப்பார்கள். இந்நிலையினை யுணராத சாஸ்திரிகள் நால்வர், ஐயா அவர்களைச் சாம வேதத்தில் பல கேள்விகளைக் கேட்கவேண்டுமென மனத்திலெண்ணியவர்களாய் வந்து கொண்டிருந்தனர். அவர்கள் வருவதற்கு முன்னமேயே, அந்த சாமவேதப் பிரசங்கத்தை ஐயா ஆரம்பித்துவிட்டார்கள். அந்த நான்கு சாஸ்திரிமார்களும் ஐயா அவர்களிடம் அணுகுகின்ற தருணத்தில் அவர்கள் என்னென்ன கேட்கவேண்டு மென்று வந்தார்களோ, அவைகளுக்கெல்லாம் ஒன்றன்பின் ஒன்ருகப் பதிலை ஐயா அவர்கள் கூறிக் கொண்டே யிருந்தார்கள். அவ்வற்புதப் பிரசங்கத்தைக் கேட்ட சாஸ்திரிமார்களுக்கு அளவு கடந்த வியப்புண்டாயிற்று. சந்தோஷ சாகரத்தில் மூழ்கினவர்களாய் "என்ன இது? நாம் கேட்க வேண்டுமென்று எண்ணி

வந்த கேள்விகளுக் கெல்லாம் கேட்பதற்கு முன் தகுந்த விடையளிக்கின றுரே! இவரல்லவோ ஞானி, இவரல்லவோ திருவருட் செல்வர், இவரல் லவோ எல்லாம் வல்ல சித்தர்" என்று வாயார வாழ்த்தி வணங்கிச் சென் றனர்.

## 63. திருவருட்பா வெளியிடுதல்

**திருவருட் பிரகாச வள்ளலாராகிய நம் ஐயா அவர்கள்** திருவாய்மலர்ந்தருளிய * **திருவருட்பாக்கள்** முழுவதையும் அச்சிட வேண்டுமென்னுங் கருத்துடையவர்களாய் அன்பர்க ளான **புதுவை. வேலு முதலியார், சிவானந்தபுரம்: செல்வராய முதலியார், இறுக்கம் இரத்தின முதலியார்** முதலானோர் ஐயாவை அப்பணிக்கு உத்தரவு கொடுத்தருள வேண்ட, அடிகளும் அன்பர்களின் உள்ளத்திலெழுந்த ஆசையினை — அன்பினைக் கெடுத்தல் ஆகாதென்னும் கருத்துடையவராய் ஒருவாறு உடன்பட்டார்கள்.

உடனே அவர்கள் **உபயகலாநிதிப் பெரும்புலவராய தொழு வூர் - வேலாயுத முதலியாரைக்கொண்டு** அதுவரை பாடியருளிய பாக்கள் முழுவதையும் நான்கு திருமுறைகளாக வகுத்து 1867ம் ஆண்டில் அச்சியற்றி வெளியிட்டனர்

## 64 சங்க தோஷ நிவர்த்தி

**ஐயா** அவர்களின் அடியவருள் ஒருவராகிய நாயனு ரெட்டியார் என்பாருடைய மனைவியாருக்கு இருந்த சங்க தோஷத்தை, ரெட்டியார் வேண்டுகோளின் வண்ணம் **திருநீறு கொடுத்துத்** தீர்த்தருளிய தோடு, அவருக்கிருந்த ரசவாத இச்சையினை அறிந்து, ஒரு குவளையில

---

* **அச்சிட்ட** புத்தகத்தில் திருவருட் **பிரகாச** வள்ளலார் என்று தம்மைச் சிறப்பித்து இருந்ததை வள்ளலார் பார்த்து உபயகலாநிதிப் பெரும் புலவரை நோக்கி "பிச் என காணும் **திருவருட் பிரகாச வள்ளலா ரென்று** உம்மை யார் போடச்சொன்னது?" என்று அதட்டிக் கேட்க, முதலியார் நடுநடுங் கினவராய் வாய் புதைத்து வள்ளலாரது திருவடிகளையே சிந்தித்து மௌன மாய் நின்றனர். ஐந்து நிமிஷஞ் சென்ற பிறகு, **திருவருட் பிரகாச வள்ளல்— (பதி), ஆர்** என்னும் சிதம்பரம் இராமலிங்க பிள்ளை என்று பிரித்துக் காட்டி அறிவுறுத்தினர்

**திருத்தணிகைப் பதிகங்களை** முதலியார் **ஐந்தாந் திருமுறையாக வகுத்து** 1880-ம் வருடத்தில் அச்சிட்டு வெளிப்படுத்தினர் அதில் முதலியார் **திருவருட்பா வரலாறு** என்று ஒன்று இயற்றிச் சேர்த்தனர் ஏனைய பாடல் களை **ஆறுந் திருமுறையாய்** வகுத்து வைத்திருந்ததை வள்ளலார் உணர்ந்து **சுத்தசன்மார்க்க லக்ஷியானுபவ காலம்வருகிற வரையில் வெளியிடப்படா தெனக் கட்டளையிட்டனர்** குருவாணையைச் சிரமேற்றுங்கி அச்சிடாது விட்டனர். திருவருட் செயலால் பின்னர் 1885-ம் ஆண்டில் **வேலூர் பத்மநாப முதலியார், லோகநாத செட்டியார்** இவர்களால் முதன் முதல் ஆறுவது திரு முறை அச்சிடப்பட்டது.



சகல நோய்களையும் தீர்க்க வல்ல — சாலை தீர்த்தம்



சுவாமிகளுக்கு அடிமைப்பட்ட — தெய்வீக மாமரம்



சகல நோய்களையும் தீர்க்க வல்ல — கேணி தீர்த்தம்

அருட்பெருஞ்ஜோதி அச்சகம், சென்னை.

தண்ணீரும் மணலுமிட்டுச் சிறிது நேரம் கையினால் மூடிப் பின் திறந்ததும், அம் மணலெல்லாம் பொன் துகளாயின. பின்னர் அந்த ரெட்டியாருக்கிருந்த அம் மயக்கொழிந்தது.

## 65. சங்க நிதியோ! பதும நிதியோ!

வானநாட்டில் **சங்கநிதி பதுமநிதி** என இரண்டு நிதிகளுண்டு. அவை தம்முள்ளிருக்கும் பொருள்களைப் பிறர் எவ்வளவு எடுத்துக் கொள்ளினும் அவ்வளவையும் மீண்டும் உண்டாக்கிக் கொண்டு எப்பொழுதும் குறையா நிலையிலிருக்கும். அம்மாதிரி, ஐயா அவர்களின் சத்திய தருமசாலையும் ஒரு காலத்துத் தன்னிடத்து சமைத்து வைத்திருந்த உணவை, எடுக்க எடுக்கக் குறையாது முன்போலிருக்கச் செய்தது. எவ்வாறெனில்:—

ஒருநாள் இரவில் உணவு எல்லாம் சமைத்தபிறகு உண்ணப்போகின்ற வேளையில் சுமார் நூறுபேர் திடீரென வந்துவிட்டனர். அவர்களைக் கண்டவுடனே அடியவர்கட்கெல்லாம், "என்ன இது? இத்தனைப் பேர்கள் வந்துவிட்டனரே! இங்கேயுள்ள உணவோ மிகச் சிலர்க்கே அளிக்கத்தகுந்தது; மற்றையோருக்குச் சமைத்துப்போடுவதென்றால் இவ் விரவு வேளையில் அது சாத்திய மில்லையே" என்று வருந்துவதை யறிந்த ஐயா அவர்கள், அவர்களை நோக்கி "பிச்" "இலைபோடுங்கள் எல்லோருக்கும்" என்று கூறித் தாமே, அந்நூற்றுவருக்கும் பரிமாறத் தொடங்கினார்கள். தொடங்கவே, அங்கு அட்டியிருந்த **சிறு உணவு அனைவருக்கும் பரிமாறப்பட்டும், அவ் வளவிற் குறையாது அப்படியே யிருந்தது.** அனைவரும் வயிறு நிரம்ப உணவருந்தி மகிழ்ந்தனர்.

## 66. குன்ம நோய் தீர்த்தார்

மற்றொருகால், ஐயா அவர்கள் திருவாதிரைநாள் தெரிசனத்தின் பொருட்டுச் சிதம்பரஞ் செல்லுகையில் வழியில் ஒரு மனிதன் **குன்ம** நோயினால் பெரிதும் வருந்துவதைக் கண்டு ஆற்றாராய், அவனுடைய அப் பெரு நோயை அப்பொழுதே அருள் வலத்தால் நிவர்த்தித்து அருளினார்.

## 67. மழை பொழிய வைத்த மாட்சி

கடுவெயிலினாலும், மழையில்லாக் குறையினாலும், வடலூருக்கு வருவாரும், சுற்றுப் புறத்துள்ள ஊராரும் பெரிதும் வருந்த, ஐயா அவர்கள் உடனே தமது திருவருள் வலிவால் நான்கு செவி மழை பொழிய அனுக்கிரகஞ் செய்தார். இப்படியே, புதுப்பேட்டை நகரினர் வந்து ஐயாவை வணங்கித் தம் பதிக்கழைத்துச் சென்று, ஆங்குள்ள இரண்டு கிணறுகளில் நீரின்மையையும், சிறிது நீரிருந்தும் அதில் கைப்பு கலந்திருத்தலையும் காட்டி, அவ்விரண்டு குறைகளும் நீங்க அருள்புரியுமாறு வேண்ட, அவ் வூராரின் வேண்டுதலுக் கிசைந்து, அவ்வாறே அக்கிணறுகளில் நீர்ப்

பெருக்கமும், மதுரமும் உண்டாகத் திருவருள் பாலித்தார்கள். அக்கிணறுகளில் அன்றுதொட்டு இன்று வரை எப்பொழுதும் நிறைந்தநீர் குறையவேயில்லை. அதை இன்றுங் காணலாம். அதோடு ஆற்றுநீரைக் காட்டிலும் அக் கிணறுகளில் நீர் சுவை மிக்குடையதாய் விளங்குகின்றது.

## 68. பெரு நெருப்பு அவித்த பெருமை

அந்நிகழ்ச்சி நடந்த பிறகு அவ்வூரிலேயே ஒரு வீடு தீப்பற்றிக் கொண்டு எவராலும் அணைக்க முடியாத அந்நிலையில் கொழுந்துவிட்டெரிய, ஐயா அவர்கள் உடனே அப்பெரு நெருப்பினைத் தம்முடைய **ஆடையால் வீசி அணைத்து** அனைவரையுங் காத்து அருளினர்.

## 69. பதிற்றுப் பத்தந்தாதி பார்வை யிட்டது

திருப்பாதிரிப்புலியூர் இயற்றமிழாசிரியர் சிவசிதம்பர முதலியார் என்பார் தாம் பாடிய பதிற்றுப் பத்தந்தாதியைப் பார்வையிட்டு அதற்கோர் சாற்றுகவி அளித்தருளுமாறு ஐயா அவர்களை ஒருகால் வேண்ட, ஐயா அவர்களும் அதனைப் பார்வையிட இணங்கினர். பார்வையிட்டபிறகு, "இன்னின்ன பாக்களிலுள்ள இன்னின்ன சொற்கள் இன்னின்ன சொற்களாக இருக்குமேல் நன்றாக இருக்கும்" என்று ஒரு சில சொல்ல, அவ்ற்றின்படியே அம்முதலியாரும் அச்சொற்களை மாற்றி ஐயாவின் அருளுக்குப் பாத்திரரானர். ஐயா அவர்கள் அந்நூலுக்குச் சாற்று கவியும் அளித்தார்கள்.

## 70. 'புன்செய்' 'நன்செய்' ஆகிய புதுமை

தாசில்தார் முருகேச பிள்ளை என்பாருடைய மாமனாராகிய மிராசுதார் மணலூர் நடராஜ பிள்ளையின் அன்பு, இரக்கம் முதலிய குணங்களையும், அடிமைத் திறத்தையுங் கண்டு மகிழ்ந்த நம் ஐயா அவர்கள் அவர்கட்கிருந்த 'புன்செய்' நிலங்கள் முழுவதையும், 'நன்செய்' ஆகத் திருவருள் பாலித்தார்கள். அப் பிள்ளையும், தம்முடைய புன்செய் நிலங்களை யெல்லாம் நன்செய் ஆக்கிய நாதனர் திருவடிகளில் விழுந்து வணங்கி, அன்று முதலாக அந்நிலங்களிலிருந்துவரும் தானியங்களில் பெரும்பகுதியினை ஐயா அவர்களின் ஆணையின்படி பசியென வந்தோர்க்கும், பாவலர் நாவலர்கட்கும் பரிவுடன் அளித்துப் பண்பும் பயனும் பெறுவாரானர்.

## 71. விருந் தருந்திய வியப்பு

விருத்தாஜலத்திலிருந்த அன்பரொருவர் நம் ஐயா அவர்கட்கு அமுதளிக்க வேண்டுமெனப் பல நாட்களாக ஆசை கொண்டிருந்தார். அன்பருளங் கோயில்கொண்ட அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரின் அருட்பிள்ளையாராகிய நம் ஐயா, அன்பர் எண்ணிய எண்ணத்தை அறிந்து கொண்டார்கள். ஆயினும், மனிதர் முக்குண வேறு

பாட்டால் முரணுவர், அதனால், அவ்வன்பர் என்றும் ஒரே நிலையராய் அன்புளங் கொண்டிருக்கின்றாரா? இல்லையா? என்பதைப் பரிசோதிக்கவே சில நாட்கள் அவரெண்ணத்தை நிறைவேற்றாதிருந்தார். அவ்வன்பர் என்றும் அந்நிலையில் மாறுபடாதிருக்கவே திடீரென ஒருநாள் அவரில்லத்திற்கு ஐயா எழுந்தருளினர். அப்பொழுது அவர் வீட்டில் **பருப்புத் துவையலும், ரசமுமே** யிருந்தன. அவைகளே போதுமென அப்பொழுதே ஐயா அமுதுகொண்டருளி அவ்வன்பருக்கு வாழ்வளித்து மீண்டனர்.

## 72. கள்வர்க்கும் காட்டிய கருணை

ஒருநாள் இரவில் நம் ஐயா அவர்களும், மஞ்சகுப்பம் கோர்ட்டு சிரஸ்தாதார்—இராமச்சந்திர முதலியார் என்பாரும் ஒரு மாட்டுவண்டியில் ஏறிக் கொண்டு வடலூரிலிருந்து மஞ்சகுப்பம் போய்க் கொண்டிருக்கையில், இடை வழியில் கள்வர்கள் வந்து வண்டியை மறித்தனர். அப்பொழுதே வண்டிக்காரனும், உடன்வந்த சேவகனும் ஓடிவிட்டனர். வண்டியினுள் ஐயாவும், முதலியாருமே தனித்திருந்தனர். வண்டியை மறித்த கள்வர்கள் உடனே, வண்டியின் பின்புறம் வந்து மிக அவசரமாக முதலியார் அணிந்திருந்த வைரமோதிரத்தைப் பார்த்து அதைக் கழற்றித் தருமாறு அதட்ட, ஐயா அவர்கள் அக்கள்வரை நோக்கி, "அவசரமோ?" என்று கூற, அக்கள்வர்கள் ஐயாவைத் தடியா லடிக்கக் கைகளைத் தூக்கினர். அக்கைகள் அப்படியே நின்றுவிட்டன; கண்களும் பார்வை இழந்தன. உடனே—கள்வர்கள் நடுநடுங்கி பயந்து, தாங்கள் அறியாமல் வறுமையின் கொடுமையால் செய்த குற்றத்தை மன்னித்தருள வேண்டுமெனத் திருவடிகளில் விழுந்து வணங்கினர். ஐயா அவர்களும் மனமிரங்கி "பிச்" என்னும் மகா மந்திரத்தைக்கூறி அவர்கள் இழந்த பார்வையை மீளவும் அடையுமாறு திருவருள் பாலித்தார்கள். அன்று முதல் **அக்கள்வர்களும் சன்மார்க்க நெறியில் நின்று** சுவாமிகட்கு அன்பரானார்கள்.

## 73. அரவம் ஆணைக்கு உட்பட்டது

குறிஞ்சிப்பாடியிலுள்ள வணிக மரபினரொருவர் ஐயா அவர்களிடத்து மிகுந்து அன்பும் பக்தியும் உடையவர். அவரொருகால் வடலூர் வருதற் பொருட்டாக வந்துகொண்டிருக்கையில் ஜலங்கழிக்க, களாச் செடியின் மறைவில் உட்கார, அச்செடி அருகேயுள்ள புற்றரவு ஒன்று தீண்டிவிட்டது. அதையறிந்த செட்டியார் உடனே "**இராமலிங்கத்தின் மேல் ஆணை**" என்றுகூற, அப்பாம்பும் புற்றினுள் நுழையாது வாய் திறந்தபடியே அசையாது நின்றுவிட்டது; செட்டியார் அதனைக் கவனியாது பயத்துடன் வீடுபோய் விட்டார். விஷம் ஒன்றும் செய்யவில்லை. செட்டியார் மிகவும் ஆச்சரியமும் சந்தோஷமுங் கொண்டு, ஐயா அவர்களைத் தரிசிக்க வடலூர் வந்தார். அவரைக் கண்டதும், "பிச்" ஓர் உயிரை எத்தனை நாட்கள் பட்டினி போடுகிறது? மூன்று நாளாயிற்றே; உடனே போய் ஆணையை விடுதலை செய்யும்" என்று கூறினர்கள். மிக்க ஆச்சரியத்துடன் செட்டியார் பயந்து அப்படியே சென்று பார்க்க, அப்பாம்பு

வாயைப் பிளந்துகொண்டு புற்றின் வாயிலில் படுத்துக்கொண்டிருந்தது. ஆணையை விடுதலை செய்ய, உடனே அப்பாம்பும் புற்றினுள் நுழைந்து விட்டது.

## 74. இசைப் புலவரினுஞ் சிறந்தார்



நல்லிசை வாய்ந்த சிதம்பரம் கிருஷ்ணய்யர் என்பவர் ஒருகால் 'மகாதேவ மாலை' யில் உள்ள பாடலொன்றை அபூருப ராகத்தில் பாடிப்பழகி வடலூருக்கு வந்து, ஐயா அவர்களின் திருமுன்னர் பாடினார். அப்பாடலை முழுதும் அன்போடு கேட்டிருந்த ஐயா அவர்கள், இறுதியில் அப்பாடலையே அவரினும் நயமாக நல்லிசையில் பாடி மகிழ்வித்தார்கள்.

## 75. சித்துருக் காட்டினமை

திருவதிகைக்கு ஐயா அவர்கள், ஒரு பகல் இறை வழிபாட்டிற்காகச் சென்ற காலத்துத் தம்மைப் பார்க்க விரும்பிய அன்பர்களது கூட்டம் அதிகமாகிவிட்டதை யுணர்ந்து, தம்முருவை இரண்டு மூன்று இடங்களில் அவ்வன்பர்கட்குக் காட்டி அருள்புரிந்தார்.

## 76. அரிசி வரவழைத்த அற்புதம்

பின்னர்ச் சிலநாட்கள் கழிய, ஒரு பகல் சத்திய தருமசாலைக்கு உணவுப் பொருள்கள் எதுவும் இல்லையென உக்கிராணம் பார்த்த சண் முகம் பிள்ளை வந்து அடிகளிடத்து அணுகி முறையிட, அடிகளும் சிறிது தியானத்திலிருந்துவிட்டு, "நாளை யெல்லாம் வந்து விடும்" என்று கூறி அனுப்பினர். மறுநாள் அப்படியே மூன்று வண்டிகள் நிறைய அரசியும் மற்றைய உணவுப் பொருள்களும் தரும சாலையின் வாயிலில் வந்து நின் றதைக் கண்ட சாலையிலுள்ளவர்கள் வியப்புடன் வந்து, "எங்கிருந்து கொண்டு வருகிறீர்கள்? யாருடைய பொருள்கள் இவை? யார் கொடுத்து வரச் சொன்னது?" என்று பலவாறாகக் கேட்க, அவைகளைக் கொண்டுவந்த அன்பர், "**சுவாமிகள் இரவு கனவில் எளியேற்குக் கட்டளை யிட் டார்கள்**; அக்கட்டளையைச் சிரமேற்றாங்கியே யான் கொண்டுவந்தேன்; யானிருப்பது திருத்துறையூர்" என்று எல்லாவற்றையும் விவரமாகக் கூறி னர். பிறகு அவரைச் சுவாமிகளிடம் அழைத்துக் கொண்டுபோய் விடுத்து அனைத்தையுங் கூற, அவர்களும் ஒன்று மறியாதவர்கள் போல அவற் றைக் கேட்டுக் கொண்டு அவ்வடியவர்க்குத் திருநீறு அளித்தார்கள்.

## 77. ஆள் சுமை யகற்றுதல்

வடலூருக்கு மேற்கேயுள்ள கொங்கராபாளயத்திலிருந்து வந்த பிராமணரொருவர், தம்முடைய கழுத்தில் ஏதோ ஒரு ஆள்சுமை யிருந்து அழுத்துவதுபோல் பலநாட்களாகத் தம்மைத் துன்புறுத்துவதாகக்கூற, ஐயா அவர்களும் மனமிரங்கி அச்சுமை யகலுமாறு அருள்புரிந்தார். இவ்வாறே அவ்வூரிலுள்ள வயது சென்ற கிழவியின் உடல் நடுக்கத்தையும் ஒழித்தருளினர்.

## 78 காயத்திரி மந்திரங் கழறுதல்

ஆடூர் என்னும் அருமைப் பதியில் வேத ஆகம புராண இதிகாச சாஸ்திரங்களாகிய நூல்க ளனைத்தும் அரிதிற் பயின்றவரும், அடக்கம் அன்பு பொறுமை, இரக்கம் முதலிய நற்குணங்கள் வாய்க்கப் பெற்றவரும், ஆகிய அன்பர் சபாபதி சிவாசாரியர் என்பவர் ஐயா அவர்களின் தரிசனத்தின் பொருட்டு வர, அவரோடும் ஐயா அவர்கள் அளவளாவிக் கொண்டிருக்கும்பொழுது அச் சிவாசாரியர் **'காயத்திரி மந்திரத்தின்'** உண்மைப்பொருள் விளக்கத்தினைச் சிறிது எடுத்துரைத்தல் வேண்டுமென்றிரக்க, ஐயா அவர்களும் அவ்வாறே அவர்களைத் தனியிடத்திருத்தி அதனை விளக்கி யருளினர்.

## 79. அங்கும் இங்கும் இருந்த அற்புதம்

சுவாமிகளால் ஆட்கொள்ளப் பெற்றவராகிய கூடலூர்-தேவநாயகம் பிள்ளை யென்பவர் ஒருகால், தம்முடைய ஒரே புதல்வராகிய ஐயாசாமி என்பவர், அவருடைய 20-ம் ஆண்டில், நோய் வாய்ப்பட்டு வைத்தியர்களால் கைவிடப்பட்ட அக்காலத்தில், நம் பெருமானை நினைத்துக்கொண்டு, "என் ஐயாவே! என் செய்வேன் எனக்கு வாய்த்த ஒரே மகனை எவ்வாறு பிரிவேன், ஆண்டவரே! இதுதருணம் காக்கக் கருணை யில்லையா? என்று பிரார்த்தித்த அந் நள்ளிரவு 11-மணிக்கே நம் ஐயா அவர்கள், கூடலூரிலுள்ள அத்தேவநாயகம் பிள்ளை இல்லத்திற்குச்சென்று, அவருக்கும் அவரருமைப் புதல்வருக்கும் திருநீறு வழங்கி **"நாளை குணமாகும், பயப்படாதீர்கள்"** என்று ஆறுதல் தேறுதல் கூறி மீண்டார். நிற்க எந்த இரவு கூடலூருக்குச் சென்று, தேவநாயகம் பிள்ளை யவர்களின் குமாரரது தீராப்பிணியைத் தீர்த்து வந்தாரோ, அந்த இரவு முழுதும் வடலூர் சத்திய தருமசாலையிலும் அன்பர்களோடு நம் ஐயா அவர்கள் உபந்நியாசம் செய்திருக்கின்றார்கள். சாலையிலிருந்த அன்பர்களுக்கு சுவாமிகள் செய்த இவ்வற்புதம் தெரியாமலிருந்தது. பிறகு இதனைத் தேவநாயகம் பிள்ளையால் அறிந்து, அன்பர்கள் பெரிதும் வியப்புற்றனர்.

## 80. திரை மறைவில் திருச்சிற்றம்பலம்

இது நடந்த சிறிது நாட்களுக்குள் சிதம்பரத்தில் **ஆனித் திருமஞ்சனத் திருவிழா** நடைபெறும் நாள் நெருங்கியது. அவ்விழாவிற்கு ஐயா அவர்களோடு தொடர்ந்துப் போவதற்காகப் பல அன்பர்கள் வடலூருக்கு வந்தனர். ஐயா அவர்கள் புறப்படவில்லை. அதை வெளியிடவுமில்லை. அதனால் பலர், "ஐயா வரமாட்டார்கள் போலும்" என்று எண்ணி சென்று விட்டனர். சிலர்மட்டும் எப்படி யிருந்தாலும் "ஐயா வாராமற் போகார்" என்னுந் திடமான எண்ணத்துடன் அங்கேயே இருந்தார்கள். திருவிழா நாளும் வந்து விட்டது. அப்பொழுதும் ஐயா புறப்படா திருப்பதைக் கண்டு, அச்சிலரும் "சிதம்பர தரிசனங் கிட்டாது போயிற்றே" என வருந்தினர். அவர்தம் மனவருத்தத்தை அறிந்துகொண்ட ஐயா அவர்கள், சத்திய தருமச்சாலையில் ஓரிடத்தில் ஒரு திறையைத் தொங்கவிட்டு அவர்களை யழைத்து "இத்திரையினுட் சென்று பாருங்கள்" என்று கூற, அவர்களும் அவ்வாறே திரையினுட் செல்லவும்—திருச்சிற்றம்பலக் காட்சி—அதாவது-சிதம்பரத்தில் எவ்வாறு அன்றைய திருவிழாவில் அம்பலவாணரின் விழாக்காட்சி யிருக்குமோ அவ்வாறே தோன்றியது. அவ்வன்பர்கள் அம்பலவாணனை அடிபணிந்தெழுந்து, திரைப்புறத்திலிருக்கும் ஐயா அவர்களின் திருவடிகளிலும் விழுந்து வணங்கி அருள்பெற்றுச் சென்றனர்.

## 81. சத்திய ஞான சபை



அதன் பின்னர் அடிகளார் தமது மெய்யன்பர்களின் வேண்டுகோளுக் கிணங்கி வடலூரில் எண்பது காணி நிலப்பரப்புள்ள ஓரிடத்திற்கு **உத்தரஞான சிதம்பரம்** என்று திருவருளியலால் திருநாமஞ்சூட்டி, அவ்வெளியில் **தமது உள்ளத்தில் கண்ட ஓர் ஞான சபையைக் கட்டத்** திருவுளங் கொண்டார்கள்.

"சத்திய ஞான சபையென் னுட் கண்டனன்
சன்மார்க்க சித்தியை நான்பெற்றுக் கொண்டனன்
நித்திய ஞான நிறையமு துண்டனன்
நிந்தை யுலகியற் சந்தையை விண்டனன்." (திருவருட்பா)

அச்சபை அமையவேண்டிய முறையினை ஓர் படமாக (Plan) எழுதி அன்பர்களிடங் காட்டிக் கொடுத்து இம்மாதிரி ஓர் ஞானசபையினை அட்டகோணமாகத்—தாமரை மலரன்ன—கட்டுதல் வேண்டுமென உத்தரவிட்டனர். உத்தரவைச் சிரமேற்கொண்ட அன்பர்கள் கட்டட வேலையைத் தொடங்கினர்.

பின்னர், அடிகளார் அவ்வடலூருக்கு இரண்டு மைல்களுக்கு அப்பாலுள்ள மேட்டுக் குப்பம் என்னும் ஒருமேட்டில் குடிசை யொன்று கட்டுவித்துக்கொண்டு அக்குடிசையிலேயே மெய்யன்பர்கட்குச் **சன்மார்க்க போதனை** செய்துகொண்டிருந்தார்கள்.

## 82. கொடி மரம்

இவ்வாறிருக்கும் நாளில், ஞானசபையின் கொடிமரத்திற்கு மரம் வாங்கிவரச் சென்னைக்குச் சென்ற கண்ட்ராக்டர் ஆறுமுக முதலியார், மரவாடியில் தக்க மரம் கிடைக்கவில்லை யென்று மீண்டும் வந்து அடிகளிடத்துத் தெரிவிக்க, அடிகள் "அப்படியானால் நீர் முதலிலே போம், நான் இதோ வருகிறேன்" என்று கூறி யனுப்பினர். அவர் அவ்வாறே செல்ல அடிகளார் அவருக்கு முன்னே சென்னையிலுள்ள மரவாடியில் கொடிமரத்திற்கு வேண்டிய மரத்தின்மீது உலாவிக்கொண்டிருந்தார். அதைக்கண்ட அம்முதலியார் பெரிதும் வியப்படைந்தார். பின்னும் அடிகளார் அவ்வாறே அம்மரத்தைவாங்கி முதலியாரிடம் ஒப்புவித்து, 'கொண்டுபோம்' என்று கூறினர்கள். முதலியார் புறப்பட்டு வடலூருக்குச் செல்லுவதற்கு முன்னேயே அடிகளார் வடலூரில் காணப்பட்டார்கள். அம்மட்டோ? அவ்வடலூரிலிருந்தவர்கள் எல்லோரும் அடிகளார் இன்றுமுழுவதும் இங்குதானே இருந்தார் என்று கூறினர்கள். ஆறுமுக முதலியாரோ "இல்லை? இல்லை என்னோடு மரவாடிக்கு வந்திருந்தாரே" என்று கூறினர். இவ்விரண்டையு மறிந்த எல்லோரும் என்றுமிலா மகிழ்வு எய்தி இன்புற்றிருந்தனர்.

## 83. புறவினத்தார் பலன்

அதன்பின் ஒருகால் ஞானசபையின் மேல்விதானங் கட்டும்போது, அதில் வேலை செய்துகொண்டிருந்த மூவரைத் தாங்கி யிருந்த சாரம் முறிந்து, அவர்கள் கீழே விழுந்ததும், அவர்கட்கோ அல்லது அவர்களின் கீழே வேலை செய்துகொண் டிருந்தவர்கட்கோ எவ்வித ஆபத்தும் நேரவில்லை. இவ்வாறே மற்றுமோர் அற்புதமும் நிகழ்ந்தது. ஞானசபை கட்டி முடித்தவுடன், அன்பர்களிற் சிலர் தஞ்சாவூர் மராட்டியர்களைக் கொண்டு அச் சபையினெதிரே பெரும் பொருட் செலவில் ஒரு பந்தல் அமைத்தனர். அதனை யறிந்த அடிகளார், "இப்பந்தலை அமைத்தவர்கள் உறவினத்தாரல்லர்; **புலைப் புசிப்பும் உயிர்க்கொலையுமுடைய புறவினத்தார்.** ஆதலின், இப்பந்தல் **திருவருளாளருக்குச் சம்மதமில்லை"** என்று கூறியவுடனே பெருமழை யுண்டாகி அம்மழை யிடையே ஓர் இடி விழுந்து அப்பந்தல் தீப்பற்றிக் கொண்டது. ஆயினும் அதனால் மற்றைய மனிதர்களுக்கோ பொருள்களுக்கோ எவ்விதச் சேதமுமில்லை.

## 84. திருக்கண்ணாடி - ஜோதிமணி விளக்கு

**பின்னர்** அடிகளார் சென்னையிலிருந்து ஒரு பெரிய நிலைக்கண்ணாடியினை வரவழைத்து, அதனைச் **சித்திவளாகம்** எனும் பெயர் புனைந்த மேட்டுக் குப்பத்திலுள்ள தம்முடைய சிறு குடிலில் ஒரு மண்டலம் வைத்து வழிபாடுசெய்து பிறகு **அக்கண்ணாடியையும்**—**ஒரு திருவிளக்கையும்**,—தம்மை யடுத்து, தமது **கண்மூடி ஆசாரங்களை யெல்லாம் விடுத்து**, சன்மார்க்க முறையையே கடைப்

பிடித்துப் **பூணூல் முதலியவற்றை நீக்கிச் சமபந்தி யாகவும் உண்டு வந்த அன்பரான—சபாபதி சிவாசாரியரைக் கொண்டு,** ஞானசபையின்கண் ஸ்தாபிக்கும்படிக் கூறினார். அச்சிவாசாரியரும் அப்படியே அவை யிரண்டினையும் முறைப்படி ஸ்தாபித்து அடிகளார் கூறியாங்குப் பொதுவுஞ் சிறப்புமாகிய இருவகை வழிபாடுகளையுஞ் செய்து வரலாயினர். சுவாமிகள்மட்டும் மேட்டுக் குப்பத்திலேயே தங்கியிருந்தார்கள். ஆயினும் அன்பர்கட்குத் தாம் கூறியபடி தைப்பூச தரிசனமட்டுஞ் செய்வித்தார்.

## 85. ஞான சபை விளக்கம்



**ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்** என்னும் பண்டைக் கொள்கைக் கேற்ப உலக மக்கள் அனைவரையும் ஆன்மநேய ஒருமைப் பாட்டுரிமைச் சகோதரர்களாக **ஜாதி, மத, சமய, வருணாசிரம சங்கற்ப பேதமின்றி** ஒரே குலமாகக் கொள்ள வேண்டும் என்று, வள்ளலார் வலியுறுத்தி வந்தார்கள். அதற்காக தமிழர், ஆரியர், மகம்மதியர், கிறிஸ்தவர், பௌத்தர், சமணர் முதலான பலவகை ஜாதியினரும் ஒருமிக்க எல்லாம் வல்ல அருட்பெருஞ்ஜோதி இறைவனை வணங்கும்படியான ஏற்பாடு செய்தனர். மேலும்,

**தெய்வங்கள் பலபல சிந்தை செய்வாரும்**
சேர்கதி பலபல செப்புகின் றாரும்
பொய்வந்த கலைபல புகன்றிடு வாரும்
பொய்ச்சம யாதியை மெச்சுகின் றாரும்
**மெய்வந்த திருவருள் விளக்கமொன் றில்லார்**
**மேல்வினை யறிகிலர் வீண்கழிக் கின்றார்**
**எய்வந்த துன்பொழித் தவர்க்கறி வருள்வீர்**
எனைப் பள்ளி யெழுப்பிமெய் யின்பந் தந்தீரே.

என்றபடி எண்ணற்ற தெய்வங்களைக் கற்பனை செய்து வேற்றுமை மயக்கில் வீழ்ந்துழலும் வீணர்களுக்கெல்லாம் நல்லறிவு கொளுத்தி சன்மார்க்கப் பெருநெறியில் வாழும் பொருட்டாகத் தாம் நிறுவிய **சத்திய ஞான சபைக்குள்ளே, திருவிளக்கே—அறிவாகிய அருட்பெருஞ்ஜோதி யாகவும்,** அதற்கு எதிரில் உள்ள **கண்ணாடியே—மனமாகவும்** அதற்குமுன் **மனமாயையே—ஏழு திரைகளாகவும்** அமைத்துள்ளார்கள். ஜீவகாருண்யம், தோத்திரங்கள் முதலான வழிபாடுகளாலும் மனமாகிய கருங்கற்பாறை கசிந்துருக உருக அம்மாயாதிரைகள் ஏழும் ஒன்றன்பின் ஒன்றாக நீக்கப்பட்டு, மனமானது **தூய்மையான கண்ணாடிபோல் விளங்க,** அதன் வழியே **அறிவாகிய அருட்பெருஞ்ஜோதி தரிசனம் கண்டு மரணமிலாப் பெருவாழ் வடைந்து பேரின்பலாபத்தைப் பெறுவதற்கு வழி காட்டியுள்ளார்கள்.**

மேலும் ஞானசபையில் எவ்வகை **உருவ வழிபாடும் அபிஷேகம்** முதலானவைகளும், டவுல், நாதஸ்வரம், டமாரம் முதலான **வாத்திய கோஷங்களும்** அதிர்வெடி முதலிய **வேட்டுகளும்** கூடாது என்று கட்டளை யிட்டுள்ளார்கள். அத்துடன் **ஜாதி, மத, சமய பேத** மின்றி மண், பெண், பொன்னாசையை மறந்தவராய், தெய்வபக்தியில் சதா சிந்தனை செலுத்துபவராய், சன்மார்க்க ஒழுக்கமுடைய ஒருவரைக்கொண்டு ஞான சபையில் பூஜைசெய்ய ஏற்பாடு செய்திருந்தார்கள்.

உயிர்க் கொலையும் புலைப்புசிப்பும் உடைய புறவினத்தவர்கள் வணங் கத் தனியிடம் புறத்தே அமைத்து அங்குள்ள வாயிலின் மேல் "**ஆடு, கோழி, மச்சம் முதலியவற்றின் புலாலுண்பவர்கள் இந்த வாயி லுக்குள் நுழையப்படாது**" என்ற விளம்பரப் பலகை ஒன்றினைத் தொங்க விட்டிருந்தார்கள். ஏனைய அகவினத்தார்கள் அனைவரும் உள்ளே சென்று இறைவனை வணங்கும் உரிமை பெற்றிருந்தனர். ஆயின் **புறவினத்தவரும் புலாலுணவை அறவே நீக்கி அகவினத்தாராக லாம் என்ற அனுமதி யுள்ளது.**

சுவாமிகள் வெளியிட்ட சத்திய ஞானசபை விளக்கப் பத்திரிகையை ஆறாந்திருமுறை வசனபாகத்தில் கண்டுகொள்க.

## 86. அவதானியாருக்கு 'உண்மை நெறி'

பிறகு எப்பொழுதும் சுவாமிகள் மேட்டுக் குப்பத்திலுள்ள சித்திவளா கத் திருமாளிகையிலேயே தங்கி யிருப்பதும் சன்மார்க்கப் போதனை செய் வதுமாக இருந்தனர். அங்கே விவகாரம் பேசும்பொழுது அன்பர்கள் திரள் திரளாக வந்து கேட்டு ஆனந்த முறுவார்கள். அங்ஙன மிருந்து வருங்கால் ஒருநாள் சுவாமிகள் பிரசங்கஞ் செய்யும் வேளையில், நூறு அவதானங்கள் செய்த ஐயங்கார் ஒருவர் அங்கு வந்து நின்றார். சுவாமி களின் தேனினு மினிய பிரசங்கத்தைத் தெவிட்டா துளங்கொண்டு திளைக் கும் அன்பர்களில் ஒருவரும் அவரைக் கவனித்திலர். அதனால் சினமூண்ட அவ் அவதானியார் சுவாமிகளை நோக்கி "சுவாமிகளே! தங்கட்கு எப்படி வித்தையிலும், ஞானத்திலும் பிறர்க்கு இடங்கொடுத்து விடுதல் கூடாது என்றெண்ண மிருக்கிறதோ அதுவேபோலத் தங்களுடைய இச்சபையும் எனக்கு இடங்கொடுக்கக்கூடாதென்றே எண்ணிவிட்டது" என்று குறும் பாகக் கூறினர். சுவாமிகள் அவருடைய பக்குவ மின்மையை யறிந்து அவரை யமரச்செய்து சில வினாக்களை வினவ, அவர் விடைசொல்ல அறி யாது விழிக்கவும் அவரைத் தனியே அழைத்துத் தாம் சுவரில் எழுதி வைத்துள்ள உண்மை நெறியினைக் காட்டி "இதனைக் கைப்பற்றுங்கள்" என்று முன்னேறுவதற்கான வழியை யறிவுறுத்தினர். அதன்மேல் அவதானியார் சுவாமிகளிடத்து அடிமைபூண்டு அருள்பெற்றார்.

## 87. ஆட்டுக் குட்டியின் அன்பு

மேட்டுக் குப்பம் சித்திவளாகத் திருமாளிகையில் சன்மார்க்கப் போதனை நடைபெறுங் காலத்தில், ஒரு **நொண்டி ஆட்டுக் குட்டி** யும் ஆங்கு வந்து செவிமடுப்பதும், பின்னர் எல்லோரும், அம் மாளி

கையினை வலம் வரும்போது தானும் வலம் வருவதுமாக இருந்துவரும். அதற்காகச் சுவாமிகள் அந்த ஆட்டுக்குட்டிக்கு அன்பர்களைக்கொண்டு ஆகாரம் முதலியன கொடுக்கச்செய்வார்.

## 88. தீயினாலுந் துன்புறாத திருமேனி

**சுவாமிகள்** அக்குடிசையினுள் பிரமதண்டிகா யோகம் செய்வது வழக்கம். அதாவது இரு பக்கங்களிலும் நெருப்பு நிறைந்த இரும்புச் சட்டிகளை வைத்துக் கொண்டு இடையிலிருந்து செய்யும் யோகம். அதை யறியாத சபாபதி குருக்கள் ஒருநாள் திடீரென நுழைய அவருடைய கால்கள்பட்டு ஒரு சட்டியிலிருந்த நெருப்பு சிதறிக் குருக்கள்மீதும் சுவாமிகள்மீதும் பட்டன. குருக்கள் உடம்பு வெந்து போயிற்று; சுவாமிகள் **சுத்ததேகம்** பெற்றவராகையால் சிறிதும் துன்பம் ஏற்படவில்லை.

## 89. பிநாகபாணியாரின் பிதற்றல்

பிநாகபாணி முதலியார் என்பவர் புதுச்சேரியிலுள்ள தந்தி ஆபீஸ் மானேஜர். அவருக்கு ஏழுபாஷைகள்வரை எழுதப் படிக்கத் தெரியும். அவ்வளவே யன்றி அம்மொழிகளிலெல்லாம் அவர் வல்லவரல்லர். அந்த நிலையிலேயே அவருக்கு அகங்கார முண்டாகி விட்டது. அதனால் அவர் சுவாமிகளையும், சாலையிலுள்ள மற்றவர்களையும் சோம்பேறிகளென்றும், வெற்றுக் கும்பலென்றும், இன்னும் பலவாறாகவும் இகழ்ந்து உரையாடி வருவார். ஒருகால் அவர் சுவாமிகளைப் பலமொழிகளில் கேள்விகள்கேட்டு அடக்க வேண்டுமென மேட்டுக் குப்பத்திற்கு வந்தார். அவர் சபைக்கு வருவதற்கு முன்னமேயே சுவாமிகள் "**நமக்கு ஒருவர் புத்தி புகட்ட வருகிறார்**" என்று கூறினார்கள். பின்னர் பிநாகபாணியும் வந்து ஒன்றும் பேசாது மௌனமாக ஓரிடத்தில் அமர்ந்து கொண்டார்.

அதன்பிறகு சுவாமிகள், தம் அருகிலிருந்த தொழூவூர்-வேலாயுத முதலியார் மூத்த குமாரனாகிய **திருநாகேச்சுரம்** என்னும் நான்கு வயது டைய சிறுவனைப் பிநாகபாணி முதலியார் எதிரே நிறுத்தி "உனக்கு எத்தனை பாஷைகள் தெரியும்" என்று வினவினார்கள். அதற்கப் பையன் "எனக்கு ஆறு பாஷைகளில் பாண்டித்திய முண்டு" என்று கூறினான். ஆகவே பிநாகபாணியாருக்கு அச்சம் அதிகரித்தது. அதனால் பெருங் கஷ்டத்தோடு அமர்ந்திருக்கும் அம்முதலியாரை நோக்கிப் பின்னும் சுவாமிகள் "நீங்கள் எந்தப் பாஷையில் வேண்டுமானாலும் இந்தப் பையனைக் கேள்விகள் கேளுங்கள்; பதில்சொல்லுவான்" என்றனர். பிநாகபாணிமுதலியார் பேச வாய்திறக்க முயன்றும் முடியவில்லை. அவருக்கு அச்சமும் நாணமும் நடுக்கமும் உண்டாகி தம்முடைய அறியாமைக்கும், தாம் கூறித் திரிந்த பிதற்றலுரைகட்கும் வருந்திக்கொண்டு மௌனமா யிருந்தனர். பின்னர், சுவாமிகளது கிருபையால், வாய்திறக்க அவரே சுவாமிகளை வணங்கி, 'ஆண்டவரே! அடியனேன் செய்த பிழைகளை யெல்லாம் பொறுத்தருளல் வேண்டும்' என வேண்டி அருள்பெற்று விடை கொண்டேகினார்.

## 90. மந்திர வாதிகளும்-மகா காளியும்

மந்திரவாதிகள் நால்வர் வடலூரிருந்து சுவாமிகளைத் தரிசித்தற் பொருட்டாக மேட்டுக் குப்பத்திற்கு ஒருநாள் இரவு பதினைந்து நாழிகை யளவில் வந்துகொண் டிருக்கும் பொழுது, இடையிலே யுள்ள ஒரு காளி அவர்கட்குப்பயங் காட்டியது. அவர்கள் அதைநோக்கி "நாங்கள் திரும்பி வருங் காலத்தில் உனக்குப் பூட்டிடுகிறோம்" என்று கூறி வந்துவிட்டனர். அவர்கள் சுவாமிகளைத் தரிசித்து மீளுங்காலை சுவாமிகளிடத்தில், காளியின் வரலாற்றைக் கூற, 'அதற்குச் சுவாமிகள் "பூட்டிட வேண்டாம்; நம்மிடத் திற்கு வந்துபோவதாகக் கூறுங்கள்; போதுமானது" என்று கூற, அவர் களும் அவ்வாறே காளிக்குக் கூறப் பேருருவோடு வந்த அக்காளி தன் னுடைய உருவைக் குறைத்துக்கொண்டு அவர்களுடைய கட்புலனுக்கே புலனாகாது போயொழிந்தது.

## 91. வடலூரார் பெற்ற புண்ணியம்

மிகுந்த செல்வந்தர்களும், வடலூருக்குப் பெரியதனக்காரர்களுமாகிய அருணாசலபடையாட்சி, வேங்கடாசல படையாட்சி ஆகிய இருவரையும் சுவாமிகள் வரவழைத்து "நீங்கள் இன்றே **புலையுணவை விட்டுவிடுங் கள்**; உங்கட்கு அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர் திருவருளால் பல நன்மை கள் உண்டாகும்." என்று கூறினார்கள். அவர்களும் அவ்வாறே புலையுண வை விடுத்துப் புண்ணிய வழியில் நின்றார்கள். அதனால் அவர்களுடைய நிலங்களில் அவ்வருடமுதல் ஒரு பங்குக்கு ஐந்து பங்கு விளைவு அதிகரிக்க லாயிற்று. அதைக்கண்ட அவர்கள் மற்றவர்களையும் புலையுணவை நீக்கிப் புண்ணியம் பெறுமாறு செய்தனர்.

## 92. உண்மை நெறியை உணர்த்தல்

பின்னொரு நாள் கண்ட்ராக்டர் ஆறுமுக முதலியார் என்பார் சுவாமி களிடமிருந்து ஒரு குளிகை பெற விரும்பினர். அவர் விருப்பினை யறிந்த சுவாமிகள், அவருடைய கரத்தில் மிளகுப் பிரமாணமுள்ள இரு குளிகை களை வைக்க, அவற்றையே அவர் தாங்கமுடியாது கீழே வைத்துவிட்டார். அதைக் கண்ட சுவாமிகள் அவரை நோக்கி "இந்த ஆசையை இனி நீர் விட்டுவிடும்; ஏனெனில் இது உண்மை நெறிக்கு ஏற்புடையதல்ல" என்று உரைத்தருளினார்கள்.

## 93. குருக்களுங் குளிகையும்

அப்படியே குருக்க ளொருவருக்கும் சுவாமிகள் நல்லறிவு கொளுத்தி னர். சுவாமிகளிடத்தில் அன்புடையவரா யொழுகி வந்த குருக்க ளொரு வர் குளிகையைப் பெற்றுச் செல்வவந்தராகலா மென எண்ணி சுவாமி களை வேண்ட, சுவாமிகள் குளிகை யொன்றினை ஒரு பெட்டியின்மீது வைத்து 'இதை எடுத்துக்கொள்ளும்' என்றார்கள். அக்குருக்கள் அதை எடுக்க முயன்றபோது அக் குளிகை அவர் கரத்தை வலுவாகப் பிடித்துக்

கொண்டது. பின்னர் அவரும் சுவாமிகளை வேண்டி அத் தீங்கிலிருந்தும் விடுபட்டு நல்லறிவு பெற்றார்.

## 94. 'ந' கரப் பொருள் விளக்கம்

மற்றொருநாள் மகா வித்வான்களிருவர் சுவாமிகளை யணுகி திருவாசகத்தின் முதல் அகவலுக்குப் பொருள் கூறுமாறு வேண்டினர். அதற்கிசைந்த சுவாமிகளும், அம்முதல் அகவலில் முதலெழுத்தாகிய 'ந' என்னும் ஓர் எழுத்திற்கு மட்டும் இரண்டு மணிநேரம் 64-இலட்சணங்கள் வரை எடுத்தோதி வர, அவற்றை அவ் வித்வான்கள் உள்ளத் தமைத்துக் கொள்ள முடியாதவர்களாய்ச் சுவாமிகள் திருவடிகளை வணங்கி 'இனி **கேட்பதற்கு எங்கட்கு ஆற்றலில்லை'** என்று கூறிச் சென்றனர்.

## 95. வலைஞரை ஆட்கொண்ட வைபவம்

மேட்டுக் குப்பத்துக்கு அருகேயுள்ள செம்படவர் இருவர் வலைகளைக் கையிலேந்திக் கொண்டு சுவாமிகள் இருக்கும் வழியே போக அவர்களைச் சுவாமிகள் அருகழைத்து "உலகினிடத்தே பல தொழில்களிருக்கப் பல்லாயிரக் கணக்கான உயிர்கள் அழிவதற்கு ஏதுவாகிய இத்தொழில் உங்கட்கு வேண்டுவதில்லை; ஆதலால், இக்கொடுந்தொழிலை இன்றே விட்டுவிடுங்கள்" என்றும், இன்னும் பலவிதமான அறங்களையும் அவர்கட்கு இனிமையாகக் கூறினர். அதைக் கேட்ட அவர்கள், இனி அச்செயல் செய்வதில்லையென்று சொல்லிவிட்டு, அவர்கள் சென்று பழயபடியே வலைவீசினர் வலைகள் அறுபட்டன. அறுந்துபட்ட அவைகளைச் சீர்ப்படுத்தி மீளவும் வீச, அப்பொழுதும் அவை அறுபட்டனவே யல்லாது பயனொதுவு மில்லை. இப்படியே பலமுறை அவர்கள் வீசும்பொழு தெல்லாம் வலைகள் அறுந்து போக அவர்கட்கு நல்லறிவு வந்து "அச்சுவாமிகள் சொன்னவற்றை அசட்டை செய்ததனால் வந்தது இந்தக்கேடு" என்பதை உள்ளத்துட் கொண்டு அன்றிருந்து அப்பாவத் தொழிலை விடுத்து அறமேற் கொண்டு சுவாமிகளின் அருள் பெற்றனர்.

## 96. தொழுவூர் வேலாயுத முதலியார் துன்பம்

தொழுவூர்-வேலாயுத முதலியாருக்கு ஒருகால், உடம்பு முழுவதும் சிரங்குண்டாகி அதனால் வீக்கமும் துன்பமு முண்டாக, அதனை ஆற்றாராய் முதலியார் வள்ளலாரிடத்து வர வள்ளலாரும் அவருக்குத் திருநீறு கொடுத்து அப்பொழுதே அவருடம்பு குணமடைய அருள் செய்தார்.

## 97. வழி காட்டி மறைந்தமை

கூடலூர்: சின்னதம்பி பிள்ளை ஒருநாள் வடலூரிலிருந்து மேட்டுக் குப்பம் வரும் வழியில் சென்று தடுமாற, அத்தருணத்தில் வள்ளலார் அவர் முன்னே தோன்றி வழியினைக் காட்டி மறைந்தார்.

## 98. பசுவைப் போற்றல்

வேறொருநாள் திருவொற்றியூரிலுள்ள இராஜகோபாலப் பிள்ளை என்னும் யாதவ மரபைச் சேர்ந்த அன்பரொருவர் மேட்டுக்குப்பத்திற்கு வள்ளலாரைத் தரிசித்தற்பொருட்டு வர, அவரை அமரச் செய்து, அவர்

பசுவினங்களை ஒழுங்கே காப்பாற்றுகிறதில்லை யென்பதை முன்னரே உணர்ந்திருந்த நம் வள்ளற் பெருமான் அவருக்குப் பசுவின் அருமை பெருமைகளைப் பற்பலவிதமாக எடுத்துக் கூறி, அவருக்கு நல்லறிவு கொளுத்தினர்கள். அவ் விராஜகோபாலப் பிள்ளையும் வள்ளலாரிடம் விடை பெற்றுக்கொண்டு வீடு வந்து சேர்ந்து, அன்று முதலாக வள்ளலார் கூறியாங்கு பசுக்களை ஒழுங்கே காப்பாற்றி வருவாராயினர்.

அப்படியாக அவர் பசு வினங்கட் கெல்லாம் உபசாரங்கள் செய்து வரும் நாளில் ஒருபகல் அவரை ஒரு முரட்டுப் பசு முட்டித்தள்ளிவிட்டது. அதனலடிபட்டு வருந்தும் போது அவருடைய கனவில் வள்ளலார் தோன்றி "நீர் கவலைப்பட வேண்டாம்; நாளைக்காலையிலே இரண்டு பேர் வந்து உம்முடைய உடல் நோயைக் குணப்படுத்துவர்" என்று உரைத்து மறைந்தார். அவ்வாறே மறுநாளிருவர் வந்து அவருடைய உடல் நோயைத் தீர்த்தார்கள்.

## 99. வெண் குஷ்டமும்—கருங் குஷ்டமும்

கொங்கண தேசத்தாரிருவர் வெண்குஷ்டத்தினல் ஒருவரும் கருங் குஷ்டத்தினல் ஒருவருமாகத் துன்புற, ஆற்றுதவர்களாய் வள்ளலாரின் பெருமையை யறிந்து, அவர்களிடமணுகிக் "குறை தவிர்த்தாண்டருளல் வேண்டும்; குணப்பெருங் குன்றே!" என்று குறையிரக்க, கருணைக்கட லான வள்ளலார் அவ்விருவரையும் பற்றியிருந்த அவ்விருவகைக் குஷ்ட நோய்களையும் ஐந்து நாட்களில் விலக்கினர்.

## 100. மகமதியச் சிறுவன் வினை

இளவயதுள்ள மகமதியச் சிறுவ னொருவன் தன் உடம்பெல்லாம் எண்ணெயைத் தடவி, அதன்மீது ஆங்காங்கு பஞ்சு ஒட்டவைத்துக் கொண்டு, வள்ளலாரிடம் வந்து விளையாட்டாக, "எனக்கு உடம்பெல்லாம் செரங்குங்க! நீங்க தீர்க்கணுங்க" என்று கூறினன். வள்ளலாரும் "தீர்ந்து விடும் போ" என்றுகூறி அனுப்பினர். வீட்டுக்குப் போவதற்குள் அவன் பஞ்சு ஒட்டவைத்திருந்த இடமெல்லாம் பெருஞ் சிரங்குகள் உண் டாகித் துன்புறுத்தத் தலைப்பட்டன. துன்பம் பொறுக்கமாட்டாத அம் மகமதியச் சிறுவன், மீளவும் வள்ளலாரிடம் வந்து முறையிட சாலையி லுள்ள கிணற்றுத் தீர்த்தத்தில் அவனை முழுகும்படி ஐயா கூறினர். அவனும் அக்கிணற்றுத் தீர்த்தத்தில் முழுகித் தனது துன்பம் நீங்கிப் போயினன்.

## 101. ஒன்றுக்கு மூன்று

பின்னர் ஒருகால், ஒரு மகமதியர் வள்ளலாரிடமணுகி "இரச பஸ்பஞ் செய்வதற்கு உரிய மூலிகை இது" என்று ஒரு மூலிகையின் பெயரை மிக வும் இரகசியமாகக் கூறினர். அதனைக்கேட்ட வள்ளலார் "அப்படியா? இரசபஸ்பம் செய்வதற்கு நீர் சொன்ன மூலிகையைத் தவிர்த்து மூன்று மூலிகைகளுண்டு; அவை யின்னின்ன." என்று எல்லோருங் கேட்க உரத்த சப்தத்துடன் மொழிந்தனர். அம்மகமதியர் வெட்கித் தலைகுனிந்து போயினர்.

## 102. முதற்றே—முதல் "தே"

மற்றொருகால் புலவரொருவர் அடிகளிடம் வந்து "சுவாமி! திருக்குறளில் முதற் குறளிலேயே முதற்றே யுலகு என்பதில் ஏகாரம் ஈற்றசையாயின் கடுகைத் துளைத்தேழ் கடலைப் புகட்டி........என்று கூறியது எவ்வாறு பொருந்தும்?'' என்று வினயத்தோடு வினவினர். அதற்கு நம் வள்ளலார் "புலவரே! முதற்றே என்பதை 'முதல் தே' எனப் பிரித்துப் பாரும். ஒன்றுந் தோஷமிராது" என்று கூறினர்.

## 103. முருக தாசரின் முதிர்ந்த அன்பு

திருநெல்வேலி என்னும் திருப்பதியில், சைவவேளாண் மரபில் அவதரித்தவரும், ஒன்பது பிராயந்தொடங்கி ஒண்கடலமிழ்தெனத் தீஞ்சுவைக் கவிகளால்—சிவ குமரனை வழுத்தும் சீரிய ஒழுக்கமுடையவருமாகிய தண்டபாணி சுவாமிகள் என்னும் முருகதாசர் என்பார் நமது வள்ளலாரின் அருமை பெருமைகளைப் பிற அன்பர்கள் மூலம் அறிந்து அளவிலா மகிழ்வும் அன்பும் உடையவராய் வள்ளலாரைத் தரிசிக்கும் விருப்பங் கொண்டு வள்ளலாரிடம் வர, வள்ளலாரும் அவரை அன்போடு வரவேற்று உபசரித்தனர். அது சமயம் அம் முருகதாசர் தாம் முருகன்மீது பாடி வைத்திருந்த அருமைப் பாக்களை வள்ளலாருக்குக் காட்டினர். வள்ளலார் அப்பாககளில் ஒரு சிலவற்றைப் பார்த்து உளமகிழ்ந்து 'முருகதாசர்—அருணகிரிதாசரே' என்று வியந்து கூறினர். இம் முருகதாசரே வள்ளலார்மீது அனுபவப் பதிகமும் விணப் பதிகமும், பாடியவர். (6-வது திருமுறை, வசன பாகத்தில் காண்க.)

## 104. பிள்ளையவர்களின் பேரன்பு

கவி பாடுவதில் கம்பரெனப் பெயரும் புகழும் வாய்ந்தவரும், திருவாவடுதுறை ஆதீனத்து மகாவித்வானக இருந்தவரும், ஆகிய மகாவித்வான்: மீனுட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள் தம்முடைய மாணவராகிய மாயூரம்: வேதநாயகம் பிள்ளை இயற்றிய நூல்களுக்குச் சாற்று கவி வாங்குதற் பொருட்டாக வள்ளலாரிடம் ஒருகால் வர, வள்ளலாரும் அவரை முக மலர்ச்சியோடு நல்வரவு கூறி வரவேற்றனர். பிள்ளையவர்களும், வள்ளலாரை வணங்கி அமர்ந்து தம் கருத்தை வெளியிட, வள்ளலாரும் அவ்வாறே ஒரு சாற்று கவி அளித்தனர். அதன் பிறகு பிள்ளை அவர்கள் வள்ளலாரிடத்து, '**இங்கிதமாலை**'யைப் பற்றிச் சிறிது விளக்கியருளுமாறு வேண்டினர். வள்ளலார் இங்கிதமாலையின் முதற் பாட்டிற்கு மட்டும் நான்கு மணி நேரம் வரைப் பலவகைப் பொருள்களை எடுத்தோதி, அதற்கு மேலும் அனுபவ உரை விரிக்கத் தொடங்கினர். அவ்வுரையைக் கிரகித்துக் கொள்ளக் கூடாமையால் பிள்ளையவர்களும், மற்றவர்களும் திகைத்துப் போயினர். வள்ளலார், அதுகண்டு உரையை நிறுத்திக்கொள்ள, **மீனுட்சி சுந்தரம் பிள்ளை** யவர்கள் வள்ளலாரிடத்துப் பொங்கி வழியும் ஞான அமுதத்தைக் கண்டு அளவிலா வியப்பும், ஆனந்தமுங் கொண்டவராய் அன்று முதல் வள்ளலாருடைய பேரன்பரிலுஞ் சிறந்த பேரன்பராயினர்.

## 105. அங்கங்கள் வேறான அதிசயம்

ஒரு நாள் இரவு வெளியே போன ஐயா அவர்கள் அதிக நேரமாகியுந் திரும்பி வரவில்லையே யென்று, வேலூர் சண்முகம் பிள்ளை என்பார் சாலையை விட்டு வெளியே போய்ப்பார்க்க, அங்கே ஐயா அவர்களுடைய **அங்கங்களெல்லாம் தனித்தனியாகக் கிடந்தன.** அதைக்கண்ட அப்பிள்ளை, உடல்நடுங்க உயிர் நடுங்க—"அந்தோ! அடிகள் இவ்வாறு ஆயினரே. இனி என் செய்வோம்" என்றின்னை பல மொழிந்து வருந்து கின்ற வேளையில் ஐயா அவர்கள் திடீரென அவருடைய கண் முன்னே தோன்றி, "நீர் இனி இம்மாதிரி வந்து பார்க்காதீர்!" என்று எச்சரித் தனர். அவரும் மகிழ்வோடு ஐயா அவர்களுடைய ஆணையைச் சிரமேற் கொண்டு பின் தொடர்ந்துவர இருவரும் சத்திய தருமச்சாலையை அடைந் தனர்.

## 106. "அமாவாசை" அருள் பெறல்

வடலூர் சேரியிலுள்ள அமாவாசை என்னும் ஒருவன் சிறிது பக்குவ முடையவனா யிருப்பதைக் கண்டு, அடிகள் அழைத்துவரச் செய்து, "நீ இறந்துபோன மாடுகளைப் புதைத்துவிட வேண்டும்" என்றுகூற, அவ் வாறே அவனும் புதைக்கின்ற பழக்கத்தைக் கைக்கொண்டான். அதை யறிந்த அடிகள் மீண்டும் அவனை யழைப்பித்து, **"மாட்டினைப் புதைத்து விடுவதோடு நீ இனியேல் மாமிசமும் உண்ணுதே"** என்று ஆணை யிட்டனர். அதற்கும் அவ்வமாவாசை இணங்கியவனாய்த் தான் மிகவும் வறுமை நோய் வாய்ப் பட்டிருத்தலை எடுத்துரைத்து அதனை நீக்கி யருளல் வேண்டுமென ஐயாவை வேண்டினன். ஐயாவும் அவனுடைய தீவிர பக்குவ நிலைக்கு மெச்சி நாள்தோறும் அவனுக்கு "ஓர் அரை ரூபாய்" சுலபமாகக் கிட்டுமாறு திருவருள் பாலித்தார்.

## 107. கள்வனுக்கும் காட்டிய கருணை

அதன்பிறகு ஒருநாள் வடலூருக்கு அடுத்த குள்ளஞ்சாவடி என்னு மிடத்திற்கு ஐயா அவர்கள் சென்ற காலத்தில் அங்குள்ள அன்பராகிய ஒரு **மகம்மதிய-'போலீஸ் ஹெட்கான்ஸ்டபில்'** புது வஸ்திர மொன்றை அடிகளுக்குப் பாத காணிக்கையாக வைத்து வணங்கி, தான் வாழ்வு பெறுதற் பொருட்டாக அவ்வஸ்திரத்தை யணிந்து கொள்ளும்படி வேண்டினர். அவர் வேண்டுதலுக்காக அடிகள் அவ்வஸ்திரத்தை யணிந்து கொண்டு அன்றிரவு அங்கு தானே படுத்திருக்க, அவ்விரவில் ஒரு திருடன் வந்து அவ்வஸ்திரத்தை மெல்ல இழுத்தான். அதைக் கண்டதும் மகம் மதியர் அக்கள்வனைப் பிடித்து தண்டிக்க முயன்றார். ஐயா அவர்கள் அவரைத் தடுத்து, இழுத்த அவனுக்கே அவ்வஸ்திரத்தைக் கொடுத்தனுப் பினர்.

## 108. புகைப் படம்

பிறகொருநாள் சாலை அபிமானிகளாகிய அன்பர்கள் சிலர் நம் திருவருட் பிரகாச வள்ளலாரைப் (போட்டோ) புகைப்படமெடுக்க வேண்டு மென விருப்பங்கொண்டு சென்னை மாசிலாமணி முதலியார் முதலான

வரைக கொண்டு எட்டு தரம புகைப் படம எடுத்தும வளளலாருடைய திரு வுருவம் படத்தில் படியவில்லை பினனர் அவவெணணததை அவா கள் விட்டனா சுதத தேகம அமைநத எமபெருமானா திருமேனியும புகைப படததில விழுமோ? அகணடாகார சசசிதானநத சொருபராகிய தெயவ உருவததைச சிறுபடததில அடகக யாரால முடியும்?

## 109 பொன்னுன மேனி!

இஙஙனம நிகழநத சிறிது காலததிறகுப பிறகு, பணணுருட்டியிலுளள குயவரொருவா வளளலாா திருவுருவததைப பலகாலும் பாாதத ஒரு பழக கததினமேல அமாாநதிரியே ஓா உருவம அமைதது அதறகுப பலவகை நிறஙகள கொடுததுக காணபோா கணணைக கவருந தரததாகச செயது வநது வளளலாாிடம காட்டினா வளளலாரோ, அத திருவுருவைக கரத தில வாஙகிப "பொன்னுன மேனி மண்ணுயிற்றே" எனறு அப படியே கை நழுவ விடடு விட்டார் அவவுருவமும கீழே விழுநது உடைநது போனது.

## 110 ஜீவகாருண்யத்தின் முடிவு

வேறொருநாள, ஜீவகாருண்ய மென்றால் மககளிடததும மாககளி டத்தும கருணைகாட்டுவது எனற அளவில சில அனபாகள பேசிககொண டிருபபதைக கேட்டு வளளலாா, அவவனபாகளை அருகழைத்து அவர்களை நோககி "நீஙகள பேசிககொளகிற அளவில ஜீவகாருண்யம முடிவுபெறறு விடாது, அது இனனும பரநது செலவது உதாரணமாக ஒரு கதை சொல லுகிறேன கேளுஙகள" எனறு சொலலத தொடஙகினா "அனபாகளே! இரு முதியவாகள ஒரு வீதிவழியே சென றுகொணடிருநதனர், அப்பொ ழுது அவருள ஒருவரின காலபட்டு வீதியிறகிடநத ஒரு மணகட்டி உடைநது போயது அதைககணட மறறவா உடனே மூாசசையானா மூாசசை யடைநத அவருககு உபசாரஙகள செயது மூாசசையைத தெளிவித்த முனனையவா 'தாஙகள மூர்சசையுறறதறகுக காரணம எனனை?' எனறு வினவ, அதறகு அம முதியவா 'உமமுடைய காலினால அவவழகிய மண கட்டி உடைநது உருககுலைநது போனதே காரணம்' எனககூறினா" எனறு கதையைச சுருககமாக முடிதது, அவாகட்கு ஜீவகாருணயததின முடி வினை உணர்ததி யருளினா.

## 111. யோகத்தினுஞ் சிறந்தது தோத்திரமே

பிறகொருநாள வளளலாரை அனபாகள "யோகம முதலியன செய்ய எஙகளால இயலாதனவாயிருககினறன: ஆதலால யாஙகள ஈடேறுதற குரிய ஒரு இலகுவான மாாககததைத் தேவரீா திருவாய மலாநதருளல வேணடும" எனறிரகக, வளளலாரும, "இக கடையுகமாகிய கலியுகததில உஙகளால யோகம முதலிய சாதனஙகளை இயறற முடியாது; ஆதலால நீஙகள **தோத்திரத்தையே ஈடேறும் மார்க்கமெனக் கொள் ளுங்கள்"** எனறிசைததனா

நினைந்து நினைந்து உணர்ந்து உணர்ந்து நெகிழ்ந்து நெகிழ்ந்து அன்பே
நிறைந்து நிறைந்து ஊற்றெழுங் கண்ணீர் அதனால் உடம்பு
நனைந்துநனைந்து அருளமுதே! நன்னிதியே! ஞான
நடத்தரசே! என்னுரிமை நாயகனே! என்று
வனைந்துவனைந்து ஏத்துதும் நாம் வம்மின் உலகியலீர்!
மரணமிலாப் பெருவாழ்வில் வாழ்ந்திடலாங் கண்டீர்
புனைந்துரையேன் பொய்புகலேன் சத்தியஞ்சொல் கின்றேன்
பொற்சபையிற் சிற்சபையிற் புகுந்தருணம் இதுவே.

## 112. சன்மார்க்கத்தில்—இன்னிசை

நிற்க வள்ளலாரிடம் சேர்ந்திருந்த கூட்டங்களில் ஒருசிலர், தோத்திரஞ் செய்யுங் காலத்தில் பிடில், மத்தளம் முதலியவற்றை வைத்துக் கொள்ளு தலும், ஆராதனை செய்யுங் காலத்துப் பலவிதமான கோஷங்களுடன் கூச்சல் போடுதலும், பிரம்மதாளம், நகார், கண்டாமணி, நாதசுரம் முதலிய ஒலிக்கருவிகளை வைத்துக் கொள்ளுதலுஞ் செய்தனர். அவற்றைக்கண்ட நம் ஐயா அவர்கள் பெரிதும் மனவருந்தி அவர்களை அழைத்து "நீங்கள் செய்யும் இக்காரியங்களெல்லாம் சன்மார்க்கத்திற்கு முற்றிலும் மாறு னவை யென்பதை நீங்கள் அறியவேண்டும்: **மனநெகிழ்ச்சியோடு ஆண்டவனுடைய தோத்திரங்களை அமைதியாக அன்போடு பாடுவதுதான் சன்மார்க்கத்தின் முக்கிய லக்ஷியத்திற்கு முற்றிலும் உடன்பாடானது** என்பதையும் அறிய வேண்டும்: அறிந்து இவைகளை அறவே விட்டு விட வேண்டுவதே உங்கள் கடமை" எனக் கண்டிப்பாகத் தெரிவித்தார்கள். அன்றிருந்து அவ்வீணடம்பரங்களெல்லாம் அறவே ஒழிந்தன. ஆனால், பின்னால் இப்பொழுது சில ஆண்டுகளாக அவைகள் தொடங்கி யிருக்கின்றன. மீண்டும் ஐயா அவர்களின் கருத்திற் கும் சன்மார்க்கத்திற்கும் உவப்பான—உடன்பாடான முறைக்கு வருவ தற்கு எல்லாம் வல்ல ஆண்டவர் திருவருளைச் சிந்திப்போமாக.

## 113. தேங்காய்கூடப் பலியிடுதல் கூடாது

தெய்வத்திற்குப் பலியிடும் கொடிய வழக்கத்தைச் சுவாமிகள் கண்டிப் பாகத் தடுத்து வந்தார்கள். அத்துடன் தேங்காயைக் கூடப் பலியிடுதல் கூடாது என்றும் அந்தத் தேங்காயைப் பலியிடாமல் முன்னதாகவே உடைத்து திருத்தி அத்துடன் சர்க்கரை, கற்கண்டு, திராட்சை முதலியன கலந்து ஆண்டவருக்கு இனிப்பாக நைவேத்தியம் வைக்கவேண்டு மென் றும் சொல்லிவந்தார்கள். ஆண்டவரை நமது வாயினால் வாயார வாழ்த்து வது தவிர பிறரைக் கொண்டு வேறு பாஷைகளில் அர்த்தம் விளங்காமல் அருச்சனை முதலியன செய்தல் அவ்வளவு முறையானதல்ல வெனவும், அபிஷேகாதிகள், புஷ்ப அலங்காரங்கள், தீப அலங்காரங்கள், முதலியன வும் வாகனங்களில் ஏற்றி ஆடம்பரங்களுடன் உலா வருதல் முதலியனவும் சன்மார்க்கத்துக்கு உரியன அல்ல, எனவும், இப்படிப்பட்ட ஆரவாரங்கள் கூடாவெனவும் அரிதிற்கிடைக்கும் பணத்தை ஏழைகளின் பசி நிவர்த் திக்கே உபயோகிக்க வேண்டுமென்றும், அடிக்கடி மெய்யன்பர்கட்கு உப தேசித்து வந்தார்கள்.

ஒருநாள் ஓரன்பர், திருவிளக்குகளை நிறைய ஏற்றிவைக்க, அதனைக் கண்டு, இவ்வளவு அதிகமான விளக்குகள் ஏன்? ஏதோ ஒன்றிரண்டை

வைத்துக்கொண்டு மீதியை ஏழைகளின் ஆகாரங்கட்கு உபயோகிக்க லாகாதா? என்று கண்டித்தார்.

மற்றொருகால் ஓரன்பர், நிறைய புஷ்பம் முதலியன வாங்கிவர அதனைக்கண்டு "ஏன்காணும் இவ்வளவு புஷ்பம்? ஆண்டவர் கேட்டாரா? இதனால் திருப்தியடைவாரா? **தும்பை, அறுகு** முதலியனவற்றை நீரே போய்க் கொண்டுவரலாகாதா? இப் பணம் எத்தனை ஏழைகட்குப் பசியை நிவர்த்திக்கும்!" என்று கண்டித்து வந்தார்கள். இத்துடன் ஞான சபையைத் தாபித்து, அதைப் பூசிக்கும் முறையை, (ஞானசபை விளக்கப் பத்திரிகை 6-ம் திருமுறை வசனபாகம்) எழுதிக் கொடுத்தார்கள். அதன் படியே சில மாதங்கள் நடந்துவந்தது. பின்பு, சுவாமிகள் திருக்காப்பிட்டுக் கொள்ளும் சில தினங்கட்கு முன்பு, அதனைப் பூட்டிவிட்டுச் சாவியை வாங்கிக்கொண்டு "ஆண்டவர் வருங்காலத்தில், சபையானது தானே திறந்துகொள்ளும்; அப்போது அது **அற்புதமான கட்டடமாகத் தோன்றும், எல்லா அற்புத சித்திகளும் நடக்கும்**" என்றார்கள். அவ்வண்ணமே சுவாமிகள் திருக்காப்பிட்டுக் கொண்டபின் மூன்று வருடம் வரையில் சபை மூடியிருந்தது. பின்னர் வெகுதானிய ஆண்டு சித்திரைத் திங்கள் முதல்நாள், சாலை அபிமானிகளும், சபாபதி சிவாசாரியரும் மொத்தம் ஆறுபேர்கூடி அவர்களுக்குள் ஓர் பிரமாணம் செய்து கொண்டு, திரைக்குள்ளே ஒரு பீடத்தைவைத்து அதன் பேரில் சரிகைகளால் அலங்கரித்த தலையணைகளையும் திண்டுகளையும் வைத்து அதனைக் குருபீடமாகச் சிந்தித்துப் பிரதிதினமும் தோத்திரமும், பிரதிமாத பூசத்திற்குத் தீப அலங்காரத்தோடு தோத்திரமும், ஐயா அவர்கள் கட்டளையிட்டவண்ணம் நடத்தி வந்தனர். அவ்வாறு நடந்துவந்த பூசையானது நாளடைவில் மாறுபட்டுச் **சன்மார்க்கத்திற்கு விரோதமாக** அபிஷேகாதிகள், நாகசுரங்கள், கொட்டு முழக்குகள், பேரிகை, கண்டாமணிகள் அதிர்வேட்டுகளுடன் ஆரவாரங்கள் சாதாரண முறையில் நடந்துகொண்டு வருவதை அந்தத் **திருவுளந்தான் தடுத்து** ஒழுங்கான முறையில் வருவிக்க வேண்டுமென நாமெல்லோரும் எல்லாம் வல்ல இறைவனை இறைஞ்சுவோமாக.

இதுவரை, அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரின் பரிபூரண அருளமுதருந்திப் பாருலகதனில் அப்பரம கிருபாநிதி யென்னக், கல்லார்க்குங் கற்றவர்க்கும் களிப்பருளுங் **களிப்பாய்**—காணார்க்குங் கண்டவர்க்குங் கண்ணளிக்கும் **கண்ணாய்**—வல்லார்க்கும் மாட்டார்க்கும் வரமளிக்கும் **வரமாய்**—மதியார்க்கும் மதிப்பவர்க்கும் மதிகொடுக்கும் **மதியாய்**—நல்லார்க்கும் பொல்லார்க்கும் நடுநின்ற **நடுவாய்**—நரர்களுக்கும் சுரர்களுக்கும் நலங்கொடுக்கும் **நலமாய்**—எல்லார்க்கும் பொதுவில் இருந்தாண்டு கொண்ட **சிவமாய்—எம் பரசாய்**—எம்மை உய்விக்கவந்த எம்பெருமானாய் நின்றொளிர்கின்ற தெய்வத் தந்தையாராகிய **திருவருட்பிரகாச வள்ளலார் தோன்றுந் துணையாயிருந்து** உலகவர்க்குத் துணை புரிந்த நிகழ்ச்சிகளை அப்பெருமான் உலகவர் சமரச சுத்த சன்மார்க்க சாதனம் இன்னதென்பதைத் தெரிந்துய்யத் திருக்காப்பிட்டுக் கொள்ளுதற்குப் பத்துநாட்கள் முன்னே திருவாய் மலர்ந்தருளிய சுத்த சன்மார்க்க விவகாரத்தைச் சிறிது சுருக்கமாகக் கூறுவாம்.

"ஆன்மநேய ஒருமைப்பாட்டு உரிமைச் சகோதரர்கட்கு அறிவிப்பது :—

இதுவரையில் **கர்மசித்தருடைய காலம்;** அதனல் சமயங்களும் மதங்களும் பரவியிருந்தன; இப்போது வரப்போகிறது ஞானசித்தருடைய காலம்; இனி சாதி, சமயம் முதலான ஆசாரங்களெல்லாம் போய் சமரச சுத்தசன்மார்க்க சத்திய ஞானுசாரம் ஒன்றே விளங்கும்; (பெருமான் புகன்றபடியே இக்காலத்தில் எங்கும் ஜாதி, சமயம், மதம் முதலான பேதம் குறைந்து சமரச நோக்கமே பெருகி வருவது கண் கூடாம்) சமய மதங்களில் சொல்லுகின்ற கருத்தர்கள், மூர்த்திகள், ஈசுரன், பிரமம், சிவம் முதலிய தத்துவங்கள் காலப் பிரமாண பரியந்தம் இருப்பதே யொழிய அதற்கு மேலிரா. சமய மதங்களில் சொல்லுகிற கர்த்தர்களுடைய சித்திகள் சர்வசித்திகளுடைய கடவுளின் சித்தியின் லேசங்கள்; அந்த சர்வ சித்தியையுடைய கடவுளுக்கு ஒப்பாகார்கள்; கோடிகோடி பங்கு தாழ்ந்த தரத்திலிருக்கிருர்கள்; இப்போ திருக்கும் **வேதாகம புராணங்களிலும் சமய மதங்களிலும் லட்சியம் வையாதீர்கள்.** வைத்தால் சமரச சுத்தசன்மார்க்கத்தில் உங்களுக்கு லட்சியம் வராது; வராவிட்டால் நீங்கள் அடையப் போகிறது ஒன்றுமில்லை; ஆதலால் அவைகளையெல்லாம் பற்றறவிட்டு, சர்வ சித்தியையுடைய கடவுள் ஒருவருண்டென்றும், அவர் ஒருவரே யென்றும், அவரை உண்மை யன்பால் வழிபாடு செய்யவேண்டும். அப்படிப்பட்ட சமரச சுத்தசன்மார்க்கத்திற்குரிய கடவுளை வழிபாடு செய்வதற்குச் சாதனம் இருவகை: அவை—பர உபகாரம்—சத்விசாரம். (1) பர உபகார மென்பது தேகத்தாலும், வாக்காலும், திரவியத்தாலும் உபகாரஞ்செய்வது. (2) சத்விசார மென்பது நேரிட்டபக்ஷத்தில் ஆன்மநேய சம்பந்தமான தயாவிசாரத்தோடு இருப்பது; கடவுளது புகழை விசாரித்தல், ஆன்மாவின் உண்மையை விசாரித்தல். தன் சிறுமையைக் கடவுளிடத்தில் விண்ணப்பித்தல், விசார மென்பது சரியை முதலான நான்கில் நாலாவது ஞானத்தில் சரியை, கிரியை, யோகம் ஞானமென்கிற நான்கு படிகளில் மூன்ருவது படியாகிய ஞானத்தில் யோகஞ் செய்கிற படி (15-ஆவது படி)யாகும். விசாரஞ் செய்கிற உஷ்ணத்தால் ஜலத்திலிருக்கிற பாசியை நீக்குவது போல, ஆன்மாவைத் தெரிய வொட்டாமல் மறைத்துக் கொண்டிருக்கும் பச்சைத் திரையை நீக்கிக்கொள்ளலாம். அது நீங்கின உடனே அதற்கு மேலிருக்கும் மற்ற ஆறு திரைகளும் அதிக விரைவில் நீங்கிப்போய்விடும். விசாரத்தைவிட ஆண்டவரை மன நெகிழ்ச்சியோடு தோத்திரஞ் செய்வதினுலும், சதா அவர் திருவடியை சிந்தித்துக் கொண்டிருப்பதினுலும், கோடிகோடி பங்கு அதிகமாக நல்ல உஷ்ணத்தை உண்டுபண்ணிக் கொள்ளலாம் என்றறிக.' இதன்விரிவை ஆரும் திருமுறை வசன பாகத்தில் கண்டு கொள்க.

## 114. திருக்காப்பிட்டுக் கொள்ளுதல்

**காற்ருலே** புவியாலே ககனமத னலே
கனலாலே புனலாலே கதிராதி யாலே
கூற்ருலே பிணியாலே கொலைக்கருவி யாலே
கோளாலே பிறவியற்றுங் கொடுஞ்செயல்க ளாலே

வேற்றுலே யெஞ்ஞான்றும் **அழியாதே விளங்கும்**
மெய்யளிக்க வேண்டுமென்றேன் விரைந்தளித்தான் எனக்கே
ஏற்றுலே யிழிவெனநீர் நினையாதீர் உலகீர்
எந்தைஅருட் பெருஞ்ஜோதி யிறைவனைச்சார் வீரே.

**நோவாது** நோன்பு எனைப்போல் நோற்றவரும் எஞ்ஞான்றும்
**சாவாவரம்** எனைப்போற் சார்ந்தவரும் — தேவா நின்
பேரருளை யென்போலப் பெற்றவரும் எவ்வுலகில்
யாருளர் நீ சற்றே அறை.

இங்ஙனமாக எம்மனோரை வாழ்விக்க வந்த பெருமான் சென்ற கலியுகம் 4975 ஸ்ரீமுக வருடத்தில் மேட்டுக் குப்பத்திலுள்ள சித்திவளாகம் என்னும் அற்புத மாளிகையில் சிலநாள் கதவை மூடிக்கொண்டு வெளிவராதிருத்தலும், பின்னர் வெளி வருதலும்—வெளி வந்த நாட்களில் பிரசங்கஞ் செய்தலுமாகப் பல மாதங்களைக் கழித்தனர்.

இவ்வாறு சில மாதங்கள் கழிந்ததும் ஒருநாள் அன்பர்களனைவரையும் நோக்கி "ஆன்ம நேய ஒருமைப்பாட்டுரிமைச் சகோதரர்களே! நாம் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரின் ஆணைப்படி, **கடையை விரித்தோம்: கொள்வார் இல்லை. கட்டிவிட்டோம்.** ஆதலால், இனி இரண்டரை கடிகை நேரம் உங்களுடைய ஊனக் கண்களுக்குத் தோன்றமாட்டோம். நீங்கள் இந்தத் **தீபத்தினைக் கடவுள் எனக்கொண்டு** ஜீவகாருண்ய நெறியில் வழிபட்டுய்யுங்கள். பிறகு அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர் வருவார்; அப்போது பல அற்புத சித்திகளை நிகழ்த்துவார். திருவருட் செங்கோலாட்சி செலுத்துவார்; அகவினத்தார்க்குச் சாகாவரமும், ஏனையோர்க்குப் பரிபாக நிலையையும் அளிப்பார்." என்று உபதேசித்தார்கள்.

தாம் திருக்கதவை மூடியிருக்குங்கால் அரசாங்கத்தினர் திறக்கும்படி ஆக்ஞாபிக்கின் ஆண்டவர் அருள் செய்வார் என்று கட்டளையிட்டு, எல்லோருக்கும் மன அமைதியை உண்டுபண்ணி, **ஸ்ரீமுக ஆண்டு,** (இங்கிலீஷ்/1874 ஹூ) **தைத் திங்கள் 19-ம் நாள் புனர்பூசமும் பூசமும் கூடும் சமயம் வெள்ளிக்கிழமையன்று இரவு பன்னிரண்டு மணிக்கு மேட்டுக் குப்பத்திலுள்ள சித்திவளாகத் திருமாளிகையினுள் நுழைந்து திருக்காப்பிட்டுக் கொண்டார்கள்.**

அருட்பெருஞ்ஜோதி
திருவருட்பிரகாச வள்ளலார் திருவடிகள் வாழ்க.

## 115. அரசாங்கத்தார் உண்மையுணர்தல்

**வள்ளலார்** திருக்காப்பிட்டுக் கொண்டதன்பின் சில நாட்கள் கழித்து அரசாங்க உத்தரவின் கீழ் கலெக்டரும், டாக்டரும், தாசில்தாருமாக மேட்டுக்குப்பத்திற்கு வந்தனர். வந்தவர்களுள், கலெக்டரும், அவருடன் வந்த டாக்டரும் பேசாதிருந்தனர். ஆனால் தாசில்தார் வேங்கடராமய்யர் மட்டும் தமது அதிகார முறைமையில் ஆங்குள்ள அன்பர்களைப் பலவகையான இழிமொழிகளாற் கூறி, கதவைத் திறவுங்கள்; இல்லையானால் உங்

கட்கு அபராதம் நேரிடும்; என்று அதட்டி மிரட்டினர். அத் துரைமகனிரு வரும் சித்திவளாகத்தை இரண்டு மூன்றுமுறை சுற்றிப் பார்த்துவிட்டுப் "பெரியோர்களைப் பற்றி நாம் ஒன்றும் குறைகூறுதல் கூடாது" என்னும் உயரிய நோக்கோடு, அன்பர்களை அழைத்து "நீங்கள் இங்கே என்ன செய்கிறீர்கள்?" என்று கேட்டனர். அதற்கு அவ்வன்பர்களும் 'ஐயா அவர்கள் கூறியபடி அன்னதானஞ் செய்தலும், ஆண்டவரை வணங்குதலும் செய்கிறோம்" என்று பதில் கூறினர். அதனைக் கேட்ட துரைமகனிருவரும், மகிழ்வெய்தி அன்றையதினம் ஆங்கு நடக்கவேண்டிய அன்னதானச் செலவுக்காக ரூபாய்கள் இருபதும் கொடுத்துவிட்டுப் போயினர். அப்பொழுதுகூட தாசில்தார் முணுமுணுப்பை விடவில்லை. அவரும் தாம் வந்த குதிரை மீதேறிக்கொண்டு செல்ல ஒரு சிறிது தூரத்திற்கெல்லாம் குதிரை மிரண்டு ஐயரை முட்புதரில் தள்ளிவிட்டது. முன்னே சென்ற துரைமகனிருவரும் திரும்பிப் பார்க்க தாசில்தார் வாராமைகண்டு கொஞ்ச தூரம் பின் வந்துபார்க்க, ஐயர் முள்ளில் விழுந்து பரிதபித்துக் கொண்டிருந்தார். 'இவர் அங்குப் பல இழிமொழிகளைப் பேசினரே அதனுடைய பலன்தான் இது' என்று அவர்கள் இருவரும் பேசிக்கொண்டு ஐயரை வெளியேற்றிக் கட்டைவண்டியில் கொண்டு போயினர்.

## 116. அரவந் தீண்டுதலை யறிவித்தல்

கோட்டகம் என்னும் ஊரிலுள்ள பள்ளிக்கூடத்தான் என்பவருடைய சொப்பனத்தில் வள்ளலார் தோன்றி,"அன்பனே! உன்னை இன்னும் மூன்று நாட்களில் அரவம் தீண்டும்: அதுபற்றி நீ ஒன்றும் அஞ்சவும் வேண்டாம்: ஔடதங்கள் உண்ணவும் வேண்டாம்: அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரின் திருவருளால் அதுதானே குணப்படும்" என்றுகூறி மறையப் பின்னர் அம்மாதிரியே அனைத்தும் நடந்தன.

## 117. திரு மருதூர் என்று மறைந்தார்

நாகூர் சுவாமிநாத செட்டியார் முதலிய சில அன்பர்கள் வடலூருக்கு வந்து தரிசனஞ் செய்துகொண்டு மீளுங்காலை இரவு வந்தெய்தியது. ஆயினும் அவர்கள் அவசர மிகுதியினால் அப்பொழுதே ஊருக்குப் புறப்பட வழியிலே கள்ளர் பயமிகுந்த விடத்தில் அவர்களுடைய வண்டிக்குப் பிறகே இளவயதுடைய ஒரு சிறுவனைப்போல் வள்ளலார் வந்துகொண்டிருந்தார். அதனைக் கண்ட அவர்கள் "வண்டியின் பின்னே தொடர்ந்து வரும் நீ எந்த ஊர்?" என்று வினவுதலும் "நான் இருப்பது மருதூர்" என்று சொல்லி மறைந்தனர். மறைந்த பிறகுதான் அவர்கட்குக்கூட வந்தவர் நம் வள்ளலார் என்பது புலனாயிற்று.

இங்ஙனமே சுவாமிகள் இன்றும் தம்மை நம்பும் அன்பர்கட்குத் தோன்றாத் துணையாயிருந்து வேண்டுவன வெண்டியாங்கு அருள் செய்து வருகின்றார்கள்.

அருட்பெருஞ்ஜோதி

**கருணையிலா ஆட்சி கடுகி ஒழிக, அருள் நயந்த நன்மார்க்கர் ஆள்க தெருளைநயந்த நல்லோர் நினைத்த நலம்பெறுக நன்று நினைத்து எல்லோரும் வாழ்க இசைந்து.**

திருச்சிற்றம்பலம்

## சென்னை
## சமரச சுத்தசன்மார்க்க சங்கம்
### 1. தோற்றம்

தங்கமே யனையார் கூடிய ஞான சமரச சுத்தசன்மார்க்கச்
சங்கமே கண்டு களிக்கவும் சங்கமசார் திருக்கோயில் கண்டிடவும்
துங்கமே பெறும் சற்சங்கம் நீடூழி துலங்கவும் சங்கத்தில் அடியேன்
அங்கமே குளிர நின்றனைப் பாடி ஆடவும் இச்சைகாண் எந்தாய் !

இத் தெய்வீகச் சங்கமானது திருவருட்பிரகாச வள்ளலார் ஏற்படுத்திய சங்கத்தின் தொடர்ச்சியே யாகும். திருவருள் வலத்தால் சென்ற பிரமோதூத ஆண்டு பங்குனித் திங்கள், 30-ஆம் நாள் (14—3—1930) இரவு 12 மணிக்குப் பெருமானார் வழிபாடு செய்து அருட்செங்கோல் பெற்ற திருவொற்றியூர்த் திருத்தலத்தில் தோன்றிற்று. அது முதற் கொண்டு சுவாமிகள் தனிமைக் நாதனைக் கண்டு சகல கலைகளையும் ஓதாதுணர்ந்தறகேற்றதா யமைந்த சென்னை, வீராசாமி பிள்ளை தெரு, 39-வது இல்லத்து மேல் மாடியிலுள்ள திரு அறையிலேயே ஒவ்வோர் *வியாழக் கிழமையும், ஏழைமக்கட்குப் பசியாற்றுவித்தும் அன்று காலை மாலை திருவருட்பா பாராயணம் செய்துகொண்டும், வெள்ளிக்கிழமை தோறும் திருவொற்றியூரில் இரவு 7-மணிக்குமேல் திருவருட்பா பாராயணம் செய்து கொண்டும் வந்தது.

### 5. பிறந்தநாள் விழா

இவ்வாறாக ஏழை மக்கட்குப் பசியாற்றுவித்தல், திருவருட்பா பாராயணஞ்செய்தல் முதலான பணிகளாற்றுவதுடன் ஆரம்பித்த ஆறுமாதம் திருவருட்பிரகாச வள்ளலாரின் பிறந்த நாளான புரட்டாசித் திங்கள் சித்திரை நட்சத்திரத்தன்று எம்பெருமானின் 108-வது பிறந்தநாள் விழாவை வெகு சிறப்பாக சென்னை, தங்கசாலைத்தெரு 361-வது எண்ணுள்ள தொண்டமண்டலம் கலாசாலையில் திருவாளர் மோசூர் கந்தசுவாமி முதலியார் B A, அவர்களின் அவைத்தலைமையில் கொண்டாடப் பெற்றது. பெருமான் தமது பிள்ளைப்பிராயத்தில் கந்தப் பெருமானுரைத் தரிசித்தமுறையாக, பிறந்தநாள் விழாவில் திருக்கூட்டம் பெருமானுருடன் கந்தகோட்டம் சென்று கந்தப் பெருமானுரைத் தரிசித்தும் வருகிறது. அதுமுதற்கொண்டு ஆண்டுதோறும் புரட்டாசித் திங்கள் சித்திரை நட்சத்திரத்தில் வள்ளலார் இருந்து விவகாரஞ்செய்த அதே தொண்டமண்டலம் கலாசாலையில், சுவாமிகள் பிறந்தநாள் விழாவானது வெகு சிறப்பாக நடைபெற்று வருவதை அன்பர்கள் அறிவர். அம்மாதிரியான விழாவில் திருவாளர்கள் மோசூர். கந்தசாமி முதலியார், மறைமலை அடிகள், சோமசுந்தர பாரதியார், திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் சுவாமிகள், S. சச்சிதானந்தம் பிள்ளை, திரு வி. கலியாணசுந்தர முதலியார், கா சுப்பிரமணியம் பிள்ளை, T. P மீனாட்சிசுந்தரம்பிள்ளை, தெய்வசிகாமணி முதலியார், T. M. கிருஷ்ணசாமி ஐயர்,

*பெருமானார் விவகார சாலத்தில் பிரதி வியாழக்கிழமை தோறும் குருநாதனை வழிபாடு செய்து வந்தது பிரசித்தம்

இசையரசு தண்டபாணி தேசிகர், சுந்தர ஓதுவாமூர்த்தி, டி. சம்பந்த முதலியார் முதலான பல தமிழ்ப் பேரறிஞர்கள் தலைமை தாங்கியும், சொற்பொழிவாற்றியும் இசை விருந்தளித்தும் வந்தனர்.

## 3. திரு அருட்பா - திரு ஆயிரம்

அக்காலத்தில் அன்பர்கள் பலரும் திருவருட்பா பாராயணம் செய்வதற்கு ஏற்றதொரு சிறு நூல் இல்லாமலிருந்தது ஒரு பெருங் குறையாயிருந்தது. அக் குறையை நிவர்த்திப்பதற்காக திருவருட்பா ஆறு திருமுறைகளிலுமிருந்து பாராயணம் செய்வதற் கேற்றவாறு ஓராயிரம் பாடல்களைத் திரட்டி 'திருவருட்பா திரு ஆயிரம்' என்னும் மகுடமிட்டு ஒரு நூல் வெளியிடப்பட்டது. அது ஆண்டுதோறும் ஒவ்வோர் பதிப்பாக வெளியாகி இப்போது பதினாறுவது பதிப்பாக பல்லாயிரக்கணக்கில் தமிழர்களிடையே பரவி வருகிறது. அத்துடன் திருவருட்பாவிலிருந்து சிறுசிறு பிரிவாக வள்ளற் பெருமானார் திவ்ய சரித்திரம், மனுமுறை கண்ட வாசகம், ஜீவகாருண்ய ஒழுக்கம், சன்மார்க்க ஒழுக்கம், நாமாவளி, கீர்த்தனை, விநாயகர் திருவருட்பா, திருவடிப் புகழ்ச்சி, மகாதேவ மாலை, குமரன் திருவருட்பா, வடிவுடை மாணிக்கமாலை, அம்பாள் திருவருட்பா, பாராயணத் திருவருட்பா, (ஒரு பை (0-0-1) விலையுள்ளது சுமார் 50 பாடல்கள் கொண்டது) ஸ்ரீராமர் திருவருட்பா, உண்மை நெறி அருட்பெருஞ்ஜோதி அகவல் முதலான பல நூல்களையும் மகாதேவமாலை, இங்கிதமாலைகட்கு விருத்தியுரையும் சுவாமிகளின் திருவுருவப் படங்களையும் வெளியிட்டு வருகிறோம்.

## 4. சாலை சகாப்தம் - வைகாசி 11 - ம் நாள்

ஐயா அவர்கள் ஜீவகாருண்யத்தை நிலைநாட்டும் பொருட்டு வடலூர்ப் பதியில் பிரபவ ஆண்டு வைகாசித் திங்கள் 11-ம் நாள் சத்தியதருமச் சாலை திறப்பு விழாச் செய்தார்கள். அத் திருநாளைக் கொண்டாட ஆண்டுதோறும் வைகாசித் திங்கள் 11-ம் நாளன்று நமது சங்கமும் வடலூர் முறையைத் தழுவி அந்த ஆண்டு விழாவை நடத்தி வருகிறது.

## 5. திரு அருட்பா முழுப்புத்தகம்

### (சன்மார்க்க சங்கப் பதிப்பு)

அன்பர்கள் அருட்பா ஓதி மகிழ்ந்துவரும் நாளில் திருவருட்பா முழுவதும் நமது சங்கத்தின் சார்பில் வெளிவர வேண்டுமென ஆர்வம் பொங்கவும் அச்சமயம் **திருவாளர் தீ. நா. முத்தைய செட்டியார்** அவர்கள் பதிப்பித்த திருவருட்பா கிடைக்கப் பெறாமையாலும் சங்கத்தின் சார்பில்வாலாஜாபாத், இந்துமத பாடசாலை உரிமையாளர் **திரு. வ. தி. மாசிலாமணி முதலியார்**, காஞ்சீபுரம் குமரன் அச்சு நிலைய உரிமையாளர் **திரு. தவசி. குப்புசாமி முதலியார்** முதலானோரின் பேருவிதயால் திருவருட்பா முழுப்புத்தகம் இரண்டு வால்யுமாகத் தெளிவான முறையில் நூதனமாக சுவாமிகளின் 110-ஆம் ஆண்டு பிறந்தநாள் விழாவில் வெளியிடப்பட்டது. அப்பதிப்பு முடியவே மூன்றும் பதிப்பாக இந் நூல் வெளிவர நேர்ந்தது சன்மார்க்க காலம் நெருங்கியதாலே யாம்.

## 5. தைப்பூச விழா

ஐயா அவர்களின் "தைப்பூசந் தவறுதீர்கள்" என்ற உத்தரவுப் படி ஆண்டு தோறும் சன்மார்க்க சங்கத் திருக்கூட்டம் வடலூருக்குச் சென்று தைப்பூச விழாவில் அருட்பெருஞ்ஜோதி தரிசனம் கண்டு திருவருட்பா பாராயணம் செய்து எண்ணிறந்த ஏழைமக்கட்கு ஆகார மளித்து சன்மார்க்கத் தொண்டாற்றி வருவதும் அன்பர்கள் அறிந்ததே.

## 6. அருட்பெருஞ்ஜோதி நிலயம்

இதுவரை சுமார் ஒன்பது வருடங்களாக மேற்குறிப்பிட்ட சன் மார்க்கத் தொண்டுகளை, **நூலை சாமிபிள்ளை தெரு 36வது இல்லத்தி** லிருந்தே சங்கம் நடத்திவந்தது. அதன் பின்னர் திருவருள் துணையினால் சென்னை, பெத்துநாய்க்கன்பேட்டை, கிருஷ்ணன்குளத்திற்குச் சமீப மாக உள்ள **அம்மன் கோயில் தெருவில் 7-9வது இல்லம்** புதிய தாகக் கட்டப்பெற்று, '**அருட்பெருஞ்ஜோதி நிலயம்**' (10-6-1941-ல்) நிறுவப் பெற்றது. அது முதலாக சங்கம் அதிலேயே தன் பணியாற்றி வருகின்றது.

## 7. அருட்பெருஞ்ஜோதி அச்சகம்

சன்மார்க்க சங்கத்து வெளியீடுகளை அச்சு இயற்றுவதற்காகவே 'அருட்பெருஞ்ஜோதி அச்சகம்' என்ற ஒன்றை ஏற்படுத்தி, அதிலேயே திருவருட்பாக்கள் பலவற்றைப் பிழையின்றி அழகான எழுத்துக்களைக் கொண்டு கண்கவரும் வகைப்புமிக்க முறையில் அச்சியற்றிக் கொண்டு வருகிறது. இனியும் பலவேறு பணிகள் இயற்ற சங்கம் முனைந்திருக் கிறது. அவற்றிற்கு எல்லாம்வல்ல அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர் திருவருள் துணை புரிவாராக !

### விண்ணப்பம்

**ஏட்டாலுங்** கேளய லென்பாரை
நான்சிரித் தென்னைவெட்டிப்
**போட்டாலும் வேறிடங் கேளேன்என்**
ஞணைப் புறம்விடுத்துக்
கேட்டாலு மென்னை யுடையா
னிடஞ்சென்று கேட்பனொன்றே
நீட்டாலும் வாயுரைப் பாட்டாலுஞ்
சொல்லி நிறுத்துவனே.

அருட்பெருஞ்ஜோதி தனிப்பெருங்கருணை




'அருட்பெருஞ்ஜோதி நிலயம்'

**சென்னை சமரச சுத்தசன்மார்க்க சங்கம்**

அருட்பெருஞ்ஜோதி அச்சகம், சென்னை.



சிவமயம்

திருச்சிற்றம்பலம்

அருட்பெருஞ்ஜோதி

# திருவருட்பா

## மனுமுறை கண்ட வாசகம்

நேரிசை வெண்பா

திருச்சிற்றம்பலம்

அன்ன வயல்சூ ழளியாரூர் வாழ்மனுவாம்
மன்னன் முறைகண்ட வாசகத்தைப்—பன்னுதற்கு
நேய மிகத்தா ளிணைப்போர்க் கருள்புழைக்கைத்
தூய முகத்தான் றுணை.

கங்கைச் சடையான்முக் கண்ணுடையா னன்பர்தம்முள்
அங்கைக் கனிபோ லமர்ந்திருந்தா—னங்கை
முகத்தான் கணங்கட்கு முன்னின்றா னூவாச்
சுகத்தான் பதமே துணை.

திருச்சிற்றம்பலம்

### 1. சோழநாட்டுச் சீர்மை

கடல் சூழ்ந்த உலகத்திலுள்ள எல்லாத் தேசங்களிலுஞ் சிறப்புடையதாய்,—காவிரி யென்னுந் தெய்வத் தன்மை யுள்ள நதியினால் எந்தக் காலத்திலுங் குறைவுபடாத நீர்வளப்ப முள்ளதாய், — வாழைச்சோலை, பலாச்சோலை, மாஞ்சோலை, தென்னஞ்சோலை, கமுகஞ்சோலை, கருப்பஞ்சோலை முதலாகிய பலனுள்ள சோலைகள் அணியணியாக ஒன்றையொன்று சூழ்ந்தோங்கப் பெற்ற

தாய்,—அசோகு குருக்கத்தி, சண்பகம் பாதிரி முதலான விருக்ஷங்களால் நெருங்கப்பெற்று வண்டுகள் பாடுகின்ற மலர்ச்சோலைகளும், தாமரைத் தடாகங்களும், அல்லி, நீலம் முதலான புட்பங்கள் மலர்கின்ற நீர் நிறைந்த ஓடைகளும், பொய்கைகளும், ஏரிகளும் குளங்களும் பலவிடங்களிலுமுள்ளதாய்—செந்நெல் முதலாகிய பயிர்கள் மாறுது முப்போகமும் விளைகின்ற குறைவற்ற விளைவையுடைய வயல்கள் நெருங்கியுள்ளதாய்,—

சிதம்பரம், பஞ்சநதம், மத்தியார்ச்சுனம், சம்புகேச்சுரம் முதலான திவ்விய க்ஷேத்திரங்கள் இடையிடையி லுள்ளதாய்—இல்லற தருமத்தில் எள்ளளவும் பிழைபடாது செல்வத்திலும் கல்வியிலும் நிறைவுள்ள குடிகளுக் கிடமானதாய்,—பல வளப்பங்களுங் கொண்டு—பூமிதேவிக்கு முகம் போல விளங்குகின்ற சோழ தேசத்திலே;

## 2. திருவாரூர்ச் சிறப்பு

பாதாள லோகத்தைப் பார்த்திருக்கின்ற ஆழமுள்ள அகழியினால் சூழப்பட்டு இந்திரலோகத்தை எட்டிப்பார்க்கின்ற உன்னதமுள்ள கோபுரங்களையுடைய மதிலும், உய்யானம், நந்தவனம், பூஞ்சோலை முதலானவைகளும், தெய்வதீர்த்தம், பிரமதீர்த்தம், வசந்த வோடை, செங்குவளையோடை முதலான நீர்நிலைகளு முள்ளதாய்;—

தேர்நிலைகள், யானைக் கூடங்கள், குதிரைப் பந்திகள், சேனை யிடங்கள், ஆஸ்தான மண்டபம், அரச மண்டபம், விசித்திர மண்டபம், விநோத மண்டபம், நியாய மண்டபம், நிருத்த மண்டபம், கல்வி மண்டபம், கணக்கறி மண்டபம், பாடல் மண்டபம், பரிசன மண்டபம், சித்திர மண்டபம், தேவாசிரிய மண்டபம், சித்திரத் தெற்றி சிலம்பக்கூடம், ஆயுதசாலை அமுதச்சாலை, அறச்சாலைகளு முள்ளதாய்;—ரத்நப்பீடிகைகளும், கனகமாளிகைகளும், பளிங்கு மாடங்களும், மணிப் பந்தல்களும், மகர தோரணங்களும், மங்கள கோஷங்களுமுள்ள கடைவீதி, கணிகையர் வீதி, சூத்திரர் வீதி, வைசியர் வீதி, அரசர் வீதி, அந்தணர் வீதி, ஆதி சைவர் வீதி, சைவர் வீதி, வைதிகர் வீதி, தபோதன ரிருக்கை, சைவ முனிவர் மடம், உட்சமயத்தா ருறையுள் முதலான வளப்பங்களை யுடையதாய்;—

தியாகராஜப் பெருமான் எழுந்தருளிய கமலாலயமென்னுந் திருக்கோயிலை உள்ளே புடையதாய்; சோழராஜர்கள் பரம்பரையாக அரசாட்சி செய்வதற்குரிய ராஜதானியாய்; நிலமகள் திருமுகத்திலிட்ட திலகம்போல் விளங்கிய **திருவாரூர்** என்கிற நகர மொன்றுண்டு.

## 3. மனுச்சோழர் மாண்பு

அதிலே, மூன்று சுடர்களிலும் முதற் சுடராகி மேன்மை யடைந்த சூரிய குலத்திற் பிறந்து அரசாட்சி செய்துவந்த சோழராஜர்களில் சிறந்தவராய்:—அறுபத்துநான்கு கலைகளிலும் வல்லவராய்;—உயிருக் குறுதியைத் தருகின்ற நல்ல கேள்விகளை யுடையவராய்;—எல்லா உயிர்களுக்கும் இதஞ்செய்கின்றவராய் 1. வேதமோதுதலும், 2. யாகம் செய்தலும், 3. இரப்பவர்க்கீதலும், 4 பிரஜைகளைக் காத்தலும், 5. ஆயுதவித்தையில் பழகுதலும், 6. பகைவரை அழித்தலுமென்னும் ஆறு தொழில்களும்,—

வீரமுள்ள சேனைகளும், செல்வமுள்ள குடிகளும், மாறாத பொருள்களும், மதி நுட்பமுள்ள மந்திரியும், பகைவரா லழிக்கப்படாத கோட்டையு முடையவராய்,—வழக்கை அறிவிப்பவரையும், தங்களுக்குள்ள குறைகளைச் சொல்லிக் கொள்பவரையும், இலேசிலே தமது சமுகத்துக்கு அழைப்பித்து, அந்த வழக்கைத் தீர்த்தும் அக்குறைகளை முடித்துங் கொடுப்பவராய்;— பாலொடு பழஞ்சேர்ந்தாற்போல முகமலர்ச்சியோடு இனிய வசனஞ் சொல்பவராய்:—

பின்வருவதை முன்னே அறிந்துகொள்வதும்,—உறவினர், அயலார், சிநேகர், பகைவர், இழிந்தோர் உயர்ந்தோர் முதலான யாவரிடத்தும்— காலவேற்றுமையாலும் குணவேற்றுமையாலும் உண்டாகின்ற நன்மை தீமைகளை உள்ளபடி அறிந்து கொள்வதுமாகிய விவேக மூள்ளவராய்:— அகங்காரம், காமம், கோபம், லோபம், மோகம், பொறாமை, வஞ்சகம், டம்பம், வீண்செய்கை முதலான குற்றங்களைத் தினையளவுங் கனவிலும் புரியாதவராய்:—துற்குணங்களையுடைய சிறியோர் சேர்க்கையை மறந்தாயினும் நினையாமல்—செய்வதற்கு அரிதான செய்கைகளைச் செய்து முடிக்கவல்ல நற்குணங்களையுடைய பெரியோர்களைச் சகாயமாகக் கொண்டு செய்யத்தக்க காரியங்களைத் தெரிந்து செய்தும், செய்யத்தகாத காரியங்களைத் தெரிந்து விடுத்தும், பகைவலியும், தன்வலியும், துணைவலியும், கால நிலைமையும், இட நிலைமையும் அறிந்து காரியங்களை நடத்தியும்; அடுத்தவர்களது குணம், வல்லமை, ஊக்கம் முதலான தன்மைகளை, ஆராய்ந்து, தெளிந்து அவரவர் தரங்களுக்குத்தக்க உத்தியோகங்களை அவரவர்க்குக் கொடுத்தும்; பழமை பாராட்டியும்; சுற்றந் தழுவியும்; கண்ணோட்டம் வைத்தும்; ஜாதி இயற்கை, ஆசிரம இயற்கை, சமய இயற்கை, தேச இயற்கை, கால இயற்கை முதலான உலகியற்கைகளை அறிந்து அவ்வவற்றிற்குத் தக்கபடி ஆராய்ந்து செய்தும்,-நல்லொழுக்கத்துடன் நடப்பவராய்;-

குடிகளுக்கு அணுவளவு துன்பம் நேரிடினும் அதை மலையளவாக எண்ணித் தமக்கு வந்ததுபோல் இரக்கங்கொண்டு மனமுருகுவதனால் தாயை யொத்தவராய்,—அத்துன்பத்தைவிட்டு இன்பத்தை அடையத்தக்க நல்வழியை அறியும்படி செய்விப்பதனால் தந்தையை யொத்தவராய்,— அவர்களுக்கு அந்த நல்வழியைப் போதித்து அதிலே நடத்துகின்றபடியால் குருவை யொத்தவராய்,—அந்தக் குடிகளுக்கு இகபர சுகத்தைக் கொடுப்பதற்கு முன்னின்று, அதுபற்றி முயற்சி செய்யும்போது வரும் இடையூறுகளை நீக்குகின்றபடியாலும், அந்த ஒழுக்க வழியிலிருந்து தவறினால், அந்தக் குற்றத்துக்குத் தக்க தண்டனை விதித்து அவ்வழியில் பின்னும் நடத்துகின்றபடியாலுந் தெய்வத்தை யொத்தவராய்;—குடிகளுக்கு ஆபத்து நேரிடும்போது 'கட்டிய வஸ்திரம் அவிழ்ந்தவன் கைபோல்', உடனே அந்த ஆபத்திலிருந்து நீங்கும்படி கை கொடுப்பதனால் சிநேகனை யொத்தவராய்;—

நல்ல காரியமிது, கெட்ட காரியமிது வென்று காட்டுகின்றபடியால் கண் போன்றவராய்;—குடிகளுக்கு அச்சம், அவலம் முதலானவை நேரிடாமல் காத்து வருதலால் உயிர் போன்றவராய்; குடிகள் தம்மை நினைக்குந்தோறும் "இப்படிப்பட்ட நற்குண நற்செய்கைகளையுடைய புண்ணிய மூர்த்தியை அரசனாகப் பெற்ற நமக்குக் குறையொன்று மில்லை" என்று

ளிக்கின்றபடியால் பொன்புதையலை யொத்தவராய்;—கைம்மாறு வேண்டாது கொடுத்தலால் மேகத்தை யொத்தவராய்;—

அறிவே ஆயிரங் கண்களாகவும், கைகளே கற்பகமாகவும், கண்களே காமதேனுவாகவும், திருமுகமே சிந்தாமணியாகவும், மனோதிடமே வச்சிராயுதமாகவும் கொண்டபடியால் இந்திரனை யொத்தவராய்;—சிங்காதனமே செந்தாமரையாகவும், அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு புருஷார்த்தங்களும் அடைதற்குரிய நான்கு மார்க்கங்களே நான்கு முகங்களாகவுங் கொண்டு, அந்தந்த மார்க்கங்களில் அந்தந்தப் பொருள்களை விருத்தி பண்ணுகிறபடியால், பிரமனை யொத்தவராய்;—ஆக்கின சக்கரமே சக்கராயுதமாகவும், செங்கோலே திருமகளாகவும், சிறந்த பெரும் புகழே திருப்பாற்கடலாகவும், யுத்தமல்லாத காரியங்களை ஒழிந்திருப்பதே யோக நித்திரையாகவுங் கொண்டு, மண்ணுலகிலுள்ள உயிர்களைக் காத்து வானுலகிலுள்ள தேவர்களுக்கு யாகங்களால் அமுது கொடுத்து வருகின்ற படியால் திருமாலை யொத்தவராய்;—1. சோர்வில்லாமை, 2. தூய்மை, 3. வாய்மை யென்னும் மூன்றுமே மூன்று கண்களாகவும், துணிவுடைமையே சூலமாகவுங் கொண்டு:—பாவங்களை யெல்லாம் நிக்கிரகஞ் செய்து வருகின்றபடியால் உருத்திர மூர்த்தியை யொத்தவராய்;—

வாட்டத்தை நீக்கி மகிழ்ச்சி செய்கின்ற அருளுள்ளபடியால் அமிர்தத்தை யொத்தவராய்;—சிவபக்தியில் மிகுந்தவராய்,—பொறுமையில் பூமியை யொத்தவராய்;—தருமமே உருவாகக் கொண்டு நடுநிலையிலிருந்து மனுநீதி தவறாது விளங்கிய **மனுச்சோழ ரென்னும்** பெயரையுடைய சக்ரவர்த்தியானவர்;—

கலிங்கர், குலிங்கர், வங்கர், கொங்கர், அச்சியர், கொச்சியர், தெங்கணர், கொங்கணர், தெலுங்கர் முதலான தேசத்தரசர்களெல்லாம், திரை கட்டி வணங்க, உலக முழுவதையும் ஒரு குடைநிழலில் வைத்துச் செங்கோல் செலுத்தி அரசாட்சி செய்யுங்காலத்தில், உலகமெங்கும்,—புலியும் பசுவும் கூடிப்போய் ஒரு துறையில் நீர் குடித்துலாவியும்,—சிங்கமும் யானையும், சேர்ந்து திரிந்தும்,— பருந்துங் கிளியும் பழகி மகிழ்ந்தும்,—கூகையுங் காகமும், கூடிப்பறந்தும்—பூனையும் எலியும் பொருந்தியிருந்தும், இந்தப்படி மற்றுமுள்ள விரோதமாகிய உயிர்களும் ஒன்றுக்கொன்று விரோதமில்லாமல் சினேகஞ்செய்து வாழ்ந்திருக்கவும்;—மரங்கள் புல்லுகள் முதலான நடையில்லாத உயிர்களும்,—வாடுதல், உலர்தல், உதிர்தல், வெட்டுண்ணல் முதலான குறைகளில்லாமல் வளர்ந்தோங்கி வாழ்ந்திருக்கவும்;—பெருங்காற்று, பெருவெள்ளம், பெருமழை, தீப்பற்றல், இடிவிழுதல் முதலான உற்பாதங்கள் சிறிது மில்லாமல், சுகுணமான காற்றும்,—மிதமான வெள்ளமும்,—பருவ மழையும்,—தவறாமலுண்டாயிருக்கவும்;—பசி நோய், உடம்பு நோய், அவமிருத்து, உயிரச்ச முதலான துக்கங்களொன்றுஞ் சேராமல் சுகமே சூழ்ந்திருக்கவும்;—1. பிரம, 2. க்ஷத்திரிய, 3 வைசிய, 4. சூத்திரரென்கின்ற ஜாதியாரும்,—1. பிரமசாரி, 2, கிரகஸ்தன், 3. வானப்பிரஸ்தன், 4. சந்நியாசி என்கின்ற ஆசிரமத்தாரும்,—சைவர், வைணவர், வைதகர் என்கின்ற சமயத்தாரும்,—தங்கள் தங்களுக்குரிய ஆசாரங்களில் குறைவு படாமல் வாழ்ந்திருக்கவும்;—

அன்னதானம், சொர்ணதானம், கோதானம், பூதானம் முதலான தானங்களும்,—தேவாலயங் கட்டுவித்தல், திருக்குள மெடுத்தல், செழுஞ் சோலை வைத்தல், தண்ணீர்ப்பந்தல் வைத்தல், சத்திரங் கட்டுவித்தல் முதலான தருமங்களும்,—சாந்திராயண முதலான விரதங்களும்,—தியானஞ் செய்தல், ஜெபஞ் செய்தல் முதலான தவங்களும்,—தவறுபடாமல் ஓங்கியிருக்கவும், **தியாகேசப் பெருமானுக்கும்**, — மற்றுமுள்ள தெய்வங்களுக்கும், திரிகால பூசைகளும், திருப்பணிகளும், திரு விழா முதலான சிறப்புக்களும் குறைவில்லாமல் நடக்கவும்-அவரது ஆக்கினையே செய்வித்து வந்தது.

அவரது ஒப்புயர்வில்லா அரசாட்சியிலே, பூவே பறிபடுவது;—புனலே சிறைபடுவது;—காற்றே அலைபடுவது;—கல்லே கடினமுடையது;—மாவே வடுபடுவது,—வாழையே குலைபடுவது;—வண்டே மதுவுண்பது;—பந்தே அடிபடுவது;—பரியே கட்டுண்பது;—நெல்லே குத்துண்பது;—நெற்கதிரே போர்படுவது;—வயலே வளைபடுவது;—மாதரிடையே குறைபடுவது;—தரித்திரமே தரித்திரப்படுவது;—துக்கமே துக்கப்படுவது;—பொய்யே பொய்படுவது; இவையல்லாமல் பொருள் பறிக்கப்படுவோரும் —சிறைச் சாலையில் வைக்கப் படுவோரும்,-பகைவரால் அலைக்கப் படுவோரும்,-கடின மனமுள்ளவர்களும்,— வடுப்படுவோரும், — குலைபடுவோரும்,—மதுவுண்போரும்,—அடிபடுவோரும்,—குத்துண் போரும், — போரிற்படுவோரும்,—கட்டுண்போரும்,—வளைபடுவோரும், — குறைபடுவோரும், — தரித்திரப்படுவோரும், — துக்கப்படுவோரும், — பொய்படுவோரும், — வேறேயில்லாமையால் அந்நாட்டில் மேன்மையே விளங்கியிருந்தது.

## 4. பிள்ளைப்பேறு கருதிப் பெருநோன்பாற்றல்

இந்தப் பிரகாரமாக மந்திரி முதலான அங்கங்களுடன் அரசாண்டிருந்த அம்மனுச் சோழரென்னும் சக்கரவர்த்தியானவர் **புத்திரப் பேறில்லாமல்** மனம் வருந்தி, அப்பேற்றைப் பெறும்படி **அறுபது வருஷ காலமாக** அனேக தானங்களும், தருமங்களும், யாகங்களும், விரதங்களுஞ் செய்தும் புத்திரோற்பத்தி யில்லாமையால், "புத்திரச்செல்வம் பெறாதவர் பொருட்செல்வம் பெற்றும் பயனில்லையே,—புத்திரன்போல் நமக்கு இந்த அரசச்செல்வம் இம்மை மறுமை யின்பங்களைக் கொடாதே;—சந்ததியில்லாவிட்டால் பிற்காலத்தில்,—கண்களில்லாத முகமும், சூரியனில்லாத பகலும்போல — அரசனில்லாது இவ்வுலகந் தலை தடுமாறிப்போமே,—ஆதலால், இனிப் புத்திரனைப் பெற்றுக்கொள்வதற்குத் தக்க முயற்சி நமது ஆண்டவனாகிய தியாகராஜப் பெருமானை வழிபடுவதே யல்லது வேறொன்று மில்லை;— ஆனால் மோக்ஷப் பேற்றைக் குறித்து நிஷ்காமியமாக இத்தனை நாளும் வழிபட்டு வந்த நாம், இப்போது புத்திரப்பேற்றைக் குறித்துக் காமியமாக நடராண்டவனை வழிபடுவது தகுதியல்லவாயினும், "**தீராக் குறைக்குத் தெய்வமே முடிவு**" என்கிறபடி எவ்விதத்தினும்தீராதபுத்திரனில்லாக் குறையைச் சிவபெருமானது திருவருளாலேதான் தீர்த்துக் கொள்ளல் வேண்டும்," என்று ஆலோசித்துத் துணிவுகொண்டு, தமது மனைவியாருடன் ஆகம விதிப்படிக் **கமலாலய** மென்னும் புண்ணிய தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து, பயபக்தியுடன் பூங்கோயிலைப் பஞ்சாவரண வலமும் செய்து உட்புகுந்து, தியாகராஜப் பெருமானது சந்நிதிக்கெதிரே

அஷ்டாங்க பஞ்சாங்கமாக நமஸ்கரித்து, வணங்கிய முடியும், மலர்ந்த முகமும், நீர் பொழிந்த கண்ணும், துதி மருவிய நாவும், கூப்பிய கையும், புளகமுற்ற உடம்புங் கொண்டு நின்று,—**"எம்பெருமானே! புத்திரப்பேறில்லாத குறையைத் தீர்த்தருளல் வேண்டும்,"** என்று விண்ணப்பித்துப் பலவிதமாகத் தோத்திரஞ் செய்து தமது அரண்மனைக்குச் செல்வர். இந்தப் பிரகாரமே நாள்தோறும் போய் வழிபட்டுப் பிரார்த்தித்துக் கொண்டே வந்தார்.

## 5. பிள்ளையைப் பெற்றுப் பெருவிழாச் செய்தல்

**அவர் செய்யும்** வழிபாட்டுக்கும் வந்தனைக்கும் இரங்கித் தியாகராஜப் பெருமான்,—புத்திரப் பேறுண்டாகும்படி அனுக்கிரகஞ்செய்ய அந்த அனுக்கிரகத்தால் மகாராஜனுக்கு மகிழ்ச்சி யுண்டாகும்படி, வலம்புரிச்சங்கு விலையுயர்ந்த வெண் முத்தினைக் கருப்பங்கொண்டதுபோலத் தேவியார் தமது திருவயிற்றில் கருப்பங்கொண்டு, பத்து மாதமுஞ் சென்று, நல்ல சுபதினத்தில்,—தர்மதேவதை தாண்டவமாடவும்,—வானகத்தார் மலர் சொரிந்து வாழ்த்தவும்,—வையகத்தார் மனங்களிக்கவும்,—அதிதியாரானவர் ஆதித்தனைப் பெற்றது போலவும்,—மல்லிகைக் கொடி மணமுள்ள மலரைப் பெற்றது போலவும்,—எவ்வெவர்களும் அதிசயிக்கத் **தக்க சர்வலக்ஷணங்களும் நிறைந்த வடிவுள்ள ஒரு புத்திரனைப் பெற்றார்.**

புத்திரன் பிறந்த சந்தோஷமான சமாசாரத்தைப் பாங்கிகள், அதிசீக்கிரமாக வந்து தம்மை மறந்த மனக்களிப்புள்ளவர்களாக எதிர் நின்று,—"ஆண்டவனே! எங்கள் தலைவியார் திருவயிற்றிலிருந்து, தேவரீர் புகழே வடிவாகவும், புண்ணியமே உயிராகவுங் கொண்டு பொன்னுலகத்தைக் காக்கின்ற புரந்தரனும் நாணமடையப் பூவுலகத்தைக் காக்கத்தக்க வல்லமையுள்ள புத்திரசிகாமணி உதயஞ் செய்தது" என்று விண்ணப்பஞ் செய்யக்கேட்ட மனுச் சக்கரவர்த்தியானவர்,-தூரதேசத்திற் போயிருந்த கப்பல் துறை முகத்தில் வந்ததென்று சொல்லக்கேட்ட வர்த்தகனைப் போலவும், - கூடிப் பிரிந்த மங்கையின் குரலோசையைக் கேட்ட நாயகனைப் போலவும்,—தாகங்கொண்டு தவிக்குங் காலத்தில் சமீபத்தே தண்ணீருண்டென்று சொல்லக்கேட்ட தேச சஞ்சாரியைப் போலவும், மனங் குளிர்ந்து உடல் பூரித்து அளவிடப்படாத களிப்புடையவராய், அந்தப் பாங்கிகளுக்கு, விலையுயர்ந்த ஆடையாபரணங்களை வெறுப்படையும்படி பரிசுகொடுத்துத் தாம் நீராடி நியமங்கள் முடித்து,—

வேத வித்துக்களாகிய பிராமணர்களுக்கு — விதை தானம், சொர்ண தானம், கன்னிகாதானம், அசுவதானம், கஜதானம், பூதானம், கோதான முதலான தானங்களைக் கொடுத்து,— புத்திரன் பிறந்த நாள்தொட்டுப் பன்னிரண்டு வருஷமட்டுங் குடிகள் வரி கொடாமல் சர்வ மானியமாகத் தாமே அனுபவித்துக் கொள்ளவும்,—திறை கட்டிவரும் அரசர்கள் ஏழு வருஷமட்டும் அந்தத் திறைகளைக் கட்டாமல் தாங்களே எடுத்துக் கொள்ளவும்,—சிறைச்சாலையிலிருந்த சத்துருக்களை விட்டுவிடவும், பொக்கிஷசாலையைத் திறந்துவிட்டு, நகரிலும் நாட்டிலுமுள்ளோர் யாவரும் தங்கள் தங்களுக்கு வேண்டிய மட்டில் ஏழுநாள் வரையில் எடுத்துக் கொண்டு

போகவும்,— தேவாலயங்களிலெல்லாம், புதிதாகத் திருப்பணிகளும், திருவிழா முதலான சிறப்புக்களும் செய்விக்கவும் கட்டளையிட்டு, பின்னர்த் தான் தேடி வைத்த திரவியத்தைத் தெரியக் கண்டுகொண்டவனைப் போலத்—திறை மறைவிலிருந்த அச்செல்வக் குழந்தையை வெளிப்படக் கண்டு மனமகிழ்ச்சியடைந்து, இளஞ் சூரியோதயம் போல இந்தப் புத்திரன், இவ்விடத்தில் உதயஞ்செய்தது சிவானுக்கிரகமேயல்லது வேறல்லவென்று வியப்படைந்து,

சோதிட சாஸ்திரங்களில் வல்லமையுள்ள பெரியோர்களைக் கொண்டு ஒப்பற்ற செல்வம், கல்வி, வெற்றி முதலிய அதிர்ஷ்டங்கள் நடமாடுஞ் செய்கின்ற சாதக பலனைக் குறித்துத் தியாகராஜப் பெருமானது திருவருளால் வந்ததுபற்றி அக்கடவுளின் திருப்பெயர் கொண்டு, **வீதிவிடங்கன்** என்னும் நாமகரணமும், அன்னப்பிராசனம், சௌள முதலான சடங்குகளும், மிகுந்த விபவமாகவும் வேத யுக்தமாகவும், அதது செய்யத்தக்க பருவங்களில் செய்வித்தும், அந்தப் புதல்வனை வாச நீராட்டுவித்தும்,— இனிய உணவுகளை ஊட்டுவித்தும்,—பொன்னாலும், இரத்தினங்களாலுஞ் செய்த பூஷணங்களைப் பூட்டுவித்தும்,—மார்மேலும் தோள்மேலும் மடிமேலும் வைத்து வைத்து முத்தாடியும்,—திருந்தாத குதலைச் சொற்களைக் கேட்டு மகிழ்ந்தும், —கற்பக விருக்ஷத்தின் கனியைக் கேட்பினும் அந்தக் கணமே தருவித்துக் கொடுத்தும்,—சிறிய விளையாடல்களைச் செய்யக் கண்டு களித்தும், கற்புள்ளவள் கணவனை உபசரிப்பது போல உபசரித்தும்,—படிப்பில் ஆசைவைத்தவன் பாடத்தைப் பாராட்டுவதுபோலப் பாராட்டியும்,—தன்னை உயர்ந்தவனுக்க நினைத்தவன் தருமத்தை வளர்ப்பது போல வளர்த்தும்,-முன் சிறுமையடைந்து பின் செல்வத்தைப் பெற்றவன் அச்செல்வத்தைப் பாதுகாப்பது போலப் பாதுகாத்தும்,—புத்திர சம்பத்தினல் வரும் பயனை அடைந்தவரா யிருந்தார்.

## 6. வீதி விடங்கற்கு வித்தை கற்பித்தல்

இந்தப்படி இணையில்லாத செல்வப் பெருக்கத்தில் வளர்க்க வாழையிளங்குருத்துப் போல,—வளர்ந்து வருகின்ற புத்திரனுக்கு, ஐந்தாம் வயதில் **அக்ஷராப்பியாசம்** செய்வித்து—ஏழாம் வயதில் சகல தேசத்தரசர்களுக்குந் தெரிவித்து—நகரை அலங்காரஞ் செய்வித்து,—பத்மராகம், கோமேதகம், வயிரம், வைடூரியம் முதலான இரத்தின கசிதமான கலியாண மண்டபத்தில், வேத வேதாந்தங்களில் வல்லவரான பிராமணர்களும், சாபானுக்கிரக சாமர்த்தியமுள்ள தபோதனர்களும் ஆசீர்வதிக்கவும்,—மன்னர், மண்டலீகர், பட்டவர்த்தனர், மகுடவர்த்தனர், அமைச்சர், உறவினர், சிநேகர் முதலானவர் கண்டு களிக்கவும்,—சுமங்கலைப் பெண்கள் சோபனம் பாடவும்,—பேரி, சங்கம், மிருதங்கம் முதலான மங்கள வாத்தியங்கள் முழங்கவும்,—நல்ல சுபமுகூர்த்தத்தில் வேதவிதிப்பிரகாரம் **உபநயன** கலியாணமும்,— சகல வேதாகம சாஸ்திரங்களிலும் வல்லமையுள்ள ஆசாரியரைக் கொண்டு **வித்தியாரம்பமும்** செய்வித்தார். சில நாட்களுக்குள்ளே வீதிவிடங்கனென்னும் அப்புத்திரனானவன்—வேதங்கள், சாஸ்திரங்கள், புராணங்கள், ஸ்மிருதிகள், இதிகாசங்கள் முதலான கலைகளில் ஆசிரியனைப் பார்க்கிலும் எண்மடங்கு வல்லமை யுள்ளவனுகி—யானையேற்

றம், குதிரையேற்றம், ரதாரோகணம், வில்வித்தை, வாள்வித்தை, இந்திர ஜாலம், மகேந்திரஜாலம் முதலான சமஸ்த வித்தைகளையுங் குறைவறக்கற்றுக் கொண்டு,—

ஆதிசேடனைப்போல் அறிவும்,—காமனைப்போல் கட்டழகும்,—ஆண் சிங்கம் போல் ஆண்மையும்,—மதயானை போல் நடையும்—, மார்த்தாண்டன் போல் வாய்மையும்,—கற்பக விருக்ஷம் போல் கொடையு முடையவனாய்,—சிவபக்தி, ஜீவகாருண்யம், பொறுமை, அன்பு, ஆசாரம், ஒழுக்கம், ஊக்கம், சாந்தம், சற்சனநேயம் முதலான நற்குணங்களுடன்—**உயிருக்கு முடிவு நேரினுமாறலும் உண்மையே பேசுவதும்**,—உறுதியே சொல்வதும்,—இன்சொல்லே கூறுவதும்,—இதமே செய்வதும்,—பயனுள்ள காரியங்களையே பாராட்டுவதும்,—பிராமணர், தவத்தோர் முதலான பெரியோர்களைக் கண்டால் அன்போடும், அச்சத்தோடும், எதிர்கொண்டு தலையால் வணங்கி வாயால் வாழ்த்துவதுமாகிய நற்செய்கைகளை யுடையவனாய், மாதா பிதாக்களது மனக்குறிப்பறிந்து அவரிச்சையின் வழி நடந்து மகிழும்படி செய்து,—இளமைப் பருவத்திற்றனே எல்லாம் அறிந்தவனென்று கண்டோர் கொண்டாடவும், கேட்டோர் மனங்களிக்கவும், இளவரசு பட்டத்துக்குத் தகுந்த பருவமடைந் திருந்தான்.

### 7. அரசிளங்குமரன் ஆலயம் போதற்கு அனுமதி பெறல்

**அ**ப்படியிருந்த நாட்களில் ஒருநாள், அவ் வீதிவிடங்கனென்னும் இராஜபுத்திரன், தன் பருவத்துக்கொத்த இராஜகுமாரர்களும், மந்திரி குமாரர்களும் சூழ்ந்துவர, தன் பிதாவாகிய மனுச்சோழருடைய சமூகத்துக்கு வந்து, பிதாவினது திருவடிகளுக்கு அஷ்டாங்க பஞ்சாங்கமாகத் தெண்டனிட்டெழுந்து,—தூசொதுக்கியும், உடம்பொடுக்கியும், கைகட்டியும், வாய்புதைத்தும் எதிரே நிற்க, அப்போது மனுச்சக்கரவர்த்தியானவர்,—நெடுநாள் பிரிந்திருந்த கன்றினைக் கண்ட பசுவைப்போலவும்,—இடந்தெரியாதிருந்த புதையலை எதிர்படக்கண்டவனைப் போலவும்,—கண்கள் களிகூரக்கண்டு, உள்ளமும் உடலும் பூரித்துத் தமது இரண்டு கைகளாலுந் தழுவி அணைத்தெடுத்து மடிமேல் வைத்து, உச்சிமோந்து, முதுகைத் தடவி,—"எனக்கு நெடுநாளாக இருந்த மனக்குறையைத் தவிர்த்து இம்மை மறுமைப் பயனைக் கொடுக்கும்படி பிறந்த அருமையாகிய அமிர்தத்தை யொத்த என் புத்திரனே! உன் மனதில் ஏதோவொரு எண்ணமுண்டானதாகத் தோன்றுகிறது; அவ்வெண்ணம் இன்னதென்று வெளிப்படுத்த வேண்டும்" — என்று கேட்டார்.

அதுகேட்ட வீதிவிடங்கன், "மூன்றுலகத்திலுங் கேடில்லாத கீர்த்தியை நாட்டிய பெருந்தன்மையுடைய தேவரீரைப் பிதாவாகப் பெற்ற அடியேனுக்கு எண்ணங் கொள்வதற்கு என்ன குறை யிருக்கிறது? நமது குலதெய்வமாகியும்,—இஷ்ட தெய்வமாகியும்,— கமலாலயத்தி லெழுந்தருளிய **தியாகராஜப் பெருமானைத்** தரிசித்து வரவேண்டு மென்னும் எண்ணமொன்று மாத்திரமுண்டு. இவ் வெண்ணம் இடையூறில்லாமல் நிறைவேறும்படி தேவரீர் திருவுள்ளங் கொள்ளவேண்டும்" என்று விண்ணப்பஞ் செய்தான்.

அதுகேட்டு, அரசரானவர், "சர்வ வல்லமையுள்ள சுயம்புவாகியும்,—கருணைக் கடலாகிய கடவுளாகியும்,—பிள்ளைக்கலி தீர்த்த பெருமானாகியும் விளங்கிய,—தியாகராஜப் பெருமானைச் சேவிப்பதற்குத் தடையுண்டோ? தனக்கிணையில்லாத தருமமூர்த்தியைத் தரிசிக்க வேண்டுமானால் தடுப்பவர் யார்? புண்ணியந்தேடப் புத்திரன் தொடங்கினால், தந்தை தடைசெய்வானோ? நானே கற்பிக்கவேண்டிய நல் விஷயத்தை நீயே தெரிந்து செய்யத் தொடங்குவது நான் பூர்வஞ் செய்த புண்ணியமல்லவோ? பிள்ளைதேடும் புண்ணியம், பிதாவுக்கு முண்டென்று பெரியோர் சொல்வது பிழைபடாதென்பதை நானறியேனோ? நெல் முதலான பயிருக்கு நீர் விடுவோரையும்,—குருடர்க்குக் கோல் கொடுப்போரையும்,—இரவில் வந்தவர்க்கு இடங் கொடுப்போரையும்,—அஞ்சி வந்தவர்க்கு அபயங் கொடுப்போரையும்,—தாகங் கொண்டோர்க்குத் தண்ணீர் கொடுப்போரையும்,—பசிகொண்டு பரிதபிப்போர்க்கு அன்னங் கொடுப்போரையும்,—சேற்றில் விழுந்து திகைக்கின்றோர்க்குக் கை கொடுப்போரையும்,—ஆற்று வெள்ளத்தில் அகப்பட்டோரைக் கரையேற்றுவோரையும்,—சத்திரங் கட்டித் தருமஞ் செய்வோரையும் தடுத்தாலும்,—குரு தரிசனம், சிவஞானி தரிசனம், சிவ தரிசனம் செய்வோரை ஒருக்காலுந் தடுக்கப்படாது; ஆதலால், புத்திரனே! உனக்கு வேண்டிய சிறப்புகளுடன் சுகமாகப்போய் ஆண்டவனைத் தரிசனஞ்செய்து, **சிவஞானமுந் தீர்க்காயுளும்** பெற்று வருவாய்"—என்று கட்டளை யிட்டார்.

அந்தக் கட்டளையை அன்புடன் தலைமேற்கொண்டு வணங்கி விடைபெற்று,—மாதாவினிடத்திற் போய்—பத்தியுடனே பணிந்தெழுந்து கைகூப்பி நின்று,—"அநேக விரதங்களை அனுஷ்டித்து அடியேனைப் பெற்றெடுத்து, கண்களை இமைகள் காப்பனபோற் காத்துவளர்த்த தாயே! அடியேன் தெய்வசிகாமணியாகிய தியாகராஜப் பெருமானைத் தரிசனஞ் செய்யவேண்டும்; இதற்குத் தந்தையாருடைய சம்மதம் பெற்றுக்கொண்டேன்; இனி உமது உள்ளமும் ஒருமித்தருளவேண்டும்"—என்று குறையிரந்து கொண்டான்.

அதுகேட்ட தாயானவள், உருக்கத்துடன் மனமகிழ்ச்சி கொண்டு முகமலர்ந்து, முலைகளிலிருந்து பால் பீரிடவும், கண்களில் ஆசை நீர் அரும்பவும், தன்னருமைத் திருமகனை நோக்கி,—"இறைவனையும் * என்னையும் நற்கதியிற் சேர்க்க வந்த நாயகமே! நாங்கள் முன்செய்த தவப் பயனாலே கிடைத்த முத்தமே! எங்கள் வருத்தமெல்லாந் தீர்க்கவந்த மாணிக்கமே! கல்வியிற் சிறந்த கண்மணியே! சுந்தர வடிவமுள்ள சூரியனே! சாந்த குணமுள்ள சந்திரனே! பேரறிவுடைய பிள்ளாய்! நெடுநாளாகப் பலவிதமான தருமம், தானம், தவம் முதலியவற்றைச் செய்தும் பெற்றுக் கொள்ளாமல், தியாகேசர் சந்நிதிக்கு நடந்து அந்தக்கடவுளின் அனுக்கிரகத்தால் உன்னைப் பெற்றுக் கொண்டோம். அப்படிப்பட்ட பெருங் கருணையுள்ள பெருமானை நீ தரிசிக்க வேண்டுவது அடுத்த காரியந்தான்; ஆதலால் நீ போய்க் கண் குளிரக் கண்டு தரிசித்து, உபநயன முதலான மங்கலக் கோலங்கண்ட எனது கண்கள் மணக் கோலமுங் கண்டு களிப்படைய வேண்டுமென்று எண்ணியிருக்கிற என்னெண்ணம் விரைவில்

* இறைவன் – மனுச்சோழன்

முடியும்படி ஒரு வரத்தையும் பெற்றுவரக் கடவாய்" என்று விடை கொடுத்தாள்.

## 8. தானை புடைசூழத் தலைவன் வெளிப்படுதல்

அவ்விடையைப் பெற்றுக்கொண்ட வீதி விடங்கன் தன் அரண்மனைக்கு வந்து தயிலம், சந்தனம், கஸ்தூரி, பால, தயிர், நெய், பழம் முதலான அபிஷேக திரவியங்களும்,—மாணிக்கமாலை, மரகதமாலை, முத்துமாலை, பவளமாலை, பொன்மாலை, வஜ்ஜிரமுடி, ரத்தின குண்டலம் முதலான திரு ஆபரணங்களும், கொன்றைமாலை தும்பைமாலை, வில்வமாலை, சண்பகமாலை, முல்லைமாலை, மல்லிகைமாலை, முதலான திருமாலைகளும், வெண்பட்டு, கோசிகப் பட்டு, பீதாம்பரம் முதலான திரு ஆடைகளும் மற்றும் வேண்டிய திரவியங்களெல்லாமும் தியாகேசர் கோவிலுக்குக் காரியக்காரர்கள் வசத்தில் முன்னதாக அனுப்புவித்து,—பின்பு தான், மஞ்சனச் சாலையில் வாசநீராடி, வெண்பட்டுடுத்துச், சிவத்தியானத்துடன் திருநீறு தரித்துத் திலகமணிந்து,—கிரீடம், குண்டலம், கண்டசரம், வாகுவலயம், பதக்கம், சரப்பளி, கடகம், ஆழி, பொற்பூணு நூல், பொன்னரைஞாண், உதரபந்தனம், வீரகண்டை முதலான பூஷணங்களும் பூண்டு, ஜோதிமயமான பீதாம்பர வுத்தரியம் மேலேதரித்து, நவரத்தின மிழைத்தவொரு பொற்பிரம்பைக் கையிற் பிடித்துக் கொண்டு, அரண்மனை வாசலைவிட்டு வெளியே புறப்பட்டு, வேத பாரகராகிய வேதியர் முதலானவர்களுக்குப் பலபல தானங்கள் செய்து, மனோவேகமும் பின்னடையத்தக்க வேகமான நடையுள்ள நான்கு குதிரைகட்டிய மகாமேருவைப்போல உயர்வுள்ள ரத்தின கசிதமாகிய ரதத்தின்பேரில் ஆரோகணித்துக் கொண்டனன்.

அப்போது, வேத வேதியர், மீமாம்சகர், தார்க்கிகர், வையாகரணிகள், சோதிடர், ஆயுள்வேதியர், வேதாந்தியர், ஆகம சித்தாந்திகள், புராணிகர், சமயசாத்திரப் பிரசங்கிகள் முதலான வித்தியா வல்லவர்களும்,—மந்திரி, பிரதானி, தானாபதி முதலான காரியத் தலைவர்களும், சிநேகர், உறவினர், புரோகிதர் முதலானவர்களும், மன்னர், மண்டலீகர், பட்டவர்த்தனர், மகுடவர்த்தனர் முதலான அரசர்களும்—தங்கள் தங்கள் பெருமைக்குத்தக்க வாகனங்களிலேறிச் சூழ்ந்து சென்றனர். நெற்றிப் பட்டம், கிம்புரி முதலான அணிகள் சூட்டி, அலங்கரிக்கப் பெற்ற மதயானைகள் காசசித்துச் சென்றன,—முத்துக் குஞ்சம், முத்துவடம் முத்துவாளி, கிண்கிணிமாலை, பொற்கலனை முதலான அணிகளால் அலங்கரிக்கப்பெற்ற வலியுள்ள குதிரைகள் கனைத்துச் சென்றன,—விரபட்டம், வீரசங்கிலி, வீரகண்டை—முதலான அணிகளை யணிந்த வீரர்கள் ஆரவாரித்துச் சென்றனர்,—மங்கலப் பாடகர் பாடினர் வந்தியர் மாகதர் புகழ்ந்தனர்,—மங்கல மங்கையர் வாழ்த்தினர்,—நாடகக் கணிகையர் நடனஞ் செய்தனர். பட்டாங்கு படிக்கவும், கட்டியங் கூறவும், அஷ்ட மங்கலங்களை யேந்திச் சுமங்கலிகள் சூழ்ந்து போகவும்,—வெள்ளை வட்டக் குடைகள் நிழற்றவும்,—வெண் சாமரை வீசவும்,—மயிற் குஞ்சங்கள் சுழற்றவும்—பூந்தட்டேந்தவும்,—பேரிகை, தம்பட்டம், தக்கை, உடுக்கை,

கொடுத்தற்குரிய பசுவாகத் தக்கதன்று. ஏருழுதற்குரிய எருதாகத்தக்க சேங்கன்று உமது புத்திரனோ ஆறறிவுள்ள ஆண்மக்களிற் சிறந்த நல்லறிவுடையவன். அவனோ அக்கன்றைக் கொல்லவேண்டுமென்று கொன்றவனல்லன். இக்கொலையோ கன்றினுடைய ஊழ் வினையென்று உலகமெல்லாஞ் சொல்லும். ஆதலால், இதற்குத் தக்க பிராயச்சித்தம் செய்விப்பதே முறை" என்று சொன்னார்கள்.

அதுகேட்ட அரசன், "மந்திரிகளே, நீங்கள் உண்மையைக் கண்டறிந்து சொல்லுவதற்குச் சக்தியற்றவர்கள் போல இலேசாகச் சொல்லுகின்றீர்கள் நல்லது, நான் சொல்லுகின்றதைக் கேளுங்கள் இப் பசுவோ ஐயறிவுள்ள மிருகவர்க்கத்தி லொன்றென்று சொன்னீர்கள் நன்றாயிருக்கின்றது உங்கள் நியாயம் உயர்வு தாழ்வுகளை உயிர்களின் அறிவினிடத்து வைத்து, தாழ்ந்த அறிவுள்ள மிருகங்களைக் கொன்றால் பிராயச் சித்தமென்றும், உயர்ந்த அறிவுள்ள மனிதர்களைக் கொன்றால் கொலை செய்வதென்றும் சொல்லுகின்ற உங்கள் வார்த்தையின்படியே இப்பசு மனிதரறிவைப் பார்க்கினும் உயர்ந்த அறிவுள்ளதாக இருக்கின்றது. எவ்வாறெனில், எந்த உலகத்தில் எந்தப் பசு இந்தப் பசுவைப் போலக் கன்றிறந்ததைக் குறித்து ஆற்றப்படாத துக்கத்தோடும்,—அதிகாரிகளாலும், பகைவர்களாலும், அயலாராலும், மற்ற உயிர்களாலும், ஒருவர்க்குக் குறை நேரிட்டால் அக்குறையை அரசன்,—தனக்குத் தெரிவிப்பதற்கு அரண்மனை வாயிலில் ஆராய்ச்சிமணி கட்டுவித்திருக்கிறானென்று சாதாரண மனிதர்களாலும் அறியப்படாத இந்தக் காரியத்தை அறிந்து வந்து, அந்த மணியைக் கொம்பினா லடித்துச் சத்தமெழுப்பிக் கதறிக் கண்ணீர் வடித்துக் கொண்டு நின்றது? இதனை எப்போதாவது கேட்டிருக்கின்றீர்களோ? இல்லையே. இந்தப் பசுமாத்திரம் அப்படியறிந்து செய்ததை இன்றுபார்த்து நின்றீர்கள் ஆதலால், இது முன் தவக்குறையால் பசுவுடம்பெடுத்ததாயினும் மனிதப் பிறப்பில் உயர் குலத்தில் மேலான அறிவோடு பிறந்திருக்கிறதாகவே கொள்ள வேண்டும்



## 24. பசு எல்லாப் பிறப்பிலும் உயர்வு

**அன்றியும்,** பசு எல்லாப் பிறப்பிலும் உயர்வு உள்ளதென்றும்-அதன் கொம்பின் அடியிலே பிரம விஷ்ணுக்கள் இருக்கின்றார்களென்றும்,—காவிரி முதலான புண்ணிய தீர்த்தங்கள் அந்தக் கொம்பின் நுனியில் இருக்கின்றன வென்றும்,—சிவபெருமான் சிரசிலும், சிவசக்தி நெற்றியிலும் இருக்கின்றார்களென்றும்,—சுப்பிரமணியக் கடவுள் நாசியிலும்,—அசுவனி தேவர் காதுகளிலும்,—சந்திர சூரியர் கண்களிலும்,—வருணன் நாவிலும்,—சரஸ்வதி குரலிலும்,—கந்தருவர் மார்பிலும், இந்திரன் கழுத்திலும்,—உருத்திரர் முதுகிலும்,—சத்தமாதர்கள் குறியிலும்,—இலக்குமி குதத்திலும்,—கங்கை மூத்திரத்திலும்,—பூமிதேவி வயிற்றிலும்,—யமுனை சாணத்திலும்,—திருப்பாற்கடல் முலையிலும்,—யாகாக்கினி வயிறு முகம் இதயம் என்னும் உறுப்புகளிலும்,—அருந்ததி முதலான கற்புள்ள

வர்கள் உடம்பிலும் இருப்பார்களென்றும் சொல்லியிருக்கின்றதே;- அன்றியும், பரமசிவன் திருமுடிக்கு அபிஷேகம் செய்ய யோக்கியமான பால் முதலான திரவியங்களைக் கொடுக்கின்றதே!—அன்றியும், திருவெண்ணீற்றின் காரணமான திரவியம் பிறப்பதற்கும் இடமாகவு மிருக்கின்றதே,—அன்றியும் நான்குவேதமும் கால்களாகவும்,—கருமமும் ஞானமும் கண்களாகவும்,—ஆகமங்களும் சாத்திரங்களும் கொம்புகளாகவும்,—தருமமே உடலாகவும்,—தவமே நடையாகவுங் கொண்டு பரமேசுவரனுக்கு வாகனமாக விளங்கிய தரும இடபத்துக்கு இனமாகவும் இருக்கின்றதே!—இப்படிப்பட்ட மேன்மையுள்ள பசுவை ஐயறிவுடைய மிருகவர்க்கத்துள் ஒன்றென்று சொல்லல் தகுமோ? இதன் கன்றோ பால் கொடுத்தற்குரிய பசுவாவ தில்லை ஏருழுதற்குரிய எருதாகத்தக்க சேங்கன்று என்று சொன்னீர்கள்! தேவர்களெல்லாம் பிறப்பத குத் தவஞ் செய்கின்ற மகத்துவமுள்ள இந்தத் திருவாரூரிலே பிறந்த எல்லா உயிர்களும் சிவ கணங்களென்கின்ற சித்தாந்தப்படி இந்த க்ஷேத்திரத்திலே பிறந்த இக்கன்றைச் சிவகணமென்று கொள்ளுவதை விட்டு சேங்கன்றென்று சொல்லல் தகுமோ? புத்திரனோ ஆறறிவுள்ள ஆண்மக்களிற் சிறந்த நல்லறிவுள்ளவனென்றீர்கள். சிவதரிசனஞ் செய்யத் தேரூர்ந்து போய்ச் செல்வ மறைப்பினாற் கண்மறைந்து கன்றைக்கொன்றவன் நல்லறிவுள்ளவனென்று சொல்லப்படுவனோ? கன்றிறந்ததை ஊழ்வினையென்று உலகஞ் சொல்லுமென்றீர்கள்; பிராரத்துவ வாதிகளேயல்லாமல் காமக்குரோதாதிகளாற் பாபங்களைச் செய்வதற்கு ஜீவனே ஆகாமிய கர்த்தாவென்று கொள்கிற உத்தம மார்க்கத்தை யுடையோர்கள் ஊழ்வினையென்று சொல்வாரோ? இதற்குத் தக்க பிராயச்சித்தஞ் செய்விப்பதே முறையென்றீர்கள்; 'மலையை எடுத்துண்டு வயிறு நோகின்றவனுக்குச் சுக்கிடித்துக் கொடுக்கின் அது சொஸ்தப்படுமோ?' அது போலக் கொலைப்பாதகஞ் செய்தோர்க்குப் பிராயச்சித்தஞ் செய்யின் அப்பாபம் நிவாரணமாமோ? அவ்வாறு செய்வேனானால் மீளா நரகத்தில் என் புத்திரனை வீழ்த்துவதுமன்றி, யானும் விழுந்து வருந்துவேன்; இவ்வுலகத்தினும் என்றும் மீளாத பழிக்கு ஆளாகச் சமைவேன்; அன்றியும், எண்ணிறந்த பெருமை பெற்ற இரவி குலத்திற்கும் என்னை அடுத்திருக்கின்ற உங்களுக்கும் ஒழுக்கு வார்த்தையுமுண்டாக்கினவனுவேன். ஆதலால் இனி என் சொல்லுக்கிரண்டில்லை; இந்தப் பசுவின் கன்றைக் கொன்ற பழிக்கு ஈடாக என் புத்திரனைக் கொலை செய்வதே நிச்சயமாகிய தீர்ப்பு" என்று சொல்லி விட்டுப் பின்பு மந்திரிகளுக்குள் கலாவல்லபனென்கிற மந்திரியைப் பார்த்து, "மந்திரி! என் புத்திரனை அழைத்துப் போய் அந்தக் கன்று இறந்து கிடக்கிற வீதியிற் கிடத்தி, நீ தேரிலேறிக்கொண்டு அவனுடம்பின்மேல் தேர்ச் சக்கர மேறும்படிச் செய்து கொலை செய்து வருவாய்" என்று கட்டளையிட்டார்.

அப்போது மற்ற மந்திரிகளெல்லாம் கை நெரித்துக் கொண்டு கண்களிலே நீரரும்ப மனங்கலங்கிப் பிரமை கொண்டு நின்றார்கள்.

## 25. மந்திரி தானே மாய்த்துக் கொளல்



கலாவல்லப னென்கிற மந்திரியானவன் 'கடுந்தவம் புரிந்து பெற்ற கவுத்துவ மணியைக் கடலிலெறிந்து விட்டுவா, வென்றும், —'பலநாள் வருந்தி வளர்த்த பஞ்சவர்ணக்கிளியைப் பருந்துக் கிரை யிட்டுவா' வென்றும், 'செய்தற்கரிய தவஞ்செய்து பெற்ற தேவாமுதத்தைச் சேற்றிற் கழித்துவா வென்றுஞ்,— சொல்லக் கேட்டவன் போல் திடுக்கிட்டு உணர்வழிந்தும், -திகைப் பூண்டு மிதித்தவன் போல் மயங்கி நின்றும். சற்று உணர்வுதோன்ற, அது விஷயத்தில் மனமில்லாதவனு யிருந்தும், அரசன் ஆணையைத் தடுப்பதற்கு அஞ்சி வணங்கி விடைபெற்றுக்கொண்டு, அவ்விடம் விட்டுப் புறப்பட்டுத் தளர்ந்த நடையோடு முகங்கருகி, நெடுமூச்சு விட்டுக்கொண்டு—"சிவசிவா! சம்போ! சம்போ! இந்தப் பாதகஞ் செய்யத் தானே நான் மந்திரியாக ஏற் பட்டேன்! கொலையென்று சொல்லுகின்றோர்களைப் பார்த்தாலும் பயங் கொள்ளுகின்ற எனக்குத்தானே இப்படிப்பட்ட விதி வரவேண்டும்! இந்தக் காரியத்தைச் செய்யாது விடுவோமென்றால் அரசன் கட்டளையைக் கடந்தானென்னுங் குற்றம் நேரிடுமே" யென்றும் "அல்லது செய்வோ மென்றால் நமது உயிர்போற் சிறந்த வீதிவிடங்கன் விஷயத்தில் எப்படிக் கொலை செய்யத் துணிவு உண்டாகும்" என்றும், எண்ணியெண்ணி, "என் மனம் 'இரு தலைக்கொள்ளிக்குள் அகப்பட்ட எறும்புபோல்' திகைக் கின்றதே! இதற்கு என்ன செய்வேன், என்ன செய்வேன்" என்று வருந்தி வருந்தி, ஒருகால் முன் வைப்பதும் மற்றொருகால் பின் வைப்பது மாகி ஊசலாடுகின்றவனைப்போல அலைந்தும், 'வேந்தன் விஷமுண்ணெ னக் கட்டளை யிடினும் உண்ணவேண்டிய உரிமை நமக்கிருக்கிறபடியால் போய்த் தொலைப்போம்" என்று சற்றே நடந்து "எண்ணுதற்கும் யோக் கியமல்லாத இப்பாதகத்தை எப்படிச் செய்வோம்" என்று சற்றே நின்று, நடைத் தூக்கங் கொண்டவன்போல் தெளிந்தும், மயங்கியும், பித்தம் பிடித்தவன்போல் பிதற்றியும் கண்ணீர் சொரிந்து. கலங்கினவனுகிப் பின்பு தெளிந்து, "அரசன் நமக்கும் தந்தை யாதலால் வீதிவிடங்கன் செய்த குற்றத்தை நாமேற்றுக்கொண்டு நம்முயிரைக் கொடுத்து விடு வோம்" என்று துணிவுகொண்டு, அக்கன்று இறந்துகிடக்கிற வீதியி னிடத்து அணைகடந்த வெள்ளம்போல அதிவேகமாக வந்து நின்று, தன் னரையிலிருந்த உடைவாளை உறையிலிருந்துருவி எடுத்துக்கொண்டு தனது கழுத்தில்வைத்து, ஊட்டியை அரிந்துகொண்டு உயிரிழந்து விழுந்தான். அதுகண்டு சில ஒற்றர்கள் அதி சீக்கிரமாய்ப் போய் மனுச்சோழரிடத்தில், —"ஆண்டவரே! தேவரீருக்குக் கண்போல் விளங்கிய கலாவல்லப னென்னும் மந்திரியானவர் சேங்கன்றிறந்து கிடக்கின்ற தெருவிற்போய் அரையிலிருந்த உடைவாளைக்கொண்டு தமது கழுத்தை அரிந்துகொண் டிறந்துவிட்டார்"—என்று விண்ணப்பஞ் செய்தார்கள்.

### 26. மன்னனுமிறக்க மனந் துணிதல்

அதுகேட்ட அரசன்,—அளிந்த புண்ணில் அம்பு பட்டது போல் துடிதுடித்து, மிகவும் மனங்கலங்கி—"ஓகோ இதென்ன பாவம்! இதென்ன

பாவம்!! ஐயோ! கலாவல்லப னென்கிற மந்திரியானவன் நானிட்ட ஏவலைச் செய்வதற்குச் சம்மதித்தவன்போல் சென்றது, நம் அரசனுக்குக் கன்றைப் பற்றி வந்த பழி மாத்திரம் போதாது, நாமும் பழிசுமத்துவோமென நினைத்துத்தானோ! எனக்கு நேரிட்ட இடரை யறிந்தும் 'எரியுங் கொள்ளியை யேறத் தள்ளுவதுபோலவும்,' 'நீண்டெரியும் நெருப்பில் நெய்விடுவது போலவும், இவ்விடருக்குமே லிடருண்டாகும்படி செய்தானே! கப்பல் உடைந்து கலங்கும்போது தெப்பமும் உடைந்ததுபோல், கன்றின் பழிக்குக் கலங்கும்போது மந்திரி பழியும் விளைத்துக் கொண்டதே! எனக்கு வந்த துன்பமெல்லாம் தனக்கு வந்ததாக எண்ணி, என்னை இரவும் பகலும் காத்திருந்த மதியுள்ள மந்திரியை இனி எக்காலத்திற் காண்பேன்! இதைக் கேட்டவர்க ளெல்லாம் இதென்ன கொடுமையோ! 'கொள்ளை கொண்டவனைவிட்டு குறுக்கே வந்தவன் மேற் குற்றம் நாட்டியதுபோலவும்' 'கொண்ட மனையாளிருக்கக் கூலி வாங்க வந்தவளைத் தாலிவாங்கச் சொன்னது போலவும்,' பசுங்கன்றைக் கொன்ற தன் புதல்வனிருக்க, அவனை விட்டு அப்பழியை அமைச்சன்மேல் வைத்து அவனுயிரை வாங்கச்சொன்ன இவ்வரசன் அநியாயக்காரனென்று இகழ்ச்சி செய்வார்களே! 'அறிவில்லாதவன் செய்த காரியம் பயன் படாதது மாத்திரமோ! பழியும் பாவமுங் கொடுக்கும்' என்ற பெரியோர் வார்த்தைக்கு இலக்காயினேன்! ஐயோ! நான் என்ன காரியஞ் செய்தேன்! திருவாரூர்ப் பூங்கோயிலினிடத் தெழுந்தருளிய தெய்வமே! அடியவர்களுக்கு அருள் செய்கின்ற ஆண்டவனே! உன்னை நம்பியிருக்கின்ற அடியேனை இப்படியுஞ் சோதனை செய்யலாமோ! உன் திருவடிகளுக்கு ஆளாயிருக்கின்ற அடியேனை இப்படிப்பட்ட பழிக்கும் ஆளாக்கலாமோ!" என்று பலவிதமாகப் பரிதவித்துக்கொண்டு, "பின்னே துக்கந் தருவதான காரியங்களை முன்னே அறிந்து அக்காரியத்தைச் செய்யாது விடவேண்டும்; ஆலோசித்தறியாது செய்துவிட்டால் அதுபற்றித் துயரப்படாமல் மேல் செய்யத்தக்க காரியங்களை ஆலசியப்படுத்தாமல் செய்யவேண்டுமாதலால், வருவது தெரியாது மந்திரியை அனுப்பிய நாம் துக்கப்படுவதிற் பயனென்ன? இனி நாமே போய்ப் புத்திரனைத் தேர்க்காலி லூர்ந்து, மந்திரி பழிக்கு நம்முயிரைக் கொடுத்து விடுவோம்,' என்றெண்ணி, அரண்மனைக்குப் புறத்தில் வந்து புத்திரனை அழைத்து வரும்படி காவற்காரர்களுக்குக் கட்டளையிட்டார்.

## 26. இளங்கோ கொலைக்களம் புகுதல்

அவர்கள் கண்ணீர் வடிந்த முகத்துடன் "ஐயோ! மனுநீதி தவறாத மன்னனுக்கும் இப்படிப்பட்ட ஆபத்து நேரிடலாமா! நமது இளவரசனாகிய வீதிவிடங்கனிடத்திற் சென்று, 'ஐயா! உம்மை அரசன் அழைத்துவரச் சொன்னார்' என்று எவ்வாறு சொல்வோம்! என்ன செய்வோம்!' என்று துயர் கொண்டு வீதி விடங்கனிருக்கும் அரண்மனைக்குச் சென்றார்கள்.

அதற்கு முன்னதாகவே, பெரியோர்களிடத்துப் பிராயச் சித்த விதியைக் கேட்கப்போன வீதிவிடங்கன், தமது பிதாவினிடத்துப் பசுவானது வந்து முறையிட்ட சமாசாரத்தை ஒற்றர்களாலே கேள்விப்பட்டு, "இனி நமக்கென்ன பிராயச் சித்த மிருக்கின்றது! நமது

பிதாவானவர் செய்கிற தீர்ப்பின்படி நடந்துகொள்வோம்! என்று தேகம் மெலிந்து, மேனி வேறுபட்டு, மனந்தளர்ந்து, முகஞ் சோர்ந்து தமது அரண்மனையினிடத்து வந்திருந்தான். அப்போது அரசன் அனுப்பிய காவற்காரர்கள், அவ்வீதிவிடங்கனைக் கண்டு, கை குவித்து எதிர்நின்றார்கள். அவர்களைப் பார்த்து, "நீங்கள் என்ன காரியமாக என்னிடத்தில் வந்தீர்கள்?" என்று கேட்க அவர்கள் ஒன்றுஞ் சொல்லாது ஊமைகளைப்போல விம்மி விம்மி அழுது கண்ணீர் வடித்துக் கொண்டு நின்றார்கள். அதுகண்டு வீதிவிடங்கன், 'இவர்கள் ஏதோ ஒரு துன்பமான சமாசாரத்தைச் சொல்ல வந்தவர்கள் நாவெழாமல் நடுங்குகின்றார்கள்' என்று அறிந்து, "ஓ! காவற்காரர்களே! வந்தகாரியம் இன்னதென்று சொல்லாமல் துக்கப்படுவதில் பலனில்லை, அந்தக் காரியம் எனக்குத் தெரியும், ஆயினும் துயரப்படாமல் சொல்லுங்கள்" என்றான். அதுகேட்டு, "ஐயா எப்படிச் சொல்லுவோம்! என்ன செய்வோம்! எங்கே போவோம்! எல்லா குடியையுங் கெடுக்க எங்கே இருந்தோ தாட்சணியமில்லாத தலையீற்றுப் பசுவானது ஒன்று வந்து ஆராய்ச்சி மணியை அசைத்து இனி உலகத்தை ஆள்வாரில்லாமல் அழிந்து போகும்படி உம்மை அரசன் அழைத்துவரச் செய்வித்தது" என்று சொன்னார்கள். அதுகேட்டு வீதிவிடங்கனைச் சூழ்ந்திருந்த உறவினர் சினேகர் முதலானோரெல்லாம் "இப்படிப்பட்ட அவதி நேரிட்டதானே தியாகேசர் கோவிலுக்குப் போகத் தொடங்கியது! எள்ளளவும் இப்படி வருமென்று அறியோமே! இதற்கு என் செய்வோம்" என்று அழுது சோர்ந்தார்கள் அந்தப் பிரகாரமே அரண்மனையிலுள்ள மற்றவர்களும் புலம்பி ஆவலித்தார்கள்.

இந்த அழுகையொலியை வீதிவிடங்கன் தாயானவள் கேட்டு, இஃதென்ன காரணமென்று விசாரித்து, இன்ன காரணமென்று அறிந்து கொழுகொம்பற்ற கொடியைப்போல கீழே விழுந்து மூர்ச்சையடைந்து, சற்றே அறிவு வரத் தெளிந்து "பாவியாகிய விதி என் பாக்கியத்தை அழித்ததே! தீமையாகிய வினைப்பயன் என் செல்வத்தை அழித்ததே, வஞ்சகமாகிய ஊழ் என் வாழ்வை அழித்ததே! பல நாள் வருந்திய பெற்ற என் வயிறு பற்றுகின்றதே! பகீரென்று பதைக்கின்றதே! ஐயோ, என் புத்திரன் செய்த குற்றத்திற்கு என்னைக் கொன்றாலாகாதோ"—என்று பலவிதமாகச் சொல்லிக் கைநெரித்துக் கொண்டு, கண்ணீர்விட்டுக் கொண்டு, வயிறு பிசைந்து கொண்டு, மாரடித்துக் கொண்டு, வாயிலறைந்து கொண்டு, மனம் பதைத்துக்கொண்டு, மண்ணில் புரண்டுகொண்டு கோவென்று அழுதழுது புலம்பினாள்.

அப்போது வீதிவிடங்கனென்கிற இராஜபுத்திரன், அழுகின்ற தாய் முதலானவர்களைப் பார்த்து,—"வீணாக நீங்கள் அழுது புலம்புகின்றதனால் என்ன பிரயோஜனம்! பிரமதேவன் முதலான கர்த்தாக்களுக்கானாலும் விதியைக் கடக்கக் கூடுமோ! எலும்பு நரம்பு தோல் முதலான அசுத்தங்களால் கட்டிய இந்தச் சிறுவீட்டை நிலையென்று நம்பப்படுமோ? என்று பிறந்தார்களே! அன்றே இறந்தார்களென்று நினைக்க வேண்டும் ஆறிலுஞ் சாவு நூறிலும் சாவென்றும், நிலத்தில் முளைத்த பூண்டுகள் நிலத்திலே மடியுமென்றும், சாமானியரான அசேதனர்களும் சொல்லிக்

கொள்ளுகின்றீர்களே; அறிவுள்ள உங்களுக்குத் தெரியாமற் போனதென்ன? இதுபற்றி எவ்வளவுந் துயரப்பட வேண்டுவதில்லை"—என்று பலவிதமான உறுதி வார்த்தைகள் கூறி, அவ்விடத்திலிருந்து புறப்பட்டு மனதில் நாணமும் நடுக்கமும் உண்டாகத் தந்தையாரிடத்திற்குப் போய்த் தொழுது வணங்கித் தூரத்திலே நின்றான். அப்படி நின்ற புதல்வனை மனுச் சக்கரவர்த்தியானவர் நேரே பாராதவராய் வேறொருவன் முகத்தைப்பார்த்து, "இவன் இளங்கன்றை எவ்வாறு கொன்றானோ, அவ்வாறு கொலை செய்யப்படுவதற்குத் தக்க குற்றவாளியாயினான்" என்றார். அப்பொழுது புத்திரன், பசுங்கன்றைக் கொன்ற பாவியாகிய நான் அப்போதே உயிர் விட்டுப் பழிக்குப்பழி சரிக்கட்டுவேன். ஆனால், தேவரீர் கட்டளை எப்படி நடப்பிக்கிறதோ, அப்படியே நடப்போமென்று அக்கட்டளையை எதிர்பார்த்திருந்தேன்" என்று விண்ணப்பம் பண்ணிக்கொண்டான். உடனே அரசன் கொலை வீரர்களை அழைப்பித்து, "இந்தக் குற்றவாளியை ஏற்பாட்டின்படி கடுங்காவல் செய்து கன்று இறந்து கிடக்கின்ற வீதியிற் கொண்டுபோய்க் கிடத்துங்கள்" என்று கட்டளையிட்டார். அந்தக் கட்டளைக்கு அஞ்சி, அவ்வீரர்கள் உருவிய கத்தியோடு சூழ்ந்து, நடுவே இராஜபுத்திரனைக் காவல் செய்து நடத்திக்கொண்டு போக, மனுச்சக்கரவர்த்தியும் மலைபோல் உயர்ந்த ஒரு தேரிலேறிக்கொண்டு பின்னே நடந்தார்.

அதுகண்ட அந்நகரத்திலுள்ள ஜனங்களெல்லாம் "இந்த இராஜகுமாரனுக்கு ஐசுவரியமும் அழகும் அறிவும் குறைவில்லாது கொடுத்த தெய்வம் இடையிலே இந்தப் பழிக்கு ஆளாகச்செய்து, 'நல்ல விதி நடுவே இருக்கக் கோணிய விதி குறுக்கே வந்த' தென்று சொல்வதற்குச் சரியாகிவிட்டதே! இன்பத்தை அனுபவிக்கின்ற இளமைப் பருவத்தில் எடுக்கப்படாத பழிவந்து சூழ்ந்து, "சோறுண்ணும்போது தொண்டை விக்கிக் கொண்டதென்பதுபோல்' துன்பத்தை உண்டுபண்ணியதே! வெண்ணெய் திரண்டு வரும்போது தாழி உடைந்த தென்பதுபோலக் கலியாணக் கோலங் கொள்வதற்கு இசைந்துவரும் பருவத்தில் இச்செல்வத் திருமேனிக்குத் தீங்கு உண்டாகும்படி நேரிட்டதே!—சிவதரிசனத்துக்குப் போனவிடத்தில் சேங்கன்றின் பழி வந்து 'கிணறு வெட்டப் போனவிடத்தில் பூதம் புறப்பட்டதுபோல்' தோன்றியதே!--'கடைகொள்ளப்போகும்போது கள்ளனெதிர்ப் பட்டதுபோல்' அருள்பெற்று வரப்போகும்போது இந்தப் புத்திரனுக்கு அந்தக் கன்றானது எமனைப்போல எங்கேயிருந்து எதிர்ப்பட்டதோ!—இந்தக் குமாரனைப்பற்றி நமக்கெல்லா முண்டாகிய இரக்கம் பழிவாங்கவந்த பசுவுக்கு முண்டாயிருக்குமானால், ஆராய்ச்சிமணியை அசைத்து முறையிட்டுக் கொள்ளாதே! ஐயோ! இந்தப் பசுவானது சூரிய வமிசத்தை அழிக்கத் துசங் கட்டிக்கொண்டதே!—இனி நம்மரசனுக்குப் பிற்காலத்தில் நீதியுடன் அரசாட்சி செய்யத்தக்க அரசனைப்பெறாமல் எல்லா உயிர்களும் நிலைதடுமாறி நின்று மயங்குமே!—இந்த இராஜபுத்திரன் முன்பு சேனை சூழத் தேரிலேறிவந்த மங்கலமாகிய கோலத்தைக் கண்டு மகிழ்ச்சியடைந்த நாம்--இப்போது இப்புத்திரன் காவல் சூழக் காலால் நடந்து வருகின்ற பரிதாபமாகிய கோலத்தைப் பார்ப்பதற்கு என்ன பாவஞ் செய்தோமோ!—இந்தப் புத்திரனுயிர்க்கு ஈடாக நம்முயிரை

யெல்லாங் கொடுத்துவிடுவோமென்றாலும் அரசன் சம்மதிக்க மாட்டாரே! —இந்தப் புத்திரன் உயிரிழந்தால் பிறகு அரசனும் உயிரிழப்பார். பின்பு நாமிருந்து என்ன செய்வது!—இதற்கு முன் இறந்துவிடுவதே சுகமாக விருக்கின்றதே! ஆ! ஆ!! நம்மரசனைப்போல இப்படிப்பட்ட அருமையான நீதியோடு அரசு செய்கிறவர்கள் முன்னுமில்லை பின்னுமில்லையே — தியாகராஜப் பெருமான் நமது இராஜனுடைய மனதைச் சோதிக்கும்படி யாகவே இவ்விதஞ் செய்வித்ததாகத் தோன்றுகின்றதே!—தருமதேவதை நமது அரசனது உண்மையாகிய நீதியின் தன்மையைச் சோதிக்கும்படி இவ்விதஞ் செய்வித்ததாகத் தோன்றுகின்றதே!"—என்று பலவிதமாக அவரவர்களும் தங்கள் தங்களுக்கு நேரிட்ட ஆபத்தென்று நினைத்துப் புலம்பியும் அதிசயித்தும் நின்றார்கள்.

ஆகாயத்தினிடமாக இவ்வதிசயத்தைப் பார்க்கும்படி வந்திருக்கின்ற தேவர்களெல்லாம்,—"இந்த மனுச்சக்கரவர்த்தியானவன் செய்யத் துணிந்த காரியம் இவர்க்கு முன்னிருந்த அரசர்களுக்குச் சொல்லத்தான் கூடுமோ? அல்லது நினைக்கத்தான் கூடுமோ? இம்மனிதர்களைப் பார்க்கி லும் உயர் பிறப்பினராகிய நம்மவர்களுக்குத்தான் செய்யக்கூடுமோ? இவ்வரசன் நீதியிலும் மனோதிடத்திலும் சிறந்தவனாக இருக்கின்றான். இவனுக்குச் சிவகடாக்ஷங் கைகூடுமல்லாது மற்றவர்களுக்குக் கூடுமோ? ஆயினும், இன்னும் நடக்கப்போகிற அற்புதங்களை யெல்லாம் பார்த்தறிவோம்" என்று புகழ்ந்து சொல்லி நின்றார்கள்.

## 27. விதிவிடங்கன் வீதியிற் கிடத்தல்

இந்தப் பிரகாரமாகச் சொல்லிக் கொண்டு நிற்க, மனுச்சக்கரவர்த்தியானவர் அந்தப் பசுங்கன்று இறந்து கிடக்கின்ற வீதியிற் போய், தமது புத்திரனைக் காவல் செய்து, முன்னே நடத்தி வந்த கொலை வீரர்களைப் பார்த்து,—"இனிக் காலதாமதம் பண்ணாமல் இந்தப் பசுங்கன்றை எடுத்து அப்புறத்தே வைத்து, அவ்விடத்தில் இவ் வீதிவிடங்கனைக் கிடத்தி வையுங்கள்" என்று கட்டளையிட்டார். அது கேட்டுக் கொலைவீரர்கள் மனம் பதைத்து மதிமயங்கி நின்றார்கள். அப் போது தந்தையாகிய மனுச்சக்கரவர்த்தியின் கட்டளையைக் கேட்டு மயங்கி நிற்கின்ற கொலைவீரர்களை வீதிவிடங்கன் பார்த்து,—"நீங்களேன் மயங்கி வருந்துகின்றீர்கள்? அந்தக் கட்டளையின்படி நானே செய்து கொள்ளு கிறேன்"—என்று சொல்லித் தியாகராஜப் பெருமான் சந்நிதிக் கெதிராகத் திரும்பி இரண்டு கைகளையுங் குவித்துச் சிரசின் பேரில் வைத்துக் கொண்டு,—சிறுபிள்ளைக்குத் திருப்பாற்கடலை அழைத்துக் கொடுத்த தியாகராஜப் பெருமானே! அகண்ட பரிபூரண சச்சிதானந்த சுயம்பிரகாச சாட்சாத்கார சிதாகாச சொரூப சின்மயனாகிய சிவசங்கரனே! அடியேன் பசுங்கன்றைக் கொன்ற பாதகனாயினேன். அதுவும் போதாமல், ஐயோ! எனக்கு நல்வழியைக் கற்பித்துக் கண்போல் விளங்கிய நின்னடிமையிற் சிறந்தவனாகிய மதியுள்ள கலாவல்லபனென்கிற மந்திரியையும் இறப்பிப் பதற்குக் காரணமாகியு மிருந்தேன்! இப்படிப் பட்ட என்போல் பாவிக

ளெங்கே யுண்டு? என் பிதா தண்டிக்கப் போகிற தண்டனை என் பாதகத் துக்குத் தக்க தண்டனையு மல்லவே! என்ன செய்வேன்! பாவியாயினும் எனக்கு வேறொரு கதியுமில்லாதபடியால், முன் தாயைக் கூடித் தந்தையைக் கொலை செய்தவனது மாபாதகத்தை மன்னித்து அனுக் கிரகஞ் செய்தது போல்,-அடியேனுக்கும் அனுக்கிரகஞ் செய்யவேண்டும்; என் பிதாவுக்கும் எனக்கும் உரித்தாகியிருந்த மற்றவர்களுக்கும் என்னைப் பற்றிவந்த பழிபாவங்களை நீக்கியருள வேண்டும்; என்பொருட்டு இறந்த மந்திரியை எழுப்பிக் கொடுத்தருள வேண்டும்,—இதோ இந்தப் புலா லுடம்பைப் போட்டுவிட்டு வருகிறேன்.—என்னையுந் திருவடி நீழலிற் சேர்த்துக்கொள்ள வேண்டும்,—இந்தப் பிறப்பிலே எனக்குத் திருவடி கிடையாதானால் வரு பிறப்பிலாயினும் கிடைக்கத்தக்க நல்லறிவும் பேரன்பு முள்ளவனாகப் பிறப்பிக்க வேண்டும்"—என்று சொல்லி விண்ணப்பஞ் செய்து கொண்டு திரும்பி நின்று, மாதா, பிதா, குரு முதலானவர்க ளுக்கும் மனத்தினால் வந்தனஞ் செய்து, 'இம் மனுச்சோழருடைய செங்கோல் மாறாது நிலைபெற்றிருக்க வேண்டும்" என்று இஷ்ட தெய்வத்தைப் பிரார்த்தித்துக் கொண்டு பஞ்சாக்ஷரத்தை உச்சரித்துக் கொண்டு விழுந்து வடக்கே தலையும், தெற்கே காலும் வைத்து, இரண்டு கண்களையும் மூடிக்கொண்டு, சிந்தையைச் சிவபெருமான், திருவடித் தியானத்தில் வைத்துக் கொண்டு யோகநித்திரை செய்பவன்போல் உடம்பைக் கிடத்தினான்.

## 28. மகன்மேல் தேரை மன்னன் செலுத்தல்

அப்போது மனுச்சக்கரவர்த்தியானவர் சிவத்தியானஞ் செய்து கொண்டு, தியாகேசர் சந்நிதியைநோக்கி-"அடியேனை ஆட்கொண்ட ஆண்டவனே! இவ் வீதிவிடங்கனென்பவன் பசுங்கன்றைக் கொலை செய்தானென்பது பிரத்தியக்ஷமாக உண்மையென்று வெளிப் பட்ட படியால், இந்தக் குற்றவாளியின் கொலைப்பாதகந் தீரத்தக்க தண்டனை செய்வதற்குச் சக்தியில்லாத அடியேன், தேவரீர் திருவுளப் பாங்கின்படி, மேலோர் ஏற்படுத்திய தரும நூல்களில் கொலை செய்தவனைக் கொலை செய்யக் கடவரென்று விதித்திருக்கின்ற விதியின்படி, விதிமாறாட்ட முதலான குற்றங்களுக்குச் சிறிது மிடங்கொடாமல், இவனைக் கொலை செய்யும்படி திரிகரண சுத்தியாகத் தீர்ப்பிட்டுக் கொண்டு, இதோ தேர்க்கா லிலூர்ந்து கொலைசெய்யத் தொடங்குகின்றேன். இத்தீர்ப்பினிடத்துத் தேவரீர் திருவடி சாக்ஷியாக என் மனமறிந்து யாதொரு பிசகும் நேரிட்ட தில்லை. என்னையு மறியாது ஏதாகிலுங் குறை நேரிட்டிருக்குமானால் அதைத் தேவரீர் மன்னித்துக்கொள்ள வேண்டும். இந்தக் குற்றவாளியின் பாபாத்மாவை அப்பாபத்தினின்று நீங்கும் வண்ணந் தக்க தண்டனை செய்வித்தருளி, மறுபிறப்பிலாயினும் கடைத்தேறும் வழியைக் கடாக்ஷிக்க வேண்டும்" என்று விண்ணப்பஞ் செய்துகொண்டு, தேரிற் கட்டிய குதிரைகளை விழுந்து கிடக்கின்ற வீதிவிடங்கன் கழுத்தடியிற் சக்கர மழுந் தும்படி நேராக முடுக்கித் தேரை நடத்தினார். அப்போது தேர்ச்சக்கர மானது வீதிவிடங்கன்மேல் அழுந்திக் கறகற வென்று இழுத்துக்கொண்டு அதி வேகமாகச்செல்ல உடல் குழம்பிச் சின்னா பின்னாப்பட்டு, நசுக்குண்டு,

கையாற்பிசைந்து, ரசம பிழிந்த மாங்கனியின கோதுபோல உடலவேறு உயிர் வேறாக இறந்தான

அதுகண்ட தேவாகளெல்லாம, "அருமையாகப் பெறற புத்திரனை நோககாமல புண்ணியததை நோககிய கண்ணியவாலே! உலககுச சுபகர முண்டாவதாக"—என்று வாழததிக கறபகப பூமாரி பொழிந தாாகள. தேவ துநதுமிகள அதிாநதன. அநநகரததாரெலலாம.—இபபடிப்பட்ட நீதி செலுததுகின்ற மகாராஜனை எனன தவஞ் செயது பெறறுக கொணடோம"—என்றும,—"ஐயோ! இனி எககாலததில வீதிவிடஙகனைக காணபோம"—என்றும—இனபக கணணீரும துனபக கண்ணீரும விட்டுககொணடு நின்றாாகள உடனே மனுசசககரவாததி யானவர் மநதிரியின பழிககாகத தம உயிரைக கொடுககத துணிநது தேரி லிருநது கீழே யிழிநதார்.

## 29. இறைவன் வெளிப்படுதல்

அப்போது, ஸ்ரீகணடர்,—அனநதேசர்,—காலச செநதீயுருத்திரர்,—துவாதச ருததிரர்,—ஏகாதச ருத்திரா,—புத்தியட்டகர்,—கூர் மாண்டர்,—அட்கர்,—சத வுருததிரர்,—அஷட மூாத்திகள்,—நீலலோகிதா,—கஙகாள கபாலா,—அசுவாரோகணா,—அஷ்டபைரவர்,—வீரபததிரர்,—சககரதரா,—நானமுகா முதலான பதமூாததிகளும,—கபாலிகன,—அசன,—புதன,—வசசிர தேகன,—பிநாகி,—கிருதசாதி பன,—உருததிரன, பிஙகலன,—சாநதன,—க்ஷயாநதகன,—பலவான,—அதிபலவான,—பாசாதகன,—மகாபலவான,—சுவேதன,—ஜயபததி ரன,—தீாககபாகு,—ஜலாநதகன,—மேகவாகனன,—சௌமியகேசன,—சடாதரன, லக்ஷ்மீதரன,—ரதநநதிரன,—ஸ்ரீதரன,—பிரசாதன,—பிர காசன,—விததியாதிபன,—ஈசன, சாவஞ்ஞன,—பலிபபிரியன,—சமபு,—விபு,—கணததியக்ஷன,—கிரியக்ஷன,—திரிலோசனன முதலான பததததலைவாகளும,—இநதிரர்,—சநதிரா,—சூரியா முதலான தேவாகளும,—வசிட்டா,—அகததியா,—புலததியர்,—பராசரர்,—வியாசா முதலான முனிவர்களும்,—கணணுவர்,—கருககர்,—சதானநதர் முதலான இருடி களும,—அசுரர்,—அநதரா,—ஆகாயவாசிகள,—விஞ்சையா,—விததியா தரா,—கருடா,—காநதாவா,—இயககா,—கினனரா,—கிமபுருடா,—சிததா,—நிருதர்,—பூதா,—பைசாசா,—போகபூமியா,—உரகர் முதலான கணங களும,—நநதி,—பிஙகிருடி,—சணடன,—பிரசணடன,—சஙகு கனனன—வாணன,—அநதகன,—குமபோதரன,—விருபாக்ஷன முதலான பிர மத கணஙகளும சூழநது துதிதது வரவும,—பேரிகை,—மததளம,—தாளம,—சஙகம,—சசசரி,—தடாரி முதலான வாததியஙகள முழஙகி வரவும;

"எல்லாமவல்ல இறைவன் வந்தான்
நல்லோர்க்கருளும் நாயகன் வந்தான்
முப்புரமெரித்த முன்னோன் வந்தான்
தப்பிலாக் கருள்செய்ந் தயாநிதி வந்தான்
வள்ளல் வந்தான் மகாதேவன் வந்தான்
எள்ளி லெண்ணெய்போ லிருப்பவன் வந்தான்
அன்பாக் கருளும் ஐயன் வந்தான்
இன்பங் கொடுக்கும் இறைவன் வந்தான்
முத்தொழில் நடத்தும் முதல்வன் வந்தான்
பத்தர்கள் புகழும் பத்தர்தோன் வந்தான்
தேவர்கள் போற்றுந் தியாகன் வந்தான்
மூவர்கள் வாழ்த்தும் முக்கண்ணன் வந்தான்"

என்று சின்னங்கள் பிடித்து வரவும்,—தும்புருநாரதர் யாழிசை பாடிவரவும்,—உருத்திர கணிகையர் நடனஞ் செய்து வரவும்,—ஒற்றை வெண்குடை, சாமரை முதலான மங்கலவிருதுகள் நெருங்கி வரவும்,—ஆனைமுகக் கடவுளும், ஆறுமுகக் கடவுளும் — இருபக்கங்களிலும் இசைந்து வரவும்—உலகமாதாவாகிய உமாதேவியார் இடது பக்கத்திலிருக்க, ஜடாமகுட திரிநேத்திர காளகண்ட சதுர்ப்புஜம் முதலானவை விளங்க, தாமசொரூபமாகிய இடபவாகனத்தின் மேல் சர்வ மங்கல சக்தியே திருமேனியாகக் கொண்ட தியாகராஜப் பெருமான் எழுந்தருளி, மனு சோழ ராஜனுக்குமுன் தரிசனங்கொடுத் தருளி, குளிர்ந்த நிலவு ததும்பி வீசுகின்ற புன்னகை காட்டி, அரச னுக்கு ஜில்லென்று உடம்பும், உள்ளமும், உயிரும் குளிரும்படி செய் வித்து, கருணை யென்னும் வெள்ளம் நிறைந்து, பொங்கித் ததும்பி, பெருக்கெடுத்து, ஒளிகொண்டோங்கி, மடைதிறந் தோடுகின்ற மலர் போன்ற திருக்கண்களால் அருள் நோக்கஞ்செய்து, அவ்வரசனுக் குண்டாயிருந்த விடாய் முழுதுந்தீர்த்து,—"நம்மிடத்து நம்பிக்கையும் பேரன்பும் வைத்து, மனுநீதி தவறாது அரசாட்சி செய்கின்ற மனுச் சோழனே! நீ நடத்துகின்ற நீதியின் பெருமையை உலகத்தவர் செவ்வையாகத் தெரிந்து கொள்ளும்படி நாமே இவ்வாறு சோதித்தோம்! இனி ஒன்றுக்கும் அஞ்சவேண்டாம்" என்று திருவாய் மலர்ந்தருளி இறந்து கிடக்கின்ற பசுங்கன்றும்,— கலாவல்லபனென்னும் மந்திரியும், வீதிவிடங்கனென்னும் இராஜகுமாரனும் உயிர் பெற்று எழுந்திருக்கும் படி கடாக்ஷித்தருளினார்.

---

## 31 மாதிருக்கும் பாதியனை மன்னன் புகழ்ந் தேற்றல்



அந்தக்கணமே நித்திரை நீங்கி எழுகின்றதுபோல, இளங்கன்று தன் உயிர்பெற்று எழுந்து தன் தாய்ப் பசுவினிடத்திற் சென்றது மந்திரியும் புதல்வனும் உயிர் பெற்றெழுந்து, ஆண்டவனை வணங்கி, அருகே மலர்ந்த முகத்தோடு வந்தனை செய்து

கொண்டு மகிழ்ந்து நின்றார்கள். அது கண்டு அந்நகரத்திலுள்ள ஜனங்களும் மற்றவர்களும் தம்மை அறியாத பெருங் களிப்புடையவர்களாய்ச் சிலர்,—'அற்புதம், அற்புதம், அற்புதம், அற்புதம்,'—என்று ஆடினார்கள். சிலர்,—'பண்ணிய பூசை பலித்தது, பலித்தது'—என்று பாடினார்கள்; சிலர்,—'சூரியகுலந் தோன்றியது, தோன்றியது' என்று துதித்தார்கள்; சிலர்,—'துக்கம் நீங்கியது, சுகம் கிடைத்தது' என்று துள்ளினார்கள்; சிலர்,—'குறையெல்லாந் தீர்ந்தது, குறையெல்லாந் தீர்ந்தது'—என்று கொண்டாடினார்கள்; சிலர்,—'கும்பிட்ட தெய்வம் குறுக்கேவந்தது'—என்று குதித்தார்கள்; சிலர்,—'எம்பெருமா னெதிர்ப்பட்டா லென்ன முடியாது' என்று எக்களித்தார்கள். சிலர்,—ஒருவனையொருவர் கட்டித் தழுவிக்கொண்டு ஒரு காதமட்டும் ஓடித்திரும்பினார்கள்; சிலர்,—'கலக்கந் தீர்ந்தது களிப்பு வந்தது' என்று கைகொட்டினார்கள்; சிலர் தோள் தட்டிக்கொண்டும், தொடை தட்டிக்கொண்டும், முகரோமத்தை முருக்கிக் கொண்டும், முகமலர்ந்துகொண்டும், உடல் நிமிர்த்திக்கொண்டும் உலாவி நின்றார்கள்; சிலர்,—'வாழ்வுவந்தது' என்று மனம் பூரித்தார்கள்.

இப்படி அவரவர்களும் அளவில்லாத ஆனந்த முடையவர்களாய் 'இழந்துவிட்ட பொருள் எதிர்வரப் பெற்றவர்கள் போல்' சந்தோஷ கோஷஞ் செய்துநிற்க, மனுச்சக்கரவர்த்தியானவர், கங்கையும் இளம் பிறையும் விளங்குகின்ற சடா மகுடத்தையும்,—திரிபுண்டரமுந் திலகமும் திருநோக்கும் விளங்குகின்ற நெற்றியையும்,—அருள் ததும்பி வழிகின்ற திரு நோக்கங்களையும்,—சங்கு குண்டலமணிந்து தாழ்ந்த செவிகளையும்,—நறுங்குமிழ்போன்று விளங்குகின்ற நாசியையும்,—வேதமாகிய தெள்ள முதத்தைக் கொள்ளை கொண்டுண்ணும்படி அன்பர்களுக்கு அருளிச்செய்கின்ற செம்பவளம் போன்ற திருவாய்மலரையும், வானவர்க்குயிர் கொடுத்த மணிகண்டத்தையும்,—கொன்றை மாலை யணிந்து குலவரைகள் போலுயர்ந்த திருத்தோள்களையும், - மானும் மழுவும், வரதமும், அபயமுங் கொண்ட மலர்க்கரங்களையும் —சிவந்து மெல்லென்று திருவருள் பழுத்து ஆனந்தமொழுகிப் பத்தர்கள் மனத்தில் தித்தித்திருக்கும் பாதமலர்களையும், செம்பவள மலைபோன்ற திருமேனியையும்,—பச்சைக்கொடி படர்ந்தது போன்று பார்வதியார் மகிழ்ந்து விளங்குகின்ற பாகத்தையுங் கண்குளிரக் கண்டு,—களிப்படைந்து,—ஆனந்த நீர் ஊற்று நீர்போல் சுரந்து சுரந்து,—நெக்கு விழுந்து விழுந்து மார்பினிடத்து வண்டலாடவும்,— உடல் குழைந்து பட விதிர் விதிர்த்துச் சிலிர் சிலிர்த்து, மயிர்க் கூச்செறிந்து என்பு விட்டுருகியும்,—மனங் கனிந்து கனிந்து கசிந்து கசிந்து நெகிழ்ந்து நெகிழ்ந்துபடபடவென்று பதறிப் பதறி உருகியுருகி ஆனந்த வெள்ளத்தி லழுந்தி யழுந்திப் பரவசமாகியும்,—'சிவசங்கர சிவசங்கர சிவசங்கர சிவசங்கர சிற்பர தற்பர சிற்குண சின்மய சிவ சிவ'—என்று வாய்நீர் சுரந்து பாடிப் பாடி நாக்குழறித் தழும்பேறியும், - 'ஹரஹர'—என்று ஆனந்தக் கூத்தாடியும், தண்டுபோல் அனந்த முறை கீழே விழுந்து விழுந்து வணங்கி உடம்பிற் புழுதியாடியும், குளிர்ச்சி பொருந்திய சந்திர பிம்பம் போன்ற முகத்தின்கண் முத்துமாலை யணிந்ததுபோல வியர்வரும்பி இளநகை தோன்றி மலர்ந்து விளங்கக் கைகளைக் கூப்பிச் சிரசின்மேல் வைத்துக் கொண்டு, அன்பே வடிவமாகி நின்று,—"பிரமன் முதலாகிய பெரிய தேவர்களெல்லாம் அரிய தவஞ் செய்தும் கனவினுங் காண்பதற்கருமை

யாகிய கடவுளே!—அன்பு அணுவளவு மில்லாத அடியேனுக்கு அருமை யாகிய திருமேனியை கனவிலே எளிதாகக் காட்டியருளிய தேவரீர் பெருங்கருணையை என்னென்று துதிப்பேன்!--பொய்யுலகத்தை மெய் யென்று நம்பிப் புன்மையாகிய போகத்தை விரும்பி, புவியாண்டு, மீளா நரகில் விழத் துணிந்திருந்த அஞ்ஞானத்தை யுடைய அடியேனையும் ஒரு பொருளாகத் திருவுள்ளத்திற் கொண்டு காட்சி கொடுத்தளிய கருணைக் கடலே!—கண்ணுண்மணியே!—கரும்பின் சுவையே,—கற்பகக் கனியே! —கருணை நிதியே!—தேவரீர் திருவருட் பெருமையை என்னென்று சொல்வேன்!

யான் என்கின்ற ஆணவப்பேயும்
என தென்கின்ற இராட்சதப் பேயும்
மாயை யென்கின்ற வஞ்சகப் பேயும்
பெண்ணாசை யென்கின்ற பெரும் பேயும்
மண்ணாசை யென்கின்ற மானிடப் பேயும்
பொன்னாசை யென்கின்ற பொல்லாப் பேயும்
குரோத மென்கின்ற கொள்ளிவாய்ப் பேயும்
உலோப மென்கின்ற உதவாப் பேயும்
மோக மென்கின்ற மூடப் பேயும்
மத மென்கின்ற வலக்காரப் பேயும்
மாற்சரிய மென்கின்ற மலட்டுப் பேயும்

மனப் பேயோடு கூடி இரவும் பகலும் ஆட்ட, ஆடி ஆடி யிளைக்கின்ற அடியேனைக் காத்தருளத் திருவுள்ள மிரங்கித் தரிசனமருளி, துன்பத்தை நீக்கி இன்பத்தை யளித்த எம்பெருமானே!—என்னுண்டவனே!—என் தந்தையே!—என் தாயே!—என் குருவே!—என் தெய்வமே!—என் குல தெய்வமே!—என் உயிர்த்துணையே!—என் அறிவுக்கறிவாகிய இறை வனே!—தேவரீர் திருவடிப்புகழை வேதங்களு மறியாது விழித்துக் கொண்டு தேடித் தேடி இளைக்கின்றன வென்றால், கிருமி கீடங்களினுங் கீழ்ப்பட்ட அசேதனனாகிய அடியேன், எப்படி அறிந்து துதிப்பேன்! தேவரீர் திருவடிக்காட்சி பலிக்கும்படி செய்வித்த இந்தப் பசுவுக்குங் கன் றுக்கும் என்னை அடிமையாகக் கொடுப்பேன்; அல்லது வேறென்ன கைம்மாறு செய்வேன்!—தேவரீர் திருமேனிக் காட்சி கிடைப்பதற்குக் காரணமாகிய வீதிவிடங்கனென்னும் புத்திரன் இன்றுதான் எனக்குப் புத்திரனாயினன்!—தேவரீரது திருவருட் கோலத்தைக் காணப்பெற்ற அடியேனுக்கு இனி என்ன குறை இருக்கின்றது!—அன்பர்களுக்கு இன்ப மளிக்கின்ற ஆண்டவனே!—தேவரீர் கிருபா நோக்கஞ் செய்யப் பெற்று உடல் பூரித்தேன்!—உள்ளங் குளிர்ந்தேன்!—உயிர் தழைத்தேன்!—பசுங் கன்றும் மந்திரியும் மைந்தனும் உயிர்பெற்று எழுந்திருக்கவும் வரம் பெற்றேன்!—வாழ்வடைந்தேன்!—துக்கமெல்லாம் நீங்கினேன்;—சுகப் பட்டேன்!—மனத்துக்கு அடங்காத மகிழ்ச்சி கொண்டு நின்றேன்!—இனி அடியேனுக்குத் தேவரீர் திருவடியினிடத்துத் தவறாத தியானமும், சலியாத அன்பும் தந்தருளி யென்னை அடிமைகொள்ள வேண்டும்.—குற்றஞ் செய்தாலுங் குணமாகக் கொள்கின்ற குணக்குன்றே!—பன்றிக்குட்டிக்கு முலைகொடுத்த பரம்பொருளே!—புலி முலையைப் புல்வாய்க்கு ஊட்டிய புண்ணிய மூர்த்தியே!—கல்லடிக்கும் வில்லடிக்குங் கருணைபுரிந்த கருத்

தனே! திருவாரூர்ப்பூங்கோயிலிலெழுந் தருளிய தியாகராஜப் பிரபுவே! போற்றி! போற்றி!!" என்று தோத்திரஞ் செய்து தொழுது நின்றார்.

### 32. பெருமான் அருள் புரிந்து மறைய அரசன் ஆலயம் புகுந்து வணங்கல்

அரசன் செய்ததோத்திரங்களைத் திருச்செவி ஏற்றுக் கொண்டு தியாகராஜப் பெருமான்,—"நம்மிடத்தில் அன்புள்ள அரசனே! நீ இன்னும் நோயற்ற வாழ்வுங் குறைவற்ற செல்வமும் பெற்று, நமது அருளே துணையாகக் கொண்டு, இவ்வுலகத்தை யெல்லாம் ஒரு குடையின்கீழ் ஆண்டு, மெய்யறிவு விளங்கி, மாறாத மகிழ்ச்சியோ டிருக்கக் கடவாய்! பின்பு எக்காலத்தும் மீளாத பேரானந்த போகத்தை நாம் தருவோம்"—என்று அருள் புரிந்து கணங்களுடன் அந்தர்த் தானமாக எழுந்தருளினர்.

அது கண்டு மனுச்சக்கரவர்த்தியானவர், பின்பும் கீழ்விழுந்து நமஸ் கரித்துத் தொழுது, தோத்திரஞ் செய்து கொண்டு, அப் பசுவையுங் கன்றையும் உபசாரத்துடன் நல்ல புல்லுள்ள இடங்களில் மேய்த்து மிகுந்த சுகத்திலிருக்கும்படி செய்வித்துக் கலாவல்லபனைக் கட்டியணைத்துக் கொண்டு—"என் புத்திரன் பழிக்கு ஈடாகச் செய்தற்கரிய செய்கையைச் செய்துகொண்ட அன்புள்ள அமைச்சனே!—உன்போலெனக் கினிய வர்கள் உண்டோ!"—என்று உபசரித்து, பின்பு, வீதிவிடங்கனென்னும் மைந்தனை எடுத்து மடிமேல் வைத்து, முத்தங்கொடுத்து, உச்சி மோந்து, —"யான் செய்த புண்ணியத்தால் கிடைத்த புத்திரனே! உன்னாலல்லவோ உயர்வை யடைந்தேன்" என்று உபசரித்து, பின்பு மைந்தனும் மந்திரியுந் தாமுமாகக் கமலாலயமென்னும் கோயிலுக்குச் சென்று ஆசாரத்தோடும் அன்போடும் விதிப்படி சிவபெருமானைத் தரிசனஞ் செய்து, அபிஷேகாதி சிறப்புகளும் அநேகம் திருப்பணிகளுஞ் செய்வித்துத் தொழுது, வணங்கித் துதித்து, வலங்கொண்டு, விடைகொண்டு புறப்பட்டு, அந் நகரத்திலுள்ள ஜனங்களெல்லாம் மனங்களித்து வாழ்த்திப் புகழும்படி மங்கல வாத்தியங் கள் முழங்க, வீதியை வலமாக வந்து, அஷ்ட மங்கலங்களேந்திய சுமங்கலி களும், அந்தணர் அமைச்சர் முதலானவர்களும் வாழ்த்தி மங்கலச் செய்கை களோடும் எதிர்கொள்ள அரண்மனையிற் சென்று வேதியர், துறவினர், விருந்தினர், உறவினர் முதலானோர்களுக்கு அவரவர்க்குத்தக்க வரிசை களைச் செய்து மகிழ்வித்து, கற்புநிலை தவறாத மனைவியார் மனங் குளிர்ந்து களிக்கும்படி மைந்தனைக் காண்பித்து, மந்திரி முதலானவர்கள் சூழச் சிவானுக்கிரகத்தால் சிங்காசனாதிபதியாய், உலகத்தை யெல்லாம் ஒரு குடைநிழலில் வைத்து அறநெறிப்படியே அரசாட்சி செய்திருந்தார்.

**வாழ்த்து**

நேரிசை வெண்பா

வாழி மனுச்சோழர் வாழி யவர்மைந்தன்
வாழியவர் மந்திரியாம் வல்லவனும் — வாழி யவர்
செங்கோன் முறையவர்தஞ் சீர்கேட் பவர்வாழி
எங்கோன் பதம் வாழியே.

திருச்சிற்றம்பலம்

**மனுமுறை கண்ட வாசகம் முற்றிற்று.**

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# ஒழிவி லொடுக்கம்

## ஒழிவிலொடுக்கப் பாயிர விருத்தி

## சிறப்புப் பாயிரம்

நேரிசை வெண்பா

**வள்ளல் குருராயன் வாதுவென்ற சம்பந்தன்**
**வள்ளன் மலர்த்தாட லைமேல் வைத்து — னுள்ளத்**
**தழிவிலடுக் குந்தேனை யன்பரெலா முண்ண**
**வொழிவி லொடுக்கநூ லோர்ந்து**

— ⸻ —



இச் செய்யுள் கருதிற் றியாதோவெனில், இந்நூன்முகத்தாசிரியர் பெயர் முதலியவற்றைக் குறித்து நிற்றலிற் சிறப்புப் பாயிர வொழுக்க முணர்த்தல் கருதிற்றெனக்.

**வள்ளல் குருராயன் வாதுவென்ற சம்பந்தன் — வள்ளன் மலர்த் தாடலைமேல் வைத்து** என்பது — வள்ளலாரென்னுந் திருப்பெயருடையவர், ஞானாசாரிய நிருபராகிச் சமயவாதிகள் தருக்கச் செருக்குகள் பிறப்பட்டொழியப் பேரருள் நெறியான் வெற்றிகொண்டு, சீகாழி யென்னுந் திருநகரக் கண்ணே, மெய்ந்நெறி விளங்க, வீற்றிருந் தருளிய திருஞான சம்பந்தப் பிள்ளையாரது வள்ளற்றன்மையுடைய, மலர் போலுந் திருவடிகளைத் தமது தன்முடிக்கண் ஓர் பொன் முடியாக அணிந்து,

**ஓர்ந்து — உள்ளத் — தழிவிலடுக் குந்தேனை யன்பரெலா முண்ண — வொழிவி லொடுக்கநூ லுரைத்தார்** என்பது — அத் திருவடிகளின் அருட்டுணையால் தத்துவங்க ளனைத்துஞ் சடமென்றோர்ந் துணர்ந்து, அவற்றைக் கடந்து, தற்காட்சியோடு திருவருட் காட்சியுஞ் செய்து, அங்ஙனம் வாதனையா லசைந்தெழும் போதந் தோற்றாது, அதனை யத்திருவருளொளியினடக்கி யாண்டு, மேன்மேலு மெழாநின்ற, சிவானந்தத் தேனைத் தாம் அனுபவஞ் செய்தவாறு, அதனைக் கண் அன்புள்ள பக்குவருஞ் செய்தற்பொருட்டு, அச் சிவானந்தானுபவ அந்தரங்க மெல்லாம் வெளிப்பட்டு விளங்க, ஒழிவிலொடுக்க மென்று ஓர் உபதேச முறையை யுரைத்தருளினார் — என்றவாறு.

**வள்ளல்**—என்னும் பெயர்.—

ஆசிரியர்க்குத் தாம் முன்னிருந்த கிரியாசாரிய நிலைக்கண் அவ்வாசாரிய மரபின் வழித்தாய் வந்த காரண வபிடேகச் சிறப்புப் பெயரெனக். அல்லதூஉம், பின்னர் ஞானாசாரிய நிலைக்கண், தம் தருண ஞான நோக்கா னியைந்த கண்ணுடைய வென்னுங் காரண விசேடண மேற்கொண்டு

நின்ற இவ்வள்ளலென்னும் பெயர், ஈண்டவ் விசேடண மிசை யெச்ச நிலையினிற்ப நின்றதெனினும் அமையுமென்க.

இஃது, வினை, பண்பு முதலிய வடுத்த தொகைநிலைச் சொற்றொடரா காது, தொகாநிலையாய்த் தனைத்தொடர் பயனிலை யண்மைப் பொருளு ணர்ச்சி யின்றி யிடையிட்டு நிற்கத் தான் செய்யுண் முதற்கண் தனித் திருந்தமையின் ஆற்றலின்றாலோவெனின், அற்றன்று:—கொடை மடங் குறித்த குணங்காரணமாக வந்த இவ்வள்ளலென்னும் பெயர் தன் னுறுப்புகளுட்கொடைகுணம், புகழுகு வளமென்னு நால்வகைக் குறித்த பல்பொருட் பகுதியாய வண்மையென்னு முதலுறுப்பான் ஆசிரியர்க் குளவாய அக்கொடை முதலிய அருட்குணங்களைக் குறிப்பிற் புலப்பட விரித்தலிற் பொருளாற்றல் உண்டென்க. அல்லதூஉம்;—இப்பெயர், உயர்பொருட்கிடனாய், உடனிலைக் கூட்டாய் ஒரு நெறியசைத்தாய், ஓரினந் தழுவிப் பல்வகைக் குறிப்பிற்படர்ந்து, முற்றியையு வண்ணப் பெருஞ் சொல்லாக நிற்றலிற் சொல்லாற்றலும் உண்டென்க. ஆயின், இவ்வாசி ரியர் பெயர் இச்செய்யுளின் இடைகடைகளின் ஒன்றினிறுத்தாது, முத லடி முதற்சீ ரெதுகைத் தொடைக்க ணிறுத்ததிற் குறித்த தியாதோ வெனின்;—ஒன்றிரண்டெனக்கொண்டுறு மறை யாகம நன்றிருமுடிபி னடுநிலைநடா அய்ப்புலம்பெறு தத்துவ நியதியிற்போந்து, உண்மலந் தெறு மறிஞர் வாழ்த்திப் பரவும் ஆசிரியர் சன்மார்க்க முதலிய மார்க்க நான்கனுட்டலைமையிற் றலைமையாய வுத்தம சன்மார்க்கத்தின ரென் பது குறித்ததென்க. இங்ஙனம் உத்தம சன்மார்க்கத்தின ரென்பதை யாசிரியர் கூறிய [1]'இதுவென்றதெல்லாம் பொய் யென்றான்' என்னுந் திருவெண்பாவாற் காண்க. இஃ தின்னும் விரிக்கிற் பெருகும்.

**குருராயன்**—என்பது:—

திருஞானசம்பந்தப் பிள்ளையாருக்குச் சிறப்பிற் சிறப்பாய கார ணப் பெயராய் நின்று,—ஓதியுணர்ந்து பன்னாட் பல சாதனங்களின் முயன்று முயன்று, ஆசாரியத்தன்மை யொருவாறு அரிதிற் கிடைப்பப் பெற்றும், ஓரோர் காலங்களின் அவத்தை வயப்பட்டு மயங்கி மற்றையா சாரியர்போலாது ஓதாமல்வேதாகமாதிகளை முற்று முணர்ந்திறைப்போது மோர் சாதனங்களின் முயன்றதின்றி, ஞானசாரிய வருளிலக்கணங்க ளனைத்துந் தாமே தம்பால் நிரம்பிநிற்ப, அமர்ந்தன ரென்பதூஉம்,—ஓதி யுணர்ந்த அவ்வாசாரியர்க்கெல்லாம் அவரவரறிவின்கண் அருளுருவாய் நின்றறிவித்தும் ஆசாரியருருவாய் வெளிநின்று அனுக்கிரகித்தும் நின்றன ரென்பதூஉம்,—திருநோக்கஞ் செய்தன் முதலிய அறுவகைத் தீக்கையானு மன்றித் தமது திருவுருவைக் காண்டல் நினைத்தன் மாத் திரையே பக்குவரல்லாரும் பக்குவராய்ப் பயன்பெற நின்ற திருவருட் பெருமைய ரென்பதூஉங் குறித்ததென்றுணர்க. இங்ஙனம் ஓதாமல்

---

[1] இதுவென்ற தெல்லாம் பொய்யென்றா னெனக்குப்
பொதுவன்றித் தங்குமிடம் போச்சு — அதுநான்காண்
என்றா னதன்பே ரிரவைப் பகலாக்கும்
ஒன்றோ பரமசுக மோ. —பொதுவிலுபதேசம்: பாட்டு—44.

வேதாகமாதி யுணர்ந்தமை முதலியவற்றை யாசிரியர் கூறிய [1]'தன்மையும் முன்னிலையும்' என்னுந் திரு வெண்பாவாற் காண்க.

அல்லதூஉம், குருராயன், என்பது, வாதுவென்ற சம்பந்தன் என்பதற்கு மேனிற்கவைத்த வியப்புக் குறிப்பாற் பிள்ளையார், இவ்வவதாரத்தின் மேனின்ற அவதாரத்தினுங் குமார சற்குருவாய் அரனார்க்கும் அகத்தியனார்க்கும் உபதேசித்தருளிய ஆசாரியத் தலைமையுங் குறித்த தெனக் கொள்க.

"தென்னவ னங்கனஞ் சூழ்காத் திருநக சூலகரத்
தென்னவ னங்கனந் தப்பத நீட்டிலன் செல்வமுன்பின்
றென்னவ னங்கநன் னீற்றூற் றிருத்திய தென்னவின்லந்
தென்னவ னங்கனங் கைச்சிலைக் கூனையுந் தீர்த்தருளே"

—அருணகிரிநாதர், கந்தரந்தாதி—56.

என்றதனாற் பிள்ளையார் இவ் வவதாரத்திற்கு மேனின்ற அவதாரத்திற் குமாரசற்குரு வென்பது காண்க.

"உழன்மதிற் சுட்ட தனழகைப் பெருமான்
வணங்கினின் றேத்தக் குருமொழி வைத்தோய்

* * * *

குறுமுனி தேற நெடுமறை விரித்தோய்"

—கல்லாடம், பாயிரம்—2.

"அருமறையா கமமங்க மருங்கலைநூ றெரிந்த
வகத்தியனுக் கோத்துரைக்கு மருட்குருவாங் குருளை"

—பரபக்ஷம், பாயிரம் 4—சித்தியார்

என்பவைகளால் அரனார்க்கும் அகத்தியனார்க்கும் உபதேசித்த ஆசாரியத் தலைமையை யுணர்க.

ஆயின், குருவேந்தன் என்னாது குருராயன் என்றது எது குறித்தற்கோ வெனின்:—நான்கன் வேற்றுமையானடுத்து மிக்குயர் நெறிப் பொருண்மையின் வந்த காரகச் சிறப் பொருதலைத் தொடர்மொழிப் பெயராய இக்குருராய னென்பதன்கட் குருவென்பதன், முதனிலை யெழுத்துத் தமிழியல் விதிப்படி மொழிக்கு முதலாகியும், ராயனென்பதன் முதனிலை யெழுத்துத் தமிழியல் விதியின்றி ஆரியவியல் விதிப்படி மொழிக்கு முதலாகியும் வந்து இருவகையியலுங் கோடலின், இதனைத் தம்பெயராக வுடைய பிள்ளையாருந் தமிழ்நூல்—வட நூலென்னும் இருவகை நூற்கு

[1] தன்மையு முன்னிலையுந் தானைப் படர்க்கையுமாய்
என்னொழிவி லின்புமா யின்புமிது—என்னாத
வேதாந்த சித்தாந்த மேபிறவா வீடென்றான்
ஓதாமல் வேதமுணர்ந் தோன்.

—பொதுவிளுபதேசம்: பாட்டு—42.

முரியாரென்பது குறித்தற்கென்க. ஆசிரியர் [1]"மறைப் புலவன் தமிழ்க் குரிசில் சீகாழிச்சம்பந்தன்' என்றதனால் இருவகை நூற்கு முரியாரென்பது காண்கவென்க. அல்லதூஉம், பொருள் வேறுபடாது, சிறிதே வடிவு வேறுபட்டு நின்ற குருராயனென்பது தன்னையுள்ளுனன்றி நோக்கினார்க்கு இலைமறை காய்போல் ஜா வென்னு முயிர் மெய்யோ டிருந்த தன் முன் வடிவ மூட்கொண்டு விளங்கக் காட்டி நிற்கின்ற தாகலின், இதனையுடைய பிள்ளையாருந் தமது கடவுட்டன்மை வேறு படாது உத்தமபுருட வுருவங் கொண்டு நின்ற தம்மை, அன்பான் உள்ளுனன்றி நோக்கினார்க்குக் குமார சற்குரு வென்னும் பெயர் கொண்டு, அளவிகந்த சூரியர் உதயம்போன் றொளிவீசுந் தம் முன்னுருவாய தெய்வத்திருவுருவுட் கொண்டு, விளங்கக் காட்டி, நின்றனரென்று குறித்தற் கென்பதுமா மென்க.

"மறையவர் திருவே வைதிக நிலையே வளர்ஞானப்
பொறையணி முகிலே புகலியர் புகலே பொருபொன்னித்
துறைபெறு மணியே சுருதியி னொளியே வெளியேவந்
திறையவ னுமையா ளுடனரு டரவெய்தினை யென்பார்."

— ஆளுடைய பிள்ளையார் புராணம் — 92.

என்று, மூவாண்டிற் பிள்ளையார் திருவருள் வடிவைக்கண்டு சீகாழி யுள்ளார், வியந்துகூறியவாறாய விச்செய்யுளால் உள்ளுனன்றி நோக்கினர்க்குத் தம்முன்னுருவைக் காட்டி நின்றனரென்பது காண்க வென்க.

இனி இன்றியமையாக் காட்டுளதேற் காட்டுவதன்றி மற்றைய விரிக்கிற் பெருகும் என்க.

அல்லதூஉம் குரு, என்பத னீற் றுயிர்மெய்யோடு ராயன் என்பதின் முதலுயிர்மெய் புணராப் புணர்க்கையாய் நின்றதாகலின், இங்ஙனம் ஆனந்த வடிவராகிய பிள்ளையாருந் தாங்கொண் டருளிய மானிடத் திருவுருவோடு புணராப் புணர்க்கையாய் நின்றனரெனக் குறித்ததற் கென்பதுமா மென்க.

அல்லதூஉம், குறிலிணைக் கெதிர் நெடில் குறிலெண்ணீடாக நிற்பவு மீற்றி னவ்வெண்ணீடின்றி யொற்று நிற்பவுந் தொடர்ந்த மொழி யாகலிற் பிள்ளையாரும் பக்குவர்க்கு மறைப்பொருளாயும், அதிபக்குவர்க்கு அனுபவப்பொருளாயும் இவ்விரண்டினுங் கலவாது அதீதப் பொருளாயும் நின்றனரென்று குறித்தற் கென்பதுமா மென்க.

குரு என்பதன் பொருள் :—

இங்ஙனம் குருராயரென்பதிற் கு வ்வென்பது — இருள், ரு வ்வென்பது — அருள், — ராயன் — என்பது விளங்கச்செய் கின்றோன் — பொருளாம். இதனால் கு வ்வென்னு மசுத்தாவத்தையில்

1. சத்தியநிர் வாணத்தாற் றற்போதத் தாக்கறுத்து
வைத்து வழிகாட்டு மறைப்புலவன் — சுத்தன்
தமிழ்க்குரிசிற் சீகாழிச் சமபந்த னென்பான்
எமக்கருளிச் செய்த திது.

— பொதுவிலுபதேசம்: பாட்டு — 11.

நின்றோரை ஆ வ்வெண்ணுஞ் சுத்தாவத்தையில் தாம் நின்றவண்ணம் நிறுத்துகின்றோர் குரு ஆவர். இச்சுத்தாவத்தைக்கு ஆதாரனாகியும் அதீதனாகியும் விளங்கி இவ்வவத்தையினின்றும் அக் குருவாயினோர் தாழாத வண்ணம் அருள் செய்து நின்று அதீதப் படுத்துகின்றோன் ராயன் ஆவன் ஆகலின், இதனாலும் உணர்கவென்க.

எழுத்தாதிப் பல்வகைக் குறிப்பிற் பொருணெறிபற்றி நின்ற நோக்கம், செறிவு, நுட்பம், இங்கிதம், இன்பம், கம்பீரம், சிறப்புறுதி, முதலிய நற்குணந் தழீஇய சொற்புணரிதென்றே, ஆசிரியரும் [1]"சரியாதி நான்கினுக்கும்' என்னுந் திருவெண்பாவினிடைக்கட் குருராயனென்று இதன் பெருமை தோன்ற வைத்தனரென்க. இஃது இன்னும் விரிக்கிற் பெருகுமென்க.

**வாதுவென்ற சம்பந்தன் :—**

வாதுவென்ற சம்பந்தன் என்பதிற் பொதுவானே வாது வென்ற என்றது என் குறித்தோ வெனின்,—எண்வகைக் குன்றத் தெண்ணாயிரவராய பாயுடுக்கைப் பறிதலைச் சமணர்களொருங்கே கூடித் தென்மதுரைக்கட் செந்தமிழ்ப் பாண்டியனை முன்னிட்டுச் செருக்காற் செய்த சுரவாதம், அனலவாதம், புனல்வாதங்கள் பிற்படத் திருநீற்றானுந் திருவாக்கானும் வென்று திறல்கொண்டமையன்றியும், பரசமயக்கோளரியென்று தானேயொலித்த திருச்சின்னத்தின் தெய்வப் பேரொலி கேட்டு, உளம்பொறாது எதிரிட்டு மறித்த போதமங்கைப் புத்தநந்தியின் பொய்த்தருக்கும், புழுத்தலையும், பொடிபட்டழியவும், பின்னருள்ளது போன்றில்லதைப்பற்றிச் சாக்கியக் குழுவுள் தலைவனாய சாரிப்புத்தன் சிற்சில வகையாற் செய்த சமயவாதந் தலைதடுமாறவும், செந்தமிழ் வேதத் திருமுறை தாங்கி மேம்படும் அறிஞரான் வெற்றி கொண்டமையும், திருவோத்தூரின்கண் அரனுக்கிடுபனை ஆண்பனை யாயிற்றே யென்று அசதியாடிய அமணக் குழூஉக்களின் வாய்வாதங்கள் மண்பட் டொழியத் தாம் திருவாய் மலர்ந்த திருக்கடைக்காப்புள் ஓர் மொழியானே அவ்வாண்பனை பெண்பனையாகச் செய்து விறல் கொண்டமையுங் குறித்ததென்க.

அல்லதூஉம், வாது என்ப திலக்கணையாகக் கொண்டு பெருமணநல்லூரின்கண் திருமண நல்விழாவைத் தரிசிப்பான் வந்த மக்கட்கெல்லாந் தொன்றுதொட் டிடைவிடாது உடனிழற்போற் சூழ்ந்துள பிறவிப் பெருவாதுகளனைத்தும் வென்றதூஉம்,—திருப்பாச்சிலாச்சிராமத்தின்கண் மழவன் மகளார்க்கு அடுத்த முயலக வாது வென்றதூஉம்,—மருகற்கண் ஓர் வசியனுக்கு அடுத்த விடவாதுவென்றதூஉம்,—இவை முதலியவுங் குறித்ததெனினுமாமென்க. வெற்றிகொண்ட பொருட்டிறன் முதலியவற்றுள் ஒன்றேனுந் தோன்றக்கூறாது இலேசானே வாது வென்ற என்றது என்குறித்தோவெனின்,—பிறர்க்கு இங்ஙனம் வேறல் தம்மானுந்

1. சரியாதி நானகினுககுஞ் சாலோக மாதி
வருமா றெனக்களித்த வள்ளல்—குருராயன்
ஞானத்திற் பக்குவர்க ளல்வர்க் குபதேசம்
ஆனத் தையுநிகழ்த்தி னன்.
—ஒழிவிலொடுக்கம்.—3. சத்திநிபாதத் துத்தும ரொழிவு 1-ம் திருவெண்பா.

துணைமையானும் பற்பலநாட் பற்பலவகையின் முயற்சிசெயினு முற்றூ தெனினும், பிள்ளையார்க்குச் செந்தமிழ் பொழியுந் திருவாக்கானே ஆண்டாண்டு அவ்வேறன் முற்றிய தென்பது குறித்தென்க. வாது என்பது குரு ராயன் என்பதனோடுஞ் சம்பந்தன் என்பதனோடுஞ் சாராது நடுநின்றமையின், அத்துவித நெறியினுஞ் சேராது, துவிதநெறியினுஞ் சாராது நின்ற பதிதவாதிகளது பயனில் வாதமெனினு மமையுமென்க.

எதிரேற்கப்பட் டெதிர்வினைக் கீழ்ப்பட மேற்கொள் வினையெழுச்சிப் பொருளின் வந்த வல்லெனன்னும் பிறவினைப் பகுதியானடுத்த வென்ற என்னும் பெயரெச்சஞ் சம்பந்தனென்னும் பெயர் கொண்டு முடிந்து, இங்ஙனம் வெற்றி கொண்ட பருவம் பிள்ளையார்க்கு இளங்குமாரப் பருவமெனக் குறித்ததென்க. என்னை? எச்சமென்பது இளஞ்சேய் மேற்றாகலின்.

சம்பந்தன் என்பது பிள்ளையார்க்கு மூவகவைக்கண் மூவுலகும் புகழுப் பொற்பொடு புணர்ந்த அற்புதத் திருப்பெயராகலின், ஆண்டு பெருமானருளப் பிராட்டியா ரளித்த சிவஞானத் தெள்ளமுதருந்தி அச்சிவஞானத்திற்கு உரிமை பூண்டமை குறித்ததென் றுணர்க. ஆயின் சிவஞான சம்பந்தன் என்னுது சம்பந்தனென வைத்த தென்கொலோ வெனின்: சிவஞானமுமன்றிச் சிவானந்த மானந்தாதீதம் என்பவைக்கும் உரிமை பூண்ட தலைமைபற்றியும் அவற்றை உலகுயிர்க்கு இங்ஙன மென்றுணர்த்தி உரிமை செய்விக்கு மாட்சிபற்றியும் அங்ஙனம் வைத்ததென்க.

அல்லதூம்உம், சுருங்கச் சொல்லுதல் வனப்பினுற் சம்பந்தனெனவே சிவஞான சம்பந்தனென வுரிமைச் சிறப்பு வழக்கால்தானே தோன்றுமென வைத்த தெனினுமாமென்க. எங்ஙன மெனின், இந்திரனென்பது இறைமைச்சிறப்பு வழக்கால் தேவேந்திரனையும் உடையானென்பது பொருட்சிறப்பு வழக்கால் பொன்னுடையானையுங் குறிக்குமாகலினென்க.

**வள்ளன் மலர்த் தாள் :—**

வள்ளன் மலர்த் தாள் என்னும் ஒருவகை வனப்பு, இருவகைச்சந்தி, மூவகை மொழித்தொகைச் சொற்றொடர்க்கண், வள்ள லென்னுங் குணிப்பெயர் வினைமுதற் றொழிற் பயனுறப்படு முடைமைக் குணப்பெயராய் நின்று, பிள்ளையாரது திருவடிகள் தம்மையடைந்தோர்க்கு, வரையா தானந்தப்பேற்றை யளித்து, அவரைத் தாங்கிக் கோடலைக்குறித்த தென்றுணர்க.

அஃதேல், ஆனந்தப் பேற்றைத் தருதற்குந் தாங்கிக் கோடற்குங் கருத்தர் பிள்ளையாரன்றோ? அங்ஙனம் இருப்பத் திருவடிகட்கு இங்ஙனங் கூறல் எங்ஙனமெனில்:—திருவடிகள் தம்மை வழிபடுவோர்க்கு இரங்கி இன்பமீதற்பொருட்டு எழுந்தருளும் பிள்ளையாரது படர்ச்சி நிகழ்ச்சிக் கருவியாய் நின்று அவரை யவ் வழிபடுவோர்பால் வருவித்தலானும், ஞான தீக்கை பண்ணுங்கால் அவர் சென்னியிற் சூட்டப்பட்டு ஐக்கியம் வருவித்தலானும், நித்தியானந்தப் பேறு வாய்க்கு மாகலின் இங்ஙன மென்க.

அல்லதூஉம். வாட்டமி லருளுங் கோட்டமில் குணனு மசையா நிலையு நசையா மனனும், வெகுளாப் பண்பும், விடாப்பேரன்புஞ், செவ்வியின் மரீஇ எவ்வெவர் எவ்வகை வேட்டனர் அவ்வகை விருப்பொடு குறிப்பின் வரையா தீதல் வள்ளற்றன்மை என்ப வாகலின் இவ் வள்ளற்றன்மையைத் தம்பால் அடைந்தோரிடை யடைவித் தருளுங் கருணைபற்றி யங்ஙனங் கூறியதெனினுமமையுமென்க. அஃதேல் வள்ளற் றன்மை வழங்கு மலர்போலுந் திருவடி யென்றன்றோ வுரை விரித்தல்வேண்டும். அங்ஙன மின்றி வள்ளற் றன்மையுடைய மலர் போலுந் தாளென விரித்திருக்கின் றதேயெனின்;—அங்ஙன மடைவித்தலும் வள்ளற் றன்மையே யாகலினு முடைய தொன்றன்றே யுதவப்படுமாகலினும் இங்ஙனம் விரித்தல் அங்ஙனங் கூறற்கு மமைதியாமென்க.

அல்லதூஉம், அருளின்றி யமையாத வள்ளற்றன்மைக் கவ்வருளே முதற்காரணமா மாகலின், ஆனந்தவடிவராகிய பிள்ளையார் அவ்வானந் தப் பேற்றினை யளிக்கும் வள்ளற்றன்மைக்கு முதற்காரணமாகிய திருவருட் சத்தியே திருவடி யென்று குறித்தற்குக் காரணத்தைக் காரியமாக ஈண்டு உபசரித்த தெனினு மமையு மென்க.

அல்லதூஉம், எமது திருவடிகளை வழிபடின், வீட்டின்ப மெளிதில் தருவேமென்று பிள்ளையார் விதித்தருளிய அருள் விதிப்படியறிந்து வழி படின், அவ்வழிபாட்டான் அவ்வீட்டின்பந் தரப்பெறுதல் உண்மையாகலின், அவ்வுண்மை நோக்கி யீண்டு கூறிய தெனினும், பிள்ளையார் திருமேனி முற்றுந் தெய்வத்தன்மை பூரணமாகலின் அதனையறிவிக்க ஈண்டு கூறியதெனினு மமையுமென்க. திருவடிகட்கு அடையாய வள்ளலென்பதூஉம் ஆசிரியர் பெயராய வள்ளலென்பதூஉம், அடியிணை எதுகைத் தொடையாய் எழுத்தசை சீரொலி பொருளாதிகளா னொற்றுமைக் கொண்டு நின்று பிள்ளையாரது திருவடித் தீக்கைக்கும் ஆசிரிய ரதிபக்குவத் தன்மைக்கும் உள்ள வொற்றுமைப் பொருத்தம் விளக்கினவென்க.

**வள்ளல்** என்பது, பிள்ளையார்க்குக் காரணச் சிறப்புப் பெயராகக் கொண்டு பொருள் கூறுவாருமுளர். அங்ஙனங்கூறின், இத்துணைச் சிறப் பின்று என்று மறுக்க என்னெனின்;—அவயவச் சிறப்பான வயவிக் குணம் வெளிப்படுத்தலே பெரும்பாலு மின்பமாகலினென்க! இதனைப் [1]'போற்றிமாஏன் முகனுங் காணாத புண்டரிகம்' என்பதனாற் காண்க வென்க. வள்ள மலர்த்தாடெனப் பாடமோதி வள்ளம் போலுங் குவிந்த வாய்மலரென மலர்க்கடையாக வுரை விரிப்பாருமுளர். அங்ஙனம் விரித்த லின் இத்துணைப் பெரும் பயனின்றென மறுக்க இங்ஙன மின்னும் விரிக் கிற் பெருகுமென்க.

**மலர்** என்பது, வள்ளற்றன்மையி னருகு வைத்தமையின், ஈண்டு நிறைதலுங், குறைதலுமாயுள்ள நீர் நிலைக்கண் தோன்றியும், அழிந்தும், விரிந்துங், குவிந்தும், வாடியும் நின்று,—வண்ணமும் நறையும், வாசமுஞ் சிறிதே சிறுபோது கொண்டு பறித்தலாதிய சிறுதொழிற் படு மலர்களை நீக்கி, ஆண்டு திரிபிலாத் தெய்வத் தெண்ணீர் நிலைக்கண், ஒழியா மலர்ச்சியும், அழியா மணமும், பொன்னிறப் பொலிவும், இன்னற

1. திருவாசகம், திருவெம்பாவை, 20

வொழுக்கம், மென்மையும், தன்மையும், வியப்புறு முருவுங், கண்டோர் கண்கவர் காட்சியும், மாட்சியுங் கொண்டு முக்காலமுங் குன்றா மலரைக் குறித்தமை காண்க. என்னெனில்: பிள்ளையார் திருவடிகள்—மெய்ஞ் ஞான விளக்கமாய் அருண்மணம் வீசிப், பொன்னிறம் பொலிந்து, ஆனந்த மொழுக்கி மெல்லெனவுற்றுத் தண்ணெனக் குளிர்ந்து தரிசிக் கின்றோர் வியப்புறு முருவாய் அவரது விருப்ப நோக்கம் பரவ என்றும் ஒரு தன்மையவா யிருக்கின்றமையி னென்க. ஆயின், மலர்போலுந் தாளென்று உவமைவிரிந்தபடி நிற்றற்கு இடங்கொடாதுமலர்த்தாளென்ற தென்னெனின்,—அத்தெய்வத் திருமலர்களைக் கண்டோர்க்குச் சிறிய விடயானந்தந் தருதலேயன்றித் திருவடிபோற் சிவானந்தம் தரமாட்டாச் சிறுமை நோக்கி யென்க.

அல்லதூஉம், சுபவடிவாய், எவ்வகைச் சுபங்கட்கு முன்னின்றதனை விளங்குறச் செய்வதாய், மகிழ்வுடையோர் யாரு மேற்கொண்டணியப்படு வதாய், நிற்கு நன்மலர் போலுமெனக் கூறினு மமையும்; என்னெனின், திருவடிகள் அருள்வடிவாய், ஆனந்தப் பேற்றிற்கு முன்னின் றளிப்ப தாய், அறிவுடையோர் தந்தலைமேற் கொண்டணியப் படுவதாய் நிற்றலி னென்க.

அல்லதூஉம், மலரையடைந்த வண்டுக ளதனது தேனுண்டு களி கொள்ளுதல் போற் றிருவடிகளை யடைந்தோரும் அருளானந்தம் பெற்றிறுமாத்தலி னிங்ஙனங் கூறியதெனினு மமையுமென்க. இதனைத் தொகையுவமை யணியாகக் கூறலின்றி வள்ளன் மலர்த்தாளெனக்கூட்டி யற்புதத் தொகையுவமை யணியாகக்கொண்டு பொருள் கூறுவாருமுளர். அவர் கூறுங் கூற்றிற் பெருபய னின்றென மறுக்க. இஃதின்னும் விரிக் கிற் பெருகுமென்க.

**தாள்** என்பது,—அடிகட்கன்றியும் முயலுதற்கும், உண்ணின்ற பொருள் வெளிப்படாமைக்கும், அதனை வெளியின்றோ ருட்சென்று கவரப் படாமைக்குங் காப்பாகக் காப்பினிற்குங் கருவிக்கு மணிதற்கணியி னிரு கடையு மிணைத்து நிற்கு மிடைப்பூட்டிற்கு மிடனுகி வந்த பல பொரு ளொரு சொல்லாகலின், திருவடிகள் தம்மையடைந்தோரை யானந்த நிலை யுட் சேர்த்தலும், அங்ஙனஞ் சேர்ந்தோர் மீட்டு மவ்வானந்த நிலையினின் றும் போதவசைவு தோற்றி வெளிப்படாமைக்கும் அவத்தைகளுட் சென்று தாக்கிக் கவரப்படாமைக்குங் காப்பாக அருளுருவாயதன் முன் னிற்றலுஞ் சிவத்துடன் சீவனை யிடைநின்று கூட்டுவித்தலுங் குறித்தது காண்க. இக்குறிப் புணர்த்தவன்றே மலர்க்காலென்னது மலர்த்தா ளென்றதென் றுணர்க.

**தலைமேல் வைத்து:—**

தலைமேல் வைத்து என்பது,—ஆசிரியர் தம் ஆசாரியராகிய பிள்ளை யார் திருவடித்தீக்கை செய்யத் தாம் பெற்றமை குறித்தது காண்க. அஃ தேல், வைக்கப்பட்டு எனச் செயப்பாட்டுவினை யெச்சத்தானிருத்தற்பால தன்றோ வெனின்,—ஆசிரியர்க்கு அத்திருவடிக் கண்ணேயுள்ள பிரியத் தொடர்ச்சியின் பெருமை தோன்ற இங்ஙனம் நின்று அங்ஙனங் குறித்த தென்க. இதற்கு இவ்வாறன்றித் தலைமேற் பாவனையான் வைத்தெனக்

குறித்ததென்று கூறுவாரும் உளராலோ வெனின்—அவ்வாறு கூறிற் பிள்ளையார் இந்நூலாசிரியர்க்கு ஞானாசாரிய ரென்பதும் இவர் ஞான தீக்கை யுடையாரென்பதும் விளங்குதலின்றி மற்றையாசிரியர் போல் எடுத்தநூ லினிது முடிதற்பொருட்டுப் பாவனையான் வழிபடு கடவுட் பழிச் சின ரென்றிலேசிற் கருதப்படுமாகலின் அங்ஙனங் கூறன் மரபன்றென்க. தலையில் வைத்து என்னாது தலைமேல் வைத்து என்றமையான், மறை முடிக்கண்ணே வயங்கா நின்ற அச்செல்வத் திருவடியின் சீர்மை தோன் றிற் றென்க.

**ஓர்ந்து :—**

ஓர்ந்து என்பதில் ஓர் என்னும் பிறவினை முதனிலை, அறிவு தனக் கெதிரிட்ட வுணர்ச்சிப் பொருட்கண் எதிரிடுவதுபோன்று எதிரிடாதுள் ளாழ்ந்த அப்பொருட்டிற னெதிரிடப் பெயரும் புடைபெயர்ச்சியு மெதி ரிட்ட பின்னர் விகற்பியா தெதிர்க்குந்தோறு மெதிரிடப் பெயரும் புடை பெயர்ச்சியுங் கோடலிற் கருவித்திறனுந் தன்றிறனும் அருட்டிறனும் உற்றுணர்ந் தவ்வுணர்ச்சி விகற்பியாது தேறி நின்றமையைக் குறித்தது காண்க. இக்குறிப்புத் தோன்றவன்றே திருவள்ளுவ நாயனாரும் [1]‘ஓர்த் துள்ளமுள்ள துணரின்’ என்றாரென்றறிக.

**உள்ளத் தழிவில் :—**

உள்ளத் தழிவில் என்பதில் உள்ள மென்பதன் பகாப்பதவியீற்றுப் பகுபதப் பொருளி னிடவாகு பெயரா யனுப்பொருட்கண் வந்த வுள் ளென்னும் பகுதி யுட்புறத்தும் அப்போதம் எழுஞ் சிற்றசைவும் பேரசை வுங் குறித்தது காண்க.

**உள்ளர்** என்பது,—வாதனையா னுள்ளெழும் போதத்திற் காகு பெயராயது வள்ளலென்பதுபோன் றெழுகிசையாய் வர வுள்ள வழிவி லென்னாது பொறுத்திசையாய் வர உள்ளத் தழிவிலென்ற தென்கொ லோவெனின் :—வேற்றுமை வழியாகலினும் போதவசைவு சார்பின்றி யமையாமை குறிக்கவேண்டு மாகலினும், சாரியையோடு புணர்த்தி யங்ங னங் கூறியதென்க. அழிவு என்பதில் அழியென்னும் பொது வினைப் பகுதி முன்னர்த்தோற்ற நிகழ்ச்சிப் பின்னர் ஓர் காலத்தும் ஓரிடத்து மின்றிக் கெடுதற் பெயற்சிக்கண் வந்ததாகலின் அப் போத நிகழ்ச்சி பின்ன ரெக்காலத்தும் உட்புறமென்னு மெவ்விடத்தும் தோற்ற நிகழ்ச்சி யின்றி யொடுங்கியவாறு குறித்ததென்றுணர்க. இங்ஙனமன்றி உள்ளத் தழிவி லென்பதற்கு மனத்தினசைவற்ற விடத்தெனப் பொருள் கூறு வாரு முளராலோவெனின், மனத்தினசைவு போத வசைவறிற்றானே யறுமாகலினு மஃதறுதவிடத் திஃதெவ்வாற்றானு மறாதாகலினும் அது பொருந்தாதென்க. இதனை ஆசிரியர் கூறிய [2]“பற்றாத போதும் பத றும்” என்னுந் திருவெண்பாவாற் காண்கவென்க.

1. திருக்குறள். மெய்யுணர்த்தல். 7.

2. பற்றாத போதும பதறும் பழக்கமதைக்
கற்றா லென்னாகக் கலக்காது—சற்றேநீ
தீண்டிவிடிற் றான்காண் சென்ன மரணமது
மாண்டு விடினீசிவமா வை.
—ஒழிவிலொடுக்கம் 3. இயோகக்கழற்றி: 15-வது திருவெண்பா.

**அடுக்குந் தேன் :—**

அடுக்குந் தேன் என்பதில் அடுக்கு மென்பது அடுத்த லென்னுந் தொழிற் பெயர்க்கண் தல்விகுதி தன்னெற்றுச் சந்தியொடு நீங்க வெதிர் காலப் பெயரெச்ச விடைநிலை யும்மை ககரமெய்ச் சாரியை யூர்ந்து தன்னெற்றுச் சந்திபெற்றுண்டு நின்றிறையு மிடப்பாடு தோற்றாது செறிதற் பெயர்ச்சியும், அடுக்கலென்னுந் தொழிற்பெயர்க்கண் அல்விகுதி நீங்க அவ்வெதிர்காலப் பெயரெச்ச விடைநிலை யும்மை விகுதி நீங்க நின்று தன் வரவு கண்டோடிய குற்றுகரமூர்ந்த மெய்க் கண்ணேறி நின் றிறையு மிடைப் போதின்மை படாது பன்முறை மேன்மேலுறுதற் பெயர்ச்சியும் பொருளாகக் கொண்டிருவகைப் பகுதி யொருவகையெச்சமாக நிற்றலின், சிறிதும் இடத்தானுங் காலத்தானும் பிரிவு தோன்றாது செறிந்து பன் முறை மேன்மேலெழும் ஆனந்தத் தேனென்று குறித்த தென்றுணர்க.

உள்ளத்தழிவி லடுப்பது ஆனந்தமாகலிற் றேனென்பதை யுவமக் குறிப்பாற் சிவானந்தத் தேனென்றதென் றுணர்க.

தேனுண்ட வண்டசைவின்றி யத்தேன்மயமாயிருத்தல் போல, ஆனந் தானுபவத்தர் போத வசைவின்றி இவ்வானந்த மயமா யிருத்தலி னுவமையாகக் குறிக்கப்பட்டதென் றுணர்க.

இதனை யொப்புமைக்கூட்ட மொட்டாதிகளாகக் கூறுவா முளரா லோவெனின், அவ்வாறு கூறினும் பொருள் சிதையாமையி னொருவா றமையுமெனக. போதவசைவின்கண் தோற்றல் விடயானந்த மாகலில், போதவொழிவின்கண் தோற்றல் சிவானந்தமெனக் குறித்தற்கு உள்ளத் தழிவிலடுக்குந் தேனென்ற தென்றுணர்க. எங்ஙனமெனின், உள்ளத் தழியாமையினடாத்தே னென்றெதிர்மறுக்கப் படுதலினென்க. மதுரம் பற்றித் தேனை யானந்தத்திற் குவமை கூறுவாரு முளராலோ வெனின் அது நாவிடயமாயிறைப்போது நிற்றலின் இத்துணைச் சிறப்பின் றென்க'

**அன்பரெலா முண்ண:—**

அன்பரெலா முண்ண வென்பதில், அன்பர் என்பது பொருள் புக ழாதியைக் குறித்துப் பயில்வோரை நீக்கிச் சிவானந்தம் எந்நாள் அடைது மென்றிடைவிடாததனையே விரும்பிப் பயில்வோரைக் குறித்த தென் றுணர்க. எலாமென்பது—சரிதாதி கன்ம மார்க்கங்களைக் கூறும் பிற நூல்களெல்லாம் பருவநோக்காது சாதிசமயாசார விகற்பங்களை நோக்கிச் சிலரை நீக்கியுஞ் சிலரை நிறுவியும் அதிகரித்தல் போலாது, அச்சாதி சமயாதிகளி னுயர்ந்தோர் தாழ்ந்தோர் யாரேனும் பருவத்தராயின் இந் நூற்கு உரியராவரென்பது குறித்த தென்றுணர்க.

உட்கொள வென்னும் பொரு ளுட் கொண்டு பொருட்டுப் பொருளிற் போந்த உண்ணவென்னும் வினையெச்சம் ஆனந்தானுபவத்திற்கு விடாத விலக்கணை யாயிற்றென் றுணர்க. என்னையெனில், உண்ணலிற் பசி நீங்கல்போல் ஆனந்தானுபவத்திற் பசுத்துவம் நீங்கலி னென்க.

பயன் காரணம்' பற்றிவந்த ஒழிவிலொடுக்கநூல் என்பது ஒழிவி லொடுக்க மென்னு நூல் ஒழிவிலொடுக்கந் தருநூலென விருவழிக்கும்

பொதுவாய சந்தியான் வந்தமையில், தன்னை வேதாந்தத்திற்கும் சித்தாந் தத்திற்கும் பொது வென்று குறித்ததென்றுணர்க.

**ஒழிவிலொடுக்க நூலுரைத்தான் :—**

ஒழிவிலொடுக்க நூலுரைத்தான் என்பதில் வேற்றுமை சாரியை யுருபு முதலியவொன்றும் விரியாது நிற்றலின், ஞானசார மின்றிக் கருமா சார மொன்றும் விரியாத விந்நூலின் நின்மலத்தன்மை தோன்றிற் றென்றுணர்க. உரைத்தான் என்பது—ஒருவர் மதிநுட்பத்தால் தான் கண்டறிந்த மாற்றுயர்ந்த பொன்னின் றன்மையைப் பிறருமறிந்து பயன் கோடற்குக் கட்டளைக்கல்லினுரைத்துக் காட்டல்போல், சுருதி குருவனு பவத்தாற் றாமனுபவித்தறிந்த சிவானந்தப் பேற்றின் றன்மையைப் பக்குவருமறிந்து பயன் கோடற்பொருட்டு நூற்க ணுரைத்துக் காட்டின ரென்று குறிப்புறுத்திற் றென்றுணர்க.

என்னெனி லுரையென்பது பொன்னுரையும் பொருளாகக் கோடலினென்க. உரைத்தான் என்னும் பயனிலை செயப்படு பொருளி னிறுதியி னியையாது செயப்படு பொருட்குங் கருவிப் பொருட்குமேல் தாடலைமேல் வைத்து என்பத னிறுதியிற் றொடர்ந்து நின்றதென் னெனின், சிவஞானத் தீக்கை யுடையரா யுரைத்தாரென்பது மன்றித் தமதாசாரியர் திருவடி சான்றாகத் தாங்கண்ட வனுபவத்தை விளங்க வுரைத்தாரென்பதுங் குறித்தற்கென்க. என்னை? தாடலைமேல் வைத்து எனவே சான்றாகவைத்து என்பது தானே யமையுமாகலின்.

தலைமேல் வைத்து என்பதன்பின் நிற்கக் கடவதாய ஓர்ந்து என் பது செயப்படு பொருட்பி னிறுதி நிலையாய் நின்ற தென்னெனின், இந்நூல் கற்றோர்க்குக் கருமங் குறைந்து ஞானமேலிடுதலுண்மை குறித் தற்கென்க. எங்ஙனமெனின், அவ்வோர்ந்து என்பது வினைக்குறை யாகலினென்க. 'உள்ளத்தழிவி லடிக்குந்தேனை யன்பரெலா முண்ண ஒழிவிலொடுக்க நூலோர்ந் துரைத்தான்' எனக்கொண்டு போத வொழி வின்கண் அடுப்பதாய ஆனந்தத்தை யன்பரெல்லா மனுபவிக்கும் பொருட்டு வேதாகம முடிபான ஞானநெறியை யாராய்ந்து ஒழிவிலொடுக்க மென் றோர்நூலை யுரைத்தார் எனப்பொருள் கூறுவாருமுளர். அங்ஙனங் கூறின் ஆசிரியர் பரஞான முடையாரென்பது தோற்றாது; அபரஞான முடையாராகப் பொருள்படு மாகலினும், அபரஞானத்தாற் கூறப்பட்ட நூல் மிகச் சிறவாமையானும் அது பொருந்ா தென்க.

இந்நூலியற்றற் கேற்ற நற்பொருளுடைமையுஞ் சிறப்புப்பாயிர விலக் கணத்துள் ஆக்கியோன் பெயரேயென முதனிறுத்தப்பட்ட நிமித்த காரணச் சிறப்புடைமையும் இச்செய்யுண் முடிபுக் கெழுவாயாந் தலைமை யுடைமையும் பற்றி வள்ளலென் முதனிறுத்திய தென்க. இந்நூலாசிரி யர்க்கு ஆசாரிய ரிவரென்பது தோன்றற்கு அவ்வள்ளலென்பதன்புடை குருராயனென்பதை நிறுத்திய தென்க. இங்ஙனம் ஆசாரியரென்பவர் பிள்ளையார் என்பது தோன்றற்கு ஞானசம்பந்தனென வைத்தல் வேண்டு மாகலின் அந்த ஞானத்தைக் குறிக்கும் பாசவெற்றியாய 'வாதுவென்ற' வென்பது முன் கூட்டிச் சம்பந்தனென வதன்புடை நிறுத்திய தென்க.

இரண்டாம் அடிக்கட் பிள்ளையார் தாள்கள் நிறுத்தத் தொடங்கி முன்னர் அத்தாள்களின் இயற்கை யருளென்று குறிக்க வள்ளலென்

றும், அதன்வடிவம் ஆனந்தமென்று குறிக்க மலரென்றும் முறையே வைத்து வள்ளன் மலர்த்தாளென நிறுத்தியதென்க. தாள்களன்றியும் பிள்ளையாரும் அருளியற்கையரே யென்பது குறிக்கச் சம்பந்தனென்னுஞ் சத்தந் தோற்றியவுடன் வள்ளற் சத்தந்தோன்ற நிறுத்திய தென்க. இங்ஙனம் நிறுத்தியவை சொற்பொருண் முறைநிலை. தாளென்பதற்கும் தலையென்பதற்குமுள்ள சொற்பொருட் சம்பந்தவின்பம் பற்றித் தாடலை யென்றும் தலை யென்பதற்கும் மேலென்பதற்குமுள்ள உரிமை நோக்கம் பற்றித் தலைமேலென்றும், மேலென்னு மிடப்பொருட்கு வைத்தற்றொழில் சிறந்ததுபற்றி மேல்வைத்து என்றும், வைத்து என்பதற்கும் உரைத்தா னென்பதற்கும் இறுதியு முதலு மிலாதாதல்பற்றி வைத்துரைத்தா னென்றும் முறையே நிறுத்திய தென்க. இங்ஙனம் நிறுத்தியவை சொன்முறை நிலையும் சொற்பொருள் முறை நிலையுமாம்.

இங்ஙனம் முற்று முறைநிலை கூறப்புகின் மிகப் பெருகுமாகலி னொரு வாறு காட்டினாம். மற்றையவு மிவைகொண்டுணர்க வென்க.

இச்செய்யுட் பொருள் ஆசிரியரது அருளறிவின் மாட்சிமையை வெளிப்படையானுங் குறிப்பானும் விளங்க விரித்தலின் வாகைத்திணை யுட் சால்பு முல்லைப் பொருளின்பாற் பட்டதென்க. என்னை? [1]'சால்பு முல்லைப்பொருள்'—'வான்றோயு மலையன்ன சான்றோர் தஞ்சால் புரைத் தன்று' என்பவாகலின் இச்செய்யுள் தன்னுட் செயப்படு பொருளாய் நின்ற தன்னுறுப்புக் களானுங் குறிப்பாற் குறித்து நின்ற நன்னேக் குடைச் செய்யுளென் றுணர்க. அங்ஙனங் குறித்தவை யெங்ஙன மெனின் :—

இச்செய்யுள்தான் கலிப்பா, வஞ்சிப்பா, ஆசிரியப்பா வென்னு முப் பாவினுஞ் சிறந்த, வெண்பாவாகலின், இக்குறிப்பால் இந்நூல் சரிதை நூல், கிரியைநூல், யோகநூல் என்னு முந்நூலினுஞ் சிறந்த ஞானநூல் என்று குறித்ததென்க.

தான் ஈரசையானுசிட் டிருவகைத் தளை தழீஇ யொழுகிசைச் செப்ப லோசையான் வந்ததாகலின், இக்குறிப்பால் இந்நூல் ஆகம முடிவும் வேத முடிவுங் கூறு மிருவகை நெறியு மொருவகை நெறியாத் தழீஇக் கொண்டிருந்தமை குறித்ததென்க.

தான் ஒன்றடுத்த விரட்டை முப்பத்தா றெழுத்துக்களைக்கொண்டு நிற்றலின், இக்குறிப்பான் இந்நூல் பாசமொன் றடுத்த தத்துவ முப் பத்தா றென்றும், முப்பத்தாறன் றன்மை யிவையென்றும் பகுத்தறிதல் வகையு முணர்த்துவ தெனக் குறித்ததென்க.

தான் நான்கடுத்த முப்பத்தா றசைகளை யசைத்து நிற்றலின், இக் குறிப்பானிந்நூல் அத்தத்துவ முப்பத்தாறனையும் நியதிகளைத் தன் முறையை யுணர்த்துவதெனக் குறித்ததென்க. அஃதேன் முப்பத்தா றன்மே னான்கடுத்த தென்னெனின்,—ஆன்ம தத்துவத்தின் வன்மை தோன்றற்கோரசையும், வித்தியா தத்துவத்தின் வலிதோன்றற் கோரசையும், நாததத்துவத்தின் பெருமை தோன்றற் கீரசையு மிகுந்தன வென்க.

[1] புறப்பொருள் வெண்பாமாலை, 8. வாகைப்படலம், 31.

தான் பதினைந்துசீர் சீர்கொள நிற்றலின், இக்குறிப்பான் இந்நூல் ஆசாரியத்தன்மை, சீடத்தன்மை, பதித்தன்மை, பசுத்தன்மை, பாசத்தன்மை, உபதேசத்தன்மை, பக்குவத்தன்மை, யோக நிவர்த்தி, கிரியை நிவர்த்தி, சரிதை நிவர்த்தி, விரத்தி விளக்கம், துறவுத் தன்மை, அருளவத்தைத் தன்மை, வாதனை மாண்டார் தன்மை, நிலையியல்பு என்னு மிப்பதினைந்தனையுஞ் சீர்பெறக் கொண்டதெனக் குறித்ததென்க.

தானெழுவகைத் தளையி னியைந்த தாகலின், இக்குறிப்பான் இந்நூல் ஆன்மதரிசனம், அருட்டரிசனம், பரைதரிசனம், பரையோகம், பரையோக நீக்கம், தற்போதவொழிவு, இன்பப்பேறு என்னு மெழுவகை நிலையும் அறிவிப்பதெனக் குறித்ததென்க.

தான் தனிச்சொல் பெற்று நான்கடியுடன் நடந்த தாகலின் இக்குறிப்பான் இந்நூல் கூறு மொப்பற்ற ஞானமும்; சுத்தச்சரிதை, சுத்தக்கிரியை, சுத்தயோகம், சுத்தஞானம் என நான்கு பாதத்தோடு நடப்பதெனக் குறித்ததென்க.

தான் ஒரூஉத் தொடையோடு முத்தொடையா னியன்றதாகலின் இக்குறிப்பான் இந்நூற் சுருதி, குரு, அனுபவ மென்னு மூன்று மொத்தியன்ற தெனக் குறித்ததென்க.

அல்லதூஉம் இச்செயுளடி நேரடியாய் விதித்த வெழுத்தெல்லையினிகவாது நிற்றலின், இக்குறிப்பான் இந்நூல் மெய்வீட்டினெறித்தாய் அவ்வீட்டினெறிக் கெல்லையாய ஞானத்தினிகவாது நின்ற தெனினுமாமென்க. எல்லை என்னெனில், [1]'பத்தெழுத்தென்ப நேரடிக்களவே யொத்த நாலெழுத் தொற்ற லங்கடைவே' யென்ப வென்க. இங்ஙனம் குறித்தற்கன்றே இச்செய்யு ளீற்றடியி னூற்பெயரை வேறடை கொடாது தனிமையி னிறுத்திய தென்க.

இச்செய்யுள் சிறப்புப் பாயிரத்தாயி னப்பாயிரத் திலக்கண மிதனுளிருந்தவா றெங்ஙன மென்னின்; வள்ள லென்பதனு லாசிரியர் பெயரும், குருராயன் வாதுவென்ற சம்பந்தன் வள்ளன் மலர்த் தாடலை மேல் வைத்துரைத்தா னென்பதனுன், ஞானசாரியராகிய பிள்ளையாரருளுபதேச வழித்தென வுட்கொளப் படுதலின் வழியும், இந்நூற் றொடர் தமிழ்த் தொடராகலி னித்தமிழ் வழங்குநிலமே யிந்நூல் வழங்கு நிலமெனக் கருதப்படுதலின் எல்லையும், ஒழிவிலொடுக்க நூலென்பதனுல் நூற்பெயரும் ஒழிவிலொடுக்கமென அன்மொழித் தொகைப் பெயர் மாத்திரையினில்லாது நூலென விரித்தமையினிந்நூலும் தொகை விரியுடையதெனக் கருதப்படுதலின் யாப்பும், உள்ளத் தழிவிலென்பதனுற் கருதிய பொருளும்; அன்ப ரெல்லாம் உண்ணவென்பதனுல் அன்பரெலா முணற் பொருட்டிடை தியற்றுக வென்றுள்ளெழுந் தெதிரிட்டு நின்றது ஆசிரியரது பெருங்கருணையெனக் கருதப்படுதலிற் கேட்போரும், உள்ளத்தழிவி லடுக்குந் தேனென்பதனற் பயனும் புலப்படுமாகலின், அவை யிருந்தவா றிங்ஙனமென்க.

---

**இவ்வுரை—முற்காலத்து—கண்ணுடைய வள்ளலார் இயற்றிய ஒழிவிலொடுக்க நூலின் பாயிரச் செய்யுட்கு (185?)-ல் சிதம்பரம் இராமலிங்க சுவாமிகளாற் செயயப்பட்டது.**

1. தொல்காப்பியம், செய்யுளியல், 38.

ஒழிவிலொடுக்க நூற்கும் சிதம்பர சுவாமிகள் உரைக்கும்
சுவாமிகள்

# எழுதிப் பதிப்பித்த குறிப்புகள்

## ஒழிவிலொடுக்க நூலின் உரைபாடத்தில்
## சிலசில இடங்களிலுள்ள

## 1. மறை சொற் பொருட்குத் தெளி சொற்பொருள்

### 1. பொதுவிலுபதேசம்

1. வது 'வேதாகமப் பவுரிவீசும்' என்னும் திருவெண்பா.

1. **பவுரிக் கூத்து** —வலமிடமாகச் சூழ்ந்தாடுங் கூத்து.
2. **குறு மன்னியர்** —சிலரால் அறிந்து மதிக்கப்படும் பிரபுத்துவ முடையோர்.
3. **மகா மன்னியன்** —பலராலுமறிந்து மதிக்கப்படும் பிரபுத்துவமுடையோன்.
4. **[1]பிரளயாகலர்** —மும்மலங்களுள் ஒருமலம் நீத்தோர்,—அவர் பிரமன் முதலானோர்.

2-வது 'தன்னிழப்பை என்ன கற்றுச் சாதிப்பான்' என்னும் திருவெண்பா.

1. **ஞாதுரு** — காண்பான், 2 **ஞானம்** — காட்சி;
3 **ஞேயம்** — காணப்பட்டது.

3-வது 'கூலிதொழிலாளர்' என்னும் திருவெண்பா.

1. **சூக்குமம் வாக்கு**—வார்த்தை தோன்றற்கு முதற்காரணமாயுந்தியிலே நாதவடிவமாய் நிற்குமொரு சக்தி
2. **பகடிக்கூத்து** —உள்ளதுபோன்றில்லாததைக் காட்டும் வெளிவேடம் அல்லது அகசியக்கூத்து.

4-வது 'குட்டித்திரட்கரடி' என்னும் திருவெண்பா

**பரஞானம்** — அனுபவ ஞானம், அபரஞானம், வாசகஞானம்,

5-வது 'குருட்டரிப்பனுர்க்கும்' என்னும் திருவெண்பா

1. **அரிப்பாளன்** — குப்பை முதலிய விடங்களிற் பொன் முதலிய அரித்தெடுக்கின்றோன்.
2. **கொழுந்தாடை** — கரும்பின் நுனித்தழை.

10 வது 'சாயாபுருடனைப்போல்' என்னும் திருவெண்பா

**சாயாபுருடன்** — தன்னிழலைப் பார்த்துப் பின் ஆகாயத்தையுற்று நோக்குகின்றோர்க்கு அவ்வாகாயத்தின்கண் புருடவடிவம் போற்றோன்றும் அந்நிழற்காட்சி.

---

1. 142-ம் பக்கத்தில் அனுபந்தத்தைப் பார்க்கவும்.

12-வது 'தாக்கற்ற பூரணத்தில்' என்னும் திருவெண்பா
**பைமறித்தல்** — உள்ளிருந்த சரக்கு வெளிப்படப் பை வாயதொட்டு உட்புற மேற்பட்டும வெளிப்புற முட்பட்டு மடங்க மடக்கல.

16-வது 'ஆலியகனததிலே' எனனும திருவெணபா
**கிண்கிணிவாய்ச் செய்தலர்தல்** — வட்டவடிவாக முகங்கொண்டு மலாதல

21-வது 'மூலையுணணி நீருணணும' எனனும திருவெணபா
**பஃறுளை** — பலதுளை

42-வது 'தனமையை முன்னிலையும்' எனனும திருவெணபா
**பற்ற** — பார்ககிலும

43-வது 'மலையேறிப் போவார்க்கு' எனனும திருவெணபா
**அருகித்தோற்றல்** — சுருஙகிததோறறல.

52-வது 'சதநாதி தததுவம போய' எனனும திருவெணபா
**பிரேரகம்** — காரியபபடுத்தல.

54-வது 'தத்துவத்தா ரல்லார' எனனும திருவெணபா
**பிரதிபலிதம்** — எதிர் விமபம.

56-வது 'நாயேறி வீழ்ந்தெேன்' எனனும திருவெணபா
**சகசமலம்** — அனாதியாகிய மலம.

## 2. சத்திநிபாதத் துந்தம ரொழிவு

2-வது 'கின்னரியைத் தொடவர்போல' எனனும திரு வெணபா
**கடா** — வினா

3-வது 'சுமமாதே பார்ததிருக்க' எனனும திருவெணபா
**விட்டிசையா திசைத்தல்** — நடுவே நிலலாம லொலிததல.

4-வது 'மூலமுதிர' எனனும திருவெணபா
**நக்கினம்** — நிருவாணம.

17-வது 'கலையுநுவாக்கும்' என்னும திருவெணபா
**தேறிட்டநீர்** — தேறறாங கொட்டையாற றெளிவிககப் பட்டநீர்

## 3. போகக் கழற்றி

8-வது 'உபதேசப்பித்தோ' எனனும திருவெணபா
**கவுசனை** யாதாயினுமோா பொருளை யுள்வைத்து மறைய மேனமூடிக கட்டு மேறகட்டு

14-வது 'கூட்டிற்குரங்கை' எனனும திருவெணபா
சுழல் விறிசு — கொள்ளி வட்டம் போற் சுற்றுவதாய ஒருவகை மருத்துவாணம. (இததேயத் திககாலததில சுழல் புரிசு என்று வழஙகுகினறது.)

18-வது 'மண்ணை மலையை' எனனும திருவெணபா
அநனனியப — அனனியமலலாமை.

22-வது 'பழக்கங்கொடியது பார்' எனனும திருவெணபா
நெற்பொலி — தூறறுநெல

23-வது 'கட்டியநாண் விட்டாலும்' எனனும் திருவெணபா
துய்புசெறித்து — துமபு அவிழதது.

30-வது 'மறப்பு நீஙைப்பும' எனனும திருவெணபா
அனுபவிக்கச் சிதைக்கும்— அனுபவிகக அறிகினற போதும்.

## 5. சரிதைக் கழற்றி

13-வது 'கயிற்றரவும்' என்னும் திருவெணபா
அவித்தியாகதய — அஞ்ஞான மயம.

## 6. விரத்தி விளக்கம்

2-வது 'அறுசமயத்தோர்க்கும்' எனனும திருவெணபா
முடி களச முத்தி — முடி — சிரசு, களசப் — மீககம, முத்தி — வீடு.

3-வது "வாசிக்குச் சாவிரர்" எனனும திருவெணபா
வாசியென்ற வார்த்தை— இது செயக விடுக வென்று நியாய மாகக கூறும வார்ததை.

8-வது 'அறிநது பற்றி' என்னும திருவெணபா
1. வியாபகம் —கலப்பு, 2. வியாத்தி—கலககப்படுவது

9-வது 'கூரிருளின் மின்மினி' எனனும திருவெணபா
விசர்க்கரித்தல் —விடுததல

## 7. துறவு

3-வது 'பட்டினத்து பிள்ளையினை' எனனும திருவெணபா
1. வெறுவிடர் —அனுபவிப்பதற கில்லாமையால விட்டோடோபோன ரிருபபோர.
2. கறண்டல் —பறகளால நெருககிப் புரண்டுதல.

13-வது 'குரஙகிற் றுனிச்சி' எனனும திருவெணபா
சேட்டித்தல் —தொழிறபடுததல அலலது குணக கேடான தொழில விளைததல்.

19-வது 'அங்கக்காரன் றுதிபபும்' எனனும திருவெணபா
சிங்கி —விலங்கு.

## 8. அருளவத்தைத் தன்மை

5-வது 'கருவி கழல' எனனும திருவெணபா

1. நாங்கூழ் —நாகப்பூச்சி யென்னுமோர் கிருமி.
2. விகலம் —மௌனம்

9-வது 'நடை தளர்ந்து' எனனும திருவெணபா

மடலெடுப்பு —பனைமடலாற குதிரை செயதேறுதல்.

18-வது 'சூலேயும பேயும்' என்னும திருவெணபா

ஐவரரசர் —பாண்டு மககளாகிய தருமன் முதலிய ஐவர்

38 வது 'உருகபரமசுக' எனனுந திருவெணபா

மந்தகாசப் பிரகாசம் —புனனகைப பிரகாசம்.

# II. அடிக் குறிப்புகள்

[1] '**உள்ளவுரை நாயேற் குறச் செய்யும்**' என்று பாடமோதலு முண்டு.

[2] **ஈணடு—இத்தோத்திரச் செய்யுட்கள்** உரையாசிரியரால் இந்நூற்கு உரை இனிது முடிதறபொருட்டு இயற்றபபட்டன.

[3] **பரிபூரணமே பறையாய்**—என்பதைப **பரிபூரணப் பறையேயாய்**—என்று கூட்டுக

[4] **இங்ஙனம்** செயயுடகட டாறு யெனனு மொருமையை யுரைககட் டாமாகி யெனப் பனமையாககூறியது எனனே எனின, **பிள்ளையார** எனனும திருவருட்பெயரின பெருமைநோக்கி என க. இவ்வாறு கூறியவற்றிற கெலலாம விதி யிவவனமெனறுணர்க

[5] **கதறல்**—கதறறல என விகாரமாயிறறு

[6] **அகந்தை** யெனபது—அஙதை யெனறிடைக குறையாயிற்று.

[7] **செட்டையாற்** பரிசித்தன முதலியன வவ்வம முட்டைக டத்தம் ப்ருவமடைதற கெனறறிக.

---

1 காபபுச செயயுட்கள —
8-வது 'வள்ளலுரைத்த ... தாள்' என்னும திருவெணபா

2. இதன திருததம ஒனறை "அமைத்துக் கொளல்" எனற அடுதத பிரிவிற காணக

3 1 பொதுவிலுபதேசம் .—
41-வது 'அருளாலே ,தம்மை' எனனும திருவெணபா

4. 42-வது 'தன்மையு முன்னிலேயும்' எனனும திருவெணபா

5 51-வது 'நினைபபு மறப்பறுத்து' எனனும திருவெணபா

6. 53-வது 'சிநதை பயமிலச்சை' எனனும திருவெணபா

7. சத்திநிபாதத் துத்தமரொழிவு .—
13-வது 'பரிசிததுஞ் சிந்திததும்' எனனும திருவெண்பா

# III. அமைத்துக் கொளல்

[8] காப்பின்கண் 'ஈண்டு — இத்தோத்திரச செய்யுட்கள்' எனற வையுள் 'ஆணை யுக னுறு யுக' வெனனுஞ செய்யுளை யொழித்து வேறு கொளக.

[9] 'இக்கதையை யிப்பொருளுககு' என்றதை அக்கதை யிப்பொருளுக கெனக, கொள்க. இஙஙன மின்னும சில விடஙகளி லுள: அவற்றையு மஙஙனங கொளக.

'பாறுபா ரயக் கருதி' எனபதில செய்து என னும வாய் பாட்டு விணையெசசமாய ஆய் எனபதை செயவெனனும வாய்பாட்டு விணையெசசமாய ஆகவெனககொள்க. இஙஙனம் இனனும சில இடங களிலுள. அவற்றையு மஙஙனஙகொளக. [1]

[2] வடசொற்களுள் ஞாநம்—ஞானம ஆநநதம — ஆனநதம எனத் தமிழிற்குப் பொதுவுஞ் சிறப்புமாய நகர ணகரஙகள சிறசில விடங களில் விரவி நினறன. அவறறைத் தமிழச சிறப்பு வழககு நோககி யமைத்துக கொளக.

[3] 'இருப்பதுமனறி அஙஙன நினறு கேட்குமொழி பிரமோப தேச மொழியாகலி' னெனபதும சில வுரை பாடஙகளி லுணடு.

[4] 'ஞானத்திலின்பை நசிப்பித்து நானதுவா மூனத்தை யாரொழி விப்போர்' எனபதறகு, 'சுவானுபவத்தான ஞானானநதததைப பெறறு அதனை விடயச சேறறுற கெடுப்பித்து விடயசசேறறி லழுநதி நினறு அவ்வானநதத்தை யடைதற கேதுவாயக கூறும ஞான சாததிரஙகளைக கேட்டறிநத மாத்திரததினலை அவவானநத மயனெனறு கூறும' என்பது சிலவுரை பாடஙகளிலுண்டு இது உரை வேறுபாடு.

## அநுபந்தம்

138-ம் பககத்தில கண்ட 'பிரளயாகலா' — மும்மலஙகளுள ஒரு மல நீததோர், அவர் பிரமன முதலானோ' எனனும
தெளிசொற பொருள விளககம

பிரளயாகலர் இருமலமுடைய உருத்திராகள எனறும சகலராவார் மும்மலமுடையராகிய பிரம விட்டுணு முதற கிருமி ஈறாகவுள்ள உயிர்கள

8 காப்புச் செய்யுட்களைக குறித்த அடிக் குறிப்பு,
9. பொதுவிலுபதேசம்:—4-வது 'குட்டித் திரட்கரடி' என்னும திரு [வெண்பா.

1. பொதுவிலுபதேசம் :—"குட்டித் திரட்கரடி" எனனும திருவெணபா,
2. 5-வது 'குருட்டருப்பனர்நதும்", 10-வது "சாயா புருடனைப்போல" எனனும திருவெணபாககள முதலியன
3. 8-வது "தேனுண் டுமிழும்" எனனும திருவெணபா
4. சத்திநிபாதத துத்தம சொழிவு —
6-வது "வாதிவடத்தினமும்" என்னும திருவெணபா

என்றும் ஒரு சாரார் கூறலும், அதை ஆராயும் முகத்தான் மேற்கண்ட தெளிசொற்பொருளின் நுண்கருத்தை சுவாமிகளின் முதன் மாணாக்க ராகிய தொழுவூர் வேலாயுத முதலியார் அவர்கள் விளக்கிக் காட்டிய வாசகம் வருமாறு —

பிரளயாகலர் இருமலமுடையார் ஆவார் எனில்,—இருமலம் உடைமையும் பிரளயாகலர் அவற்றை உடையராவாரு மாயின், இரு மலத்தையும் புசித்தற்கு உடைமையாகத் தேடியபின் உடையராவாரெனக் கூறியவாறாயிற்று எனவே இருமலத்தைத் தேடுவாரெவரோ அவர்தாம் பிரளயாகலர் எனப்பட்டவர் என்று ஆம் என்னை? ஆவாரென ஆக்கவினை எதிர்காலமபற்றி நிற்றலானும், உடையார் என்பது முக்காலத்திற்கும் பொது வாகிய குறிப்பு வினைமுற்று ஆதலானும், அது வினையாலணையும் பெயராகி அப்பெயர் மற்றொரு பெயரோடு ஒட்டுமாறு விளக்கும் பண்பு வாசகமாய இறந்தகாலப் பெயரெச்சம் அடுத்து நிற்றலானும் எனக். அங்ஙனமாத லின், எம்மலத்தையும் ஒழிக்க முயல்வதே சிறப்பு எனவும், அங்ஙனம் ஒழித்தாரே புவனேசராகிய உருத்திரராதியர் எனவும், வேதாகமங்கள் கூறி முறையிடவும், அதனை நோக்காது ஒழிக்கத்தக்க இருமலத்தையும் புசித் தற்கு உடைமையாகத் தேடுவார் உருத்திரர் என்று பொருள்பட்ட பிரள யாகலராவார் இருமலமுடையராகிய உருத்திரர்களென்று கூறுவது மாறு கொள்கக் கூறல் முதலிய குற்றங்களுக்கு இடனாய ஆற்றல் முதலிய கெட்டு நின்றது. இனி அவ்வாசகத்தை நினைப்பினும் பெரும் பாதகங்களுள் ளும் பெரும்பாதகம் விளையும் எனக.

இங்ஙனமாகலின்னறே மலம் துன்பஞ் செய்வன என்றும் அவை ஒழித்தற்பாலனவும் பிறவும் என்றும், யாவர்க்கும் பொருள் கிடைக்கப் பிள்ளையவர்கள் அம்மல மூன்றனுள் ஒன்று ஒழித்தார் என்றனர். ஆகவே, இனி இரண்டொழிப்பார் என்பது கூறுதலையும் ஆகலின், பிள்ளையவர்கள் கூறியதாகிய 'மும்மலங்களுள் ஒரு மல நீத்தோர் பிரளயா கலா—அவர் பிரமன் முதலானோர்' என்றதுவே '1 சுருங்கச்சொல்லல— 2 விளங்கவைத்தல—3 நவின்றோர்க்கினிமை—4 நன்மொழி புணர்த்தல் —5 ஓசையுடைமை—6 ஆழமுடைத்தாதல—7. முறையின் வைப்பே— 8 உலகமலையாமை—9. விழுமியது பயத்தல — 10. விளங்குதாரணத்த தாகுதல' [1]என்னும் பத்தழகினுக்கும் உதாரணமாய நின்றதோர் வாசக மெனக

ஆயின் பிள்ளையவர்கள் பிரமன் முதலாயினோரைப் பிரளயாகலர் எனக் கூறினர். அக்கருத்து என்னையெனில —

பிரளயாகலர் மூவகையாருள் ஒருவர், மலகன்ம பரிபாகராய் அவ வண்ணமே இறை திருவருளான் முத்தி அடைவர் எனவும், (மற்றொரு வகையார்) அபக்குவ மலகன்ம சகிதராய புரியட்டகம் பெற்றனராயினும் அவருட் சிறந்தார் மந்திரேசுரராய புவனாதிபதித்துவம் அடைந்து, கக்னேசாதி அஷ்டமண்டலிகளாய்க் கலாதத்துவத்தினும் குரோதே சாதி எண்மராய்க் குணத்தத்துவ மஸ்தகத்திலும் வீரேச ஸ்ரீகண் டேசராய்க் குணத்தத்துவத்தின் கீழும், பிரமாண்டத்தின்மேலும், சதருத்

1. நன்னூல். பொதுப்பாயிரம், 13

திரராய் பிரமாணடாதாரர்களுமாய் வசிபபா—இவர் அதிகாரபோகார்த்தம் தூலமடைந்து சகலர் போலவா எனவும், மறறொரு வகையாா புரியடடக முடையராயக கனமானுகுணயோனிகளை அடைவா எனவும், முறகூறிய சதருததிரா் பிரமன முதலானோ எனவும கபாலீசன முதலானோர் எனவும —மூலாகம பேதஙகள கூறுதலின, அவ்விரிவகையாமாறு விளஙகப் பிள்ளையவர்கள சுருஙகக கூறுதல எனனும அழகாதி பெறக கூறியவா றெனக.

இககருத்திலை போஜதேவர் அருளிச செய்த தத்துவப் பிரகாசிகை, அகோரசிவாசாரியா அருளிசசெயத அதன உரை, காமிக பேதமான மிருகேநதிரம, சிததாநதசேகரம, திருமநதிரமாலை முதலிய வறறுளளுங் காண்க இனி விஞ்ஞானகலர் சகலா இலககணமும பிறவும இடமபெற றுழி விரிப்பாம.

இனிச் சித்தாநத சேகரத்தில் அஷ்டாதச சதவுருத்திரர் திருநாமங கூறுமிடத்து,

> 'கபாலீசோஹ்யஜோ புததோ வஜ்ரதேஹ ப்ரமர்தநः
> விபூதிரவயயச்சாஸ்தா||'

என்று தொடஙகி,

> 'அதபூபூதகாலாக்நி ருத்ரோஹாடக ஏவச
> கூர்மாணடஜச்ச ஸத்யச்ச ப்ரஹ்மவிஷ்ணுச்ச ருத்ரகஹ ||'

என்று முடித்தவறறுள் பிரமன விஷ்ணு எனபவர்கள உருத்திரபேதமே யாய் அடஙகுவர் எனபதும் பிரளயாகலரே எனபதுங காண்க.—

ஆயின பிள்ளையவர்களுககுப பிரளயாகலர் எனபவர் உருத்திரரே என்பது கருததாய அவர் பெயா விளஙககக்கூறுவது வேண்டினாராயின, கபாலீசன முதலானோ எனககூறாது பிரமன முதலானோர் என யயஙகக கூறுவானேன, எனில, அறறனறு: பிருதிவி தததுவததிலுளள புவன பேத நூறறெட்டினுள அண்டததுட புறததுளள புவனம ஆறனுக்கும தலைவராவாருள பாதலததில காலாககினி யுருததிரா, கூர்மாணடர், ஆடகேசுரருமாகிய மூவா, போக பூமிககுமேல ஆகாயததிலுள்ள மூனறு புவனத தலைவராகிய பிரமா விஷ்ணு ருததிரருள முதலாதல நோககி பிரமன முதலானோ எனக கூறினா எனக இஙஙனம மூலாகம வுபாகம பதததி முதலியவறறுளளும உருததிரா பேதஙகளைக கூறுமிடதது ஒவவோர் காரணமபறறிப பிரசிததிப பொருளை அநதமாகவும ஆதியாகவும கூறுதல் வழககாதல நோககி பிரமன முதலானோ எனக கூறியுள்ளனவுங காண்க. இவறறை விரிப்பிற பெருகும.

இஙஙனம பிரளயாகலர் புரியட்டக சரீரிகளாய் அவருளொருசாரார் கன்மானுகுண யோனிகளுறுவரென ஆகமங் கூறிறறேல, புரியட்டகம மாயாகாரிய தத்துவக கூட்டததானியனற தனுவாதலானும, சகலர் போலத் தூல தேகமும பெறுதலானும், அவரை மாயா பாசம தொலைத் தவரென எஙஙனங கூறுவது? இனி, இககருததை உணராது, பிரமனு விட்டுணுமுதல கிருமி ஈறுகவுளள உயிர்கள மும்மலமுடையார் எனறு கூறினரே எனின், அது ஆகமவிதிகளைப் பெற்று அனுபவத்தால

தெரிந்து கூறியவாறு அன்று. ஆதலின் பிள்ளையவர்கள் உரையை மறுத்தல் ஆற்றுதென்க.

இனி மறுத்தல் ஆற்றுதென்ற அம்முறையைச் சொல்வகை யானும் பொருள்வகையானும் விரிக்கின்றாம். என்னை? அவர் 'சகலர் — மும்மலமுடையராகிய பிரமன் விட்டுணு முதல் கிருமி யீறுகவுள்ள உயிர்கள்' எனக் கூறியதால், மற்றைய விஞ்ஞானகலர் பிரளயாகலர் உயிர்த் தொகையில் உள்ளாரன்று, முத்தர் என்றவாறுயிற்று. அங்ஙனம் முத்த ராகவே அவர்க்கு ஒரு மலமும் உள்ளது என்பது பொருந்தாது. இங்ஙனம் உயிர் முத்தர் என்பதன் பொருளும் ஓர்ந்துணர்க. ஆகவே, அது 'மூவகை யாருயிர்வர்க்கம்' என்றதனோடு முரணுகின்றது.

அல்லதூஉம், ஒரு சாதிவகைப் பல பண்புப் பெயர்ப் பொரு ளவற்றின் ஆதியந்தம் கூறவந்தவிடத்து, ஆதிக்கு —அச்சாதி இரு மைப் பண்புப்பெயர்ப் பொருளையும், அந்தத்திற்கு—அச்சாதிப் பண்புப் பெயரின் ஒரு பொருளையும் கூறலமையாது.

அங்ஙனமன்று: பல பண்பு என்றமையான், தொழில் வேற்றுமை யால் சிறப்பியற்பண்பு — பொதுவியற்பண்பு — இழிவியற்பண்பு எனப் பொதுவகையினும் பண்பு மூவகைப் படுமாதலின், அம்மூவகையுங் குறித் தற்கு ஆதியந்தங் குறித்து வேறுபிரித்துப் பொதுவியற்பண்பி சிறப்பியற் பண்பியைச்சேர்த்து முதலெல அடக்கி இழிவியற்பண்பியை ஈற்றிலடக்கி அங்ஙனங் கூறியவாறெனில், அற்றன்று. அக்கூற்று சாதி நுகர்ச்சி ஒற்றுமையின் கண்ணதன்றிப் பண்பின்பாலதன்று. ஆகலான் நுகர்ச்சி ஒற்றுமையுடைய சாதியை விரிக்க வந்த விடத்துப் பண்பு வகைப்பாடு பற் றிக் கூறவேண்டுவதின்று. விளங்குதற்கெனின், சிறப்பியற் பண்பியை யும் இழிவியற் பண்பியையும் முதலுங் கடையுமாகக் குறித்தாற்போதும். அதுவே மரபுமாம். ஆகவே 'விட்டுணுமுதல் கிருமி ஈறுக' வெனில் பொது வியற் பண்பியாகிய பிரமனைக்கூறவேண்டா. இடையிற்றுனே போதரும் அங்ஙன மன்றிப் பண்பையுடைய பெயரைப் பிரித்துரைத்து முதலெல ஓர் எண்ணுப் பண்பியாக அடக்குதல் பண்புப் பொதுமை கூறுமுகத்து வழு: எண்ணுப் பண்பின் ஓரியற் பொதுப்பண்பி சேர்வதல்லது ஓரியல் வேற்றுமைப் பண்பிகள் தம்முட்சேராவா மாகலின். அற்றேல், பிரமவிட்டு ணுக்கள் ஓரியற் பொதுப்பண்பியாகாரோ வெனில், ஆகார்: நாமரூபக் கிரியை முழுவதும் வேற்றுமைப் படுதலான் என்க.

அற்றேல், பிள்ளையவர்கள் 'பிரமன் முதலானேர்' எனக்கூறுதலின், அவன்மேற் சிறந்த விட்டுணுவும் உயிரெனக்கூறி மறுத்தற்குப் போதும் அங்ஙனங் கூறியதெனில், ஆண்டும் 'விட்டுணு முதல் கிருமி ஈறுகிய' எனக் கூறி னமையும்; 'பிரமன் விட்டுணு முதல்' என்பதும் வழுவேயாம் என்க. ஆகலின் சொல்வகையாலும் சொற்புணர்த்த வகையாலும், ஒரு சார் பொருள் வகையாலும், அவ்வாசகம் வழுவேயாம் என்க. இதனை இன்னும் விரிக்கிற் பெருகும்.

இனி, பொருள மூழு வகையினல ஆராயினும் பொருநதாது. எனனே? அவ்வொழிவி லொடுககததது [1]'வேதாகமப பவுரி வீசும' என்ற குருதோத்திர முதறறிரு வெணபா 'கருணே பொழிவான எடுததகை' எனறவிடதது, பிளளையார் உபதேச மூறை முதலியவைகளைத் தெரித்தற்கு எடுத்துக காட்ட, ஆணடு எழுநதருளியிருநத 'தோடுடைய செவியன' என்னுந திருக கடைக காபபின திருவுளக கிடையை விரிதது [2]'பிரளயாகலாககு அனுக கிரகிததலும இது' எனறதனுலும, அஙஙனம மெய்ப்பொருள வநத கோலம குரு வடிவு எனபது,

[3]தோடு கூற்றுப் பித்தா மூன்றும்
பீடுடைத் தேசிகன் பேரரு ளாகும்

எனறதனல் பெறபபடுதலானும்; ஆணடு எழுநதருளிய குருவடிவத்தைப் பிரமன விணடு முதலாயினேர் ஆணடும கயிலை முதலிய பிறாணடும தரிசித்ததாக அப்புராணமும பிறபுராணமும் கூறுதலினுலும, அவர் நீஙகிய கீடாதியாயுளள மறறைச சகலர்கள அஙஙனம எளிதில தரிசித்தமை கூறப் பெறுமையானும; பிரம விஷ்ணுககள சகலா எனபதற்கு நியாய மென்னே?

இஙஙனம சொலவகை யறியாதாரோ நூல்வகை யறிவார்! அல்லதூஉம் அஙஙனம 'சகலா மும்மலமுடையராகிய பிரமன விட்டுணுமுதல கிருமி ஈருக வுளள உயிரகள' என்று ஒழிநதாரேல, ஔவையார்,

[4]மாலய னங்கி இரவி மதியுமையோ
டேலுஞ் சிவசத்தி யாறு.

எனவும், ஆளுடையவரசுகள்,

[5] * * * காண்டகு சோதி யார்க்குப்
பிரிவிலா வமரர் கூடிப் பெருந்தகைப பிரானென் றேந்தும்
அரியலாற் றேவி யில்லை யையனை யாற னர்க்கே.

எனவும், வரும பூர்வாசாரியர்கள திருவாணேக கென்ன விடை கொடுககக கூடும? பூர்வாசாரியர்கள இஙஙனம அப்பிரம விஷ்ணுககளுககுச சிவசத்தி யெனத தெயவததனமை தரிபபது காணக.

அலலதூஉம, கிரியாசசனேயிற சததகுரு பூசையிலும், பிராசாததிகம ஆதாராதிதெயவம, நிவர்ததியாதி அதிதெயவம, பூதாதிதெயவம, புவனுதி தெயவம, கிருததியாதி தெயவம, நவவடிவம கூறியவறறுளளும பிறவாற ருனும பிரம விஷ்ணுககளைச சிறபபிததுத தியானிககவும பூசிககவுமாகக கடடளையிட்டபின, அவர்களைக கிருமிககு ஒத்த கீழுயிர் என்று கூறுவது ஆகுமோ?

---

1. வேதா கமபபவுரி வீசுங களாசகிலை
யாதார வெறபி லபிடேகம—போதத்
திரளிலெழு பாநு வெனதொழிவி லினபக்
கருணேபொழி வானெடுதத கை. —பொதுவிலுபதேசம
2. சிதமபரசுவாமிகள உரை
3. அகஸதியா தேவாரததிரடடு, திருபபதிகக் கருததுரை.
4. ஔவைக குறள, வீடடு நெறிபபால, 7.
5. 'எரியலால உருவமிலலை' என்னும திரு ஐயாறறுத திருநேரிசை.

அல்லதூஉம், சேரமான் பெருமாள் பொன்வண்ணத் தந்தாதியுள்,

[1]இடமால் வலந்தா னிடப்பால் துழாய்வலப் பாலொண் கொன்றை
வடமா லிடந்துகி ரூர்வல மாழி யிடமழுமான்
இடமால் கரிதால் வலஞ்சே திவனுக் கெழினலஞ்சேர்
குடமா லிடம்வலங் கொக்கரை யாமெங்கள் கூத்தனுக்கே.

எனவும், ஆளுடையவரசுகள்,

[2]வடிவுகொண் டார்ந் திலங்குமழு வலங்கைக் கொண்டார்
மாலையிடப் பாகத்தே மருவக் கொண்டார்.

எனவும் கூறியதற்கேற்ப, வைஷ்ணவத்துள்ளும் பேயாழ்வார் அருளிச் செய்த 3—வது திருவந்தாதியுள்ளும்,—

தாழ்சடையு நீண் முடியு மொண்மழுவுஞ் சக்கரமுஞ்
சூழரவும் பொன்னாணுந் தோன்றுமால்—சூழுந்
திரண் டருவி பாயும் திருமலைமே லெந்தைக்
கிரண்டுருவு மொன்றா யிசைந்து

என்று ஒத்துக்கூறியிருத்தலாலும், விஷ்ணுவைக் கீடத்தோடொப்பக் கூறுவது பொருந்துமோ?

ஆயின்,

அறுவகைச் சமயத் தறுவகை யோர்க்கும்
வீடுபே றாய் நின்று விண்ணோர் பகுதி
கீடம் புரையும் கிழ வோன் —திருவாசகம்-திருவண்டப்பகுதி.

என்று திருவாசகம் கூறியருளிற்றன்றோ எனின், ஆன்மாக்கட்கு மலந் தொலைப்பிக்கு முபாயமும் சிவத்தியல் விளக்கு முகமாகவும் கூறியதன்றி வேறன்று. இக்கருத்தை விரிப்பிற் பெருகுமாதலின் குரு முகத்தா லுணர்க.

திருச்சிற்றம்பலம்

ஒழிவிலொடுக்கம்—பாயிரம்—முற்றிற்று.



1. பொன்வண்ணத் தந்தாதி—6-வது பாட்டு
2. 'முடிகொண்டார்' என்னும் தனித் திருத்தாண்டகம்

சென்னை சமரச சுத்தசன்மார்க்க சங்கம்,
'அருட்பெருஞ்ஜோதி நிலையம்'
7/99, அம்மன்கோயில் தெரு, கிருஷ்ணன்குளம் சமீபம், சென்னை—1.
1952

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# தொண்ட மண்டல சதகம்

## 1. நூற்பெயர் இலக்கணம்

திருச்சிற்றம்பலம்

* தொணட மணடல சதகம்·
ஒருவாறித னிலக்கணம் விரிககின்ரும்.



இஃது :—மூவகை மொழி — இருவகைச சநதி — முத்திறத் தொகை—ஒருதலே நோகக — மூநநிலே யிலககணேச செந நிலேததொடர்.

முறபாட்டுயர் பொருட்டலேமை யுடையதினிலேமை, இடைபபாட் டுடைய துரிமையுடைமை நிலேமை பிறபாட டுடைமை யுரிமை யுடைய துடைமையாய —இததொடரைச சொற்றிறந தோனறத் தொடர் பினமை செயின, தொண்டன—மணடலம—சதகம எனறு செயக. இதனுள,

### தொண்டனென்பது

வழககியறபாடு—ஒற றுமைசசெறிவு—வேறறியறகரணம--குறிப்புயர் நோககம — பொருளவிரியாககம — குறறியல வணணம — இடைபபல வயிறறொகை—முதலிய சொலலியறபாகு பாட்டிலமைந்த முதறறொகைச் சிறப புயாதிணேக காரணப பொருட பெயா

### மணடல்மெனபது

வடசொனனோ கியற் காரணப பண்புகோ ளிடப பெயர்.

---

* இவ்வுரை இறறைக்கு 98- வருடஙகடகு முன இராக்ஷச வருடததில (1854-ம வருஷம ஜனவரி மாதம) தொணடமணடலம துளுவ வேளாளர்கள் ஏற்படுததிய இயற்றமிழ்ப் போதகசாலே இரட்ச காததாவாகிய கொணணூா ஜயாசாமி முதலியாரவர்கள கேட்டுககொணடபடி ஸ்ரீமத சிதமபரம இராமலிஙக பிளளே யவாகளாற செயதருளி, தமமால பதிபபிககபபட்ட தொணடமணடல சதகத துட் கணடது.

—தொண்டமண்டல சதகம இயற்றியவர்—படிகாசுப் புலவர்.

**சதகமென்பது**

வடசொற் பாட்டியற் காரண வெண்ணிலைக்குழூ உக்கோட்பெயர். இத்தொடர்க்கண் இயைபின்மையிற் பொருள் கொளின்:—

**தொண்டன்** — ஆதொண்டன், **மண்டலம்** — வட்டம், **சதகம்**— நூற்றினலாய கூட்டம் என்று கொள்க.

இயைபுண்மையிற் பொருள் கொளின் :—

தொண்டன் — ஆதொண்டனென்னு மோரரையன்; மண்டலம் — இருபதின்காதவெல்லை வட்டமாய நாடு; சதகம்—நூறு செய்யுட்களாலாய கூட்டம் என்று கொள்க.

பொருத்த வியைபிற் பொருண் முடிபு கொளின்:—

**ஆதொண்டனென்னு** மரையனு லாளப்பட்ட விருபதின்காத வெல்லை வட்டமாய நாட்டின் வண்மையைக் குறித்த நூறு செய்யுட் கூட்டத்தானுய வோர் வகை யாப் பென்று கொள்க. இங்ஙனம் வழங்கல் சொற் சுருங்கியல், — பொரு ளாழ்பியல்,—குறிக் கோளியல்,— தொகையின்பம், — அளவிசைபாடு, — பல்வயின் வழக்கு, — ஒருங்கிய லுடைமை, — முதலிய தோன்றக் காரணம் பற்றிய பெயர்க்கோள்களை வழங்குவிக்குங் கலைவல்லோர் கண்ணிய நிலையென்றுணர்க. இஃதின்னும் விரிக்கிற் பெருகும்.

**இதனுள் தொண்டமண்டல மென்பத னியலை விளங்க வகுத்துணர்த்துக வெனின் :—**

ஆதொண்டந் தழைவயிற் கிடத்தப் பட்டதனல் ஆதொண்டனெனக் காரணக் குறிப் பெயரேற்று, இரவி மரபின்கண் ணேரிறை மகனு லாளப்பட்ட வெதிரி லாட்சி யுடைமையின் இம்மண்டலத்திற் குத் தொண்டமண்டல மெனப் பெயர் வழங்கிற்று.

இனி, ஆதொண்டந் தழையானு மலரானு மியற்றிய தொங்க லணிந்தமையின் ஆதொண்டனெனப் பெயர் வழங்கிற் றென்பாரு முளராலோவெனின் :— அங்ஙனங் கூறினு மிங்ஙனம் வழங்க லொத்த நிலையென்க.

அற்றேல், ஆதொண்டந் தழைவயிற் கிடத்தப்பட்டவனை ஆதொண்டனென்று குறியீடு செய்த லெங்ஙனமெனின் :— மேற் கலைவல்லோர் கண்ணிய நிலையென்ற மதனு லுணர்க வென்க. அன்றி, —கடப்பந் தழைவயிற் கிடத்தப்பட்டவனைக் கடம்பனென்றும்,—வேப்பந் தழையானு மலரானுந் தொடுத்த தொங்க லணிந்தோனை வேம்பனென்றும்—இங்ஙனம் பலபட வழங்குங் காரணக் குறிப்பெயர்கள் பலவுள வவற்றாற் றேர்ந்து தெளிக வென்க.

**அற்றேல், ஆதொண்டன் மண்டல மெனல் வேண்டும்; தொண்டமண்டல மெனல் எங்ஙனமெனின்:—**

நிறுத்தமொழிக்கண் ணீற்றுச் சிறப் புயர் திணை யாண்பாற் படர்க்கை விகுதியாய அன் னென்பதன் னகரமெய் குறித்து வருகிள

வியோ டுநிறுத்த மொழி பிளவுபட் டிருசொன்னீர்மையிற பொருந தாப புணர்ச்சியாய்ப புணர்ச்சி யினபம பெருமை நோக்கி, அவை யொன்றுபட்டொரு சொனனீர்மையிற் பொருத்தப் புணர்ச்சியாய்ப் புணர்ச்சியினபம பெறறபொருட்டு ஒத்த கிழததிக்குங கிழவோர்க்கும் புணர்ச்சியின்பந தோற்றறபொருட் டகன்று நிறகு முயிாப் பாஙகி போன றகனறு நிறபவும நிறுததமொழிககண் முதனிலை வேற்றுமை யொறறுமை விரவுறப பாகாரம பலவயின் வழக்குத தொகையின்ப முதலிய நோக்கித தொகுக்கப்பட்டுந தொகாவியலின ஞாபகவிடய வுருவி னருகிக கண்ணுற்று நிற்பவும—**தொண்டமண்டல மென்று** வழங்கிற றெனக.

இஃது இருவயிறறோற்றம சிறப்பாட்சியுடைமை பொருளடைச் சேர்பு ஒறறுமைசசெறிவு ஒததிசைபபேறு நுனித்துணாபுணாவு முத லிய நோக்கியலைப பெறறுத தேயவழக்குச சிறப்புடைச சொறறொட ரிற் போநத காரணக குறிபபெயரெனக.

தொணடமண்டலமெனிற காரணக குறிவிளங்கப் புலப்பட லின்றோலோ வெனின — மேறசொற சுருங்கியன முதலிய குறித்து வழங்குவிததல் கவிஞர் கணணியநிலை யென்றும. ஆதலிற கூாநதறிக வெனக.

கூர்நதறிதற் றன்மையது செய்யுளவழக்கே யனறிப் பாடை வழக்குத் தேயவழக்கு முதலிய வனறோலெனின :—இத்தொண்ட மணடலமெனபது செய்யுள வழக்குமுதற பலவகை வழக்கினும பயின்று வரலானு முற்காலத்ததனறிப பிற்காலததுக காரணககுறி யாககபபெயராய வழங்கலானும புறப்பாட்டிற பொருண்முடிபு வல் லுந ரலலார்க்கும் விளங்கப புலப்படுதலானு மதனகப பாட்டிற செயகை முடிபு முதலிய இயனமாத்திரையே கூர்நதறிக வெனறுமெனக.

இஃது செய்யுண் முதலிய பல்வகை வழக்கினும் பயினறு வரு தன முதலிய இச்சதக யாபபினகணணும, — காஞ்சி மானமியததைக குறித்த காபபிய முதலியவறறினகணணும,—பாடை வழக்குத் தேய வழக்கு நகாவழக்கு முதலிய வழக்கியறகணணும,—பல்வகைபபெயர்க்கு மிலக்கணம புலப்படுத்தற கருவியாய முநதுநூன முதலிய நூனமுடி பினகண்ணும,—வழசகுணர்ச்சிக கண்ணும, காணகவெனக.

அறறேற் கூர்நதறிக வெனற வகப்பாட்டிற் செய்கை முடிபு முதலிய விளங்கப் புலப்படுத்துக வெனின —பயனறுஉந தொழிலது புடைபெயாச்சிககண் ணுரிமை தோறறி யுரிமை யுடைமைககு முதலாய முதறபொரு ளெஞ்சி நிறப அமமுதலாய முதறபொருட் டொழின முடி பிட னேற்ற தன றொழிற் பயனுறுதற் கிடனுய செயபொருளம முதற் பொருளேககிய லொருபுடை யொபபத தொழிறபயன றோறறறகிடனுய தரப்பொருள வேறறுரிமை யேற்றுத தனறொழின முடிபின முறறிப புடைபெயர்ச்சியி னுரிமை பெறற முதற பொருண்மையி னைப்புமை பெறறுந தன புடைபெயர்ச்சியி னுரிமையேறறு வேறறுரிமை முதற பொருட கரணத் தொழிறபய னுறபபடூஉஞ செயபொருளைத தன கருமத தொழிற பயனுறபபடூஉஞ செயபொருளாப புடைபெயாநதத னுரிமை

யேற்ற முதலாய முதற்பொருட் பாடுபெற்றும் வந்த விரிசொற் றெரிநிலை வினை முற்றுனணைந்த பெயர்க்கோணிலை நோக்காய — ஆ தொ ண் ட ந் தழையிற் கிடத்தப்பட்டவன் — ஆதொண்டந் தழையானு மலரானு மியற் றப்பட்ட மாலையைத்தரித்தவன் — என்பன தன் வினை முதற் றொழிற் பயன் றோற்றுமிடனுந் தன் றொழிற்பய னுறப்படூஉஞ் செய்பொருளு மிடனுக — ஆதொண்டந் தழையன், — ஆதொண்டத் தழையன், — என விரிசொற் குறிப்பு வினைமுற்று னணைந்த பெயர்க்கோணிலை நோக் காய்ப் பின்னர் இடப்பொருளவயவியுங் கருவிப்பொரு ளவயவியு மிடனு கப்பெற்று,—ஆதொண்டை யென்பதனீற் றைகாரங் கெட் டஃதூர்ந்த மெய்ம்மேல் விகுதி அன் னூர்ந்து ஆதொண்டன் எனக் குறுந்தடியுஞ் செம்பட்டு மாயவாறுபோற் றொகைநிலை யேற்றுப் பெயரேயாய் நின்றது.

அல்லதூஉம், ஆசிரியர் தொல்காப்பியர் கூறிய,

> பனையு மரையு மாவிரைக் கிளவியு
> நினையுங் காலை யம்மொடு சிவணு
> மையெ னிறுதி யரைவரைந்து கெடுமே
> மெய்யவ ணொழிய வென்மனார் புலவர்.
>
> —தொல்காப்பியம், எழுத்ததிகாரம். உயிர்மயங்கியல். 81.

என்னுஞ் சூத்திரத்துள் நினையுங்காலை யென்பதனுற் றழை யென் னுஞ் சொல்வந்துழி தொண்டை யென்னுஞ்சொல் லிறுதி யைகாரங் கெட் டஃதூர்ந்த மெய்ம்மே லம்முச்சாரியை யூர்ந்து நின்றதன்றே: அங்ஙனம் உயர்திணை யாண்பாற் படர்க்கை விகுதியாய அன் னென்பதனை யேற்கு மிடத் தத்தழை யென்ப தெஞ்சியத் தழையிற் கிடத்தப் பட்டவனென் றறிந்துகோடற் குறியாத் தழையாற்போந்த அம்முச் சாரியையின் மகர வொற்று நீங்க நின்ற அகரத்தின் பின்னர் அவ்வுயர்திணை யாண்பால் விகுதி அன் னொன்பதி னகர நீங்க நின்ற னகர வொற் றடுத்து ஆதொண் டன் என்றாயது எனினுமமையும். இதனை, முதனிலை — இறுதிநிலை — இடைநிலை முதலிய பல்வகை யுறுப்புக்களிற் பல்வகை நோக்குடைப் பல வகைப் பெயரும் செறிப்பிற் றிறப்பட நெறிப்படூஉம் வழக்கிற் பல்வகை விகாரத்தாற் செந்நிலைபெறூஉ மென விதித்த வுணர்வுடையோ ருயர் நெறி வழக்கா லுய்த்துணர்க.

இங்ஙனம், ஆதொண்டனென்னும் பெ ய ர் முதற்பொருண் முடிபு தன் முடிபிற்பெற்ற தன்றொழிற் பய னுறப்படூஉஞ் செய்பொருட்டன்மை யகப்பாட்டினும், உடைப்பொருட் பிறிதி னுரிமையுடைமைத் தன்மை புறப்பாட்டினும், உயர்பொருளடைச் சிறப்பிப் பெயர் அவ்விருவயினும் பொருந்த நின்ற மண்டலமென்பதனோடு ம ரு வு ம் வழி, மேல் வகுத்த வண்ணந் தன் னீறும் முதலுந் தொகுத்தலைப் பெற்ற தென்க. அல்லதூ உம், முதலெஞ்சிநின்ற இப்பெயர் மண்டலத்தோடணைந்த வழி விகுதி அன் எஞ்சி அம்முச்சாரியை பெற்று வருமொழி நோக்கி மகரமொழியத் தொண்டமண்டல மென்றாய தெனினு மமையும். இதனை ஆசிரியர் தொல் காப்பியர் கூறிய,

அப்பெயா மெயகெடுத் தனகெடு வழியு
நிறறனு முரிததே யமமென சாரியை
மககண முறைதொகூஉ மருஙகி னுை.
—தொலகாபபியம. எழுததிகாரம, புளளிமயஙகியல. 155.

என னுஞ சூததிர நோககததாற காணக வெனக.

ஆதொணடனெனபது — தெனசொன் ஞேகரு; — மண்டல மென் பது — வடசொனஞேககு,—தமமுட் செறிவா ஞைததவேனும பாடையா ஞெவ்வாமை பெறலின அஙஙனம பெருமை நோககியும, மூன நிலையாய வநநிலைககும,— பினனிலையாயவிந நிலைககு மிலசசினையாத ஞேககியும, விசேடண விசேடியச செநநிலைமரபு நோககியும — இஙஙன முதலு மீறுந தொகுததலைப பெறறதெனினும, முதனிலை வணண வொறறுமை, — இசையொறறுமை, — உருபொறறுமை,—நோககியும இறுதிநிலை, — சிறப்புநிலை, — இனவொற்றுமை, — நோககியுந தொகுததலைபபெற்ற தெனினு மமையும இஃதினனுஙகூறிற பெருகும.

ஆகலின், ஆசிரியர் தொல்காப்பியர் கூறிய,

உணரக கூரிய புணரியன மருஙகிற்
கண்டுசெயற குரியவை கணணினா கொளலே.
—தொலகாபபியம, எழுததிகாரம, புளளிமயஙகியல. 110

என் னுஞ் சூத்திரக கருத்தா னமைக வெனக.

அனறி, ஆதிநாராயணன புரம — நாரண புரம்,, — ஆபூதன மங கலம, — பூதமஙகலம, பெருமபறறினுற புலிப்பாதன பூசிததவூர் —பெரும பறறினுற புலி பூசிததவூா, பெருமபறறபபுலியூா—புலியூர் முதலிய பெயர்க கோளகளையும, புளளம பூதனகுடி— பூதஙகுடி, கொற் றன குடி—கொறறஙகுடி, சாததன குடி— சாததஙகுடி, கொறறன மங கலம—கொறறமஙகலம, சாததன மஙகலம— சாதத மஙகலம, வேடன மஙகலம—வேடட மஙகலம, வேடன குடி— வேடடஙகுடி, சாத்தன மஙகை —சாத்தமஙகை, விஜயன மஙகை—விஜயமஙகை, கணணன மஙகை— கணணமஙகை, கணணன புரம—கண்ணபுரம, கணணன குடி—கணணக குடி; சீராமன விண்ணகரம—சீராமவிண்ணகரம, வரகுணன மஙகை— வரகுணமஙகை, ஐயைபுரம—ஐயபுரம முதலிய பெயாக கோளகளையும, நநதன மண்டலம—நநத மணடலம, சேரன மணடலம—சேரமணடலம; சோழன மணடலம —சோழமணடலம, முதலிய பெயர்க கோளகளையும— பறறுககக கொணடமைக வெனக இதனைப பிறகாலதது மரூஉ வழக கென று கொளவாரு முளராலோ வெனின, அஙஙனம கொளவது மர பன று, கொளகினுங கொளக வெனக.

இத்தொண்டமணடல மெனபது பலவகைப் புணாசசிககும பலவகை வழககியறகும இயற்பாடினஞேசை முதலியவறறிறகும ஒததநிலை யெனக.

இஙஙனமனறி தொண்டைமணடல மெனபாரு முளராலோ வெனின —

அங்ஙன மாறுபடக கூறுவோா நுணணிய அறிஞர் கணணிய நிலை யும மாறறம பொருளுறூஉ மாறற னிலையும பலவகைப புணர்பபிற செல

னமே, தொண்டைத் தாறுடைமைபற்றித் தொண்டை மண்டலமென்று வழங்கிற்றிஃதேதுணிபு' என்று திரிபுதோற்றும் அன்றித் தொண்டைத் தழையானு மலரானுமியற்றப்பட்ட தொங்கலணிந்த வேந்தரையனு லாளப் பட்ட மண்டலம் அவ்வரையனுக் குரிமை தோன்ற நிற்றலின்றிப் பரம்பரை யானன்றி யிடைப்பாட்டாற் பெற்ற அத்தொண்டையை வேற் றுரிமை யாகப் பெற்றற்கு எவ்வாற்றானும் பொருத்தமின்று. இதனைக் கல்வியிற் சாதாரணத் தலைமையுடையோரும், 'வாதராயண சம்பந்தத்தி னிணம் போலும்' என்று எள்குவா, அன்றிக் 'குமரியைக் கொண்டவனை விட்டுக் கூடவந்தவனோடு கூட்டியனுப்பியது போலும்'' என்றசதியாடுவா. என்னின், கற்றுவல்லோர் முகப்பின் இஃதென்னும்? இதன் கண் — உரிமை மலைவு — பொருண் மலைவு — மரபு மலைவு — வழக்கு மலைவு — தகுதி மலைவு — உணர்ச்சி மலைவு — யூக மலைவு — நியாய மலைவு — கருத்து மலைவு — முதலிய மலைவின் றொகையே புலப்படுகின்றன. ஆகலின், தொண்டைமண்டல மென லமைவன்று, தொண்டமண்டல மெனல் வேண்டும்.

*அவர் கூற்றாக விவகரித்தல் —*

அஃதேல, அற்றன்று, பாண்டியன் மண்டலம் பாண்டிமண்டல மென்றாயதுபோல் தொண்டையன் மண்டலம் என்பது விகுதி அன்கெட்டுத் தொண்டைமண்டல மென்றாயது ஆகலிற் றொண்டைமண்டல மெனல் வேண்டும்.

*அதனை மறுத்தல் —*

பாண்டியன் மண்டலம் பாண்டிமண்டல மென்றாயது மரூஉ வழக்கு. இஃதங்ஙனமன்று மரூவு வழக்காயினும் பாண்டியென்பது குடிப்பெயராகக் கோளாய் அவ்வரையனையும் ஒற்றுமையுரிமையா லம்மண்டலத்தையு மன்றி வேறு குறித்தலின்றி நிற்றலி னறிஞரா லமைத்துக்கொள்ளப்பட்டது. தொண்டை மண்டல மென்பதை மரூஉ வழக்கி னமைத்துக் கொள்வே மெனின், இங்ஙனங் குறித்தலின்றிப் பலவகையானும் வேறு குறித்து வழூஉ நிலையைப் பெறுகின்றது என்னை? தொண்டைத் தழையானு மலரானுந் தொடுத்த தொங்க லணிந்தோனைத் தொண்டையன் எனின் பிற்காலத்தின் மக்கள் வரலா றுணராமையின் 'பெருந் தொண்டையனைத் தொண்டைய னென்று வழங்கினா கொல்? அன்றிப் புழைக்கை யுடைமையாற் றும்பி ரூகத்தவன் கொல?' என்றையுறுதற்கும், தொண்டு ஐயனென்று பிரித் தேற்றப் பெற்றி கோடற்கும், ஒருவாற்றாற் கேள்வியுடையோருங் 'கொவ்வைத் தழையிற் புனைந்த மாலை யுடையன் கொல? ஆதொண்டைத் தழையிற் கிடத்தப் பட்டவன் கொல'' என்றையுற்று மயங்குதற்கும் இடனாய்ச் சொல்வலி பொருள்வலி இன்னிசைவண்ண முதலிய சிதைவுற நின்று வழூஉ நிலையைப் பெற்று மண்டலத்தோடணைந்து ஐயம்—மயக்கம் —கவர்கோள் முதலிய இழுக்கினையேற்று வழுவினும் வழுவாய நிற்றலானும், இங்ஙனம் வழங்கல் அறிஞா வழக்கன்றாகலானும் இதனை வழூஉநிலை யென்றும் இஃது 'உடற்றாயமை கருதி நீராடுவந்து சென்றுண்டளற்றி னழுந்திய தொக்கு' மென்று எள்குதற் கிடனன்றிச் சிறிது மமைத

துக் கோடற் கிடனன்று. ஆகலின், தொண்டை மண்டலமென லமைவுன்று; தொண்ட மண்டல மெனல் வேண்டும்.

அவர் கூற்றாக விவகரித்தல் :—

அற்றேல், தொண்டை யென்பது:—ஆகுபெயராய் நின்று அரையனை யுணர்த்தி யுரிமைதோற்றி மண்டலத்தொடு புணர்ந்து தொண்டை மண்டல மென்றாயிற்று: அதனால் தொண்டை மண்டல மெனல் வேண்டும்.

அதனை மறுத்தல் :—

இடைப்பாட்டி னியதி யியை பின்றி வந்த கடம்பூர் என்பது கடம்ப விருக்கத்தையுடையவூரென்று தன்னளவே புலப்படுத்துமன்றி ஆகு பெயராய்க் கடப்பமாலையைத் தரித்தவனூ ரென்று பிறிதளவு புலப்படுத் துவ தின்று. என்னை? ஆகுபெயர் ஒன்றன் பெயரானதற்கியைபிறி தைத் தொன்முறை யுரைப்பதாகலின். அங்ஙனமே பரம்பரையானன்றி இடைப்பாட்டி னியதி யியைபின்றி வந்த தொண்டை மண்டலத்தொடு புணர்ந்துழி தொண்டையையுடைய மண்டலமென்று தன்னள வுணர்த்து மன்றித்தொண்டையை யுடையான் மண்டலமென்று பிறிதி னளவுணர்த் தற்கோர் வகையானும் வலியின்று, இஃது ' "யூகமின்றி ஒன்று குறித் தொன்றுவரைய வொன்றுபட்ட' தென்னுமுலக் வழக்கி னிலாம் போலும்!" என்றெள்குதற் கிடனும். ஆதலிற்றொண்டை மண்டலமென லமைவன்று: தொண்ட மண்டல மெனல் வேண்டும்.

அவர் கூற்றாக விவகரித்தல் :—

அற்றேல், தொண்டை யுடையனு லாளப்பட்டது தொண்டையென்று ஈறுகெட் டைவிகுதி யேற்றுச் சிறப்புப் பெயராய் மண்டலத்தொடு புணர்ந்து அங்ஙனமாயிற்று: ஆகலிற் றொண்டை மண்டல மெனல் வேண்டும்.

அதனை மறுத்தல்:—

ஐயீற்றின் ஐகார விகுதி போந்து கெட்டுப் புணரிற் குறியீ டின்மைய யிற் சிறப்பன்று; இங்ஙனம் புணர்த்தல் இயற்பாடுமன்று: அறிஞர் மரபு மன்று. அங்ஙன மாயினும் தொண்டையை யுடையதென்றாகுமன்றித் தொண்டையுடையனு லாளப்பட்டதென் றொருவாற்றானுமாவதன்று. அன்றிச் சோழமண்டல முதலியவற்றோடு முரணும். அங்ஙன மமைதி யின்றிக் கூறினுஞ் சந்தியின்பத்தான் நாகைபட்டினம் நாகப்பட்டின மென்றாயதுபோல், தொண்டை மண்டலம் தொண்டமண்டல மென் றாதலே வேண்டும். இதனை முன்னர் விலக்கியவாற்றுட் காண்க. இஃது பல்வகை யிழுக்கினுஞ் செல்வகைத்து. "இரும் பொற் பூண்டரீ இச் சென்று கரும்பொற் றளைகைபுகுத்தியதி னிலாம்.' என்றெள்குதற் கிடனும். ஆகலிற் றொண்டைமண்டலமென லமைவன்று; தொண்ட மண்டலமெனல் வேண்டும்.

அல்லதூஉம், இங்ஙனம் தொண்டை யென்பது பல்வகைப் பொருட் கிடனுய பெயர்த் திரிசொல். ஆதொண்டை யென்பது தன்னளவே

யுணர்த்தும் பெயரியற்சொல். இங்ஙனம் திரிசொல்லாற் சிறப்புப் பெயர்க் காரணக்குறி செய்தல் வழக்கறிந்தோர் மரபன்று. இயற்சொல்லாற் காரணக்குறிப்பெயரமைத்தலே யவரது மரபு. இஃது ஆதொண்டச் சக்கர வர்த்தியென்று வழங்கும் அறிஞர் வழக்காலறியப்படும்.

அவர் கூற்றாக விவகரித்தல்:—

அற்றேல், ஆதொண்டையன் என்பது மண்டலத்தொடு புணர்ந்துழி, முதலு மீறுங் கெட்டு அங்ஙன மாயிற்று: ஆகலின் தொண்டை மண்டல மெனல் வேண்டும்.

அதனை மறுத்தல் :—

ஆதொண்டையன் எனின், —'தொகையின்பாலும் இசையின்பாலும் செறிவுகோளு மின்றிப் புல்லென்கையானும்' சுருங்கியற் பேரின்பங் குறித்து முன்னும் பின்னுந் தொகை செய் தமைத்த சான்றோர் ஓரெ ழுத்தா னீட்டியற் பெயர்ப் பாற் படுத்தி முடிபு வழூஉச் செய்தகியையா ராகலினும், இங்ஙனம் தொகுக்கப்படின் பொருளாட்சி முதலிய துன்றலின் றிச் செந் நெறியிற் பெரும்பயன் றரலானும், அங்ஙனமமைத்தல் வழூவே யாம். இஃது ஆதொண்டையன் சக்கரவர்த்தி ஆதொண்டையச்சக்கர வர்த்தியென்னது, ஆதொண்டன் சக்கரவர்த்தி ஆதொண்டச் சக்கரவர்த்தி யென்று வழங்கும் அறிஞர் வழக்காலறியப்படும்.

அவர் கூற்றாக விவகரித்தல்:—

ஈண்டு ஆதொண்டைச் சக்கரவர்த்தி யெனின் வழூவென் னெனின்?

அதனை மறுத்தல்,—

அங்ஙனம்பெறின், அவ்வரையற்கு ஆதொண்டையாற்காரணக்குறிப் பெயரமைப்பான் கருதியவன்றே கருதியதாதல் வேண்டும். அங்ஙன மின் றிப் பின்னர் செங்கோன்மை ஆண்மை முதலிய வண்மை யுடைமை பற்றி முகமன வமைக்கப்பட்டது. ஆகலின் வழூஉ இங்ஙன மென்க. ஈண்டு ஆதொண்டன்சக்கரவர்த்தி ஆதொண்டச்சக்கரவர்த்தியென்பது 'புடைப் புளகன்னிப் பொற்குலைக் கண்ணே இடைப்பிள வியையா விரட்டைப் பழம்போன்" றொரு பொருட் கிருவயினொழுந்திடைப்பிள வறியாச் சிறப் பினப் பெயர். ஆதொண்டன் சோழன்— ஆதொண்டச்சோழனென்பது மது. இதனை,— தசரதன் சக்கரவர்த்தி தசரதச் சக்கரவர்த்தி — நளன் சக்கரவர்த்தி — நளச்சக்கரவர்த்தி; புரூரன் சக்கரவர்த்தி — புரூரச் சக்கர வர்த்தி; சோழன் ராஜன் — சோழராஜன்; சேரன் ராஜன் — சேரராஜன்; பாண்டியன் ராஜன் — பாண்டியராஜன்; சோழன் மஹாராஜன்—சோழ மஹாராஜன்; சைவன் சோழன்—சைவச்சோழன்; குலோத்துங்கன் பாண்டியன்—குலோத்துங்க பாண்டியன்; சோழன் மன்னன்—சோழ மன்னன்; சேரன் மன்னன்—சேரமன்னன்—என வழங்கும் பல்வகை முடிபு வழக்குகளாற் றெளிந்தமையப்படும்; ஆகலின், ஆதொண்டனெனல் வேண்டும்: ஆதொண்டையனெனல் இழுக்கு. இங்ஙனம் இழுக்காய ஆதொண்டையனென்பது முதலு மீறுங் கெட்டு மண்டலத்தோடு புணர்ந்து தொண்டை மண்டல மென்றாயிற் றெனினும், மேல்குறித்த பல் வகை வழூஉக்கட்கும் பேரிடனாகத் தக்கது. 'இடனறிந்து பிறண்டாத்தின

வுண்ணி யெரிவிற புழுஙகிறறு' எனபதறகும, கருத் தறியாமற கலபபான புகுநது அருதத மிழுககுமா' லெனபதறகு மிலைம!' என று எளகுதற கிட னும ஆகலிற றொணடைமணடல மெனால வழூஉ தொணடமணடலமெனால வேணடும.

அவர் கூறறுக விவகரிததல —

தொணடைககா டுடையாற் றொணடைமணடல மெனல வேணடும

அதனை மறுத்தல் —

இஙஙனம தொண்டமணடல வரலாற்றை வுககும காபபியத்திற கண்டதே யனறு, இவவாறுண்டெனா றபிஞானிது காறியாங கேட்டது மினறு, ஆகலின வழுவாம இஃது 'வழியறியாககனறு குழிவழியாச சென' றெனபதறகினம இஙஙனம வழியறியாது மொழியினும, பொய கூறினும பொறுநதக கூறுக வெனனு மிழிஙகோா வழககின கணணு மேறபுடைத தனறு எனனெயெனின காஞசி, நிலலை எனனு மரபபெயா கள ஒறறுமை யுரிமை குறிதது காஞசியைக கணடு நிலலையை யடைநதா ரெனறு வழஙகபபடுகினறன அஙஙனம தொணடையைக கணடு எனறு எவவகை வழககினும வழஙகபபட்டதின றுகலினெனக. இதனுலும தொணட மணடல மெனல வேணடும

அவர் கூறறுக விவகரிததல —

தொணடைமான எனனும பெயருள வேறறே ரரையனிருநததி க்ரித்தமையின தொணடைமான மணடல மெனபது மான கெடடு அங ஙன மாயிறறு, ஆகலிற றொணடை மணடல மெனல வேணடும

அதனை மறுததல.—

இஙஙனம புணரினும, மேறகுறிதத வழூஉ நிலைகட் கிடனும.

அனறித தொணடைமா லெனபதே வழு— எனனை? தொணடைமா னெனபது—தனிமொழி, தொடாமொழியெனபவறறு ளெமமொழி? விடை—தனிமொழி வினு — தனிமொழியாயின இதறகு முதனிலை, இறுதிநிலை, இடைநிலை, எனனை? விடை: — தொணடை—முதனிலை, ஆன—கடைநிலை, மகரம—இடைநிலையாம

அதனை மறுததல :—

எனனின முதனிலைககும இறுதிநிலைககும இடைப்பா டொதது நிற பது இஙஙனம வருஉம பெயாகடகு இடைநிலை ாணடு முதனிலை யிற றைகாரக குறுககம விலஙகிப பொறுததிசைபப விடைபபாடினறி யிறுதி நிலையோ டிணஙது வேறு கூறிதகலி னிடைநிலையிய லைமவினறு அன னீறனறி ஆனீறு—அறிறஙதனறி யைஙதிறஙதியையும தொடா மொழிப பெயாககனறி இஙஙனம— உரிததாவ தனறு,—நயபபா டினமையின ஆகலின, இறுதிநிலையியலு மமைவினறு. விகாரததால வேறு குறிதத வின முதனிலையியலுமமை வினறு

அலலதூஉம இஃதிடைநிலை யாயின, கோமான எனபதறகும அஙஙனம இடைநிலையாகல வேணடும அஙஙனமாயின, கோ — ம —

ஆன்: இவற்றுள், கோ—அரையன் என்னின், ஆன்—விகுதி அதிகரிப்பின்றி மூங்கைபோலும், யானையுண்ட கனிபோலும் பெயர்ச்சியும் பயனுமின்றி வற்றன் மரணி னின்றது. ஆகலின், இஃது இங்ஙனமன்று—ஆகலின், அஃது அங்ஙனமன்று. இஃது 'கைபட லறியான் [1] பொய்பட லொன்றோ' வென்பதற் கினம். ஈண்டு தொடர்மொழியாய்க்—கோன் - மன் - கோமான் என நிலைமொழி யீறுகெட்டு வருமொழி முதனீண்டது. இதனை வழுதிமன் என்னுங் காப்பிய வழக்கானுங் கண்டுணர்க. அன்றி, கோன் மஹான் — கோமான், என நிலைமொழி யீறு கெட்டு வருமொழிவடமொழி யாதலின் விகாரம்பெற்றுக் கோமான் என்றாயது. அன்றி, கோன்மான் என நிலைமொழி யீறுகெட்டுக் கோமா னென்றாயது. இங்ஙனமே தொண்டன் மன் — தொண்டன் மஹான் — தொண்டன்மான் என்பனதொண்டமா னென்றாயது. மன் மஹான்—மான் என்பவைக்குப் பெருமை யுடையவ னென்பது பொருள். ஆகலின், தொண்டைமா னெனல் வழு; தொண்டமானெனல் வேண்டும். இங்ஙனமே சேரன் மான் — சேரமான், மலையன் மான் —மலையமான் முதலியனவுங் காண்க. ஆகலின் மண்டலத்தோடு கூடியவழி தொண்ட மண்டலமெனல் வேண்டும். அன்றி, தொண்டனுடெனல் வேண்டும்; தொண்டைநாடெனல் வழூஉ என்னை? சேரன் நாடு—சேரனுடு; சோழன் நாடு—சோழனுடு; பாண்டியன் நாடு—பாண்டியனுடு; மலையன் நாடு - மலையனுடு என்பதுபோல், தொண்டன் நாடு - தொண்டனுடு எனல் மரபு ஆகலின்; தொண்டனுடு எனில் அடிய னென்ன முதல் வேறு குறிக்குமே யெனின் அங்ஙனங்குறிப்பதில் ஆற்றலு மின்று,—பயனுமின்று. என்னை? ஆ வென்பது கரண விடயமாக நின்று உரியானைக் குறிக்கின்ற தாகலின். அன்றி, உடையானை யன்றி உடைமை குறித்தலின் றாகலி னென்க.

இங்ஙனம் பல்வகையாற் சொல்வகை செய்தலென் தொண்டை மண்டல மெனின் மேற்குறித்த வண்ணம் உரிமை மலைவு—பொருண் மலைவு,—மரபுமலைவு,—வழக்குமலைவு,—தகுதிமலைவு,— உணர்ச்சிமலைவு,—யூகமலைவு,—நியாயமலைவு, — கருத்துமலைவு,— ஐயங்கவர்கோள்—மயக்கம், — வேற்றுக்குறிப்பு, — வேற்றுரிமைநிலைமை, — நியதி யின்மை,—இயைபின்மை,— சொல்வலிச் சிதைவு,—பொருள்வலிச் சிதைவு, பொய்க்கோள் —அனர்த்தம், — இன்னிசைவண்ணச் சிதைவு — பிளவுபாடு, — முதலிய பல்வகை வழுக்கட் கிடனும்.

அன்றி ஆதொண்டை யென்பதனீற் றைகாரக் குறுக்கங் குற்றலகே பெற்றது. தொண்டை யென்பத னீற் றைகாரக்குறுக்கங் குற்றலகோ டொற்றலகு பெற்றது. என்னை ஆதொண்டை:— ஆ - தொண் — டை: ஈரலகு— ஓரலகு — அரையலகு - முதலிடைப்பாடு இருகலை நடுவிடைப்பாடு காற்கலை—கடையிடைப்பாடு முக்காற்கலை ஆகலின், ஆதொண்டையீற் றைகாரக் குறுக்கங் குற்றலகே பெற்றது. தொண்டை: தொண்— டை: ஓரலகு—அரையலகு. முன்னிடைப்பாடு காற்கலை பின்னிடைப்பாடு அரைக்கலை. ஆகலின் தொண்டை யிற்றைகாரக் குறுக்கங் குற்றலகோ டொற்றலகும் பெற்றது. இங்ஙனம் தொண்டை மண்டலத்தோடு புணருங்

1 பொய்படு மொன்றோ புனைபூணுங் கையறியாப்
பேதை வினைமேற் கொளின் —திருக்குறள், பேதைமை, 9.

கால், மண்—ட—ல—ம்: ஓரலகு—அரையலகு—ஓரலகு—அரையலகு நான் கிடைப்பாடு, கால்—கால் அரை பெற்று வேற்றிசை விரவி நிற்றலின்' புணர்ச்சியிடை ஐங்கலையைப் பெற்றுப் பிரிந்து வேறு குறிக்கின்றது ஆகலினும், தொண்டை மண்டல மெனல் வழு, தொண்ட மண்டல மெனல் வேண்டும்.

இங்ஙனம் பெயர்க் கோள்கட்கு இயற்சொற் பெயர் முதலிய சொல் விரிப் பெயர் முதலிய,—செஞ் சொற் பெயர் முதலிய,—சாதி கூற்றுப் பெயர் முதலிய,—ஒரு மொழிப் பெயர் முதலிய,—உயர்திணைப் பெயர் முதலிய, — பாற் பெயர் முதலிய, — பொதுவிற் பொதுப் பெயர் முதலிய, — தன்மைப் பெயர் முதலிய, — வழக்குப் பெயர் முதலிய, — வெளிப்படைப் பெயர் முதலிய,—வரையினடைப் பெயர் முதலிய,—உய ருரிமைப் பெயர் முதலிய, — சிறப்புநிலைப் பெயர் முதலிய — சித்துப் பொருட் பெயர் முதலிய,—இடுகுறிப் பெயர் முதலிய,—மரபுநிலைப்பெயர் முதலிய, எழுத்துத் தொடர்ப் பெயுர் முதலிய,—பொருணிலைப் பகுபதப் பெயர் முதலிய,—பெருஞ் சொல்லாட்சிப் பெயர் முதலிய, — முதனூல் வாய்பாட்டுப் பெயர் முதலிய — இவைமுதற் பெயர்ப் பாகுபாடுகளி னிலக்கணங்களும்; எழுத்துப் புணர்ச்சி,—பதப் புணர்ச்சி, — தொடர்ப் புணர்ச்சி, — பொருட் புணர்ச்சி, — வண்ணப் புணர்ச்சி, — அளபுப் புணர்ச்சி,—இயைபுப் புணர்ச்சி, — சமநிலைப் புணர்ச்சி, — கலவைப் புணர்ச்சி,—தெரிநிலைப் புணர்ச்சி,—குறிப்புப் புணர்ச்சி, — வேற்றுமைப் புணர்ச்சி,— ஒற்றுமைப் புணர்ச்சி, — சிறப்புடைப் புணர்ச்சி, — பொது வுடைப் புணர்ச்சி,—இருமைப் புணர்ச்சி,—முதலிய புணர்ச்சி யிலக்கணங் களும்; கூர்ந்துணரார்க்குத் தொண்ட மண்டல மென்பதி னிலக்கணமும் புலப்படுவதன்று.

**இங்ஙன முணராபாட்டாதார் :**—ஆதொண்டைச் சக்கரவர்த்தி யென்பவர் தாமரசு செய்யுங்காலத்தில் தம்மாற் கட்டுவித்த ஆலயங்களிற் றம் பெய ரிலச்சனை சிலையின்கட் பொறிப்பித்தனர்; ஆண்டும் ஆதொண்ட வென்றே இலக்கணவமைதி பெற்றிருக்கின்றது: இதனை—திருவலிதாயம், திருமுல்லை வாயில் முதலிய சிவதலங்களிற் சென்றேனுங் கண்டு தெளியக் கடவர். இஃ தின்னுங் கூறிற் பெருகும்.

**குறிப்பு** :—தொண்ட மண்டல மென்பதைத் தொண்டை மண்டல மென்று இச்சென்னை நகரிலிருக்கின்ற வித்துவான்களிற் சிலர் மாறாக வழங்க, அது குறித்துச் சில பிரபுக்களும் வித்துவான்களும் உபாத்தி யாயர்களும் 'இவ்விரண்டில் இலக்கணவமைதியும் உலக வழக்குமுள்ளது யாது? அதனை யொருவாறு தெரிவிக்கவேண்டும்' என்று கேட்டுக் கொண்டபடி,

**ஸ்ரீமத் சிதம்பரம் இராமலிங்கபிள்ளை யவர்களாற் றெரிவிக்கப்பட்டது.**

1. நூற்பெயர் இலக்கணம் முற்றிற்று.

# 2. வழிபடு கடவுள் வணக்கப் பாட்டுரை

### வழிபடு கடவுள் வணக்கம்

ஆசிரிய விருத்தம்

*கொண்டலை நிகர்க்கும வேளாண் குடியொடு தழீஇய தொண்ட*
*மணடல சதகந தன்னை வளமையான வகுபபதறகுப*
*புண்டர நுதலி ரண்டு புயமிசை யிருநதிரணடு*
*குண்டல நிகரி ரணடு குமரரை வணககஞ செயவாம*

*"கொண்டலை வணககஞ செயவாம" —என னும இச செயயுள —*

**வியனுறு மெதிரதூஉம வீழாக கொடையும**
**பயனுறூஉந தொழிலும பழியாப பணபும**
**வாயமையு மறிவுமா அணபு மாணமையும**
**தூயமையும பொறையுந தோஒறறமும அன்பும**
**உளஙகொ ளிரககமு மொழுககமு முதலா**
**விளஙகு விழுககுடி வேளாணகுடியே**

*இததொண்ட மணடலததிற பெருமபாலு மிறை கொளப் பட்டுத தம வளமையா னீணடுறூஉ மறறைக குடிகடகும இமமணடலததிறகும வளமை தோறறிறறு—அஃது நெறிபபானுஞ செறிபபானும தோனற வழிபடு கடவுட பரா அயப புலபபடுததுவ லெனறு புகுநதமை யுணாததுகினற தெனக*

*எங்ஙனமெனின, "கொணடலை நிகர்க்கும வேளாணகுடி யொடு தழீ இய தொணட மண்டல சதகந தனனை வளமையான வகுபபதற குக குமரரை வணஙகுவா" மெனற துயததுணாகவெனக. இஃது வறபுறுததறகு வேளாணகுடியை யளவைமுகத்தான வெளிபபடையின விளஙகவைதது மறறைககுடிகளை வேறறுரு பொடுவிற பராமுகததாற குறிபபினகண சாததி வைததகதே யமையுமெனக. விளஙகு விழுககுடி வேளாண்குடி யெனறதனலனறே அஙகையிற கனிபோன றிஙஙனம பெறறும*

*அஃதீண்டெறறுற பெறுது மெனின :—கொண்டலை நிகர்க்கும வேளாணகுடி யெனறதனுற பெறுது மெனக எஙஙனமெனின,— கொணடலை — பருவபபுயலை, நிகாககும — ஒககும, வேளாணகுடி — வேளாண்குடிப பிறபபினா எனவே வேளாணகுடிப—பிறபபினர் —'கைமமாறு கனவினுங கருதலினறி வரையாது வழஙகும வளளறறனமை யுடையாரெனறும,' — எவவாறறு னுயர்நதோர் கடகுந தமமையனறி உலகிய னடததப படாச சிறபபுடைக கருவியாந தனமை யுடையரெனறும, — இஙஙனம வையகத் தார்க கனறி வானகததாாககுங குனறு நனறி குயிறறுநரெனறும, 'தமமானே யனறித தங கருவியானுங கருமததானும எவவெவ வளாகத் தெவவெவ வுயிாகடகு மினபநதரூஉ மியலின ரெனறும' —'ஆனற கலவி, — ஊனறு கேளவி, — சானற வுணாசசி, — ஏனற ஒழுகக முதலிய உயர்நெறிக குனறத துமப ரிமபா பலகாற் பயி*

அல்லலிடும் பாவகத்த மட்டோரிசைசெய் தின்றதிரு
மல்லலிடும் பாவனத்து மாட்சிமையே — தொல்லைப் 172

படிகளுள் நோவாத பண்புடையோர் வாழ்த்தும
கடிக்குளந் தனபர் களிப்பே — கடிகுளத்தின் 173

வண்டலைக்கத் தேனலரின் வார்நதோ தடமாகும்
தண்டலைக்குள் நீணெறிச்சிற தாமணியே — கொண்டலென

மன்கோட்டூர் சோலை வளர்கோட்டூர் தண்பழனத்
தென்கோட்டூர் தேவ சிகாமணியே — தெனகூட்டிப் 175

போய்வண் டுறைதடமும் பூம்பொழிலுஞ் சூழநதமர்
ஆய்வெண் டுறைமாசி லாமணியே — தோயவுண்ட 176

கள்ளமபூ தாதிநிலை கணடுணாவு கொணடவர்சூழ
கொள்ளம்பூ தூர்வான் குலமணியே — வெளளிடைவான் 177

வாம்பே ரெயிறசூழநத மாண்பாற் றிருகாம
மாமபே ரெயிலெப்பி லாமணியே — தாமபேரா 178

வீட்டிலனப ராணநத மேவச் செயுமகொள்ளிக்
காட்டி லமர்நதவெண்கண் காட்சியே — நீட்டுமொளி 179

ஆங்கூ ரிலேவே லவனை தியர்சூழத்
தேங்கூரில் வாழ்தேவ சிங்கமே — ஓஙகுமலை 180

வல்லிககா தார மணிபபுயவென றனபாதொழ
நெல்லிகா வாழ்மெய்ந நியமமே — எலலைறகண் 181

சேட்டியத் தானே தெரிநதுசுரா வநதேததும
நாட்டியத் தான்குடிவாழ் நல்வினமே — நாடடுமொரு 182

நூறுயி லன்பர்தமை நோககியருள செய்திருக்
காருயின் மேலோர் கடைபபிடியே — வீறுசும 183

இன்றுப்பூர் வந்தொட் டிருநததிவ்வூ ரெனனவுயர்
கன்றுப்பூர் பஞ்சாக கரபபொருளே — துன்றுசை 184

வெய்ய வலிவலத்தை வீட்டியனபர்க கினனருளசெய்
துய்ய வலிவலத்துச் சொனமுடிபே — மையுமன 185

மைச்சினத்தை விட்டோர் மனத்திற் சுவைகொடுத்துக
கச்சினத்தி னுட்கரையாக கறகணடே — தெற்கூபக்க 186

ஆளிலையென் றுரூர னர்துதிககத் தநதருளுங
கோளிலியின் அனபர்குலவு கொளளுவப்பே — நீளுலகம் 187

காய்மூர்கக ரேனுங கருதிற கதிகொடுககும
வாய்மூர்க் கமைந்த மறைகொழுந்தே — நேயமுணத் 188

தேடெவியை மூவுலகுந தேர்நதுதொழச செயதருளும
ஈடின் மறைக்காட்டிலெனறன எயப்பிலவைப்பே—நாடுமென

நின்னகத்தி யான்பள்ளி நேர்ந்தேனென் றூட்கொண்ட
தென்னகத்தி யான்பள்ளிச் செம்பொன்னே — தொன்னெறியோர்

நாடிக் குழகர் நலமருளென் றேத்துகின்ற
கோடிக் குழகருட் கோலமே — நீடுலகில் 191

## 3. ஈழ நாடு

நாட்டும் புகழீழ நாட்டிற் பவவிருளை
வாட்டுந் திருக்கோண மாமலையாய — வேட்டுலகின் 192

மூதீச் சரமென்று முன்னோர் வணங்குதிருக்
கேதீச் சரத்திற் கிளர்கின்றோய் — ஓதுகின்றோர் 193

## 4. பாண்டி நாடு

பாலவாய் நிற்கும் பரையோடு வாழ்மதுரை
ஆலவாய்ச் சொக்கழகா னந்தமே — சீலர்தமைக் 194

காப்பனூ ரில்லாகக் கருணையா லென்றுபுகும்
ஆப்பனூர் மேவுசதா னந்தமே — மாப்புலவர் 195

ஞானபரங் குன்றமென நண்ணிமகிழ் கூர்ந்தேத்த
வானபரங் குன்றிலின்பா னந்தமே — வானவர்கோன் 196

தேமே டகத்தனொடு சீதரனும் வாழ்த்துஞ்சீர்
ஏமே டகத்தறிவா னந்தமே — பூமிதனில் 197

நற்றவருங் கற்றவரு நவசித்த ரும்வாழ்த்தி
உற்றகொடுங் குன்றத்தெம் ஊதியமே — முற்றுகதி 198

இத்தூர மன்றி யினித்தூர மில்லையெனப்
புத்தூர் வருமடியார் பூரிப்பே — சித்தாய்ந்து 199

நாமீச ராகு நலந்தருமென் றும்பர் [1]தொழும்
ராமீசம் வாழ்சிவ ரத்தினமே — பூமீது 200

நீடானை சூழு நிலமன்னர் வாழ்த்துதிரு
வாடானை மேவுகரு ணாகரமே — சேடான 201

வானப்பே ராற்றை மதியை முடிசூடுங்
கானப்பே ரானந்தக் காளையே — மோனருளே 202

பூவணமும் பூமணமும் போல அமர்ந்ததிருப்
பூவணத்தி லானந்தப் பொக்கிஷமே — தீவணத்தில் 203

கண்சுழிய லென்று கருணையளித் தென்னுளஞ்சேர்
தண்சுழியல் வாழ்சிவ சாக்ஷியே — பண்செழிப்பக் 204

1. தொழும் ராமீசம் என்பது — வடநூன் முடிபு, இராமேசுரம்.

கற்றாலங் குண்மைக கதிதருமென நற்றவர்சூழ
**குற்றாலத்** தன்பர் குதுகலிப்பே — பொற்றரும 205

நலவேலி சூழ்ந்து நயனபெறுமொண் செஞ்சாலி
**நெல்வேலி** யுண்மை நிலயமே — வலவேலை 206

## 5. சேர நாடு

**நஞ்சைக்** களத்துவைத்த நாதவெனத் தொண்டர்தொழ
**அஞ்சைக் களஞ்சேர** அருவுருவே — நெஞ்சடக்கி 207

## 6. கொங்கு நாடு

**ஆன்று** நிறைந்தோர்க் கருளளிக்கும் **புக்கொளியூர்த்**
தோன்றுமவி **நாசிச்** சுயம்புவே — சான்றவர்கள் 208

தமமுருகன பூணுட லமபோல வாழ்கின்ற
வெம்மு ந கை **பூண்டி** யிருநிதியே — செம்மையுடன் 209

அங்குன்று தோங்கு மணிகொள் கொடிமாடச்
**செங்குன்றூர்** வாழுஞ்சஞ் சீவியே — தங்குமன 210

வஞ்சமாக் கூடல வரையார் தவர்சூழும்
**வெஞ்சமாக் கூடல்** விரிசுடரே — துஞ்சலெனும் 211

இன்ன லகற்ற இலங்குபவா **னிக்கூடல்**
என்னு **நணு**வினிடை இன்னிசையே — துன்னியருள் 212

வேண்டிக் கொடுமுடியா மேன்மைபெறு மாதவர்சூழ்
**பாண்டிக் கொடுமுடி**யிற் பண்மயமே — தீண்டரிய 213

வெங்கருவூர் வஞ்ச வினைதீர்த் தவர்சூழ்ந்த
**நங்கருவூர்** செய்யுள் நவரசமே — தங்களற்றின் 214

## 7 நடு நாடு

**தீங்கார்** புறதெய்வத் [1]தீங்குழியில் வீழ்ந்தவரைத்
தாங்கா **வரத்துறையிற்** ருணுவே — பூங்குழலார் 215

வீங்கானை மாடஞ்சேர் விண்ணென்ன நகலகடந்தைத்த
**தூங்கானை மாடச்** சுடர்க்கொழுந்தே — நீங்காது 216

நீடலை யாற்றூர் நிழன்மணிக்குன் றோங்கு **திருக்
கூடலை யாற்றூர்க்** குணநிதியே — நாடியவான் 217

அம்புலியூர் சோலை யணிவயலக் கோங்கெருக்கத்
**தம்புலியூர்** வேத சமரசமே — நம்புவிடை 218

ஆங்குந் தினையூர்ந் தருளாயென் றன்பர்தொழ
தோங்குந் **தினையூ** ருமாபதியே — தீங்குறுமொன் 219

[2]னார்புரத்தை வெண்ணகைத்தீ யாலழித்தா யென்றுதொழச்
[3]**சேர்புரத்தின்** வாழ்ஞான தீவகமே — வாரகெடிலச் 220

1. தீக்குழி எனபது - தீங்குழி என்ருயது 2 ஆசிடையெதுகை. 3 செந்தொடை.

தென்னதிகை [1]யோங்கித் திலகவதி யார்பரவு
மன்னதிகை வீரட்ட மாதவமே — பன்னரிதாம் 221

ஆவலூ ரெங்களுடை யாரூர ரூராம்
நாவலூர் ஞானியருண் ஞாபகமே — தேவகமாம் 222

மன்ற மமர்ந்த வளம்போற் றிகழ்ந்தமுது
குன்ற மமர்ந்தவருட் கொள்கையே — அன்றகத்தின் 223

நல்வெண்ணெ யுண்டொளித்த நாரணன்வந் தேத்துகின்ற
நெல்வெண்ணெய் மேவுசிவ நிட்டையே — சொல்வண்ணம்

நாவலர் போற்று நலம்பெறவே யோங்குதிருக்
கோவலூர் வீரட்டங் கொள்பரிசே — ஆவலர்மா 225

தேவா! இறைவா! சிவனே! யெனுமுழக்கம்
ஓவா வறையணிநல் லூருயர்வே — தாவாக 226

கடையாற்றி னன்பர்தமைக் கல்லாற்றி னீக்கும்
இடையாற்றின் வாழ்நல் லியல்பே — இடையாது 227

சொல்லூரன் றன்னைத் தொழும்புகொளுஞ் சீர்வெண்ணெய்
நல்லூ ரருட்டுறையி னற்பயனே — மல்லார்ந்து 228

மாசுந் துறையூர மகிபன்முதல் [2]மூவருஞ்சீர்
பேசுந் துறையூர்ப் பிறைசூடி — நேசமுற 229

வேற்று வடுகூ ரிதயத்தி னாகவென்றுந்
தோற்று வடுகூர்ச் சுயஞ்சுடரே — ஆற்றமயல் 230

காணிக் குழிவீழ் கடையாகக் காண்பரிய
மாணிக் குழிவாழ் மகத்துவமே — மாணுற்ற 231

பூப்பா திரிகொன்றை புன்னைமுதற் சூழ்ந்திலங்கும்
[3]ஏர்ப்பா திரிப்புலியூர் ஏந்தலே — சீர்ப்பொலியப் 232

பண்டச் சுரனிப் பதியே விழைந்ததெனும்
முண்டீச் சுரத்தின் முழுமுதலே — பெண்தகையார் 233

ஏர்ப்பனங்காட் டூரென் றிருநிலத்தோர் வாழ்த்துகின்ற
சீர்ப்பனங்காட் டூர்மகிழ்நிக் ஷேபமே — சூர்ப்புடைத்த 234

தாமாத்தூர் வீழத் தடிந்தோன் கணேசனெனும்
ஆமாத்தூர் வாழ்மெய் யருட்பிழம்பே — யாமேத்தும் 235

உண்ணா முலையா ளுமையோடு மேவுதிரு
அண்ணா மலைவாழ் [4]அருட்சுடரே — கண்ணார்ந்த 236

1. ஓங்கி—பரவெனும் வேறு சினைவினைகளுறைகள —மன்னென்னு முதல்வினை
2 சேர சோழ பாண்டியரெனும் முடியுடை வேந்தர். [யோடு முடிந்தன.
3 ஆசிடை வெதுக்கை அப்பர் சுவாமிகளைக் கரையேற்றிய தலம்
4. அருட்சுடரே என்பது — அருட்பெருஞ்ஜோதி

## 8. தொண்ட நாடு

நாகம்ப ராந்தொண்ட நாட்டி லுயர்காஞ்சி
ஏகம்ப மேவும்பே ரின்பமே — ஆகுந்தென் 237

காற்றளிவண் பூமணத்தைக் காட்டும் பொழிற்கச்சி
மேற்றளிவா ழானந்த வீட்டறவே — நாற்றமலர்ப் 238

பூந்தண் டளிவிரித்துப் புக்கிசைக்குஞ் சீர்ஓண
காந்தன் றளியருட்ப்ர காசமே — சேர்ந்தவர்க்கே 239

இங்கா பதஞ்சற்று மில்லாத அனேக
தங்கா பதஞ்சேர் தயாநிதியே — மங்காது 240

மெச்சிநெறிக் கார்வ மேவிநின்றோர் சூழ்ந்ததிருக்
கச்சிநெறிக் காரைக் காட்டிறையே — முச்சகமும் 241

ஆயுங் குரங்கணின்முட் டப்பெயர்கொண் டோங்குபுகழ்
ஏயுந் தலம்வா ழியன்மொழியே — தோயுமன 242

[1]யோகறலி லாத்தவத்தோ ருன்ன விளங்குதிரு
மாகறலி லன்பர்அபி மானமே — ஓகையிலா 243

[2]வீத்தூர மாவோட மெய்த்தவர்கள் சூழ்ந்ததிரு
வோத்தூரில் வேதாந்த உண்மையே — பூத்தவிசின் 244

ஆர்த்தான் பனகத் தவனித் திரன்புகழ்வன்
பார்த்தான் பனங்காட்டூர் பாக்கியமே — பார்த்துலகில் 245

இல்ல மெனச்சென் றிரவா தவர்வாழும்
வல்ல மகிழன்பர் வசித்துவமே — சொல்லரிக்குக் 246

காற்பேறு கச்சியின்முக் காற்பே றிவணென்னும்
மாற்பேற்றி னன்பர் மனேபலமே — ஏற்புடைவாய் 247

ஊற லடியா ருறத்தொழுது மேவுதிரு
ஊற லிழியா உவகையே — மாறுபடு 248

ஓது மிலம்பயங்கோட் டீரென் றடியர்புகழ்
ஓது மிலம்பயங்கோட் டூர்நலமே — தீதுடைய 249

பொற்கோல மாமயிற்குப் போர்க்கோலங் கொண்டதிரு
விற்கோல மேவுபர மேட்டிமையே — சொற்போரில் 250

ஓலங்காட் டும்பழைய னூர்நீலி வாதடக்கும்
ஆலங்காட் டிற்கு ழருண்மயமே — ஞாலஞ்சேர் 251

மாசூ ரகற்று மதியுடையோர் சூழ்ந்ததிருப்
பாசூரி லுண்மைப் பரத்துவமே — தேசூரன் 252

கண்பார்க்க வேண்டுமெனக் கண்டூன்று கோற்கொடுத்த
வெண்பாக்கத் தன்பர்பெறும் வீறுப்பே—பண்பார்க்கும் 253

1. யோகம் என்பது—யோகென விகாரமாயிற்று. 2. வீ என்பது—மரணம்.

நள்ளிப் பதியே நலந்தருமென் றன்பர்புகும்
**கள்ளிற் பதி**நங் கடப்பாடே — எள்ளலுறும் 254

கோளத்தி நீக்குங் குணத்தோர்க் கருள்செய்**திருக்**
**காளத்தி** ஞானக் களஞ்சியமே — ஆளத்தா 255

வெற்றியூ ரென்ன **வினையேன் வினைதவிர்த்த**
**ஒற்றியூர்** மேவியவென் உள்ளன்பே — தெற்றிகளில் 256

பொங்குமணிக் கால்கள் பொலஞ்செய் **திருவொற்றிநகர்**
தங்குஞ் சிவபோக சாரமே — புங்கவர்கள் 257

சேர்ந்துவலங் கொள்ளுந் **திருவொற்றி யூர்**க்கோயிற்
சார்ந்து மகிழமுத சாரமே — தேர்ந்துலகர் 258

போற்றுந் **திருவொற்றிப் பூங்**கோயிற் குட்பெரியோர்
சாற்றும் புகழ்வேத சாரமே — ஊற்றுமெய் 259

அன்புமிகுந் தொண்டர்குழு வாயும்வலி **தாயத்தில்**
இன்பமிகு ஞான இலக்கணமே — துன்பமற 260

எல்லைவாயற் குண்மட்டு மேகில்வினை யேகுமெனும்
**முல்லைவாயிற்** குள்வைத்த முத்திவித்தே — மல்லல்பெறு 261

வேற்காட்ட ரேத்துதிரு **வேற்காட்டில்** மேவியமுன்
னூற்காட் டியர்வேத நுட்பமே — பாற்காட்டும் 262

ஆர்த்திபெற்ற மாதுமயி லாய்ப்பூசித் தார்**மயிலைக்**
கீர்த்திபெற்ற நல்வேத கீதமே — கார்த்திரண்டு 263

வாவுகின்ற சோலை வளர்**வான்மி யூர்**த்தலத்தின்
மேவுகின்ற ஞான விதரணமே — தாவிமயில் 264

ஆடும் பொழிற்**கச்சூ ராலக்கோ யிற்**குளன்பர்
நீடுங் கனதூய நேயமே — ஈடில்லை 265

என்னுந் திருத்தொண்ட ரேத்தும் **இடைச்சுரத்தின்**
மன்னுஞ் சிவானந்த வண்ணமே — நன்னெறியோர் 266

துன்னுநெறிக் கோர்துணையாந் தூய**கழுக் குன்றினிடை**
முன்னுமறி வானந்த மூர்த்தமே — துன்னுபொழில் 267

அம்மதுரத் தேன்பொழியும் **அச்சிறுபாக் கத்து**லகர்
தம்மதநீக் குஞ்ஞான சம்மதமே — எம்மதமும் 268

சார்ந்தால் வினைநீக்கித் தாங்குதிரு **வக்கரை**யுள்
நேர்ந்தார் உபநிடத நிச்சயமே — தேர்ந்தவர்கள் 269

தத்தமது மதியாற் சாரும் **அரசிலியூர்**
உத்தமமெய்ஞ் ஞான ஒழுக்கமே — பத்தியுள்ளோர் 270

எண்ணும் புகழ்கொள் **இரும்பைமா காளத்து**
நண்ணுஞ் சிவயோக நாட்டமே — மண்ணகத்துள் 271

## 9. துளுவ நாடு

**கோபலத்திற்**காண்பரிய **கோகரணங்** கோயில்கொண்ட
மாபலத்து மாபலமா மாபலமே — தாபமிலாப் 272

## 10.வட நாடு

பாகியற்சொல் மஙகையொடும பாஙகார் [1]பருப்பதத்தில்
யோகியாக ளேத்திடவா ழொபபுரவே — போகிமுதல் 273

பாடியுறற நீலப பருபபதததில நலலோாகள
தேடிவைதத தெயவத திலகமே — நீடுபவம 274

தஙகா தவனேக தங்கா பதஞ்சோநத
நஙகாத லான நயபபுணாவே — [2]சிஙகாது 275

தண்ணிறைநது நினறவர்தாஞ சார்திருக்கே தாரத்திற்
பணணிறைநத கீதப பனுவலே — எணணிறைநத 276

சான்றோர் வணஙகுநெடிடுத் தான்மலையில வாழகினற
தேனறோ யமுதச செழுஞ்சுவையே — வானதோயநத 277

இநதிரரு நாரணரு மெணணில பிரமாகளும்
வநதிறைஞசும வெள்ளி மலையானே — தநதிடுநல 278

தாய்ககுங கிடையாத தணணருளகொண் டனபருளம
வாயககுங கயிலை மலையானே — தூயககுமரன 279

தநதையே யெனனருமைத் தநதையே தாயேயென
சிநதையே கோயிலகொண்ட தீத்தனே — சநதமிகும 280

எண்டோ ளுடையாய எனையுடையாய மார்பகததில
வணடோ விடுஙகொனறை மாலையாய — தொணடர்விழி 281

உண்ணற கெளியாய உருததிரனமா லாதியாதங
கண்ணிற கனவினிலும காணபரியாய — மணணுலகில 282

என்போன றவர்ககும இருணீககி இன்புதவும
பொனபோனற மேனிப் புராதனனே — மினபோனற 283

செஞ்சடையாய மூவர்ககுந தேவாககும யாவர்ககும
அஞ்சடையா வணணம் அளிபபோனே — விஞ்சுலகில் 284

எலலாாககு நலலவனே எலலாமசெய வலலவனே
எல்லார்ககும ஒனறு யிருபபோனே — தொலலூழி 285

ஆர்நத சராசரங்க ளெலலாம அடிநிழலிற
சேர்நதொடுஙக மாநடனஞ செயவோனே — சார்நதுலகில 286

எத்தேவர் மெய்த்தேவ ரென்றுரைக்கப் பட்டவாகள்
அத்தேவர்க் கெல்லாமுன் னுனேனே — சத்தான 287

வெணமைமுதல ஐவணமு மேவிரைநது தேவாகளாய்த்
திண்மைபெறும ஐநதொழிலுஞ செயவோனே—மண்முதலாம்

ஐநதாய் இருசுடராய ஆனமாவாய நாதமுடன
விநதாகி யெஙகும விரிநதோனே — அநதணவெண் 289

நீறுடையாய் ஆறுடைய நீண்முடியாய ! நேடரிய

---

1. பருப்பதம — ஸ்ரீசைலம். 2. சிங்குதல் — குறைதல்.

## வீறுடையாய்! நின்றனக்கோர் விண்ணப்பம்!

மாறுபட — எள்ள லடியேன எனக்குள ஒளியாமல்
உள்ள படியே உரைக்கின்றேன் — விளஞுறுமயான் 291

வனசொ லுடனறி வளளுன தனபாதமக(கு)
இனசொ லுடைபணிநதொன றநததிலை—புனசொலெனும்

பொய்யுரைகக வெனறல புடையெழுவே னனறியொரு
மெயயுரைகக வெனறும விழைநததிலை — வையகததில 293

பொலலா விரதத்தைப போறறியுவந துண்பதலலாற்
கொல்லா விரதத்தைக கொணடதிலை — அலலாதார் 294

வனபுகழைக கேடக மனஙகொணட தலலாமல
நினபுகழைக் கேட்க நினைநததிலை — வனபுகொண்டே 295

இன்னடிககு நுண்ணிடையார்க கேவலபுரிந தேனலதுன
பொனனடிககுத தொண்டு புரிநததிலை — பனனுகின்ற 296

செககுற்ற எளளெனவே சிநதைநசிந தேனலது
முக்குற்றந் தன்னை முறிததகிலை — துககமிகுந் 297

தாவில் வலஙகொண்டு சஞசரிததே னலலதுநின
கோவில் வலஙகொளளக குறிததிலை — பூவுலகில் 298

வன்னிதியோர் முனகூபபி வாழத்தினே னன்றியுனறன்
சன்னிதியிற் கைகூப்பித் தாழநததிலை — புன்னெறிசேர் 299

மிண்டரொடு கூடி வியநததலலால ஐயாநின்
தொண்டரொடுங் கூடிச சூழ்ந்ததிலை — கண்டவரைக் 300

கனறுமுகங் கொண்டு கடுகடுத்துப் பார்ப்பதல்லால்
என்றும முகமலர்ச்சி ஏறறதிலை — நனறிபெறும 301

நனெனஞ்சர் உன்சீர் நவில அதுகேடடுத்
கன்னெஞ்சைச சறறுங் கரைத்ததிலை — பின்னெஞ்சாப் 302

பண்ணீர்மை கொண்டதமிழ்ப் பாமாலை யாற்றுதித்துக
கண்ணீர்கொண் டனபாற் கனிந்ததிலை—தண்ணீர்போல் 303

நெஞ்ச முருகி நினைக்குமன்பர் போலெனைநீ
அஞ்சலென நினறு எடுத்ததிலை — விஞசுலகர் 304

மெய்யடிய னென்றுரைகக வித்தகநின் பொனனடிககுப்
பொய்யடிமை வேடஙகள பூண்டதுண்டு — மையமிகு 305

மையல் வினைகவுவநத மாதர் புணர்ச்சியெனும
வெய்ய வினைககுழியில் வீழநததுணடு — துயயர்தமை 306

எனறெனறு மில்லா தியல்பாகப் பினறென்று
முன்றென்று மாக மொழிநததுணடு — மனனுகின்ற 307

மானஞ் செயாது மனநொந திரப்போர்க்குத்
தானஞ்செய வாரைத் தடுத்ததுண்டு — ஈனமிலா 308

வாரமுரை யாது வழக்கி னிடைஓர
வார முரைத்தே மலைந்ததுண்டு — ஈரமிலா 309

நெஞ்சரு டன்கூடி நேசஞ்செய் தும்மடியே
தஞ்சமெனத் தாழாது தாழ்ந்ததுண்டு — எஞ்சலிலாத் 310

தாயனையாய் உன்றனது சந்நிதிநேர் வந்துமொரு
நேயமுமில் லா[1]தொதிபோல் நின்றதுண்டு — தீயவினை 311

மாளாக் கொடிய மனச்செல்வர் வாயிலிற்போய்க்
கேளாச் சிவநிந்தை கேட்டதுண்டு — மீளாத 312

பொல்லாப் புலையரைப்போற் புண்ணியரை வன்மதத்தாற்
சொல்லா வசையெல்லாஞ் சொன்னதுண்டு — நல்லோரைப் 313

போற்றாது பொய்யுடம்பைப் போற்றிச் சிவபூசை
ஆற்றாது சோற்றுக் கலைந்ததுண்டு — தேற்றாமல் 314

ஈபத்தா வென்றிங் கிரப்போர் தமைக்கண்டு
கோபத்தால் நாய்போற் குரைத்ததுண்டு — பாபத்தால் 315

சிந்தையொன்று வாக்கொன்று செய்கையொன்றாய்ப் போகவிட்டே
எந்தைநினை ஏத்தா திருந்ததுண்டு — புந்தியிந்த 316

சொல்லைக்கல் லென்றுநல்லோர் சொன்னபுத்தி கேளாமல்
எல்லைக்கல் ஒத்தே இருந்ததுண்டு — தொல்லைவினை 317

[2]ஆழ்த்தா மயவுலகில் அற்ப மகிழ்ச்சியினால்
வாழ்த்தாமல் உன்னை மறந்ததுண்டு — தாழ்த்தாமல் 318

பூணா வெலும்பணியாய்ப் பூண்டோய்நின் பொன்வடிவங்
காணாது வீழ்நாள் கழித்ததுண்டு — மாணாத 319

காடுபோன் ஞாலக் கடுநடையி லேஇருகான்
மாடுபோல் நின்றுழைத்து வாழ்ந்ததுண்டு — நாடகன்ற 320

கள்ளிவா யோங்குபெருங் காமக் கடுங்காட்டிற்
கொள்ளிவாய்ப் பேய்போற் குதித்ததுண்டு—ஒள்ளியரால் 321

எள்ளுண்ட மாயா வியல்புறுபுன் கல்வியெலாங்
கள்ளுண்ட பித்தனைப்போற் கற்றதுண்டு—நள்ளுலகிற் 322

சீராசை யெங்குஞ்சொற் சென்றிடவே வேண்டுமெனும்
பேராசைப் பேய்தான் பிடித்ததுண்டு — தீராவென் 323

சாதகமோ! தீவினையின் சாதனையோ! நானறியேன்!
பாதகமென் றால்எனக்குப் பாற்சோறு — தீதகன்ற 324

தூய்மைநன்றா மென்கின்ற தொன்மையினர் வாய்க்கினிய
வாய்மையென்றால் என்னுடைய வாய்குமட்டும் — காய்மைதரும்

கற்கு நிகராங் கடுஞ்சொலன்றி நன்மதுரச்
சொற்கும் எனக்கும்வெகு தூரங்காண் — பொற்புமிக 326

1. உதி என்பது — ஒதியென மருவியது.
2. ஆழ்த்து ஆமய உலகில் என்பது — அழுத்துகின்ற நோயுருவாகிய உலகில்

நண்ணியுனைப் போற்றுகின்ற நல்லோர்க் கினியசிவ
புண்ணியமென் றால்எனக்குப் போராட்டம் — அண்ணலுனை

நாளுரையா தேத்துகின்ற நல்லோர்மே லில்லாத
கோளுரையென் றால்எனக்குக் கொண்டாட்டம் — நீளநினை 328

நேசிக்கு நல்ல நெறியாளு **சிவாகமநூல்**
வாசிக்க வென்றாலென் வாய்நோகும் — காசிக்கு 329

நீடிக்கி லானும் நேர்ந்தறிவ தல்லது**வீண்**
**வேடிக்கை** என்றால் விடுவதில்லை — நாடயலில் 330

வீறு முனது விழாச்செயினும் அவ்விடந்தான்
ஆறு யிரங்காத மாங்கண்டாய் — மாறுன 331

போகமென்றால் உள்ளமிகப் பூரிக்கும் அன்றி**சிவ**
**யோகமென்றால்** என்னுடைய உண்ணடுங்கும் — சோகமுடன்

துள்ளலொழிந் தெனனெஞ்சஞ் சோர்ந்தழியுங் காலத்திற்
கள்ளமென்றால் உள்ளே களித்தெழும்பும் — அள்ளனெறி 333

செல்லென்று லன்றிச் **சிவசிவா** வென்றொருகாற்
சொல்லென்றால் என்றனக்குத் துக்கம்வரும் — நல்லநெறி 334

வாம்பலன்கொண் டோர்கள் மறந்தும் பெறுக்கொடிய
சோம்பலென்ப தென்னுடைய சொந்தங்காண் — ஏம்பலுடன்

எற்றே **இரக்கர்**என்ப தென்றனைக்கண் டஞ்சியெனை
உற்றோ ரையுமுடன்விட் டோடுங்காண் — சற்றேனும் 336

ஆக்கமே சேரா தறத்துரத்து கின்றவெறுந்
தூக்கமே என்றனக்குச் சோபனங்காண் — ஊக்கமிகும் 337

ஏறுடையாய் **நீறணியா ரென்**மனை யாயினும்வெண்
சோறுகிடைத் தாலதுவே சொர்க்கங்காண் — வீறுகின்ற 338

வாழ்வுரைக்கு நல்ல மனத்தாதமை எஞ்ஞான்றுந்
தாழ்வுரைத்தல் என்னுடைய சாதகங்காண் — வேள்விசெயும்

தொண்டர்தமைத் துதியாத் துட்டரைப்போ லெப்பொழுதுஞ்
சண்டையென்ப தென்றனக்குத் தாய்தந்தை — கொண்டவெழு 340

தாதாட ஓங்கித் தலையாட வஞ்சரொடு
வாதாட வென்றாலென் வாய்துடிக்கும் — கோதாடச் 341

சிந்தை திரிந்துழலுந் தீயரைப்போல் நற்றரும
நிந்தையென்ப தென்பழைய நேசங்காண் — முந்தநினை 342

எண்ணென்று லன்றி யிடாச்செய் திடுங்கொடிய
பெண்ணென்றாற் றாக்கம் பிடியாது — பெண்களுடன் 343

புல்லென்றாற் றேகம் புளகிக்கும் அன்றிவிடு
நில்லென்றால் என்கண்ணில் நீரரும்பும் — புல்லரென்ற 344

பேர்க்குமவிருப் பெய்தாத பெண்பேய்கள் வெய்யசிறு
நீர்க்குழியே யான்குளிக்கு நீர்ப்பொய்கை — சீக்கரையின 345

ஏருப்பெண் மாத ரிடைக்குள் அளிந்தென்றும்
ஆருப்புண் ணுக்கே அடிமைகான் — தேருத 346

வெஞ்சலஞ்செய் மாயா விகாரத்தி னல்வரும்வீண்
சஞ்சலமெல் லாமெனது சம்பந்தம் — அஞ்செழுத்தை 347

நேர்ந்தார்க் கருள்புரியு நின்னடியர் தாமேயுஞ்
சார்ந்தால் அதுபெரிய சங்கட்டம் — ஆர்ந்திமோன் 348

காந்தும் விழிப்புலியைக் கண்டதுபோல் நல்லகுண
சாந்தமெனைக் கண்டாற் றலைசாய்க்கும் — ஆந்தகையோர் 349

சேர மனத்திற் செறிவித் திடும்புருட
தீரமெனைக் கண்டாற் சிரிக்குங்காண் — கோரமதைக் 350

காணில் உலகிற் கருத்துடையோர் கொள்ளுகின்ற
நாண மெனைக்கண்டு நாணுங்காண் — ஏணுலகில் 351

ஞானங் கொளாவெனது நாமமுரைத் தாலும் அபி
மானம் பயங்கொண்டு மாய்ந்துவிடும் — ஆனவுன்றன் 352

கேண்மைக் குலத்தொண்டர் கீர்த்தி பெறக்கொண்ட
ஆண்மைக்கு நானென்றால் ஆகாது — வாண்மைபெறும் 353

ஐயநின்றாட் பூசிக்கும் அன்பருள்ளத் தன்பிற்கும்
பொய்யன் எனக்கும் பொருத்தமிலை — வையகத்தோர் 354

இல்லெனினுஞ் 'சும்மாநீ ஈகின்றேன் என்றெநசொல்
சொல்' லெனினுஞ் சொல்லத் துணிவுகொளேன்-அல்லையெமக்(கு)

ஈயென்பா ரன்றி அன்னை என்பயத்தால் நிஞ்சோற்றில்
[1] ஈயென்ப தற்கும் இசையாள்காண் — ஈயென்பார்க்(கு) 356

எண்ணுஞ் சிலர்மண் ணிடுவார் எனக்கந்த
மண்ணுங் கொடுக்கமனம் வாராது — அண்ணுறுமென் 357

இல்லை யடைந்தே இரப்பவருக் கெப்போதும்
இல்லையென்ப தென்வாய்க் கியல்புகாண் — தொல்லுலகை

ஆண்டாலும் அன்றி அயலார்புன் கீரைமணிப்
பூண்டாலும் என்கண் பொறுக்காது — நீண்டவெழு 359

தீப முறுவோர் திசையோர்மற் றியாவர்க்குங்
கோப மதுகான் கொடுக்கினுண்டு — ஆபத்தில் 360

வீசங் கொடுத்தெட்டு வீச மெனப்பிறரை
மோசஞ் செயநான் முதற்பாதம் — பாசமுளோர் 361

கைக்குடைய வேயெழுதிக் கட்டிவைத்த இவ்வுலகப்
பொய்க்கதையே யான்படிக்கும் புத்தகங்கள்—மெய்ப்படுநின்

1. சோற்றில் மொய்க்கும் ஈயைக்கண்டு, தாய் தன் மகன் லோபகுணத்தால் ஈ என்பதற்குக் கொடு என்று பொருள்கொண்டு பயந்துவிடுவானோ வென்று கருதி அங்ஙனம் கூறுள்.

மந்திரததை உசசரியா வாயுடையே னெனபோலத்
தநதிரததிற கைதோந தவரிலலே — எநதையினி 363

ஏதென றுரைபபே னிருஙகடலசூழ வையகத்திற
சூதென்ப தெல்லாமென் சுற்றுங்காண் — ஓதுகினற 364

நஞ்சமெலாங் கூட்டி நவினறிடினும் ஒவவாத
வஞசமெலாம எனகை வசஙகணடாய — அஞசவரும 365

வீணவமாம வஞச விளைககுமுத லாகினற
ஆணவமே எனகாணி ஆடசியதாம — மாணிறைநத 366

நலலறிவே என்னெடு நாடபகைதத தனறிமறறைப
புலலறிவே என னுட பொருள கணடாய — சொலலவொணு 367

வேடருககுங கிடடாத வெஙகுணததால இஙகுழலும
மூடருககுள யானே முதலவனகாண் — வீடுதத 368

மேதையாகள வேணடா விலஙகாயத திரிகினற
பேதையெனப தெனனுரிமைப போகணடாய—பேதமுற 369

ஓதுவதென! பறபலவா யுறறதவத தோாதீதத
தீதுகளெல் லாமெனது செலவஙகாண — ஆதலினல் 370

பேயினையொத் திவவுலகிற பிததாகி நினறஇநத
நாயினைநீ யாணடிடுதல் நன்கன்றே — ஆயினுமுன 371

மண்ணு ருயிாகளுககும வானவாககுந தானிரங்கி
உணணுக கொடுவிடமும உணடனையே !—எண்ணுமல 372

வேய்ததவள வெறபெடுதத வெயயஅரக் கன்றனககும
வாயத்தவர மெலலாம் வழஙகினையே — சாயததமன 373

வீமபுடைய வன்முனிவர் வேளவிசெயது விடடகொடும
பாமபையெலலாந தோளிற பரிததனையே — நாமபெரியர் 374

எஞசேமென ருணவததா லேறற இருவரையும
அஞசேலென ருடகொண டருளினையே — துஞசுபன்றித் 375

தோயாக குருளைகளின துனபம பொறுதனறு
தாயாய் முலைப்பாலுந் தநதனையே — வாயிசைககுப 376

பாணடியனமுன சொலலிவநத பாணன பொருட்டடிமை
வேணடி விறகெடுத்து விற்றனையே—ஆண்டொருநாள 377

வாயமுடியாத் துனபுகொணட வநதிககோ ராளாகித
தாயமுடிமேன மண்ணுஞ் சுமநதனையே — ஆயதுயர 378

மாவகஞசோ மாணிக்க வாசகருக் காய்குதிரைச்
சேவகனபோல் வீதிதனிற் சென்றனையே—மாவிசயன் 379

வில்லடிக்கு நெஞ்சம விரும்பியதல லாலெறிநத
கல்லடிக்கும் உளளங களிததனையே — மலலலுறும 380

விலவக கிளையுதிாதத வெயய முசுக்கலையைச்
செலவத் துலாமகனுய்ச் செய்தனையே — சொலஅகலின

நீளுகின்ற செய்யருந்த நேர்எலியை மூவுலகும்
ஆளுகின்ற மன்னவனாய் ஆக்கினையே — கோளகல 382

வாய்ச்சங்கு நூலிழைத்த வாய்ச்சிலம்பி தன்னையுயர்
கோச்செங்கட் சோழமன்னனாக் கூட்டினையே — ஏச்சறுநல் 383

¹ஆறடுத்த வாகீசர்க் காம்பசியைக் கண்டுகட்டுச்
சோறெடுத்துப் பின்னே சுமந்தனையே — கூறுகின்ற 384

தொன்மைபெறுஞ் சுந்தரர்க்குத் தோழனென்று பெண்பரவை
நன்மனைக்குத் தூது நடந்தனையே — நன்மைபெறும் 385

இற்றென்ற விற்றென்னா எத்தனையோ பேர்கள்செய்த
குற்றங் குணமாகக் கொண்டனையே — பற்றுலகில் 386

அன்புடைய தாயர்களோ ராயிரம்பே ரானாலும்
அன்புடையாய் நின்னைப்போ லாவாரோ! — இன்பமுடன்

ஈண்டவருந் தந்தையர்கள் எண்ணிலரே யாயினுமென்
ஆண்டவனே நின்னைப்போ லாவாரோ! — பூண்டகைகொள்

ஏனுடைய நின்னையன்றி எந்தை பிரானேயுன்
ஆணையெனக் குற்றதுணை யாருமில்லை — நாணமுளன் 389

ஆனேன் பிழைக ளனைத்தினையு மையா! நீ
தானே பொறுக்கத் தகுங்கண்டாய் — மேனோற்ற 390

மாற்றனக்கு மெட்டா மலர்க்கழலோய் நீஎன்னைக்
கூற்றனுக்குக் காட்டிக் கொடுக்கற்க! — பாற்றவள 391

நந்தக் கடற்புவியில் நான் இன்னும் வன்பிறவிப்
பந்தக் கடலழுந்தப் பண்ணற்க! — முந்தைநெறி 392

நின்றேயுன் பொற்றாள் நினையாதார் பாழ்மனையிற்
சென்றே உடலோம்பச் செய்யற்க! — நன்றேநின் 393

றோங்கு நெறியோ ருளத்தமர்ந்தோய்! என்றனைத்
தீங்கு நெறியிற் செலுத்தற்க! — வீங்கடங்கி 394

வாழி யெனத்தான் வழுத்தினுமென் சொற்கடங்கா
ஏழை மனத்தா லிளைக்கின்றேன் — வாழுமரக் 395

கோடேறும் பொல்லாக் குரங்கெனவே பொய்யுலகக்
காடேறு நெஞ்சாற் கலங்குகின்றேன் — பாடேறும் 396

உள்ளறியா மாயையெனு முட்பகையாற் காமமெனுங்
கள்ளறியா துண்டு கலங்குகின்றேன் — தெள்ளுறுமென் 397

கண்ணனையாய் நின்றாட் கமலங் களைவழுத்தா
மண்ணனையார் பாற்போய் மயங்குகின்றேன் — திண்ணமிலாக்

காதரவாந் துன்பக் கவலைக் கடல்வீழ்ந்தே
ஆதரவொன் றின்றி யலைகின்றேன் — ஓதுமறை 399

யாத்த ரெனுமுனற னடியாா தலமைககண்டு
நாததிகஞ்சொல வாாகது நடுஙகுகினறேனா — பாததுண்டே

உய்வ தறியா வுளததினே னுயயுமவகைச
செயவ தறியேன திகைககினறேன — சைவநெறி 401

உணணிரமபு நினகருணை யுணடோ இலலையோவென(று)
**எண்ணிெயெண்ணி உள்ள மிளைககின்றேன்** -மணணினிடைக

கொனசெயகை கொண்டகொடுங கூறறன குறுகிலதற(கு)
எனசெயவோ மெனறெணணி யெயககினறேன - முனசெயவினை

யாமறையா நோயா லகமெலிவுற றையோ! நான
**தாமலரையில் நீர்போற்** றயஙகுகினறேன — தாமமுடி 404

வளள லருளகொடுகக வநதிலனே யினனுமென
உளளமது நீரா யுருகுகினறேன — எளளளுறும 405

மாலைபாயந தினனுமெனன வநதிடுமோ! எனறுநெஞசம
ஆலைபாயந துளளம அழிகினறேன — ஞாலமிசைக 406

**கோடபார வாழ்க்கைக் கொடுஞ்சிறையி னின்றென்னை**
**மீட்பா ரிலாது விழிககின்றேன — மீட்பாகும்** 407

**ஆற்றி லொருகாலும்** அடஙகாச சஞசாரச்
**சேற்றிலொரு காலும**வைததுத தேயகினறேன்-தோறறுமயற

பாகமுறு **வாழ்க்கையெனும் பாலைவனத் துனனநுணீர்த்**
**தாகமது கொண்டே தவிக்கின்றேன்** — மோகமதிற் 408

போயபபடுமோர் **பஞ்சப் பொறிகளால் வெம்பாபின்**
**வாய்ப்படுமோர்தேரையைப்போல்வாடுகின்றேன்**-மாய்ப்பவரு

**மீன்போலு மாதா விழியால் வலைப்பட்ட**
**மான்போலுஞ் சோாந்து மடஙகுகின்**றேன—கானபோல

வீறறு மூலக விகாரப பிரளயததில
தோறறுஞ சுழியுட சுழலகினறேன — ஆறறவுநான 412

இப்பாரி லுனமேலஅன பிலலெனினும அன்பனெனன
**ஒப்பாரி யேனும உடையேனகாண** — தபபாயநத 413

மட்டுவிடேன உனருண மறககினும **வெண் ணீற்றுநெறி**
**விட்டுவிடேன் எனறனைக்கை விட்டுவிடேல்!**— துட்டனென

**மாலுந் திசைமுகனும் வானவரும வந்துதடுத**
**தாலுஞ் சிறியேனைத் தளளிவிடேல்!** — சாலுலக 415

வாதனைகொண டோனெனறு மறறெவரா னுலுமவநது
**போதனைசெய் தாலுமெனைப் போக்கிவிடேல்! — நீதயவு**
**சூழ்ந்திடுக! என்னையுந்நின் தொண்டருடன் சேர்த்தருள்க!**

**வாழ்ந்திடுக! நின் தாள் மலர்!** 417

திருச்சிற்றம்பலம்

உ

சிவமயம

திருசசிறறமபலம

# மூன்ருவது

# நெஞ்சறிவுறுத்தல்

## காப்பு

குறள வெணபா

திருசசிறறம்பலம்

சீர் சான்ற முககட சிவளிறறைச சோநதிடில ஆம
போசானற இனபம பெரிது 1

ஆறு முகததான அருளடையின ஆமெலலாப
பேறு மிகததான பெரிது. 2

கலி வெணபா

திருச்சிறறமபலம

பொன்னூர் மலைபோற பொலிவுற றசையாமல
எந்நாளும வாழியநீ யென்னெஞ்சே! — பின்னை 1

இபபிறபபி ஞேடிங கெழுபிறபபு மனறியெனை
எபபிறபபும விட்டகலா என்நெஞ்சே! — செபபமுடன் 2

செவவொருசார நினறு சிறியேன கிளககினற
இவ்வொருசொல் கேட்டிடுக! எனனெஞ்சே! -- எவவெவ 3

## 1 பதி சொரூபம்

உலகும் பரவும ஒருமுதலா யெஙகும
இலகுஞ் சிவமா யிறையாய — விலகும 4

உருவா யுருவி லுருவா யுருவுள
அருவா யருவி லருவாய — உருவருவாய 5

நிததியமாய நிரககுணமாய நிறசலமாய நினமலமாயச
சததியமாயச சததுவமாயத ததுவமாய — முததியருள் 6

ஒனருயப பலவா யுயிரா யுயிாககுயிராய
நனருய நவமாய நடுநிலையாய — நினருேஙகும 7

வேதமாய வேதாநத விததாய விளஙகுபர
நாதமாய நாதாநத நாயகமாய — ஓதுஞ 8

செறிவாய்த் திரமாய்ச சிதாகாச மாய்ச்சொல
அறிவா யறிவு ளறிவாய — நெறிமேவு 9

காலமாயக காலங கடநத கருததாயநற
சீலமாயச சிறபரமாயச சினமயமாய — ஞாலம 10

பொருநதாப பொருளாயப் பொருநதும பொருளாய்ப்
பெருநதா ரகளுஞசூழநத பேறாயத — திருநதாத 11

போககும வரத்துமிலாப் பூரணமாயப புண்ணியர்கள
நோககுந திறநதெழுநத நுணணுணர்வாய — நீககமிலா 12

ஆதியா யாதிநடு வநதமா யாஙககனற
சோதியாய்ச் சோதியாச சொறபயனாய் — நீதியாய் 13

ஆங்கார நீககும அகார உகாரமதாய்
ஓங்கார மாயவறறி னுட்பொருளாய்ப் — பாஙகான 14

சித்தமாயச சிததாநத தேசாய்த் திகமபரமாயச
சததமாயச சுதத சதாநிலையாய — விததமாய் 15

அண்டமா யணடத தணுவா யருளகணடா
கண்டமா யானநதா காரமதாய — அணடததின 16

அப்பாலா யிப்பாலா யண்மையாயச சேயமையதாய்
எப்பாலா யெபபாலு மிலலதுமாயச — செபபாலும் 17

நெஞசாலுங காய நிலையாலு மநநிலைககுள
அஞசாலுங காணடற கருமபதமாய — எஞசாப் 18

பரமாயப் பகாப்பொருளாயப பாலாயச சுவையின
தரமாய்ப பரபபிரமந தானாய — வரமாய 19

ஒன்பான வடிவா யொளியெண் குணககடலாய
அன்பா யகநிலையா யறபுதமாய — இனபாய் 20

அகமாய்ப் புறமா யகமபுறமாய நீஙகுஞ
சகமாய்ச சகமாயை தானாயச — சகமாயை 21

இல்லாதா யென்று மிருப்பதா யாதொன்றுங்
கொல்லாதார்க் கின்பங் கொடுப்பதாய் — எலலார்ககும் 22

நண்ணுவதாய் நண்ணாதாய் நலவினையா யலவினையாய்
எண்ணுவதா யெணணி னியலாதாய — எண்ணுகினற 23

வானாய் நிலனாய் வளியா யனலாயநீ
தானாய வழிபடுநான ருனருனாய — வானாதி 24

ஒனறிடதது மொனருதா யொனறுவதாய ஆனநத
மன்றிடத்தி லென்றும் வதிவதாய — ஒனறியதோர் 25

ஐநநிறமா யநநிறத்தி லொளியா யவவொளிககுள
எநநிறமும வேணடா வியனிறமாய — முநநிறததிற 26

பூப்பதுவாய்க் காப்பதுவாய்ப் போககுவதாய்த் தேககுவதாய்
நீப்பதுவாய்த் தனனுள நிறுத்துவதாய்ப — பூப்பதினறி 27

வாளா திருப்பதுவாய் வாதனை தீதமதாய்
நீளாது நீண்ட நிலையினதாய் — மீளாப் 28

பெரிதாய்ச சிறிதாயப பெரிதுஞ சிறிதும
அரிதா யரிதி லரிதாயத் — துரிய 29

வெளியாய்ப் பரவெளியாய் மேவுபர விநதின்
ஒளியாய்ச சிவானநத ஊறறாய்த் — தெளியாதி 30

கறபமாய்க காணுஞசங கறப விகறபமாய்
நிறபதா கார நிருவிகற்பாயப் — பொறபுடைய 31

முசசுடராய முசசுடாககு முனனொளியாயப் பின்னொளியாய்
எசசுடரும போதா வியறசுடராய — அசசில் 32

நிறைவாயக குறைவாய நிறைகுறை விலலாதாய்
மறைவாய வெளியாய மனுவாய — மறையாத 33

சசசிதா னநதமாயத தனனிகரொன் றிலலாதாய்
விசசையா லெலலாம விரிபபதுவாய — மெசசுகின்ற 34

யோகமா யோகியா யோகத தெழுநதசிவ
போகமாய்ப் போகியாயப் போகமருள — ஏகமாய்க 35

கேவலமாய்ச் சுத்த சகலமாயக கீழசசகல
கேவலஙகள சறறுங கிடையாதாய -- மாவலத்தில 36

காட்சியாய்க காண்பானாயக காணப படுபொருளாயச
சூட்சியாய்ச் சூடசியாற றோயவரிதாய் — மாடசிபெறச 37

செயபவனாய்ச செய்தொழிலாயச செமபொருளாயச செயதொழிலால
உய்பவனா யுய்விக்கு முத்தமனாய — மொய்கொள

அதுவா யவளா யவனா யவையுங
கதுவாது நினற கணிப்பாயக — கதுவாமல 39

ஐயந திரிபோ டறியாமை விட்டகறறிப்
பொய்யென்ப தொன்றும பொருநதாராய்ச — செயயெனற 40

ஓர்வினையில் இன்பமுமற் றோர்வினையிற றுன்பமுமாஞ
சார்வினைவிட் டோஙகுந தகையினராயப் — பார்வினையில 41

ஓர்பால வெறுப்புமற்றை யோர்பால விருப்புமுறுஞ
சார்பான மயஙகாத் தகையினராயச — சாராபாய 42

ஓரிடத்திற் றண்மையுமற் றோரிடத்தில வெஞ்சினமும்
பாரிடத்திற கொளளாப பரிசினராய — நீரிடததில 43

தண்மைநிக ராதெனறுஞ் சாநதம பழுததுயாநத
ஒண்மையுடன ஒன்றை யுணர்ந்தவராய் — வெண்மையிலா

ஒன்று மறிவி னுதயாதி யீறளவும்
என்றும் இரண்டெனப் தில்லவராய — மன்றவொளிர் 45
ஆம்மூன்றி னுள்ளே யடுக்கிவரு மொன்றகன்ற
மும்மூன்றின மூன்று முனிந்தவராய்த — தம்மூன்றி 46
வீடாது நின்றும் விரிந்தும் விகற்பநடை
நாடாது நான்கு நசித்தவராய — ஊடாக
எஞ்சாம லஞ்சி னிடமாய் நடமாடும்
அஞ்சாதி அஞ்சும் அறுத்தவராய் — எஞ்சாமல்
ஈண்டாண டருளு மிறையோர் தமையாறில்
ஆண்டாண்டு கண்டு ஆறகன்றவராய — ராண்டாது 49
வாழ்வுற்ற வாறேழும் வந்து தமக்கிரண்டோ
டேழ்வுற்ற ஏழு மிகந்தவராய் — ஊழுற்றக 50
கட்டினின்றுட் சோதியொன்று காணத் தொடங்குகின்றோர்
எட்டுகின்ற எட்டின்மே லெய்தினராய்க — கட்டுகின்ற 51
தேனன்றோ கருணைச் சிவங்கலந்து தேக்குகின்ற
சான்றோர்தம் உள்ளந் தணவாதாய — [1] மான்றமலத் 52
தாக்கொழிந்து தத்துவத்தின் சார்பாந் தனுவொழிந்து
வாக்கொழிந்து மாறு மனமொழிந்து — ஏக்கமுற 53
வாயக்குஞ் சுகமொழிந்து மண்ணொழிந்து விண்ணொழிந்து
சாய்க்கு மிராப்பகலுந் தானொழிந்து — நீக்கொழிந்து 54
நானுமொழி யாதொழிந்து ஞானமொழி யாதொழிந்து
தானுமொழி யாமற் றுனொழிந்து — மோனநிலை 55

நிற்கும் பிரம நிரதிசயா னந்தமதாய்

நிற்கும் பரம நிருத்தனெவன் ! 56

தற்பரமாய் — நின்றா னெவனன்பர் நேயமனத் தேவிரைந்து
சென்றா னெவன்சாவ தீர்த்தனெவன் — வன்தீமை 57
இல்லா னெவனயாக்கு மீச னெவன்யாவும்
வல்லா னெவனதி வண்ணனெவன் — கல்லாவில் 58
கட்டகன்ற ஞான சுகாதீதங் காட்டிமுற்றும்
விட்டகன்ற யோக விநோதனெவன் ! — மட்டகன்ற 59

## 2. சித்தன்

அண்டங்க ளெல்லா மணுவி லடைத்தருளித்
திண்டங்கு மாறிருத்துஞ் சித்தனெவன் ! — பண்டங்கு 60
வீயாச் சிறுபெண் விளையாட்டு ளண்டமெலாந்
தேயாது கூட்டுவிக்குஞ் சித்தனெவன் — ஆயாதும் 61

[1] மான்றமலத்தாக்கு — மயக்குதலைச் செய்கின்ற மலத்தினது தீட்டு எனக்கொள்க

வேண்டாமை வேண்டுவது மேவாத சித்தர்தமைத்
தீண்டாது தீண்டுகின்ற சித்தனெவன் — ஈண்டோது 62

பற்றுருவாய்ப் பற்றூப் பரவணுவி னுள்விளங்குஞ்
சிற்றுருவா யுள்ளொளிக்குஞ் சித்தனெவன் — மற்றுருவின் 63

வையாது வைத்துலகை மாவிந் திரசாலஞ்
செய்யாது செய்விக்குஞ் சித்தனெவன் — நையாமல் 64

அப்பிடைவைப் பாமுலகில் ஆருயிரை மாயையெனுஞ்
செப்பிடைவைத் தாட்டுகின்ற சித்தனெவன்! — ஒப்புறவே

நில்லாத காற்றை நிலையாக் கடத்தடைத்துச்
செல்லாது வைக்கின்ற சித்தனெவன் — பொல்லாத 66

வெம்பாம்பை மேலணிந்தோர் வெம்புற்றி னுள்ளிருந்தே
செம்பாம்பை யாட்டுகின்ற சித்தனெவன் — தம்பாங்கர் 67

ஒண்கையில் தானென்றின்றி யுண்ணின் றுயிர்களையூழ்த்
திண்கயிற்று ணட்டுகின்ற சித்தனெவன் — வண்கையுடைத் 68

தானசைந்தால் மற்றைச் சகமசையும் என்றுமறை
தேனசையச் சொல்கின்ற சித்தனெவன் — ஊனமின்றிப் 69

பேர்த்துயிர்க ளெல்லாமோர் பெண்பிள்ளை யின்வசமாய்ச்
சேர்த்து வருவிக்குஞ் சித்தனெவன் — போர்த்துமிக 70

அல்விரவுங் காலை யகிலமெலாந் தன்பதத்தோர்
சில்விரலிற் சேர்க்கின்ற சித்தனெவன் — பல்வகையாய்க் 71

கைகலந்த வன்மைக் கருப்பா சயப்பையுட்
செய்கருவுக் கூட்டுவிக்குஞ் சித்தனெவன்! — உய்கருவை

மெய்வைத்த வேர்வையினும் வீழ்நிலத்தும் அண்டத்துஞ்
செய்வித்தங் கூட்டுவிக்குஞ் சித்தனெவன் — உய்விக்கும் 73

வித்தொன்று மின்றி விளைவித் தருளளிக்குஞ்
சித்தென்றும் வல்லவொரு சித்தனெவன் — சத்துடனே 74

உற்பத்தி யாயுலகில் ஒன்பதுவாய்ப் பாவைகள்செய்
சிற்பத் தொழில்வல்ல சித்தனெவன் — பற்பலவாங் 75

காரா ழிகளைக் கரையின்றி யெல்லையிலாச்
சேரூழி நிற்கவைத்த சித்தனெவன் — பேராத 76

நீர்மேல் நெருப்பை நிலையுறவைத் தெவ்வுலகுஞ்
சீர்மே வுறச்செய்யுஞ் சித்தனெவன் — பாராதி 77

ஐந்திலைந்து நான்கொருமூன் றுமிரண்டொன் றுய்முறையே
சிந்தையுற நின்றருளுஞ் சித்தனெவன் — பந்தமுற 78

ஆண்பெண்ணுய்ப் பெண்ணுண யண்மை தனைவானிற்
சேண்பண்ண வல்லவொரு சித்தனெவன் — பண்மாணுப் 79

பேடாணைப் பெண்ணைப் பெண்ணாண் பெரும்பேடாய்ச
சேடாகச செயயவல்ல சித்தனெவன — சேடாய 80

வெண்மை கிழமாய் விருத்தமநத வெண்மையதாயத்
திண்மை பெறசசெய்யுஞ சிததனெவன — ஒணமையிலா 81

ஒட்டினைச்செம பொனனைய உயாசெமபொன ஓடாகச
சேட்டையறச செலகினற சிததனெவன — காட்டிலுறு 82

காஞ்சிரத்தைக கற்பகமாய்க கற்பகத்தைக காஞசிரமாயத்
தேஞசிவணச செயகினற சிததனெவன — வாஞ்சையுற 83

நாரணனசேய் நானமுகனாய் நானமுகனசேய நாரணனாயச
சீரணவச செயயவலல சிததனெவன — பேரணவக 84

கொம்மை பெறுஙகோடா கோடியணட மெலலாமோர்
செம்மயிர்ககா லுட்புகுததுஞ சிததனெவன — செமமையிலா

வெமபுலியை வெண்பால விளைபசுவா யப்பசுவைச
செம்புலியாய்ச செயயவலல சிததனெவன — அமபுலியை 86

துஙகதிரொண செஙகதிரா யம்புலியாய்ப பமபுகினற
செஙகதிரைச செயயவலல சிததனெவன — துஙகமுறு 87

ஓரணுவோர் மாமலையா யோர்மா மலையதுவோர்
சீரணுவாயச செயயவலல சிததனெவன — வீரமுடன 88

முன்னகையா னினறதொரு முபபுரத்தை யனறொருகாற்
சின்னகையாற றீமடுதத சித்தனெவன — முனனயன்மால் 89

மறறிருநத வானவரும வாயநதசைககா வணணமொரு
[1]சிற்றுரும்பை நாடடினினற சிததனெவன—மறறவாபோல 90

அலலா வயனு மரியு முருததிரனுஞ
செலலா நெறிநினற சிததனெவன — ஒல்லாத 91

கலவிற சுவையாயக கனியிற சுவையிலதாய்ச
செல்லப பணிககவலல சிததனெவன — அலலலறப 92

பார்ககினற யாவாகடகும பாவஞ தீதனெனச
சீர்ககினற மெயஞஞானச சிததனெவன — மார்க்கங்கள் 93

ஒன்றென்ற மேலவரை யொனறெனற றுரைத்தவர்பாற்
சென்றெனறி நிறகினற சிததனெவன — அனறொருநாள 94

கல்லானை தின்னக் கரும்பளித்துப் பாணடியனவீண்
செலலா தளித்தமகா சித்தனெவன — சொலலாத 95

ஒன்றே யிரண்டேமே லொனறிரண்டே யெனபவறறுட்
சென்றே நடுநினற சித்தனெவன — செனறேறும 96

அத்திரத்தை மெனமலரா யமமலரை யததிரமாயச
சித்திரததைப் பேசுவிககுஞ சிததனெவன — எததலத்துஞ 97

1. சிற்றுரும்பு — அற்பமாகிய துரும்பு

[1] சஙகமதே தாபரமாயத தாபரமே சஙகமதாய்ச
செஙகையிடா தாறறவலல சிததனெவன — தஙகுகின்ற 98
சதெலலா மாகிச சயமபுவா யானநதச
சிதெலலாம வலலசிவ சித்தனெவன — தத்தெல்லாம 99

## 3. கள்வன்

**நீட்டாது** நெஞச நிலைத்தவர்கரு தன்னுண்மை
காட்டாது காட்டிநிறகுங **கள்வனெவன்** ! — பாடோடு 100
வண்டாலுங கொன்றை மலரோ யெனமறைகள
கண்டாலுங காணுத களவனெவன — தொண்டாக 101
அளளஞ் செறியார்ககே யனறி யறிவாககுக
களளஞ் செறியாத களவனெவன — எளளலறக் 102
கொண்டவெலாங தனபாற கொடுககுமவா தமமிடததிற
கண்டவெலாங கொளளைகொளுங களவனெவன - கொணடுளததில
தனனை யொளிக கினறோர்கள தமமுளொளித துளளவெலாங
கன்னமிடக கைவநத களவனெவன — மன னுலகைச 104
சறபனைசெய் கினறதிரோ **தானமெனுஞ்** சததியினுற்
கறபனைசெய தேமயககுங களவனெவன — முறபடுமித் 105
தொணடுலகி லுளளவுயிா தோறுமொளித தாறறெலலாங
கண்டுலவு கினறதொரு களவனெவன — விணடகலா 106
மண்மயககும பொனமயககு மாதா மயககுமெனுங
கணமயககங காடடிநிறகுங களவனெவன — உண்மயககும 107
மாசு பறிககு மதியுடையோா தமமுடைய
காசு பறிககினற களவனெவன — ஆசகனற 108
பெண்ணு லெவையும பிறபபிதது மறறைநுதற்
கண்ணு லழிககினற களவனெவன — எணணுது 109

## 4 சதுரன

**நாளென்று** நிறகில நடுவேயந நானுணத
தானெனறு நிறகுஞ **சதுரனெவன்** ! — மானெனற 110
**மா**யைதனைக காட்டி மறைபபிததம மாயையிறறன
சாயைதனைக காடடுஞ சதுரனெவன — நேயமுடன 111
**நா**னமறையு நானமுகனு நாரணனு நாடுதொறுந
தான மறையு மேனமைச சதுரனெவன — வானமறையா 112
மூனனை மறைககு முடிபபொருளென ருயபவர்ககுந
தனனைமறைககுஞ சதுரனெவன — உன னுகினறோா 113
சிததததிற சுதத சிதாகாச மெனறுருசிற
சதததததிற காடடுஞ சதுரனெவன — முததரென 114

1 சஙகமம் எனபது — சஙகம் என விகாரமாயிறறு.

## 5. தலைமைத் தேவன்

**யாவ** ரிருந்தா ரவர்காண வீற்றிருக்குந்
தேவர் புகழ்தலைமைத் தேவனெவன்! — யாவர்களும் 115

**இவ்வணத்தன் இவ்விடத்தன் இவ்வியலன்** என்றறியாச்
செவ்வணத்த னந்தலைமைத் தேவனெவன் — மெய்வணத்தோர்

தம்வாழ் அண்ட சராசரங்கள் தாம்வாழ
நாம்வாழ்த் தன்னுரையா நான்மறைகள் — தாம்வாழச் 117

சாருருவி னல்லருளே சத்தியாய் மெய்யறிவின்
சீருருவே யோருருவாந் தேவனெவன் — ஈருருவும் 118

ஒன்றென் றுணர வுணர்த்தி யடியருளஞ்
சென்றங் கமர்ந்தருளுந் தேவனெவன் — என்றென்றுந் 119

தற்சகச மென்றே **சமயஞ் சமரசமாஞ்**
சிற்சபையில் வாழ்கின்ற தேவனெவன் — பிறபடுமோர் 120

## 6. பக்தி நெறி

**பொய்விட்டு** மெய்ந்நெறியைப் போற்றித்தற் **போதத்தைக்**
**கைவிட்** டுணர்வே கடைப்பிடித்து — நெய்விட்ட 121

தீப்போற் கனலுஞ் செருக்கறவே செங்கமலப்
பூப்போலுந் தன்றாட் புணைபற்றிக் — காப்பாய 122

**வெண்ணீ றணிந்து** விதிர்விதிர்த்து மெய்பொடிப்பக்
கண்ணீ ரருவி கலந்தாடி — உண்ணீர்மை 123

என்புருகி யுள்ளுருகி யின்பா ருயிருருகி
அன்புருகி **அன்புருவ மாகிப்பின்** — வன்பகன்று 124

**புண்ணியா!** திங்கட் புரிசடையாய்! பொன்னிதழிக்
கண்ணியா! எங்கள் களைகண்ணே! — எண்ணியாங்(கு) 125

அன்பர்க் கருளு மரசே! அமுதே! பே
ரின்பக் கடலே! எமதுறவே! — மன்பெற்று 126

மாற்றுரையாப் பொன்னே! மணியே! எங் கண்மணியே!
ஏற்றுவந்த மெய்ப்பொருளே! என்றுநிதம் — போற்றிநின்றுல

உள்ளூறி யுள்ளத் துணர்வூறி யவ்வுணர்வின்
அள்ளூறி யண்ணித் தமுதூறித் — தெள்ளூறும் 128

வான்போற் பரவி மதிபோலக் குளிர்ந்துயர்கோற்
றேன்போன் மதுரிக்குந் **தேவமணவாளன்!** — வான்போனூர் 129

மாண்கொடுக்குந் தெய்வ மடந்தையாக்கு மங்கலப்பொன்
நாண்கொடுக்க நஞ்சுவந்த நாதனெவன் — நாண்மலர்ப்பெய் 30

தார்த்தியாய்த் தேவ ரரகரவென் றேத்தவட்ட
மூர்த்தியாய் நின்ற முதல்வனெவன் — சீர்த்திபெற 131

## 7. கணேசர்

ஈண்டற் புதவடிவா யெததேவ ரேனுமினறு
காண்டற கரிதாங் கணேசனெவன்! — வேண்டுறறுப் 132
பூமியெஙகும வாழததிப புகழவாா விருமபுமிடட
காமியஙக ளீயுங கணேசனெவன — நாமியஙக 133
ஏண வருமிடையூ றெலலா மகறறியருள
காண வெமககீயுங கணேசனெவன — மாணவரும் 134

## 8. முருகர்

மூந்த மறையின முழுபபொருளை நானமுகறகுத
தநத அருடகடலாஞ் சாமியெவன்! — தநதமககாம் 135
வாதகறறி யுணமை மரபளிதது வஞசமலாக
கோதகறறு நெஞ்சக் குகேசனெவன்! — தீதகறறித் 136

## 9. பரமசிவம்

தஙகுமல கஙகள சாயாமற செஞசடைமேற
கஙகைதனைச சோதத கடவுளெவன! — எஙகுறினுங 137
கூமபா நிலைமைக குணததோா தொழுகினற
பாமபா பரணப பரமனெவன — கூமபாது 138
போறறுரைதது நிறகும புனிதனமேல வநதகொடுங
கூறறுதைதத செநதாட குழகனெவன — ஆறறவுறு 139
வையந துதிககு மகாலிஙக மூாததிமுதல
ஐயைநது மூா்ததியெனும ஐயனெவன — ஐயநதீர் 140
எலலாசொல வணணமெநத வணணமநத வணணஙகள்
எலலா முடைய விததகனெவன — எலலாககுந 141
தாநதலைவ ராகத்தந தாளதொழுமெத தேவாககும
ஆநதலைமை யீநதபர மாா்ததனெவன — போநதுயிர்கள 142
எஙகெங கிருநதுமனத் தியாது விழைநதாலும
அஙகஙகிருநதளிககும அணணலெவன — புஙகமிகும் 143
அணணற றிருமலாககை யாழிபெறக கண்ணிடநத
கணணற கருளியமுக கணணனெவன — மணணிடததில் 144
ஓயாது சூனமுதிாநத வோபெண தனககாகத
தாயாகி வந்த தயாளனெவன்! — சேயாக 145
வேறபிடிதத கண்ணப்பன் மேவுமெசசில வேண்டுமிதத
தாறபொசித்து சோ்நத கயாளனெவன — பாறகுடததைத 146
தானதநதை யெனறெறிநதோன தாளெறிநத தண்டிக்குத்
தான்தந்தை யான தயாளனெவன்! — தானகொணடு 147
சமபு நறுஙகனியின தனவிதையைத தாளபணிநத
சம்பு முனிக்கீயுந தயாளனெவன — அமபுவியில 148

ஆண்டவனென் றேத்தப்பொன னம்பலத்தி லானநதத்
தாண்டவஞ்செய் கின்ற தயாளனெவன — காண்டகைய 149

முத்துச் சிவிகையிலே மேல் முனகாழி யோஙகுமுழு
முத்தைத் தனிவைத்த முத்தனெவன — பத்திபெறு 150

நாவொன் றரசர்க்கு நாநதருவே நலலூரில
வாவென்று வாய்மலர்நத வளளலெவன — பூவொனறு 151

நனறொண்டர் சுந்தரரை நாநதடுகக வந்தமையால்
வனறொண்டன் நீ! யென்ற வள்ளலெவன — நனதொண்டிற்

காணிககை யாகக கருத்தளித்தார் தம்மொழியை
மாணிக்க மெனறுரைத்த வளளலெவன — தாணிற்குந் 153

தனனனபர் தாமவருநதிற சறறுந தரியாது
மன்னருப ருளளிகும் வளளலெவன — முனனனபிற 154

சால்புடைய நலலோர்கருத் தண்ணருளதந தாடகொளவோா
மாலவிடைமேல வநதருளும வளளலெவன — மானமுதலோர்

தாமலையா வண்ணந தகையருளி யோஙகுவெளளி
மாமலைவாழ கினறவருள வளளலெவன — ஆமவனே 156

நமமைப் பணிகொணடு நாரணனு நாடரிதாஞ்
செம்மைக கதியருளநந தெய்வங்காண் — எமமையினும 157

நாடக கிடைத்தல் நமககனறி நானமுகற்குந
தேடக கிடையாநந தெய்வங்காண — நீடசீர் 158

நல்வந் தனைசெயயு நம்போல்வார்க கோஞானச்
செலவந தருநமது தெயவஙகாண் — சொல்வநத 159

எணமைபெறு நாமுலகில எனறும் பிறநதிறவாத்
திண்மை யளித்தருளநந தெயவஙகாண — வண்மையுற 160

முப்பாழ் கடநத முழுப்பாழுக கபபாலைச
செப்பாது செப்புறுநந தேசிகன்காண — தப்பாது 161

தீரா விடும்பைத் திரிபெனப தியாதொனறுஞ்
சேரா நெறியருள்நந தேசிகனகாண் — ஆராது 162

நித்தந தெரியா நிலைமே வியநமது
சித்தந தெளிவிககுந தேசிகனகாண — பித்தனென 163

யாதொன்றுந தேரா திருநதநமக கிவ்வுலகந்
தீதென றறிவித்த தேசிகனகாண் — கோதினறி 164

ஓசைபெறு கடலசூ ழுறற வுலகிலநமமை
ஆசை யுடனீனற அப்பன்காண! — மாசுறவே 165

வனபாய் வளர்ககினற மற்றையர்போ லலலாமல
அனபாய நமைவளர்ககும அப்பனகாண் — இனபாக 166

இப்பாரிற் சேயா ரிதய மலர்ந்தம்மை
யப்பா வெனுநங்க ளப்பன்காண் — செப்பாமல் 167
எள்ளித் திரிந்தாலும் [1] இந்தாவென் றின்னமுதம்
அள்ளிக் கொடுக்குநம தப்பன்காண் — உள்ளிக்கொண்(டு) 168
இன்றே யருள்வா யெனத்துதிக்கில் ஆங்குநமக்கு
அன்றே யருளுநம தப்பன்காண்! — நன்றேமுன் 169
[2] காதரவு செய்துநலங் கற்பித்துப் பின்பெரிய
ஆதரவு செய்யுநங்க ளப்பன்காண் — கோதுறுமா 170
வஞ்சமலத் தால்வருந்தி வாடுகின்ற நந்தமையே
அஞ்சலஞ்ச' லென்றருளு மப்பன்காண் — துஞ்சலெனும் 171
நச்சென்ற வாதனையை நாளுமெண்ணி நாமஞ்சும்
அச்சங் கெடுத்தாண்ட அப்பன்காண் — [3] நிச்சலுமிங்
கேயிரவு மெல்லு மெளியேம் பிழைத்தபிழை
ஆயிரமுந் தான்பொறுக்கு மப்பன்காண்! — சேயிரங்கா 173
முன்ன மெடுத்தணைத்து முத்தமிட்டுப் பாலருத்தும்
அன்னையினு மன்புடைய அப்பன்காண்! — மன்னுலகில்
வன்மை யறப்பத்து மாதஞ் சுமந்துநமை
நன்மை தரப்பெற்ற நற்றாய்காண் — இம்மைதனில் 175
[4] அன்றொருநாள் நம்பசிகண் டந்தோ! தரியாது
நன்றிரவிற் சோறளித்த நற்றாய்காண் — என்றுமருட் 176
செம்மை யிலாச்சிறிய தேவர்கள்பாற் சேர்க்காது
நம்மை வளர்க்கின்ற நற்றாய்காண் — சும்மையென 177
மூளும் பெருங்குற்ற முன்னிமேன் மேற்செயினும்
நாளும் பொறுத்தருளு நற்றாய்காண் — மூளுகின்ற 178
வன்னெறியிற் சென்றாலும் வாவென் றழைத்துநமை
நன்னெறியிற் சேர்க்கின்ற நற்றாய்காண் — செந்நெறியின் 179
நாந்தேடா முன்ன நமைத்தேடிப் பின்புதனை
நாந்தேடச் செய்கின்ற நற்றாய்காண்! — ஆந்தோறுங் 180
கால மறிந்தே கனிவோடு நல்லருட்பால்
ஞால மிசையளிக்கு நற்றாய்காண் — சாலவுறு 181
வெம்பிணியும் வேதனையும் வேசறிக்கை யுந்துயரும்
நம்பசியுந் தீர்த்தருளு நற்றாய்காண் — அம்புவியில் 182

---

1. இந்தா என்பது — மரூஉச்சொல்; அது — இதனைத் தரப்பெற்றுக் கொள் என்னும் பொருட்டு, அல்லதூஉம் இங்குவா என்னும் எளிமைக் கண்ணிய ஏவலுமாம்.

2. காதரவு செய்தல் என்பது — அச்சுறுத்தல்.

3. நிச்சல் என்பது — நாடோறும்.

4. வள்ளலார், பிரதி, வெள்ளிக்கிழமை, அமாவாசைகளில் ஒற்றியூர் போவது வழக்கம். ஒருநாள் வழக்கப்படி போய் தரிசனம் செய்துவிட்டு அவர்கள் வசந்தமண்டபத்தில் தனியேநிஷ்டை கூடியிருந்து கண்விழிக்கப் பசி நோயால் வருந்தியபோது, பரமசிவம் கோயில் குருக்கள்போல் வந்து பிரசாதம் தந்து பசியாற்றியதாக, அக்காலத்தில் வள்ளலாருடன் கூடியிருந்தவர்களால் சொல்லக் கேட்டது.

வெங்கரி லூட்டிடினுமெம் மெய்நோக்கு மென்றருளாம்
நன்னீரி லாட்டுகின்ற நற்றாய்காண் — எங்கீரின 183

மேலாய் நமக்கு வியனுலகில் அன்புடைய
நாலா யிரந்தாயின் நற்றாய்காண் — ஏலாது 184

வாடி யழுதாலெம் வருத்தந் தரியாது
நாடி யெடுத்தணைக்கு நற்றாய்காண் — நீடுலகில் 185

தான்பாடக் கேட்டுத் தமியேன் களிக்குமுனன் நம்
நான்பாடக் கேட்டுவக்கு நற்றாய்காண் — வான்பாடும் 186

ஞானமணஞ் செய்தருளா நங்கைதனைத் தந்துநமக்
கானமணஞ் செய்விக்கும் அம்மான்காண் — தேனின்நெடும்

இன்பா லமுதாதி யேக்கமுற வின்னருள்கொண்
டன்பால் விருந்தளிக்கு மம்மான்காண் — வன்பாவ 188

வாழ்கடலில் வீழ்ந்துள்ள மழுந்து நமையெடுத்துச்
சூழ்கரையி லேற்றுந் துணைவன்காண் — வீழ்குணத்தால் 189

இன்ப மெனத்து மிதுவென் றறியாநந்
துன்பந் தொடைக்குந் துணைவன்காண் — வன்பவமாந் 190

தீநெறியிற் சென்று தியங்குகின்ற நந்தமக்குத்
தூநெறியைக் காட்டுந் துணைவன்காண் — மாநிலத்தில் 191

இன்றுதொட்டே யன்றி யியற்கையாய் நந்தமக்குத்
தொன்றுதொட்டு வந்த அருட் சுற்றங்காண்-தொன்றுதொட்டே

ஆயுமுடற் கன்புடைத்தா மாருயிரிற் றான்சிறந்த
நேயம்வைத்த நம்முடைய நேசன்காண் — பேயரென 193

வாங்காது நாமே மறந்தாலு நம்மைவிட்டு
நீங்காத நம்முடைய நேசன்காண் — தீங்காக 194

ஈட்டுகின்ற வாபத்தி லிந்தா வெனவருளை
நீட்டுகின்ற நம்முடைய நேசன்காண் — கூட்டுலகிற் 195

புல்லென்ற மாயையிடைப் போந்தோறும் நம்மையிங்கு
நில்லென் றிருத்துகின்ற நேசன்காண் — சில்லென்றென் 196

ஊட்டுவுந் தன்னைமறந் துண்டாலு மற்றதற்குக்
கிட்டுரஞ் செய்யாத நேசன்காண் — நட்டூர்ந்து 197

வஞ்சமது நாமெண்ணி வாழ்ந்தாலுந் தான்சிறிதும்
நெஞ்சிலது வையாத நேசன்காண் — எஞ்சலிலாப் 198

பார்நின்ற நாங்கிடையாப் பண்டமெது வேண்டிடினும்
நேர்நின் றளித்துவரு நேசன்காண் — ஆர்வமுடன் 199

ஆர்ந்தநமக் கிவ்விடத்து மவ்விடத்து மெவ்விடத்தும்
நேர்ந்தவுயிர் போற்கிடைத்த நேசன்காண் — சோர்ந்துமிகத் 200

1. நட்டு ஊர்ந்து எனப்பிரித்து — நேசித்துச்சென்று எனப்பொருள்கொள்க

தாபஞசெய குறறந தரினும பொறுப்பதன்றிக
கோபஞ செயாநமது கோமான்காண்' — பாபமற 201

விளஞுமிறை நாமனபு மேவலனறி வேறறரசா
கொளளுமிறை வாஙகாநங கோமானகாண — உளளமுற

உணடவிககு மூனுடைபூ ணூரா திகளதானே
கொண்டுநமக கிஙகளிககுங கோமான்காண — மண்டலத்தில

ஒனறுலு நீஙகா துககஙகள பலபலவாயச
சென்றுலுஞ் செலலாநஞ் செல்வங்காண்! — முனறுவி 204

நாடிவைககு நலலறிவோர் நாளுந தவமபுரிநது
தேடிவைதத நமமுடைய செலவஙகாண — மாடிருநது 205

நாமெத தனைநாளு நலகிடினுந தானுலவாச
சேமிதத வைப்பின திரவியஙகாண — பூமிககண் 206

எஙகுறினும வானுதி யாங்குறினும விடடகலா
தோஙகருளால் நம்மை உடையவனகாண்! — ஆஙகவன்றன

## 19 வடிவழகு

அங்கைச் சடையழகுங காதன்மிகு மசசடைமேல
திங்கட் கொழுநதின திருவழகுந — திஙகளதனமேற் 208

சார்நதிலஙகுங கொனறைமலாத தாரழகும் அத்தாரமேல
ஆரநதிலஙகும வண்டி னணியழகும—தேர்நதவர்ககும 209

நோககரிய நோக்கழகும் நோககார் நுதலழகும
போககரிய நனனுதலிற பொட்டழகும் — தேககுதிரி 210

புண்டரத்தி னல்லழகும் பொனனருளதான தனமொழிலைக்
கண்டவர்பா லூற்றுகின்ற கண்ணழகும்—தொண்டர்களதம

நேசித்த நெஞ்சமலா நீடு மணமுகநத
நாசித் திருக்குமிழின நல்லழகும் — தேசுறற 212

முலலை முகையாம முறுவலழகும் பவள
வெலலை வளாசெவ விதழழகும — நலலவரைத் 213

தேவெனற தீமபாலிற றேனகலநதாற போலினிகக
வாவெனற றருளுமலா வாயழகும் — பூவொனறும 214

கோனபரவுஞ சஙகக குழையழகும் அனபர்மொழித்
தேனபரவும வளளைச செவியழகும் — நானபரவி 215

வேட்டவையை நினறுஙகு விணணப்பஞ் செயயவது
கேட்டருளும வார்செவியின கேழழகும — நாடடியுயா 216

சைவ முதலாய்த் தழைகக அருளசுரககுந
தெய்வ முகத்தின் திருவழகும் — தெய்வமுகத 217

துள்ளஙகுளிர வுயிர்குளிர மெய்குளிரக
கொள்ளுங் கருணைக் குறிப்பழகும் — உளளறிவின 218

எள்ளாத மேன்மையுல கெல்லாந் தழைப்பவொளிர்
தெள்ளா ரமுதச் சிரிப்பழகும் — உள்ளோங்குஞ் 219
சீல வருளின் றிறத்துக் கிலச்சினையாம்
நீல மணிமிடற்றி னீடழகும் — மாலகற்றி 220
வாழ்ந்தொளிரும் அன்பர் மனம்போலும் வெண்ணீறு
சூழ்ந்தொளிகொண் டோங்குதிருத் தோளழகும் — தாழ்ந்திலவாய்த்
தானோங்கு மண்டமெலாஞ் சத்தமுறக் கூவுமொரு
மானோங்குஞ் செங்கை மலரழகும் — ஊனோங்கும் 222
ஆணவத்தின் கூற்றை யழிக்க வொளிர்மழுவைக்
காணவைத்த செங்கமலக் கையழகும் — நாணமுற்றே 223
ஏங்கும் பரிசுடைய வெம்போல்வா ரச்சமெலாம்
வாங்கும் அபய மலரழகும் — தீங்கடையாச் 224
சீர்வரவு மெல்லாச் சிறப்பும் பெறவுமருள்
சார்வரத வொண்கைத் தலத்தழகும் — பேரரவப் 225
பூணிலங்க வெண்பொற் பொடியிலங்க வென்பணித்தார்
மாணிலங்க மேவுதிரு மார்பழகும் — சேணிலத்தர் 226
மேலுடுத்த வாடையெலாம் வெஃக வியாக்கிரமத்
தோலுடுத்த வொண்மருங்கிற் றன்னழகும் — பாலடுத்த 227
கேழ்க்கோல மேவுதிருக் கீளழகும் அக்கீளின்
கீழ்க்கோ வணத்தின் கிளரழகும் — கீட்கோலம் 228
ஒட்டிநின்ற மெய்யன்ப ருள்ள மெலாஞ்சேர்த்துக்
கட்டிநின்ற வீரக் கழலழகும் — எட்டிரண்டுஞ் 229
சித்திக்கும் யோகியர்தஞ் சிந்தைதனிற் றேன்போன்று
தித்திக்குஞ் சேவடியின் சீரழகும் — சத்தித்து 230
மல்வைத்த மாமறையு மாலயனுங் காண்பரிய
செல்வத் திருவடியின் சீரழகும் — சொல்வைத்த 231
செம்மை மணிமலையைச் சேர்ந்த மரகதம்போல்
அம்மையொரு பால்வாழ்ந் தருளழகும் — அம்மமிகச் 232
சீர்த்திகழ் செப்பவளச் செம்மே னியினழகும்
பார்த்திருந்தால் நம்முட் பசிபோங்காண்! — தீர்த்தருளங்
கொண்டிருந்தான் பொன்மேனிக் கோலமதை நாந்தினமுங்
கண்டிருந்தால் அல்லலெலாங் கட்டறுங்காண் — தொண்டடைந்து
பாட்டா லவன்புகழைப் பாடுகின்றோர் பக்கநின்று
கேட்டால் வினைகள் விடை கேட்குங்காண்! — நீட்டாமல்
ஒன்னார் புரம்பொடித்த உத்தமனே! என்றொருகால்
சொன்னா லுலகத் துயரறுங்காண் — எந்நாளும் 236
பன்னுமுள்ளத் துள்ளாம் பரசிவமே! என்றொருகால்
உன்னுமுன்னந் தீமையெலா மோடிடுங்காண் — அன்னவன்றன்

## 11. அறிவுறுத்தல் சிவசரிதம்

ஆட்டி யல்காற்பூமாட் டடையென்று லங்தோ! முன்
நீட்டியகாற் பின்வாங்கி நிற்கின்றாய் — ஊட்டுமவன் 238

[1]மாற்கடவு ளாமோர் மகவலறக் கண்டுதிருப்
பாற்கடலை யீந்தவருட் பான்மைதனை — நூற்கடலின் 239

மத்தியினீ கேட்டும் வணங்குகிலாய் அன்படையப்
புத்தியுளோர்க் கீதொன்றும் போதாதோ — முத்திநெறி

மாணு வரக்கன் மலைக்கீ ழிருந்தேத்த
[2]வாணாள் வழங்கியதோர் வண்மைதனை — நாணளும் 241

நண்ணி யுரைத்து நயந்திலைநீ யன்புகொளப்
புண்ணியருக் கீதொன்றும் போதாதோ—புண்ணியராஞ் 242

சுந்தரர்க்குக் கச்சூரில் தோழமையைத் தான்தெரிக்க
வந்திரப்புச் சோறளித்த வண்மைதனை — முந்தகத்திற் 243

பேதமறக் கேட்டும் பிறழ்ந்தனையே அன்படையப்
போதமுளோர்க் கீதொன்றும் போதாதோ— போதவுநெய்

அங்கோ ரெலிதா னருந்தவகற் றூண்டவதைச்
செங்கோல னுக்கியவச் சீர்த்திதனை — இங்கோதச் 245

சந்ததநீ கேட்டுமவன் றாணினையா யன்படையப்
புந்தியுளோர்க் கீதொன்றும் போதாதோ — முந்தவரு 246

[3]நற்றுணையென் றேத்துமந்த நாவரசர்க் கன்றுகடற்
[4]கற்றுணையோர் தெப்பமெனக் காட்டியதை — இற்றெனநீ

மாவுலகிற் கேட்டும் வணங்குகிலா யன்படையப்
பூவுலகர்க் கீதொன்றும் போதாதோ — தாவுறுதற் 248

கண்சுமந்தான் அன்பன் கலங்கா வகைவைகை
மண்சுமந்தான் என்றுரைகரும் வாய்மைதனைப்-பண்புடையோர்

மாணவுரைப் பக்கேட்டும் வாய்ந்தேத்தாய் மெய்யன்பு
பூணவென்று வீதொன்றும் போதாதோ — நீணரகத் 250

தீங்குறுமா பாதகத்தைத் தீர்த்தோர் — மறையவனைப்
பாங்கடையச் செய்தவருட் பண்பதனை — யீங்குலகர் 251

துங்கமுற வுரைத்துஞ் சூழ்கின் றிலையன்பு
பொங்கவென்று வீதொன்றும் போதாதோ — தங்கியவிப்

பாரறியாத் தாயாகிப் பன்றிக் குருளைகட்கு
ஊரறிய நன்முலைப்பா லூட்டியதைச் — சீரறிவோர் 253

---

[1]. உபமந்யு. [2] வாழ்நாள் — வாணளென மரீஇயது.

[3]. தேவாரம், 4-வது திருமுறை, நமச்சிவாயப்பதிகம். (1).

[4]. கற்றாணை என்பது — கற்றுணை யெனக் குறுகின்றது.

சொல்லிநின்றார் கேட்டுந் துதிக்கின் றிலையன்பு
புல்லவென்றா வீதொன்றும் போதாதோ — நல்லதிருப் 254

பாதமலர் வருந்தப் பாணன்றனக் காளாய்க்
கோதில் விறகேற்று விலைகூறியதை — நீதியுளோர் 255

சாற்றிநின்றார் கேட்டுமவன் றாணிணையாய் மெய்யன்பிற்
போற்றவென்றா வீதொன்றும் போதாதோ — போற்றுகின்ற

ஆடுங் கரியும் அணிலும் குரங்குமன்பு
தேடுஞ் சிலம்பியொடு சிற்றெறும்பும் — நீடுகின்ற 257

பார்புஞ் சிவார்ச்சனைதான் பண்ணியதென் றூற்பூசை
ஓம்புவதற் கியார்தா னுவவாதார் — சோம்புறுநீ 258

வன்பென்ப தெல்லா மறுத்தவன்றாட் பூசிக்கும்
அன்பென்ப தியாதோ அறியாயே — அன்புடனே 259

செஞ்சடைகொள் நம்பெருமான் சீர்கேட் டிரையருந்தா
தஞ்சடக்கி யோக மமர்ந்துலகன் —வஞ்சமற 260

நாரையே முத்தியின்ப நாடியதென் றூன்மற்றை
யாரையே நாடாதா ரென்றுரைப்பேன் — ஈரமிலாய் 261

நீயோ சிறிது நினைந்திலையவ் வின்பமென்னை
யேயோநின் றன்மை யிருந்தவிதம் — ஓயாத 262

அன்புடையார் யாரினும்பே ரன்புடையா னம்பெருமான்
நின்புடையா னித்த நிகழ்த்துகின்றேன் — உன்புடையோர்

அன்பவன்மேற் கொண்ட தறியேன் புறச்சமயத்
தின்புடையா ரேனு மிணங்குவரே — அன்புடனே 264

தாவென்றால் நல்லருளிந் தாவென்பா னம்பெருமான்
[1]ஆவுன்பா லோதி யலுக்கின்றேன் — நீவன்பால் 265

நின்றா யலதவனை நேர்ந்துநினை யாய்பித்த
ரென்றாலு மென்சொற் கிணங்குவரே — குன்றாது 266

பித்தா வெனினும் பிறப்பறுப்பா னம்முடையான்
[2]அத்தோ வுனக்கீ தறைகின்றேன் — சற்றேனுங் 267

கேள்வியிலார் போலதனைக் கேளாய் கெடுகின்றாய்
வேள்வியிலார் கூட்டம் விழைகின்றாய் — வேள்வியென்ற 268

வேலைவருங் காலொளித்து மேவுகின்றாய் நின்தலைக்கங்(கு)
ஓலைவருங் காலிங் கொளிப்பாயே! — மாலையுறும் 269

## 12. உலக ஆசை

இப்பார் வெறும்பூ விதுநயவே லென்றுனக்குச்
செப்பா முனம்விரைந்து செல்கின்றாய் — அப்பாழிற் 270

1. ஆ — வியப்பிடைச் சொல். 2. அந்தோ என்பது — அத்தோ வென வலிக்கும்வழி வலித்தது.

செல்லாதே **சைவநெறி** செல்லென்றா லென்னுடனுஞ்
சொல்லாது பேர்மயக்கந் தோய்கின்றாய் — பொல்லாத 271

[1]அஞ்சருந்தென் றாலமுதி னார்கின்றாய் விட்டிடென்றால்
நஞ்சருந்தென் றாற்போ னலிகின்றாய் — வஞ்சகத்தில் 272

ஓடுகின்றாய் மீளாம லுன்னிச்சை யின்வழியே
ஆடுகின்றாய் மற்றங் கயர்கின்றாய் — நீடுலகைச் 273

சூழ்கின்றாய் வேறொன்றிற் சுற்றுகின்றாய் மற்றொன்றில்
வீழ்கின்றாய் மேலொன்றின் மீள்கின்றாய் — தாழ்வொன்றே

ஏகின்றாய் வன்னெறியி லென்னை வலதழிக்கப்
போகின்றாய் மீட்டும் புகுகின்றாய் — யோகின்றி 275

ஒன்றைமறக் கின்றாய்மற் றொன்றைநினைக் கின்றாயென்
நன்றைமறைக் கின்றாய் நலிகின்றாய் — வென்றிபெறுஞ் 276

**சேவிற்** பரமன்றாட் சேரென்றால் மற்றொருசார்
மேவிப் பலவாய் விரிகின்றாய் — பாவித்துக் 277

**குன்றுமுனக் கனந்தங் கோடிதெண்ட னிட்டாலும்
ஒன்று மிரங்கா யுழல்கின்றாய்!** — நன்றுருகாக் 278

**கல்லென்பேன்** உன்னைக் கரணங் கலந்தறியாக்
கல்லென்றா லென்சொல் கடவாதே — புல்லநினை 279

**வல் இரும்பென்** பேனந்த வல்லிரும்பேற் கூடத்திற்
கொல்லன் குறிப்பைவிட்டுக் கோணாதே — அல்லலெலாங் 280

கூட்டுகின்ற வன்மைக் **குரங்கென்பேன்** அக்குரங்கேல்
ஆட்டுகின்றோன் சொல்வழிவிட் டாடாதே — நீட்டுலகர் 281

ஏசுகின்ற **பேயென்பேன்** எப்பேயு மஞ்செழுத்தைப்
பேசுகின்றோர் தம்மைப் பிடியாதே — கூசுகிற்பக் 282

கண்டோரைக் கவ்வுங் கடுஞ்**சுணங்க னென்பனது**
கொண்டோரைக் கண்டாற் குலையாதே — அண்டார்க்கும் 283

பூவி லடங்காப் **புலியென்பேன்** எப்புலியும்
மேவில் வயப்பட்டா லெதிராதே — நோவியற்றி 284

வீறுகின்ற மும்மதமால் **வெற்பென்பேன்** ஆங்கதுவும்
ஏறுகின்றோன் சொல்வழிவிட் [2]டேறாதே — சீறுகின்ற 285

[3]வென்னடைசேர் மற்றை **விலங்கென்பேன்** எவ்விலங்கும்
மன்னவன்சேர் நாட்டில் வழங்காதே — நின்னையினி 286

---

1. ஐந்து என்பது — அஞ்சு என மருவிற்று; அஃதீண்டாகு பெயராய்ச் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றமென்னும் ஐந்தாசைகளைக் குறித்து நின்றது.

2. ஏறுதல் என்பது — சண்டொழுக்கத்தின்மேல் நின்றது.

3. வென்னடை — வெல்நடை யெனப் பிரித்துக் கொள்க; அற்றேல் — கொடு நடையெனப் பொருள் கொள்ளின் — வெந்நடை யெனப் பொதுநகரமாக்கிக்கொள்க.

என்னென்பேன்! என்மொழியை ஏற்றனையேல் மாற்றுயர்ந்த
பொன்னென்பேன்! எனவழியிற் போகதிலையே—கொன்னுறநீ

போம்வழியும் பொய்யநீ புரிவதுவும் பொய்யதனால்
ஆம்விளைவும் பொய்யநின் னறிவும்பொய் — தோம்விளைக்கும்

நின்னுடலும் பொய்யிங்கு நின்தவமும் பொய்யிலையா
நின்னிலையும் பொய்யன்றி நீயும்பொய் — என்னிலிவண் 289

ஏதுமுணர் தாதிலையே யிம்மாய வாழ்க்கையெனும்
வாதிலிழுத் தென்னை மயக்கினையே — தீதுறுநீ 290

வன்னோ விடங்காண்! [1]நின்வன்பெயரின் முன்பொருகீற்று
என்னே யறியாம லிட்டழைத்தேன் — கொன்னேநீ 291

## 13 பெண்ணாசை

நோவ தொழியா [2]தொறிற்காம வெப்பினிடை
ஆவ தறியா தழுந்தினையே — மேவுமதில் 292

உள்ளெரிய மேலா முணர்வுங் கருகவுடல்
நள்ளெரிய நட்பி னலம்வெதும்ப — விள்ளவதின்றி 293

வாடிப் பிலனுசென்று வான்சென் றொளிதராவுந்
தேடிச் சுடுங்கொடிய தீக்கண்டாய் — ஓடியிங்கு 294

போந்தா லலது பெருங்காமத் தீயினைச்
சோர்ந்தாரை யுஞ்சுடுஞ்செந் தீக்கண்டாய் — சார்ந்தாங்கு 295

சந்தி யெனவருவார் தம்மைச் சுடுங்காமஞ்
செந்தீயை யுஞ்சுடுமோர் தீக்கண்டாய் — வந்திங்கு 296

மண்ணிற் றனைக்காணு வண்ண நினைத்தாலும்
நண்ணித் தலைக்கேறு நஞ்சங்காண்! — எண்ணற்ற 297

போருறுமுட் காமப் புதுமயக்க நின்னுடைய
பேரறிவைக் கொள்ளைகொளும் பித்தங்காண்!-சோரறிவிற்

கள்ளடைக்குங் காமக் கடுமயக்கம் மெய்ந்நெறிக்கோர்
முள்ளடைக்கும் பொல்லா முரண்கண்டாய்!—அள்ளலுற

ஏதமெலாந் தன்னு ளிடுங்காமம் பாதகத்தின்
பேதமெலா மொன்றிப் பிறப்பிடங்காண் — ஆதலினால் 300

வெம்மான் மடந்தையரை மேவவொணாது! ஆங்கவர்கள்
தம்மாசை யின்னுந் தவிர்ந்திலையே — இம்மாய 301

மன்ற [3]வணங்கினர் [4]செவ்வாய்மடவார் [5]பேதையர்கள்
என்றகொடுஞ் சொற்பொருளை எண்ணிலையே—தொன்றுலகில

1. நெஞ்சு என்னும் மொழிக்கு முன்னுள்ள கீற்று (ெ) நீங்கின நஞ்சு (விஷம்) என்றாகும்
2 தொறில்—விரைவு 3 அணங்கினர் — நோயுடையார்
4. செவ்வாய் மடவார்—சிவந்த வாயினையுடைய பெண்கள் 5 பேதையர் — அறிவில்லார்.

பெண்ணென் றுரைப்பிற் பிறப்பேழு மாந்துயரம்
எண்ணென்ற நல்லோர்சொல் எண்ணிலையே — பெண்ணிங்கு

[1] மாமாத் திரையின் வருத்தனமென் றெண்ணினையந்
நாமார்த்த மாசையென நாடிலையே — யாமார்த்தம் 304

மந்திரத்தும் பூசை மரபினுமற் றெவ்விதமாந்
தந்திரத்துஞ் சாயாச் சழக்கன்றே — மந்திரத்திற் 305

பேய்பிடித்தாற் றீர்ந்திடுமிப் பெண்பேய் விடாதேசெந்
நாய்பிடித்தாற் போலுமென்று நாடிலையே — ஆய்விலுன்றன்

ஏழமையென் னென்பே ணிவர்மயக்கம் வன்னரகின்
தோழமையென் றந்தோ துணிந்திலையே — ஊழமைந்த 307

காரிருளிற் செல்லக் கலங்குகின்றாய் மாதர்குழற்
பேரிருளிற் செல்வதனைப் பேர்த்திலையே — பாரிடையோர் 308

எண்வா ளெனிலஞ்சி யேகுகின்றா யேந்திழையார்
கண்வா ளறுப்பக் கனிந்தனையே — மண்வாழும் 309

ஓரானை யைக்கண்டா லோடுகின்றாய் மாதர்முலை
யீரானை யைக்கண் டிசைந்தனையே — சீரான 310

வெற்பென்றா லேற விரைந்தறியாய் மாதர்முலை
வெற்பென்றா லேற விரைந்தனையே — பொற்பொன்றுஞ் 311

சிங்கமென்றால் வாடித் தியங்குகின்றாய் மாதரிடைச்
சிங்கமெனிற் காணத் திரும்பினையே — யிங்குசிறு 312

பாம்பென்றா லோடிப் பதுங்குகின்றாய் மாதரல்குற்
பாம்பென்றாற் சற்றும் பயந்திலையே — யாம்பண்டைக் 313

கீழ்க்கடலி லாடென்றாற் கேட்கிலைநீ மாதரல்குற்
பாழ்க்கடலிற் கேளாது பாய்ந்தனையே — கீழ்க்கதுவுங் 314

கல்லென்றாற் பின்னிடுவாய் காரிகையார் காற்சிலம்பு
கல்லென்றால் மேலெழும்பக் கற்றனையே — யல்லளகம் 315

மையோ கருமென் மணலோவென் பாய்மாறி
ஐயோ நரைப்ப தறிந்திலையோ — பொய்யோதி 316

ஒண்பிறையே யொண்ணுதலென் றுன்னுகின்றா யுள்ளெலும்பாம்
வெண்பிறையன் றேயதனை விண்டிலையே — கண்புருவம் 317

வில்லென்றாய் வெண்மயிராய் மேவி யுதிர்ந்திடுங்காற்
சொல்லென்றாற் சொல்லத் துணியாயே — வல்லம்பிற் 318

கண்- குவளையென்றாய்க் கண்ணீ ருலர்ந்துமிக
உட்குழியும் போதி லுரைப்பாயே — கட்குலவு 319

1. பெண்ணிங்கு மாமாத்திரையின் வருத்தனம் என்றெண்ணினை என்பதற்கு — பேண் என்று பொருள் கொண்டனை என்பது பொருள்.

மெய்க்குமிழே நாசியென வெஃகினையால் வெண்மலத்தால்
உய்க்குமிழுஞ் சீந்த லுளதேயோ — வெய்த்தலிலா 320

வள்ளையென்றாய் வார்காது வள்ளை தனக் குட்புழையோ
டுள்ளுநரம் பின்புனைவு முண்டேயோ — வெள்ளை நகை 321

முல்லையென்றாய் முல்லை முறித்தொருகோற் கொண்டுநிதம்
ஒல்லை யழுக்கெடுப்ப துண்டேயோ — நல்லதொரு 322

கோவ்வையென இதழைக் கொள்கின்றாய் மேற்குழம்புஞ்
செவ்வை யிரத்தமெனத் தேர்ந்திலையே — செவ்வியகண் 323

ணாடி யெனக் [1]கவுட்கே யாசைவைத்தாய் மேற்செழுந்தோல்
வாடியக்கா லென்னுரைக்க மாட்டுவையே — கூடியதோர் 324

அந்த மதிமுகமென் றாடுகின்றாய் ஏழ்துளைகள்
எந்தமதிக் குண்டதனை யெண்ணிலையே — [2]நந்தெனவே 325

கண்டமட்டுங் கூறினையக் கண்டமட்டு மன்றியிடல்
கொண்டமட்டு மற்றதன்மெய்க் கூறன்றோ — விண்டவற்றைத்

தோளென் றுரைத்துத் துடிக்கின்றா யவ்வேய்க்கு
மூளொன்று வெள்ளெலும்பின் மூட்டுண்டே — நாளொன்றுஞ்

செங்காந்த ளங்கையெனச் செப்புகின்றா யம்மலர்க்குப்
பொங்காப் பலவிரலின் பூட்டுண்டே — மங்காத 328

செவ்விளநீர் கொங்கையெனச் செப்பினைவல் லூன்றடிப்பிங்
கெவ்விளநீர்க் குண்டதனை யெண்ணிலையே — செவ்வைபெறுஞ்

செப்பென் றனைமுலையைச் சீசீ [3]சிலந்தியது
துப்பென் றவர்க்கியாது சொல்லுதியே — வப்பிறுகச் 330

சூழ்ந்தமுலை மொட்டென்றே துள்ளுகின்றாய் கீழ்த்துவண்டு
வீழ்ந்தமுலைக் கென்ன விளம்புதியே — தாழ்ந்தவவை 331

மண்கட்டும் பந்தெனவே வாழ்ந்தாய் முதிர்ந்துடையாப்
புண்கட்டி யென்பவர்வாய்ப் [5]பொத்துவையே — திண்கட்டும்

அந்நீர்க் குரும்பை யவையென்றாய் மேலெழும்புஞ்
செந்நீர்ப் புடைப்பென்பார் தேர்ந்திலையே — யந்நீரார் 333

கண்ணீர் தரும்பருவாய்க் கட்டுரைப்பார் சான்றாக
வெண்ணீர் வரல்கண்டும் வெட்கிலையே — தண்ணீர்மைச் 334

சாடியென்பாய் நீயயலோர் தாதுக் கடத்திடுமேன்
மூடியென்பார் மற்றவர்வாய் மூடுதியோ — [6]மேடதனை 325

ஆலிலையே யென்பா யடர்குடரோ [7]டீருளொடுந்
தோலிலையே யாலிலைக்கென் சொல்லுதியே — நூலிடைதான்

1. கவுள் — கன்னம். 2. நந்து — சங்கு. 3. சிலந்தி — புண்கட்டி,
4. வம்பு — வப்பென விகாரமாயிற்று. 5. பொத்துதல் என்பது - மூடுதல்.
6. மேடு — வயிறு. 7. ஈருள் என்பது — ஈரல் என மருவி வழங்கியது.

உண்டோ விலையோவென் றுட்புகழ்வாய் கைதொட்டுக்
கண்டோர்[1]பூட் டுண்டென்பார் கண்டிலையே — விண்டோங்கும்

ஆழ்ங்கடலென் பாய்மடவா ரல்குலினைச் சிற்சிலர்கள்
பாழ்ங்கிணறென் பாரதனைப் பார்த்திலையே - தாழ்ங்கொடிஞ்சித்

தேராழி யென்பாயச் சீக்குழியை யன்றுசிறு
நீராழி யென்பவர்க்கென் [2]னேருதியே — ஆராப்புன் 339

நீர்வழியை யாசை நிலையென்றாய் வன்மலந்தான்
சோர்வழியை யென்னென்று சொல்லுதியே — சார்முடைதான்

ஆறுச் சிலைநீர்கா ளூறு யொழுக்கிடவும்
வீறுப்புண் ணென்று விடுத்திலையே — யூறுக்கி 341

மூலை யெறும்புடன்ஈ மொய்ப்பதஞ்சி மற்றதன்மேற்
சீலையிடக் கண்டுங் தெரிந்திலையே — மேலையுறு 342

மேநரக மென்றால் விதிர்ப்புறுநீ மாதரல்குல்
கோநரக மென்றூற் குலைந்திலையே — யூனமிதைக் 343

கண்டால் நமதாசைக் கைவிடுவா ரென்றதனைத்
தண்டா தொளித்திடவுஞ் சார்ந்தனையே — அண்டாது 344

போத விடாயாகிப் புலம்புகின்றாய் மற்றதன்பான்
மாதவிடா யுண்டான் மதித்திலையே — மாதரவர் 345

தங்குறங்கை மெல்லரம்பைத் தண்டென்றாய் தண்டுன்றி
வெங்குரங்கின் மேவுங்கால் விள்ளுதியே — நன்கிலவாய் 346

ஏய்ந்தமூழந் தாளைவரா லென்றாய் புலாற்சிறிதே
வாய்ந்து வராற்றோற்கு மதித்திலையே— சேந்தவடி 347

தண்டா மரையென்றாய் தன்மை விளர்ப்படைந்தால்
வெண்டா மரையென்று மேவுதியோ — வண்டாரா 348

மேனாட்டுஞ் சண்பகமே மேனியென்றாய் தீயிடுங்கால்
தீநாற்றஞ் சண்பகத்திற் றேர்ந்தனையோ — வானாட்டு 349

மின்றோர் வடிவென்றாய் மேனி யுரைத்தவுளீ
தொன்றே [3]ஒருபுடையா யொத்ததுகாண் — ஒன்றூச்சொல்

வேள்வா கனமென்றாய் வெய்யநமன் விட்டிடுந்தா
தாள்வா கனமென்றா லாகாதோ — வேளானேன் 351

[4]காகளமா யின்குரலைக் கட்டுரைத்தாய் காலனென்போன்
காகளமென் பார்க்கென் கழறுதியே — நாகளவுஞ் 352

சாயைமயி லென்றே தருக்குகின்றாய் சார்[5]பிரம
சாயைதிக் தென்பார்க்கென் சாற்றுதியே — சேயமலர் 353

---

1. பூட்டு — சண்டுடற் பொருத்து.
2. நேர்தல் என்பது — சண்டு விடைகொடுத்தலென்றும் பொருட்டு.
3. சண்டொரு புடை யொத்தமை தோற்றியாங்கழியும் நிலையின்மையான் என்று கொள்க.
4. வேளானேன் காகளம் — குயில். 5. பிரமசாயை என்பது— பிரமகத்தி.

அன்னநடை யென்பா யஃதன் றருந்துகின்ற
வன்னநடை யென்பார்க்கென் ஆற்றுதியே — அன்னவரை

ஓரோ வியமென்பா யோவியமே லாங்கெழுபத்
தீரா யிரநாடி யாண்டுடைத்தே — பாரார்ந்த 355

முன்னுமலர்க் கொம்பென்பாய் மூன்றேடரைக் கோடியெனத்
துன்னு மூரோமத் துவாரமுண்டே — இன்னமுதாற் 356

செய்தவடி வென்பாயச் செய்கைமெய்யே னீயவர்கள்
வைதிடினு மற்றதனை வையாயே — பொய்தவிராய் 357

ஒள்ளிழையார் தம்முருவோ ருண்கரும்பென் றுய்சிறிது
கிள்ளியெடுத் தாலிரத்தங் கீழ்வருமே — கொள்ளுமவர் 358

ஈடில்பெயர் நல்லா ரெனநயந்தாய் நாய்ப்பெயர்தான்
கேடில்பெருஞ் சூரனென்பர் கேட்டிலையோ — நாடிலவர் 359

மெல்லியலா ரென்பாய் மிகுகருப்ப வேதனையை
வல்லியலார் யார்பொறுக்க வல்லார்காண்! — வில்லியல்பூண்

வேய்ந்தா லவர்மேல் விழுகின்றாய் வெந்தீயிற்
பாய்ந்தாலு மங்கோர் பலனுண்டே! — வேய்ந்தாங்கு 361

சென்றா லவர்பின்னர்ச் செல்கின்றாய் வெம்புலிப்பின்
சென்றாலு மங்கோர் திறனுண்டே — சென்றாங்கு 362

நின்றா லவர்பின்னர் நிற்கின்றாய் கண்மூடி
நின்றாலு மங்கோர் நிலையுண்டே — ஒன்றாது 363

கண்டா லவருடம்பைக் [1]கட்டுகின்றாய் கல்லணைத்துக்
கொண்டாலு மங்கோர் குணமுண்டே — பெண்டானோர் 364

வைதாலுந் தொண்டு வலித்தாய் பிணத்தொண்டு
செய்தாலு மங்கோர் சிறப்புளதே — கைதாவி 365

மெய்த்தாவுஞ் செந்தோல் மினுக்கால் மயங்கினநீ
செத்தாலு மங்கோர் சிறப்புளதே — வைத்தாடும் 366

மஞ்சண் மினுக்கான் மயங்கினநீ மற்றெழிந்து
துஞ்சுகினு மங்கோர் சுகமுளதே — வஞ்சியரைப் 367

பார்த்தாடி யோடிப் படர்கின்றாய் வெந்நரகைப்
பார்த்தாலு மங்கோர் பலனுண்டே — சேர்த்தார்கைத் 368

தொட்டாற் களித்துச் சுகிக்கின்றாய் வன்பூதந்
தொட்டாலு மங்கோர் துணையுண்டே — நட்டாலுந் 369

தெவ்வின் மடவாரைத் திளைக்கின்றாய் தீவிடத்தை
வவ்வுகினும் அங்கோர் மதியுண்டே — செவ்விதழ்நீர் 370

உண்டான் மகிழ்வாய்நீ யொண்சிறுவர் தஞ்சிறுநீர்
உண்டாலு மங்கோ ருரனுண்டே — கண்டாகக் 371

1. கட்டுதல் என்பது — சண்டு தழுவுதல் என்னும் பொருட்டு.

கவ்வுகின்ற யவ்விதழைக் கார்[1]மதுகம் வேம்பிவற்றைக்
கவ்வுகினு மங்கோர் கதியுண்டே — அவ்விளையர் 372

மென்றீயு மிச்சில் விழைகின்றாய் நீவெறும்வாய்
மென்றாலு மங்கோர் விளைவுண்டே — முன்றானைப் 373

பட்டான் மகிழ்வு பதிந்தாய் பதைக்கவம்பு
பட்டாலு மங்கோர் பலனுண்டே — கிட்டாமெய்த் 374

தீண்டிடினுள் ளோங்கிச் சிரிக்கின்றாய் செந்தேள்முன்
தீண்டிடினு மங்கோர் திறனுண்டே — வேண்டியவர் 375

வாய்க்கிடயா தானுமொன்று வாங்குகின்றாய் மற்றதையோர்
நாய்க்கிடினு மங்கோர் நலனுண்டே — தாக்கவர்க்காய்த் 376

தேட்டாண்மை செய்வாயத் தேட்டாண்மை யைத்தெருவில்
போட்டாலு மங்கோர் புகழுண்டே — வாட்டாரைக் 377

கொண்டா ருடனுணவு கொள்கின்றாய் குக்கனுடன்
உண்டாலு மங்கோ ருறவுண்டே — மிண்டாகும் 378

இங்கிவர்வாய்ப் பாகிலையை யேற்கின்றாய் புன்மலத்தை
நுங்கினுமங் கோர்நன்[2]னெறிலுண்டே — மங்கையர்தம் 379

ஏத்தா மனைகாத் திருக்கின்றா யீமமது
காத்தாலு மங்கோர் கனமுண்டே — பூத்தாழ்வோர் 380

காட்டாக் குரல்கேட்பாய் கர்த்தபத்தின் பாழ்ங்குரலைக்
கேட்டாலு மங்கோர் கிளருண்டே — கோட்டாவி 381

ஆழ்ந்தா ருடன்வாழ வாதரித்தா யாழ்ங்கடலில்
வீழ்ந்தாலு மங்கோர் விரகுண்டே — வீழ்ந்தாருள் 382

வீட்டான் முலையுமெதிர் வீட்டான் முகமுமுறக்
காட்டாநின் றார்கண்டுங் காய்ந்திலையே — கூட்டாட்குச் 383

செய்கை யிடும்படிதன் சீமான் றனதுபணப்
பைகை யிடல்கண்டும் பயந்திலையே — சைகையது 384

கைகயா லொருசிலர்க்குங் கண்ணா லொருசிலர்க்குஞ்
செய்யா மயக்குகின்றார் தேர்ந்திலையே — எய்யாமல் 385

ஊறிகந்த இவ்வகையாய் இம்மடவார் செய்கையெலாங்
கூறுவனேல் அம்ம! குடர்குழம்பும் — கூறுமிவர் 386

வாயொருபாற் பேச மனமொருபாற் செல்லவுட
லாயொருபாற் செய்ய அழிவார்காண் — ஆயவிவர் 387

நன்றறியார் தீதே நயப்பார் சிவதலத்திற்
சென்றறியார் பேய்க்கே சிறப்பெடுப்பார் — இன்றிவரை 388

வஞ்சமென்கோ! வெவ்வினையாம் வல்லியமென்கோ! பவத்தின்
புஞ்சமென்கோ! மாநரக பூமியென்கோ! — வஞ்சுறுமீர் 389

[1]. மதுகம் என்பது — எட்டிமரம். [2] நொறில் என்பது — அடக்கம்.

வானென்கோ! வாய்க்கடங்கா மாயமென்கோ! மண்முடிவு
நாளென்கோ! வெய்ய நமனென்கோ! — கோளென்கோ! 390

சாலமென்கோ! வானிந்திர சாலமென்கோ! வீறுல
காலமென்கோ! நின்பொல்லாக் காலமென்கோ! — ஞாலமதிற்

பெண்ணென்றால் யோகப் பெரியோர் நடுங்குவரேல்
மண்ணின்றார் யார்நடுங்க மாட்டார்காண்!- பெண்ணென்றாற்

பேயு மிரங்குமென்பாய் பேயொன்றோ! தாம்பயந்த
சேயு மிரங்குமவர் தீமைக்கே! — ஆயுஞ்செம் 393

பொன்னாற் றுகிலாற் புனையா விடிலவர்மெய்
என்னாகு மற்றிதைநீ யெண்ணிலையே — இன்னுமைக் 394

கொத்தென்ற வம்மடவார் கூட்ட மெழுமைக்கும்
வித்தென் றறிந்துமதை விட்டிலையே - தொத்தென்று 395

பாச வினைக்குட் படுத்துறுமப் பாவையர்மேல்
ஆசையுனக் கெவ்வா றடைந்ததுவே — நேசமிலாய் 396

## 14. பொன்னாசை

நின்னாசை யென்னென்பேன் நெய்வீழ் நெருப்பெனவே
பொன்னாசை மேன்மேலும் பொங்கினையே! — பொன்னாசை

வைத்திழந்து வீணே வயிறெரிந்து மண்ணுலகில்
எத்தனைபேர் நின்கண் ணெதிர்நின்றார் — தத்துகின்ற 398

பொன்னுடையார் துன்பப் புணரியொன்றே யல்லதுமற்
றென்னுடையார் கண்டிங் கிருந்தனையே — பொன்னிருந்தால்

ஆற்றன்மிகு தாயுமறி யாவகையால் வைத்திடவோர்
ஏற்றவிடம் வேண்டுமதற் கென்செய்வாய் — ஏற்றவிடம் 400

வாய்த்தாலு மங்கதனை வைத்தவிடங் காட்டாமல்
ஏய்த்தாற் சிவசிவமற் றென்செய்வாய் — ஏய்க்காது 401

நின்றாலும் பின்னதுதா னீடுங் கரியான
தென்றா லரகரமற் றென்செய்வாய் — நன்றாக 402

ஒன்றொருசார் நில்லென்றா லோடுகின்ற நீயதனை
என்றும் புரப்பதனுக் கென்செய்வாய் — வென்றியொடு 403

பேர்த்துப் புரட்டிப் பெருஞ்சினத்தால் மாற்றலர்கள்
ஈர்த்துப் பறிக்கிலதற் கென்செய்வாய் — பேர்த்தெடுக்கக் 404

கைபுகுத்துங் காலுட் கருங்குளவி செங்குளவி
ஏய்புகுத்தக் கொட்டிடின்மற் றென்செய்வாய்-பொய்புகுத்தும்

பொன்காவற் பூதமது போயெடுக்கும் போதுமறித்
தென்காவ லென்றான்மற் றென்செய்வாய் — பொன்காவல் 406

வீறுங்கா லாணவமாம் வெங்கூளி நின்றலைமேல்
ஏறுங்கான் மற்றதனுக் கென்செய்வாய் — மாறுஞ்சீர் 407

உன்னேயம் வேண்டி உலோபமெனுங் குறும்பன்
இன்னே வருவனதற் கென்செய்வாய் — முன்னேதும் 408

இல்லா நமக்குண்டோ வில்லையோ வென்னுநலம்
எல்லா மழியுமதற் கென்செய்வாய் — நில்லாமல் 409

ஆய்ந்தோர் சிலநாளி லாயிரம்பேர் பக்கலது
பாய்ந்தோடிப் போவதுநீ பார்த்திலையே — ஆய்ந்தோர்சொல்

[1]கூத்தாட் டவைசேர் குழாம்விளிந் தாற் போலுமென்ற
சீர்த்தாட் குறள்மொழியுந் தேர்ந்திலையே — பேர்த்தோடும்

நாட்கொல்லி யென்று னடுங்குகின்றாய் நாளறியா
ஆட்கொல்லி யென்பரிதை யாய்ந்திலையே — கீழ்க்கொல்லைப்

பச்சிலையாற் பொன்னைப் படைப்பாரேல் மற்றதன்மேல்
இச்சையுனக் கெவ்வா றிருந்ததுவே — இச்சையிலார் 413

இட்டமலம் பட்டவிட மெல்லாம்பொன் னுமென்றால்
இட்டமதை [2]விட்டற் கிசைந்திலையே — முட்டகற்றப் 414

பொன்னடப்ப தன்றியது போனகமே யாதியவா
யென்னடுத்த தொன்றுமிதை யெண்ணிலையே — இந்நிலத்தில்

நீண்மயக்கம் பொன்முன் னிலையா யுலகியலாம்
வீண்மயக்க மென்றதனை விட்டிலையே — நீண்வலயத் 416

திச்செல்வ மின்றி யியலாதேற் சிற்றுயிர்கள்
எச்செல்வங் கொண்டிங் கிருந்தனவே! — வெச்சென்ற

## 15. மண்ணாசை

மண்ணாசை கொண்டநீ மண்ணாளு மன்னரெலாம்
மண்ணா லழிதல் மதித்திலையே! — எண்ணாது 418

மண்கொண்டார் மாண்டார்தம் மாய்ந்தவுடல் வைக்கவயன்
மண்கொண்டார் தம்மிருப்பில் வைத்திலரே — திண்கொண்ட

விண்ணேகுங் காலங்கு வேண்டுமென வீண்டுபிடி
மண்ணேனுங் கொண்டேக வல்லாரோ! — மண்ணேயம் 420

என்னதென் றான் முன்னொருவன் என்னதென் றான்பின்னொருவன்
இன்னதுநீ கேட்டிங் கிருந்திலையோ — மன்னுலகில் 421

கண்காணி யாய்நீயே காணியல்லால் நீயிருந்த
மண்காணி யென்று மதித்தனையே — கண்காண 422

மண்காணி வேண்டி வருந்துகின்றாய் நீமேலை
விண்காணி வேண்டல் வியப்பன்றே — எண்காண 423

1. திருக்குறள், அதிகாரம் — 34, (2)
2. விடற்கு என்பது — விட்டற்கு என விகாரமாயிற்று.

அந்தரத்தில் நின்றுய்நீ யந்தோ நினைவிடமண்
அந்தரத்தில் நின்ற தறிந்திலையே — தந்திரத்தின் 424

மண்கொடுப்பேன் என்றுரைக்கில் வைவார் சிறுவர்களும்
மண்கொடுக்கில் நீதான் மகிழ்ந்தனையே —வண்கொடுக்கும் 425

வீடென்றேன் மற்றதைமண் வீடென்றே நீநினைத்தாய்
[1]வீடென்ற சொற்பொருளை விண்டிலையே! நாடொன்றும்

மண்ணால் மரத்தால் வனைகின்ற வீடனைத்துங்
கண்ணாரக் கட்டழிதல் கண்டிலையோ — மண்ணான 427

மேல்வீடு மங்குடைய வேந்தர்களு மேல்வீட்டப்
பால்வீடும் பாழாதல் பார்த்திலையோ — மேல்வீட்டில் 428

ஏறுவனே யென்பாய் இயமன் கடாமிசைவந்
தேறுவனேல் உன்னுரை யென்னுமோ! — கூறிடுமிம் 429

மண்ணளித்த வேதியனு மண்விருப்பங் கொள்ளானேல்
எண்ணமுனக் கெவ்வா றிருந்ததுவே — மண்ணிடத்தில் 430

ஆகாத் துரும்பிடத்தும் ஆசைவைத்தாய் என்னிடத்தில்
ஏகாப் பெருங்காம மென்சொல்கேன்! — போகாத 431

## 16. கோபம்

பாபக் கடற்கோர் படுகடலாம் பாழ்வெகுளிக்
கோபக் கடலிற் குளித்தனையே! — தாபமுறச் 432

செல்லா விடத்துச் சினந்தீது செல்லிடத்தும்
இல்லதனிற் றீயதென்ற தெண்ணிலையே — மல்லல்பெறத்

[2]தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க என்றதனைப்
பொன்னைப்போற் போற்றிப் புகழ்ந்திலையே — துன்னி 434

[3]அகழ்வாரைத் தாங்கு நிலம்போல வென்னுந்
திகழ்வாய் மையுநீ தெளியாய் — இகழ்வாரை 435

எவ்வண்ண நம்மை யிகழ்வா ரறிவோமென்
றிவ்வண்ண மென்னை வெளி யிட்டனையே—தெவ்வென்ன 436

ஓரா வெகுளி யுடையான் றவமுடையான்
றீராயென் பாரதுவுந் தேர்ந்திலையே — பேராநின் 437

வெவ்வினைக்கீ டாகவரன் வெம்மைபுரி வானென்றால்
இவ்வெகுளி யார்மாட் டிருத்துவதே — செவ்வையிலாய் 438

ஏய்ந்தனையன் போரிடத்தி லின்னுமை செய்தவரைக்
காய்ந்தனைமற் றென்னபலன் கண்டனையே — வாய்ந்தறிவோர்

எல்லா நலமு மிஃதேயென் றேத்துகின்ற
கொல்லா நலஞ் சிறிதுங் கொண்டிலையே — பொல்லாத 430

1. வீடு — பற்றுக்களின்றும் விடுபட்டது.
2. திருக்குறள், அதிகாரம் — 31, (2, 5.) 3. திருக்குறள், அதிகாரம் — 16, (1)

வனபோ டிருகளு மதியிலி மனனுயிர்ககண்
அன்போ டிரக்கம் அடைந்திலையே!—இன்போங்கு 441

தூயமையெனப தெலலாந துணையா யணைவதுதான்
வாயமையெனப தொனறே மதிததிலையே — தூயமையிலாய்

மாறெருகை யேநதினற வளளலனபர் தஙகளுளே
நானொருவ னெனறு நடித்தனையே — ஆனமற்றைப் 443

பாதகஙக ளெலலாம பழகிப் பழகியதிற்
சாதகஞசெய வோரிற் றலைநினறுய — பாதகத்தில 444

ஓயா விகார வுணர்சசியினல் இவ்வுலக
மாயா விகார மகிழநதனையே! — சாயாது 445

## 17. இளமை

நீஇளமை மெயயாய நினைநதாய் நினைப்பெற்ற
தாயிளமை யெத்தனைநாட், டங்கியதே! — ஆயிளமை

மெய்கொடுத்த தெனபாய விருத்தர்கட்கு நினபோலவார்
கைகொடுததுப் போவதனைக கணடிலையே — மெய்கொடுதத

கூனெடுங்கைக் கோலூனறிக குந்தி நடைதளர்ந்து
கானடுஙக நிறபவரைக கண்டிலையோ — ஊனெடுஙக 448

ஐயகட வென்றே யருமபுதல்வர் முன்செலப்பின
பைய நடப்பவரைப் பார்த்திலையோ — வெயயநமன் 449

நாடழைககச் சேனநரி நாயழைகக நாறுசுடு
காடழைகக மூததுநினறூர் கணடிலையோ — பீடடைந்த 450

மெயயுலாநது நீரின் விழியுலர்ந்து வாயுலர்நது
கையுலாநது நிறபவரைக கண்டிலையோ — மெயயுலர்ந்தும

சாகான கிழவன் தளாகினறு னெனறிவணீ
ஓகாளஞ் செய்வதனை யோாநதிலையோ — ஆகாத 452

கண்டமிது பொல்லாக கடுநோ யெனுஙகுமா
கணடமிஃ தெனபவரைக கணடிலையோ — கொண்டவுடல்

குட்டமுறக கைகால குறுககுமிது பொல்லாத
குட்டமெனா நோவார குறிததிலையோ — துட்டவினை 454

மாலையினுங காலையினு மததியினுங குத்துமிது
சூலையென நோவாரைச் சூழநதிலையோ — சாலவுமித் 455

தேக மதுநலியச செய்யுஙகா னுயவரிதாம
மேகமிஃ தெனபாரை மேவிலையோ — தாகமுறச 456

சித்தநோய செயகினற சீதநோய வாதமொடு
பித்தநோய் கொணடவாபாற பேர்நதிலையோ — மெத்தரிய

கைபபிணியுங காறபிணியுங கடபிணியோ டெணணரிய
மெயபபிணியுங கொணடவரை விணடிலையோ — எய்பபுடைய

முட்டுறுங் கைகான் முடங்கூன் முதலாய
வெட்டுறுங் கொண்டவரை யெண்ணிலையோ — தட்டுறிங்(கு)

எண்ணற்ற துண்டேல் இளமை யொருபொருளாய்
எண்ணப் படுமோவென் றெண்ணிலையே! — எண்ணத்தில்

## 18. உடம்பு

பொய்யென் றறவோர் புலம்புறவும் இவ்வுடம்பை
மெய்யென்று பொய்ம்மயக்க மேவினையே! — கைநின்று 461

கூகா வெனமடவார் கூடி யழல்கண்டும்
நீகாதல் வைத்து நிகழ்ந்தனையே — மாகாதல் 462

பெண்டிருந்து மாழ்கப் பிணங்கொண்டு செல்வாரைக்
கண்டிருந்து மந்தோ கலங்கிலையே — பண்டிருந்த 463

ஊரார் பிணத்தி னுடன்சென்று நாமீண்டும்
நீராடல் சற்று நினைந்திலையே — சீராக 464

இன்றிருந்தார் நாளைக் கிருப்பதுபொய் யென்றறவோர்
நன்றிருந்த வார்த்தையுநீ நாடிலையே — ஒன்றி 465

[1]உறங்குவது போலுமென்ற வொண்குறளின் வாய்மை
மறங்கருதி யந்தோ மறந்தாய் — கறங்கின் 466

[1]நெருந லுளனொருவன் என்னு நெடுஞ்சொன்
மருவுங் குறட்பா மறந்தாய் — தெருவில் 467

இறந்தார் பிறந்தார் இறந்தா ரெனுஞ்சொன்
மறந்தாய்! மறந்தாய்! மறந்தாய்! — இறந்தார் 468

பறையோசை யண்டம் படீரென் றொலிக்க
மறையோசை யென்றே மறந்தாய் — இறையோன் 469

[2]புலனைந்தும் என்றருளும் பொன்மொழியை மாயா
மலமொன்றி யந்தோ மறந்தாய் — நிலனொன்றி 470

விக்குள் எழுநீர் விடுமினென அயலோர்
நெக்குருக லந்தோ நினைந்திலையே — மிக்கனலில் 471

நெய்விடல்போ லுற்றவர்கண் ணீர்விட் டழுவுயிர்பன்
மெய்விடலுங் கண்டனைநீ விண்டிலையே — செய்வினையின் 472

வாள்கழியச் செங்கதிரோன் வான்கழிய — நம்முடைய
நாள்கழிதற் கந்தோ நடுங்கிலையே! — கோள்கழியும் 473

நாழிகையோர் நாளாக நாடினையே நாளையொரு
நாழிகையா யெண்ணி நலிந்திலையே! — நாழிகைமுன் 474

நின்றா ரிருந்தார் நிலைகுலைய வீழ்ந்துயிர்தான்
சென்றா ரெனக் கேட்டுந் தேர்ந்திலையே — பின்றாது 475

1. திருக்குறள் அதிகாரம்—34, (9, 6)
2. சம்பந்தர் தேவாரம் முதல் திருமுறை, திருவையாறு (1)

தொட்டா ருணவுடனே தும்மினா ரம்மவுயிர்
விட்டா ரெனக்கேட்டும் வெட்கிலையே — தட்டாமல் 476

உண்டார் படுத்தா ருறங்கினார் பேருறக்கங்
கொண்டா ரெனக்கேட்டுங் கூசிலையே — வண்டாரார் 477

நேற்று மணம்புரிந்தார் நீறானா ரின்றுஎன்று
சாற்றுவது கேட்டுந் தணந்திலையே — வீற்றுறுதேர் 478

ஊர்ந்தார் தெருவி லுலாப்போந்தார் வானுலகஞ்
சேர்ந்தா ரெனக்கேட்டுந் தேர்ந்திலையே — சேர்ந்தாங்கு 479

என்னே யிருந்தார் இருமினார் ஈண்டிறந்தார்
அன்னே யெனக்கேட்டு மாய்ந்திலையே — கொன்னே 480

மருவுங் கருப்பைக்குள் வாய்ந்தே முதிராக்
கருவும் பிதிர்ந்துதிரக் கண்டாய் — கருவொன் 481

றுடுதிங்க [1]ளையைந்தில் ஒவ்வொன்றி லந்தோ
கெடுகின்ற தென்றதுவுங் கேட்டாய் — படுமிந் 482

நிலைமுற்ற யோனி நெருக்கி லுயிர்போய்ப்
பலனற்று வீழ்ந்ததுவும் பார்த்தாய் — பலனுற்றே 483

காவென்று வீழ்ந்தக் கணமே பிணமாகக்
கோவென் றழுவார் குறித்திலையோ — நோவின்றிப் 484

பாலனென்றே அன்னைமுலைப் பாலருந்துங் காலையிலே
கால னுயிர்குடிக்கக் கண்டிலையோ — மேலுவந்து 485

பெற்றார் மகிழ்வெய்தப் பேசி விளையாடுங்கால்
அற்றாவி போவ தறிந்திலையோ — கற்றாயப் 486

பள்ளியிடுங் காலவனைப் பார நமன்வாயில்
அள்ளியிடுந் தீமை யறிந்திலையோ — பள்ளிவிடுங் 487

காளைப் பருவமதிற் கண்டா ரிரங்கிடவவ்
ஆளைச் சமன்கொள்வ தாய்ந்திலையோ — வேளைமண 488

மாப்பிள்ளை யாகி மணமுடிக்கு மன்றவனே
சாப்பிள்ளை யாதலெண்ணிச் சார்ந்திலையே! — மேற்பிள்ளை

மாடையேர்ப் பெண்டுடனில் வாழுங்காற் பற்பலர்தாம்
பாடைமேற் சேர்தலினைப் பார்த்திலையோ—வீடலிஃ(து)

இக்கணமோ மேல்வந் திடுங்கணமோ வன்றிமற்றை
எக்கணமோ வென்றார்நீ யெண்ணிலையே — தொக்குறுதோற்

கூடென்கோ! இவ்வுடம்பை கோள்வினைநீ ரோட்டில்விட்ட
ஏடென்கோ! நீர்மே லெழுத்தென்கோ! — காடென்கோ!

பாழென்கோ! ஒன்பதுவாய்ப் பாவையென்கோ! வன்பிறவி
ஏழென்கோ! கன்மமதற் கீடென்கோ! — தாழ்மண்ணிற்

1. ஐயைந்து என்பதனை—ஐந்து மைந்து மென வும்மைத் தொகை யாகக் கொள்க.

பாண்டமென்கோ! வெஞ்சரக்குப் பையென்கோ! பாழ்ங்கரும
காண்டமென்கோ! ஆணவத்தின் கட்டென்கோ! — கோண்டகையார்

மெய்யென்கோ! மாய விளைவென்கோ! மின்னென்கோ!
பொய்யென்கோ! மாயப் பொடியென்கோ! — [1]மெய்யென்ற

[2]மங்கலத்தை மங்கலத்தால் வாஞ்சித் தனருலகர்
அங்கவற்றை யெண்ணு தலைந்தனையே — தங்குலகின் 496

மற்றிதனை யோம்பி வளர்க்க வுழன்றனைநீ
கற்றதனை யெங்கே கவிழ்த்தனையே! — அற்றவரை 497

இக்கட் டவிழ்த்திங் கெரிமூட் டெனக்கேட்டும்
முக்கட்டுந் தேட முயன்றனையே — இக்கட்டு 498

மண்பட்டு வெந்தீ மரம்பட் டிடக்கண்டும்
வெண்பட் டுடுக்க விரைந்தனையே — பண்பட்ட 499

ஐயா அரைநா ணவிழுமெனக் கேட்டுநின்றும்
மெய்யா பரணத்தின் மேவினையே — எய்யாமல் 500

காதிற் கடுக்கன் கழட்டுமெனக் கேட்டுமின்றும்
ஏதிற் பணியினிடத் தெய்தினையே — தாதிற்குத் 501

துற்கந்த மாகச் சுடுங்கான் முகர்ந்திருந்தும்
நற்கந்தத் தின்பா னடந்தனையே — புற்கென்ற 502

வன்சுவைத்தீ நாற்ற மலமாய் வரல்கண்டும்
இன்சுவைப்பா லெய்தி யிருந்தனையே — முன்சுவைத்துப் 503

[3]பாறுண்ட காட்டிற் பலர்வெந் திடக்கண்டும்
சோறுண் டிருக்கத் துணிந்தனையே! — மாறுண்டு 504

கூம்புலகம் பொய்யெனநான் கூவுகின்றேன் கேட்டுமிகு
சோம்பலுடன் தூக்கந் தொடர்ந்தனையே — ஆம்பலனோர் 505

நல்வாழ்வை யெண்ணி நயந்தோர் நயவாத
இல்வாழ்வை மெய்யென் றிருந்தனையே! — சொல்ஆவி 506

ஈன்றோன் றனைநாளும் எண்ணுமல் இவ்வுடம்பை
ஈன்றோரை யீன்றோரென் றெண்ணினையே — ஈன்றோர்கள் 507

நொந்தால் உடனின்று நோவார் வினைப்பகைதான்
வந்தா லதுநீக்க வல்லாரோ? — வந்தாடல் 508

உற்றசிறுர் நம்மடையா தோட்டுகிற்பார் தென்திசைவாழ்
மற்றவன்வந் தாற்றடுக்க வல்லாரோ? — சிற்றுணவை 509

ஈங்கென்றால் வாங்கி யிடுவார் அருளமுதம்
வாங்கென்றால் வாங்கியிட வல்லாரோ? — தீங்ககற்றத் 510

தூண்டா மனையாதிச் சுற்றமெலாஞ் சுற்றியிட
நீண்டா யவர்நன் னெறித்துணையோ? — மாண்டாற்பின் 511

1, 2. மெய்யென்று—அமங்கலத்தை. 3. பாறு உண்ட என்பது — பருந்துகள் உண்ட.

கூடி யழத்துணையாய்க் கூடுவார் வன்னரகில்
வாடியழும் போது வருவாரோ? — நீடியநீ 512

இச்சீவர் தன்துணையோ ஈங்கிவர்கள் நின்துணையோ
சிச்சீ! யிதென்ன திறங்கண்டாய்! — இச்சீவர் 513

நின்னைவைத்து முன்சென்றால் நீசெய்வ தென்னவர்முன்
இந்நிலத்தில் நீசென்றா லென்செய்வர் — நின்னியல்பின் 514

## 19. பல பிறப்பு

எத்தனைதாய் எத்தனைபேர் எத்தனையூர் எத்தனைவாழ்(வு)
எத்தனையோ தேகம் எடுத்தனையே — அத்தனைக்கும் 515

அவ்வவ் விடங்கடொறும் அவ்வவரை யாண்டாண்டிங்(கு)
எவ்வெவ் விதத்தால் இழந்தனையோ? — அவ்விதத்தில் 516

ஒன்றேனு நன்று யுணர்ந்திருத்தி யேலிவரை
இன்றே துறத்தற் கிசையாயோ! — நின்றோரில் 517

தாயார் மனையார் தனயரார் தம்மவரார்
நீயார் இதனை நினைந்திலையே — சேயேகில் 518

ஏங்குவரே யென்றாய் இயமன்வரில் நின்னுயிரை
வாங்கிமுடி யிட்டகத்தில் வைப்பாரோ! — நீங்கியிவண் 519

உன்தந்தை தன்றனக்கிங் கோர்தந்தை நாடுவனீ
என்தந்தை யென்றுரைப்ப தெவ்வாறே — சென்றுபின்நின்

தன்மனையாள் மற்றொருவன் றன்மனையா ளாவளெனில்
என்மனையா ளென்பதுநீ யெவ்வணமே — நன்மைபெறு 521

## 20. அஞ்ஞானம்

நட்பமைந்த நன்னெறிநீ நாடா வகைதடுக்கும்
உட்பகைவர் என்றிவரை யோர்ந்திலையே —நட்புடையாய்

எம்மான் படைத்தவுயி ரித்தனைக்குட் சில்லுயிர்பால்
இம்மா லடைந்ததுநீ யென்னினைந்தோ — அம்மாறில் 523

எம்பந்த மேநினக்கிங் கில்லையென்றான் மற்றையவர்
தம்பந்த மெவ்வாறு தங்கியதே — சப்பந்தர் 524

[1]அற்றவருக் கற்றசிவ னென்னுமப் பொன்மொழியை
மற்றைமொழி போன்று மறந்தனையே — சிற்றுயிர்க்குக் 525

கற்பனையிற் காய்ப்புளதாய்க் காட்டும் பிரபஞ்சக்
கற்பனையை மெய்யென்று கண்டனையே — பற்பலவாங் 526

---

1. வெற்றவே யடியா ரடிமிசை வீழும் விருப்பினன் வெள்ளைநீ றணியுங்
கொற்றவன் றனக்கு மந்திரி யாய குலச்சிறை குலாவிநின் றேத்தும்
ஒற்றைவெள் விடையன உம்பரார் தலைவன் உலகினி லியற்கையை
யொழிந்திட்டு, அற்றவர்க் கற்றசிவன் உறை கின்ற ஆலவா யாவதும்
இதுவே. (சம்பந்தர் தேவாரம்)

[1]தூரியத்திற் றோன்றொலிபோற் றோன்றிக் கெடுமாயா
காரியத்தை மெய்யெனநீ கண்டனையே —சீரியற்றும் 527

ஆடகத்திற் பித்தளையை யாலித் திடுங்கபட
நாடகத்தை மெய்யென்று நம்பினையே — நீடகத்திற் 528

காயவித்தை யாலக் கடவு ளியற்றுமிந்த
மாயவித்தை மெய்யெனநீ வாழ்ந்தனையே — வாயவித்தை

இப்படக மாயை யிருட்டமமே யென்னுமொரு
[3]முப்படகத் துள்ளே முயங்கினையே — ஒப்பிறைவன் 530

ஆனவொளி யிற்பரையா மாதபத்தி னுற்றோன்றுங்
கானலினை நீராய்க் களித்தனையே — ஆனகிரி 531

மாசத்தி யென்றிடுமோர் அம்மைவிளை யாட்டெனுமிப்
பாசத்தி னுள்ளே படர்ந்தனையே — நேசத்திற் 532

பொய்யொன் றுண்மெய்யிற் புகும்பால லீலைதனை
மெய்யென்று வீணில் விரிந்தனையே — பொய்யென்று 533

மீட்டுநின்ற லீலா விநோத மெனுங்கதையைக்
கேட்டுநின்று மந்தோ கிளர்ந்தனையே — யீட்டிநின்ற 534

காலத்தை வீணிற் கழிக்கும் படிமேக
சாலத்தை மெய்யாய்த் தருக்கினையே — சாலத்திற் 535

கண்மையகன் றோங்குமந்த காரத்திற் செம்மாப்புற்
றுண்மையொன்றுங் காணா துழன்றனையே — வண்மையிலாய்

இங்குநினைப் பெரியோர் என்னினைப்பார் ஏமாப்பிற்
கங்குலினைப் பகலாய்க் கண்டனையே — தங்குறுமித் 537

தேகாதி பொய்யெனவே தேர்ந்தா ருரைக்கவுநீ
மோகாதிக் குள்ளே முயல்கின்றாய் — ஓகோநுங் 538

[4]கோமுடிக்கண் தீப்பற்றிக் கொண்டதென்றால் மற்றதற்குப்
பூமுடிக்கத் தேடுகின்றோர் போன்றனையே — மாமுடிக்கும்

வாழ்வுநிலை யன்றிமைப்பின் மாறுகின்ற தென்றுரைத்தும்
[5]வீழ்வுகொடு வாளா விழுகின்றாய் — தாழ்வுறநும் 540

விண்டுறுங் [6]கை வீடனலால் வேகின்ற தென்னவுட்போய்
உண்டுறங்கு கின்றோரை யொத்தனையே — தொண்டுலகம் 541

கானமுயற் கொம்பாய்க் கழிகின்ற தென்கின்றேன்
நீநயமுற் றந்தோ நிகழ்கின்றாய் — ஆனநம்மூர் 542

வெள்ளத்தி னன்முழுகி விட்டதென்றாற் சென்றுகடை
கொள்ளத் திரிபவர்போற் கூடினையே — கொள்ளவிங்கு 543

1. தூரியம் என்பது-பறை. 2. வாய் அவித்தை-பொருந்தின அஞ்ஞானம்.
3. முப்படகம் என்பது—மூன்று மறைப்பு; அவை—மான், ஆங்காரம், மூலப்பகுதி. 4. கோமுடி என்பது—குடுமி. 5. விழ்வு—விருப்பம்.
6. கை என்பது—தாழ்வாரத்து வாரைகள்.

கண்டனவெல் லாமிலையாக் கைதவமென் கின்றேனீ
கொண்டவைமுற் சேரக் குறிக்கின்றாய்—உண்டழிக்க 544

[1]ஊழி வெள்ளம் வந்ததென்று துண்பதற்கு மாடுதற்கும்
ஊழிநன் னீ ரோவென்பா ரொத்தனையே — ஏழியற்றும் 545

தற்புவனம் போகந் தனுகரண மென்கின்ற
சொற்பனத்தி லந்தோ துவன்றினையே — பற்பகலும் 546

உண்டனவே யுண்கின்றாய் ஓர்ந்தனவே யோர்கின்றாய்
கண்டனவே கண்டு களிக்கின்றாய்!—கொண்டனவே 547

கொண்டியங்கு கின்றாய் குறித்தனவே பிற்குறித்துப்
பண்டறியார் போலப் படர்கின்றாய் — பண்டறிந்து 548

சொல்லாடி நின்றனவே சொல்கின்றாய் மற்றிதனை
நல்லோர்கள் கண்டால் நகையாரோ — செல்லான 54

காலம்போ லீங்குநிகழ் காலமுங்காண் கின்றியெதிர்
காலமற்று மத்திறமேற் காணகுவையேற்—சாலவுமுன் 550

போதுசெலா முன்னமனு பூதியைநீ நாடாமல்
யாதுபய னெண்ணி யினைகின்றாய் — தீதுசெயும் 551

## 21. ஆணவம்

வீணவத்தை யெல்லாம் விளைக்குந் திறன்மூல
ஆணவத்தி னாலே அழிந்தனையே! — ஆணவத்தில் 552

நீயா ரெனவறியாய்! நின்னெதிரில் நின்றவரை
நீயா ரெனவினவி நீண்டனையே — ஓயாமல் 553

ஊனின்ற வொன்றி னுளவறியா யந்தோநீ
நானென்று சொல்லி நலிந்தனையே — நானென்று 554

சொல்லுதியோ சொல்லாயோ துவ்வாமை பெற்றொருநீ
அல்லலுறுங் காலத் தறைகண்டாய் — அல்லவெலாம் 555

நீயிங்கே நானங்கே நிற்கநடு வேகுதித்தால்
நீயெங்கே நானெங்கே நின்றறிகாண் — நீயிங்கு 556

ஒன்றெடுக்கச் சென்றுமற்றை யொன்றெடுக்கக் காண்கின்றேன்
நின்றடுத்த நீயெங் கிருந்தனையே — மன்றடுத்த 557

தாளா தரித்தேநின் றன்னைமறந் துய்யாது
வாளா மதத்தின் மலிகின்றாய் — கேளாயிச் 558

சார்பிலொன்று விட்டொழிந்தாற் சாலமகிழ் கிற்பேனுன்
சோர்புகொண்டு நீதான் துயர்கின்றாய் — சார்புபெறுந் 559

[2]தூவென்று நானிவணஞ் சும்மா விருந்தாலும்
வாவென் றெனையும் வலிக்கின்றாய் — ஓவுன்றன் 560

1. ஊழி என்பது—கடல். 2. தூஎன்று என்பது—ஆதரவென்று.

சூழ்ச்சியறி யேனீ சுழல்கின்ற போதெல்லாஞ்
சூழ்ச்சியிலே நானுஞ் சுழல்கின்றேன் — நீட்சியினீ 561

காலசைத்தால் யானுங் கடிதிற் றலையசைப்பேன்
மாலசைத்த நின்புணர்ப்பின் வாறெதுவோ — வாலுமண்டக்

[1]கூவத்தில் யானோர் குடநீ கயிற்றோடும்
ஏவற் கொளுமேழை யென்கேனோ — பாவத்திற் 563

சுற்றுண்டநீ கடலிற் றோன்றுசுழி யாகவதில்
எற்றுண்ட நான்திரண மென்கேனோ — பற்றிடுநீ 564

சங்கற்ப மாஞ்சூறை தானாக நானதிடும்
அங்கட் சருகென் றறைகேனோ — பொங்குற்ற 565

சேலைவிரா யோர்தறியிற் செல்குழைநீ பின்றொடரும்
நூலிழைநா னென்று நுவல்கேனோ — மாலிடுநீ 566

துள்ளுறுப்பின் மப்பகைஞன் சுற்றூழி யாகவதின்
உள்ளுறுப்பே நானென் றுரைக்கேனோ — வெள்ளுறுநீ 567

பாழலைவா னேகும் பருந்தாக வப்பருந்தின்
நீழலைநா னென்று நினைகேனோ — நீழலுரு 568

நின்வசநா னென்றுலகு நிந்தைமொழி கின்றதலால்
என்வசநீ யென்ப திலைகண்டாய் — என்வசம் நீ 569

ஆனல் எளியேனுக் காகாப் பொருளுளவோ!
வானுடர் வந்து வணங்காரோ! — [2]ஆனைமல் 570

எண்ணுதற்கும் பேசுதற்கும் எட்டாப் பரஞ்சோதிக்
கண்ணுதலும் அங்கைக் கனியன்றோ! — எண்ணுமிடத் 571

தென்செய்வேன் ஓர்கணமு மென்சொல்வழி நில்லாமற்
கொன்செய்வே னென்று குதிக்கின்றாய் — வன்செய்யுஞ் 572

[3]சிந்தோடு மோர்வடவைத் தீயுங் கரத்தடைப்பர்
அந்தோ வுனையார் அடக்குவரே — வந்தோடுங் 573

[4]கச்சோத மென்னக் கதிரோன் றனையெடுப்பர்
அச்சோ வுனையா ரடக்குவரே — வைச்சோங்கும் 574

மூவுலகுஞ் சேர்த்தொருதம் முன்றானை யின்முடிவர்
ஆவுனையு மிங்கா ரடக்குவரே — மேவுபல 575

தேசமென்றுங் காலமென்றுந் திக்கென்றும் பற்பலவாம்
வாசமென்று மவ்வவ் வழகென்றும் — மாசுடைய 576

போகமென்று மற்றைப் புலனென்றும் பொய்யகலா
யோகமென்றும் பற்பலவாம் யூகமென்றும் — ஏகமென்றும்

1. அண்டக்கூவம் என்பது—உலகமாகிய கிணறு. 2. ஆனைமை என்பது—விட்டுநீங்காமை. 3. சிந்து என்பது—கடல். 4. கச்சோதம்—மின்மினிப்பூச்சி.

வானென்று முந்நீர் மலையென்று மண்ணென்றும்
ஊனென்று மற்றை யுறவென்றும் — மேனின்ற 578

சாதியென்றும் வாழ்வென்றுந் தாழ்வென்று மிவ்வுலக
நீதியென்றுங் கன்ம நெறியென்றும் — ஓதரிய 579

அண்டமென்று மண்டத் தசைவு மசைவுமலாப்
பண்டமென்றுஞ் சொல்பவெலாம் பன்முகங்கள்-கொண்டிருந்த

உன்நினைவி னுள்ளே யுதித்திட் டுலவிநிற்ப
எந்நினைவு கொண்டோமற் றிவ்வுலகர் — எந்நவையுந் 581

தந்தோ னெவனோ சதுமுகனுண் டென்பார்கள்
அந்தோநின் செய்கை யறியாரே — அந்தோநான் 582

ஆமென்றான் மற்றதனை யல்லவென்பா யல்லவென்றால்
ஆமென்பா யென்னை யலைக்கின்றாய் — நாமன்பாய் 583

என்றும் பிறந்திறவா இன்பம் அடைதுமென்றால்
நன்றென் றெருப்படுவாய் நண்ணுங்கால்-[1]தொன்றெனவே

செல்கிற்பாய் செல்லாச் சிறுநடையிற் றீமையெலாம்
நல்கிற்பா யென்னேநின் னட்புடைமை — சொல்கிற்பில் 585

ஆவதுவும் நின்னால் அழிவதும் நின்னால்! எனயான்
நோவதுவுங் கண்டயலி னேக்கினையே — தாவுமெனக்(கு) 586

ஆணவலம் பெண்ணவல மாகும் பொருளவலம்
ஊணவலம் உற்றாரோ டூரவலம் — பூணவலம் 587

ஊனவல மன்றியுமென் உற்றதுணை யாநீயுந்
தானவல மென்றாலென் சாற்றுவதே — நாணிவணம் 588

இன்பமெது கண்டேமால் இச்சையெலாந் துன்பமதில்
துன்பம் பிறப்பென்றே சோர்கின்றேன்! — வன்புடைய

இப்பிறவித் துன்பத்தி னுந்தியிற் றுன்பமது
செப்பரிதாம்! என்றே திகைக்கின்றேன் — செப்பிறப்பின்

ஓயாத துன்ப முரைக்க வுடம்பெல்லாம்
வாயாகி னும்போத மாட்டாதேல் — ஏயேநாம் 591

செய்வதென் னேவென்று தியங்குகின்றேன் இவ்வணநான்
நைவதெல் லாங்கண்டு நடந்தனையே — கைவருமிவ் 592

இல்லிக் குடமுடைந்தால் யாதாம்! என் றுன்னுடன்யான்
சொல்லித் திரிந்துமெனைச் சூழ்ந்திலையே — வல் இயமன் 593

நாளையோ இன்றோ நடக்கின்ற நாட்களில்எவ்
வேளையோ! தூது விடிலவர்கள் — கேளையோ 594

1. தொன்று என்பது — பழமை.

நல்லோ மெனினும் நடவார் நடவார்! நாஞ்
செல்லோ மெனினுமது செல்லாதே — வல்லீர்யாம் 595

இன்சொலினேம் இன்றிங் கிருந்துவரு வோமெனயாம்
என்சொலினு மச்சொலெலாம் ஏலாதே — மன்சொலுடைத்

தாமரையோன் மான்முதலோர் தாமறையா ராயிலன்று
நாமறைவோ மென்றல் நடவாதே — நாமிவணம் 597

அந்நாள் வருமுன்னர் ஆதி யருளடையும்
நன்று வடைதற்கு நாடுதுங்காண்! — என்று நின் 598

ஞேதுகின்றேன் கேட்டு முறூர்போன் றுலகியலிற்
போதுகின்று யாது புரிகிற்பேன் — தீதுநன்றே(டு) 599

## 22. முக்குணம்

ஏற்றவடி நாளுறவா மென்னைவிட்டுத் தாமதமாம்
நேற்றையுற வோடுறவு நேர்ந்தனையே — சாற்றுமந்த 600

தாமதமே யோரவித்தைத் தாமதமே ஆவரணந்
தாமதமே மோக சமுத்திரங்காண்! — தாமதமென் 601

றையோ வொருநீ யதனோடு கூடினையாற்
பொய்யோநா மென்று புகன்றதுவே — கையாமல் 602

ஒன்னலர்போற் கூடுவா ரோடொருநீ கூடுங்கால்
என்னைநினை யாயென்சொ லெண்ணுதியோ — பன்னுறுநின்

தீதெல்லா நான்ஆதி சேடர்பல ராய்ப்பிரமன்
போதெல்லாஞ் சொல்லிடினும் போதாதே — ஆதலினல் 604

வைகின்றேன் வாழ்த்தாய் மதித்தொருநீ செய்வதெல்லாஞ்
செய்கின்று யீதோர் திறமன்றே — உய்கிற்பான் 605

வாடுகின்றே னின்னை மதித்தொருநா னீமலத்தை
நாடுகின்று யீதோர் நலமன்றே — கூடுகின்ற 606

ஈண்டோ ரணுவா யிருந்தநீ யெண்டிசைபோல்
நீண்டா யிஃதோர் நெறியன்றே — வேண்டாநீ 607

மற்றவர்போ லன்றே மனனே! நின் வண்புகழை
முற்றுமிவ ணர்தான் மொழிவாரே — சுற்றிமனந் 608

தானடங்கின் எல்லாச் சகமு மடங்குமொரு
மானடங்கொள் பாத மலர்வாய்க்கும் — வானடங்க 609

எல்லா நலமும் இதனு லெனமறைகள்
எல்லாநின் சீரே யெடுத்தியம்பும் — எல்லார்க்கும் 610

[1]. ஆவரணம் என்பது — மறைப்பு.

[1]மாகமங்கொண் டுற்ற மனேலயமே வான்கதியென்(று)
ஆகமங்கள் நின்சீ ரறைந்திடுங்காண் — ஆகுமிந்த 611

நன்மை பெறுமேன்மை நண்ணியநீ நின்னுடைய
தன்மைவிட லங்தோ சதுரலவிப் — புன்மையெலாம் 612

## 23. பன்மத சுகம்

**விட்டொழித்து** நான்மொழியு மெய்ச்சுகத்தை நண்ணுதிநீ
இட்டிழைத்த அச்சுகந்தான் யாதென்னிற் — கட்டழித்த 613

வேடஞ் சுகமென்றும் மெய்யுணர்வை யின்றிநின்ற
மூடஞ் சுகமென்றும் முன்பலவாந் — தோடஞ்செய் 614

போகஞ் சுகமென்றும் போகந் தருங்கரும
யோகஞ் சுகமென்று முண்டிலையென் — றாகஞ்செய் 615

போதஞ் சுகமென்றும் பொன்றல்சுக மென்றும்விந்து
நாதஞ் சுகமென்று நாம்பொருளென் — றோதலசீ(து) 616

ஒன்றே சுகமென்று முட்கண் டிருக்குமந்த
நன்றே சுகமென்று நாம்புறத்திற் — சென்றேகண்(டு) 617

ஆற்றல் சுகமென்று மன்பறியாச் சூனியமே
யேற்ற சுகமென்று மிவ்வணம் — ஏற்றபடி 618

வெல்லுகின்றோர் போன்று விரிநீ ருலகிடையே
சொல்லுகின்றோர் சொல்லுஞ் சுகமன்று — சொல்லுகின்ற

## 24. சித்தாந்தம்

**வானுதி** தத்துவங்கண் மாய்த்தாண் டுறுகின்ற
நானுதி மூன்றிலொன்று நாடாமல் — ஆனுமை 620

எள்ளும் பகலும் இரவுமிலா வோரிடத்தில்
உள்ளும் புறம்பு மொருபடித்தாய் — வள்ளலென 621

வாழும் பரசிவத்தின் வன்னிவெப்பம் போலமுற்றுஞ்
சூழுஞ் சுகமே சுகங்கண்டாய் — சூழ்வதனுக் 622

கெவ்வா றிருந்தா லியலு மெனிலம்ம!
இவ்வா றிருந்தா லியலாதாற் — செவ்வாற்றிற் 623

## 25. உபதேசம்

**பற்றற்றான்** பற்றினையே பற்றியிடல் வேண்டுமது
பற்றற்றா லன்றிப் பலியாதால் — பற்றற்றல் 624

1. மாகம் என்பது—பெரிதாகிய பொறுமை

வேதனையா லீங்கு விரியுஞ் சகப்பழக்க
வாதனைபோய் நீங்கிலன்றி வாராதால் — வாதனையும் 625

ஈனமந்தோ இவ்வுலக மென்றுஅந்நாள் நாடுகின்ற
ஞானம்வந்தா லன்றி நலியாதால் — ஞானமது 626

போகமுற்றும் பொய்யெனவே போதும் அனித்தியவி
வேகமுற்ற லன்றி விளங்காதால்—ஆகவஃ(து) 627

உண்ணவந்தாற் போலுமிவண் உற்றுவிசா ரித்திடுமோர்
எண்ணம்வந்தா லன்றி இசையாதால் — எண்ணமது 628

பங்கமடைந் தாரவையைப் பாராது சாதுக்கள்
சங்கமடைந் தாலன்றிச் சாராதால் — இங்கதனல் 629

## 26. அசாதுக்கள்

வீழ்முகத்த ராகிநிதம் வெண்ணீ றணிந்தறியாப்
பாழ்முகத்தோர் தம்பாற் படர்ந்துறையேல் — பாழ்முகத்திற்

பேயாட வுள்ளறியாப் பித்தாட நின்றுடனே
வாயாடு வோர்பான் மருவிநில்லேல்—நீயாடிப் 631

பேதித் திடவும் பிறழ்ந்திடவு நின்னுடனே
வாதித் திடுவோர்பால் வாய்ந்துறையேல் — சாதித்துச்

சைவமெங்கே? வெண்ணீற்றின் சார்பெங்கே? மெய்யான
தெய்வமெங்கே? என்பவரைச் சேர்ந்துறையேல்-உய்வதெங்கே

தீராச் சிவநிந்தை செய்துசிறு தேவர்களை
நேராய்ப் பிதற்றுவர்பால் நேர்ந்துறையேல்—ஓராமல் 634

எள்ளென்றுந் தெய்வமென்ப தில்லை யிதுதெளிந்துக்
கொள்ளென்றுந் துள்ளுகின்றோர் கூட்டமுறேல் - நள்ளொன்று

நாமென்று நம்மையன்றி நண்ணும் பிரமமில்லை
யாமென்றுஞ் சொல்பவர்பா லார்ந்துறையேல் — தாமொன்ற

எல்லா வறிவும் எமதறிவே யென்றுரைக்கும்
பொல்லா வலக்காரர் பொய்யுகவேல் — புல்லாக 637

அற்பமே மற்றவெலாம் [1] ஆயிலமி யாக்காய
கற்பமே வத்துவென்பார் கண்ணடையேல் — சிற்சிலவாஞ்

சித்திகளே வத்துவென்போர்ச் சேர்ந்துறையேல் பன்மாயா
சத்திகளே வத்துவென்போர் சார்படையேல் — பொத்தியவிச்

சன்மமே தோற்றுந் தரமாந் திரமனித்த
கன்மமே வத்துவென்போர் கண்ணுறையேல் — கன்மமிகு

1. ஆயில் என்பது — ஆராயுங்கால் எனக்கொள்க.

மாகங் கதியென்பார் மாட்டுறையேல் பல்போக
யோகம் பொருளென்பா ரூடுறையேல் — ஏகங்கொள் 641

மண்ணென்பார் வானென்பார் வாய்மூச் சுடரென்பார்
பெண்ணென்பார் மற்றவர்தம் பேருரையேல் — மண்ணின்பால்

மன்னுரையாச் சில்லோர் மரந்தெய்வ மென்பார்மற்
றென்னுரையா ரீண்டவர்பா லெய்தியிடேல் — மன்னலங்கள்

பூத்தார் சிறுவர்களும் பூசா பலமென்பர்
தேற்றார் சிவபூசை செய்யாராய்ப் — பூத்தாவி 644

வீறுகின்ற பூசையிலென் வீணென்று விண்பாழ்வாய்க்
கூறுகின்ற பேயர்கள்பாற் கூடியுறேல் — மாறுகின்ற 645

நீட்கோல வாழ்க்கையெலா நீத்திடுவான் பொன்னறைக்குத்
தாட்கோ லிடுவாரைச் சார்ந்துறையேல் — நீட்கோல 646

மெய்யொழுக்கத் தார்போல் வெளியின் றகத்தொழியாப்
பொய்யொழுக்கத் தார்பாற் பொருந்தியுறேல் — பொய்யொழுக்கிற்

பொய்ந்நூல் பதறிப் புலம்புகின்ற பித்தர்கள்பால்
அந்நூல் விரும்பி யடைந்தலையேல் — கைந்நேர்ந்து 648

கோடாது கோடி கொடுத்தாலுஞ் சைவநெறி
நாடா தவரவையை நண்ணியிடேல் — கோடாது 649

கொல்லா விரதமது கொள்ளாரைக் காணிலொரு
புல்லாக எண்ணிப் புறம்பொழிக — எல்லாமும் 650

ஆகநவில் கின்றதென்னம் ஐயனுக்கன் பில்லாரை
நீகனவி லேனு நினையற்க — ஏகனடிக்(கு) 651

## 27. சாதுக்கள்

அன்பே வடிவாய் அருளே உயிராய்ப்பே
ரின்பே உணவாய் இசைந்தாரும் — அன்பாகிக் 652

கண்டிகையே பூணிற் கலவையே வெண்ணீறாய்க்
கொண்டிகவாச் சார்பு குறித்தாரும் — தொண்டுடனே 653

வாய்மலரான் மாலை வகுத்தலொடு நம்மிறைக்குத்
தூய்மலரான் மாலை தொடுப்பாருஞ் — சார்மலரோன் 654

ஏர் நந்த னப்பணிகண் டிச்சையுற நம்மிறைக்குச்
சீர் நந்த னப்பணிகள் செய்வோரும் — நார்நந்தாத் 655

தீயின்மெழு காச்சிந்தை சேர்ந்துருகி நம்மிறைவாழ்
கோயின்மெழு காநின்ற கொள்கையரும் — மேயினரைத் 656

தாயில் வளர்க்குந் தயவுடைய நம்பெருமான்
கோயில் விளக்குங் குணத்தோரும் — தூயவருள் 657

1. நந்தன் என்பது — நந்து (சங்கு) உடையவன் — விஷ்ணு.

இன்புடனே தீபமுத லெல்லாச் சரியைகளும்
அன்புடனே செய்தங் கமர்வாரும் — அன்புடனே 658

அண்ணியமேல் அன்பர்க் கமுதீந்த லாதிசிவ
புண்ணியமே நாளும் புரிவோரும் — புண்ணியமாந் 659

தேனே! அமுதே! சிவமே! சிவமேயெம்
மானேயென் றேத்தி மகிழ்வாரும் — வானென 660

மன்னே யருட்கடலே மாணிக்க மேயெங்கள்
அன்னேயென் றுன்னி யமர்வோரும் — நன்னேயப் 661

பண்ணீர் மொழியாற் பரிந்தேத்தி யானந்தக்
கண்ணீர்கொண் டுள்ளங் களிப்போரும் — உண்ணீரிற் 662

பண்டுகண்டுங் காணுப் பரிசினராய்ப் பொன்மேனி
கண்டுகண்டு நாளுங் களிப்போரும் — தொண்டடையும் 663

பொற்பதிக மென்றெண்ணிப் போற்றியொரு மூவர்களின்
சொற்பதிகங் கொண்டு துதிப்போருஞ் — சொற்பனத்தும்

மாசகத்திற் சேர்க்காத மாணிக்க மென்றதிரு
வாசகத்தை வாயான் மலர்வோரும் — வாசகத்தின் 665

மன்னிசைப்பான் மேலோர் வகுத்தேத்தி நின்றதிரு
வின்னிசைப்பா வாதி யிசைப்போரும் — மன்னிசைப்பின் 666

நல்வாழ் வருளுகின்ற நம்பெருமான் மான்மியங்கள்
சொல்வோருங் கேட்டுத் தொழுவோருஞ் — சொல்வாய்ந்த

தாதாவென் றன்புடனே சாமகீ தங்கண்முதல்
வேதா கமங்கள் விரிப்போரும் — வேதாந்தஞ் 668

சேர்ந்தோர்க் கருளுஞ் சிவமே பொருளென்று
தேர்ந்தே சிவபூசை செய்வோரும் — ஆர்ந்தேத்தி 669

நன்னெஞ்சே கோயிலென நம்பெருமான் றன்னைவைத்து
மன்னுஞ் சிவநேயம் வாய்ந்தோரும் — முன்னயன்றன் 670

அஞ்செழுத்தெல் லாங்கேட்கி லஞ்செழுத்தா மெம்பெருமான்
அஞ்செழுத்தா லர்ச்சித் தமர்வோரும் — அஞ்சனவே 671

விஞ்சும் பொறியின் விடயமெலா நம்பெருமான்
செஞ்சுந் தரப்பதத்திற் சேர்த்தோரும் — வஞ்சஞ்செய் 672

பொய்வே தனைநீக்கும் புண்ணியன்பாற் றம்முயிரை
நைவே தனமாக்கு நல்லோருஞ் — செய்வேலை 673

நீட நடத்தலொடு நிற்றன்முத னம்பெருமான்
ஆட லடித்தியான மார்ந்தோரும் — வாடலறத் 674

தூய நனவிற் சுழுத்தியொடு நம்பெருமான்
நேய நிகழ்த்து நெறியோரும் — மாயமுறு 675

மானதுவாய நின்ற வயரீககித் தானறறுத்
தானதுவாய நிறகுந தகையோரும — வானமதில 676

வானஙகண டாடு மயிலபோனறு நமபெருமான
தானஙகண டாடுந தவத்தோரும — மோனமொடு 677

தாழசடையு நீறுஞ சரிகோ வணககீளும
வாழசிவமுங கொணடு வதிவோரும — ஆழநிலைய 678

வாரியலை போனறசுத்த மாயையினு லாமபூத
காரியஙக ளாதியெலாங கணடொழித்து — ஊரியஙகத 679

## 28. சிவயோகம்

நெஞ்சந் தருமலரோன றததுவமாம பூதஙகள
அஞசும பொறியஞசு மஞசறிவும — அஞசெனுமோா 680

வாககுமுத லஞசுமறறு மாலோனறன றததுவமாம
ஊககுங கலைமுதலா மோரேழும — நீககியபபால 681

மேவி விளஙகுசுதத விததைமுத ஞதமடடுந
தாவி வயஙகுசுதத தததுவததின — மேவியகன(று) 682

அப்பால அருள்கண் டருளாற் றமைத்தாங்கண்டு
அப்பாற் பரவெளிகண் டபபாலுக — கப்பாலும 683

தீராச சுயமாயச சிதானநத மாமொளியைப்
பாரா விருநத படியிருநது — பேராது 684

கண்டதுவென றென்றுங கலவாது தாஙகலநது
கொணடசிவ யோகியராங் கொற்றவரும் — அண்டரிய 685

சத்துவத்திற சத்துவமே தமமுருவாயக கொண்டுபர
தததுவததி னிறகுந தககோரும — அததுவத்தில 686

தீதுஞ் சுகமுஞ் சிவன்செயல்என றெண்ணிவநத
யாதுஞ சமமா விருப்போரும — கோதுபடக 687

கூறுங குறியுங குணமுங குலமுமடி
யீறுங கடையு மிகநதோரும — வீறுகினற 688

சாநதி னடைந்தவெலாஞ் சீரணிககச் சோசித்த
சாநதி யுடனே சரிபபோருஞ — சாநதிபெறத் 689

தமமையுறுஞ சித்தெவையுந தாமுவத்தல செயயாமற்
செமமையுடன வாழுந திறலோரும — எமமையினும 690

ஆராமை யோஙகு மவாககடனீா மானகுளமபில
நீராக நீநதி நிலைததோருஞ — சேராது 691

தமபொருளைக கணடே சதானநத வீடடினிடைச
செமபொருளைச சாரநத திருநதோரும — மணபொருள்போய்த் 692

¹தாய ரெனமாதர் தம்மையெண்ணிப் பாலர்பித்தர்
பேயரென நண்ணும் பெரியோரும் — ராயதனின் 693

எய்ப்பரிசா மோதிரண மெவ்வுலகுஞ் செய்தளிக்க
மெய்ப்பரிசுஞ் செய்யவல்ல வித்தகரும் — எய்ப்படவே 694

யாவு மறிந்து மறியார்போன் றெப்பொழுதுஞ்
சாவும் பிறப்புந் தவிர்ந்தோரும் — ஓவலின்றி 695

வைதிடினும் வாழ்கவென வாழ்த்தி யுபசாரஞ்
செய்திடினுந் தன்மை திறம்பாரும் — மெய்வகையில் 696

தேரு வுலகுஞ் சிவமயமாய்க் கண்டெங்கும்
ஏரு திழியா திருப்போரும் — மாருது 697

மோனந்தான் கொண்டு முடிந்தவிடத் தோங்குபர
மானந்தா தீதத் தமர்ந்தோரும் — தானந்தாச 698

**சாதுக்க ளாமவர்தஞ் சங்க மகத்துவத்தைச்**
**சாதுக்க ளன்றியெவர் தாமறிவார்** — நீதுக்க 699

நீங்கியநன் னோர் சங்கத்தி னின்றுமகிழ்ந் தேத்திநிதம்
ஆங்கவர்தாட் குற்றேவ லாய்ந்தியற்றி — ஓங்குசிவ 700

பஞ்சாக்ஷரத்தைப் பகரருளே நாவாக
எஞ்சாப் பரிவுடனே யெண்ணிஅருட் — செஞ்சோதித் 701

**தாதொன்று துய்ப்பைமுடித் தாணுவடி யொன்றிமற்றை**
**யாதொன்றும் நோக்கா தமைந்திடுக! — தீதென்ற** 702

**பாழ்வாழ்வு நீங்கப் பதிவாழ்வி லெஞ்ஞான்றும்**
**வாழ்வாய் என்னோடு மகிழ்ந்து!** 703

திருச்சிற்றம்பலம்



¹ மண்ணாசை பொன்னாசைகளை முற்றுந் துறந்தவர்களும் பசிபிணியால் மெலிகின்ற ஓரோர் காலத்து, மாதரும் உணவு கொடுத்தற்குரியராதலின், தாயரென மாதர் தம்மை யெண்ணும் பெரியோர் என்று காட்டியவாறு காண்க. அன்றியும், மூவாசைகளில் மண்ணாசையும், பொன்னாசையும் அறவே ஒழித்தவர்களுக்கும், பெண்ணாசை ஒழிவது அருமையாதலால், மாதரைத் தாயரென எண்ணவேண்டும் என்னும் உபாயவகையை உணர்த்தியவாறுமாம்.

உ

சிவமயம

திருச்சிற்றம்பலம்

# நான்காவது

# சிவநேச வெண்பா

## காப்பு

நேரிசை வெண்பா

திருச்சிற்றம்பலம்

**முன்னவனே** யானை முகததவனே முததிநலஞ
சொனனவனே தூயமெயச சுகததவனே — மனனவனே
சிறபரனே ஐஙகரனே செஞசடையஞ சேகரனே
தறபரனே நினறுள சரண　　1

**வீறுடையாய்** வேலுடையாய வெறபுடையாய் விணணுடையாய
நீறுடையாய நேயாகள்தம நெஞசுடையாய — கூறு
முதலவா ஓராறு முகவாமுக கணணன
புதலவாநின றுளெம புகல　　2

திருச்சிற்றம்பலம்

**சீர்சான்ற** வேதச செழுமபொருளே சிறசொருபப
பேர்சானற வுணமைப பிரமமே — நேர்சானறோர்
நாடும பரசிவமே நாயேனுககு அனபுநினபால
நீடும படிநீ நிகழதது　　1

**நினைப்பித்தா** நித்தா நிமலா வெனநீ
நினைபபிததால ஏழை நினைப்பேன — நினைபபினை
மறபபிததால யானு மறபபேன எவையும
பிறப்பித்தா யெனனுலென பேசு　　2

**உருவா** யுருவி லுருவாகி யோஙகி
அருவா யருவி லருவாய — ஒருவாமல
நினறுயே நினற நினைககாணப தெவவாறே
என தாயே யென தநதை யே.　　3

**வெஞ்சஞ்** சலமா விகார மெனுமபேயககு
நெஞசம பறிகொடுதது நிறகினறேன — அஞசலென
எணடோ விறையே யெனையடிமை கொளளமனம
உணடோ விலையோ வுரை　　4

**அப்பாலுன்** சித்த மறியேன எனககமமை
யப்பாலின ருளனறி யார்கண்டாய — இப்பாரில
சாதியுரு வாககுந தளையவிழததுத தனமயமாஞ்
சோதியுரு வாககுந துணை 5

**பேரறிவாற்** கண்டும பெரியோர் அறியாரேல்
யாரறிவார யானோ அறிகிறபேன — சீர்கொள
வெளியாய வெளிககுள வெளியாய ஒளிககுள
ஒளியாகி நினற வுனை 6

[1]**வந்தித்தேன்** பிடடுகநத வளளலே நினனடியான
சிநதிததே னெனறல சிரிப்பனறே — பநததாஞ
சிநதுசிநதிப பிதனெது சிநதையுளநின பொனனருளே
வநதுசிநதிப பிததன மறநது 7

**தெனென்ற** வினசொற றெரிநதுநினைப் பாடுகினறேன
நானென றுரைததல நகையனறே — வானினற
ஒணபொருணீ யுளள மூவநதருளா வினசொலலும
வணபொருளு மீதன மறநது. 8

**அண்டங்க** ளோஅவற்றி னபபாலோ இப்பாலோ
பணடஙக ளோசிற பரவெளியோ — கண்டஙக
வெமபெருமா னீததவாதம மெயயுளமோ தையலொடும்
எமபெருமான நீவா ழிடம 9

**பூதமெங்கே** மறறைப புலனெஙகே பலவுயிரின
பேதமெஙகே யணடமெனும பேரெஙகே — நாதமெஙகே
மனவடிவ மெஙகே மறையெஙகே வானபொருளநீ
பொனவடிவங கொளளாத போது. 10

**பேருருவோ** சோதிப பிழமபாகுஞ சினமயத்தின
சீருருவோ தேவா திருவுருவம — நேருருவிற
சாலபுறசசே ரணட சராசரஙக ளெலலாநுங
காலவிரறபால நினறெடுஙகுங கால 11

**இன்றே** பகலோ இரவோ வருநாளில
எனறே வறியேன எளியேனே — மனறேஙகும
தாயனையாய நினனருளாந தணணமுத முணடு(உ)வந்து
நாயனையேன வாழகினற நாள. 12

**மண்ணாசை** வெறபே மறிகடலே **பொன்னாசை**
**பெண்ணாசை** யெரனறேயென பேராசை — நணணாசை
விடடார புகழும விடையாயநான பொயயாசைப
பட்டால வருமே பதம 13

[1]**வந்தி தேன** எனறபாலது — வநதிததேனென விரிததல விகாரமாயிறறு;
ாணடு **தேன** எனபது — **இனிமை**

**தந்தையா** யெனனுடைய தாயாயத தகைசானற
சிநதையா யெனனருமைத தேசிகனுய — முநதையாய
நீடு மறைமுதலாய நினறுயென னேநெஞசம
வாடுமெனே யாடகொளளா வாறு 14

**ஊட்டுகின்ற** வலவினையாம உடகயிறறு லுளளிருநதே
ஆடடுகினற நீதா னறிநதிலேயோ — வாடடுகினற
அஞசுபுல வேடாக கறிவைப பறிகொடுதெதன
நெஞசுபுலாந தேஙகு நிலே 15

**ஆமோ** வலவோ அறியேன சிறியேனை
தாமோ தரனுஞ சதுமுகனுந — தாமே
அடியா தரிககு மரசேநின னேவல
அடியாருற றேவலடி யன 16

**உன்னு** லெனககாவ துணடதுநீ கண்டதுவே
எனனு லுனககாவ தேதுளது — சொனனலயான
சநதாவத தோடுநத லேமேறகொண டுயகிறபேன
எநதாயிங கொனறுமறி யேன. 17

**சென்றுரைப்பார்** சொலலிற **சிறியான் பயமறியான்**
எனறுரைபபா ராஙகதுமற றெனனுளவே — மனறகததோய்
அஞசேல விழியாரை யநதகனேனா பாரமொழியை
அஞசேன சிறிது மறிநது 18

**எந்தாய்நின் அன்பர்தமக் கின்னமுத மிட்டேத்திச்**
**சிந்தா நலமொன்றுஞ் செய்தறியேன்** — நநதாச
**சுவருண்ட மண்போலுஞ் சோறுண்டேன்** மணணில
எவருண டெனேபபோ லியமபு 19

**உப்பிருந்த** வோடோ ஒதியோ வுலாபபிணமோ
வெபபிருநத காடோ விஜேசசுமையோ — செபபறியேன
கண்ணபப ருககுக கனியனேயாய நிறபணியா(து)
உணணப பருககும **உடம்பு** 20

**ஏலார்** மனேதொறுமபோ யேற்றெலுமபுந தேயநெடுங்
காலாய்த திரிநதுழலுங காலகணடாய — மாலாகித
தொணடே வலஞசெயகழற ளுனறலே நினகோயிற
கண்டே வலஞசெயயாக **கால்** 21

**ஏசும்** பிறர்மனேயில ஏஙகவவா ரயுமரைக
காசும பெறவிரிககுங கைகணடாய — மாசுநத
விணடுஞ சிரஙகுவிககும விததகனே நினதலததைக
கண்டுஞ சிரஙகுவியாக **கை** 22

**வெங்கோடை** யாதபத்தின வீழநீர் வறநதுலர்நது
மஙகோடை யாதல வழககனறே — எஙகோ நின
சீர்சிநதாச சேவடியின சீாகேடடு மானநத
நீர்சிநதா வனகண் ணிலே 23

**வாயன்றேல்** வெமமலஞசெல வாயனறேன மாநரக
வாயனறேல வலவெறிநாய வாயெனபாம் — தாயென்றே
[1]ஊழததாதா ஏததும உடையாய சிவவெனறே
வாழத்தாதா நாறறபபாழ வாய் 24

**வீட்டா** ரிறைநீ விடைமேல வருமபவனி
காடடா தடைதத கதவனறே — நாடடாதி
நலலத துளையா நதிசசடையா யென்னுஞ்சீர்ச
செலலத் துளையாச **செவி** 25

**புல்லங்** கணநீர்ப் புழையெனகோ புறறென்கோ
சொலலும பசுமட டுளையெனகோ — சொலலுஞ்சீர்
வீயாத [2]பிஞஞகபபோ மெலலினததி னலலிசைதான
தோயாத **நாசித்** துளை 26

**தோற்றமிலாக்** கணணுஞ சுவையுணரா நாவுநிகழ
நாறற மறியாத நாசியுமோர் — மாறறமுநதான
கேளாச் செவியுஙகொள கீழமுகமே நீறறணிதான
மூளாது பாழதத **முகம்** 27

**மான்றும்** உலக வழககின படிமதித்து
மூனறு வகிாநதே முடைநாற — ஊனறு
மலககூடை யேறறுகினு மாணுதே தெனபால
தலககூடற றுழாத **தலை** 28

**கல்லென்கோ** நீரடைககுங கலலெனகோ கானகொளகருங
கலலெனகோ காழவயிரக கலலெனகோ — சொலலெனகோ
இனறு லெனிலோ எடுததாளெம ஈனறுணேர்
நினறுள நினையாத **நெஞ்சு** 29

**சொல்லுகின்ற** வுளளுயிரைச சோாவுற றிடககுளிர்நது
கொலலுகினற நஞசிற கொடிதனறே — ஒலலுமனறத
தெமமானின றுடகமலம எணணாது பாழவயிறறிற
சுமமா அடைககினற **சோறு** 30

**சோர்படைத்துச்** சோறெனறு றறெணடை விககிககொணடுநடு
மார்படைததுச சாவுகினு மாநனறே — சீர்படைகக
எணணுவா ரெணணு மிறைவாநின றுளேத்தா(து)
உணணுவா! ருணணு மிடததது 31

[1]**ஊழ்த்தாதா — பிரமன்** [2]**பிஞஞகன** —சிவபிரானது திருநாமஙகளுள ஒனறு, மெலலின எழுததுககளை உசசரிபபதறகு இடமாகிய நாசியைபற பெறறினபயன மெலலின எழுததுககளாலாகிய பிஞஞகன முதலிய திருநாமஙகளை ஓதுதலேயாம.

ஓகோ கொடிதே யுறும்புலைய ரில்லினிடத்
தேகோ வலைதத்துண் செயலன்றே! — வாகோதம்
வாழுமனையிற் செல்லாது வள்ளனினை யேத்தாதார்
**பாழ்மனையிற் சென்றுண் பது** 32

**வீயுமிடு** காட்டகத்துள் வேம்பிணத்தின் வெந்தசையைப்
பேயுமுட னுண்ணவுண்ணும் பேறன்றே — தோயுமயல்
நீங்கவருள் செய்வோய்**வெண் ணீறணியார் தீமனையில்**
ஆங்கவரோ டுண்ணு மது 33

**கண்குழைந்து** வாடுங் கடுநரகின் பேருரைக்கில்
ஒண்குழந்தை யேனுமுலை யுண்ணாதால் — தண்குழைய
பூண்டார்க் கொன்றைப் புரிசடையோய் நின்புகழை
வேண்டாதார் வீழ்ந்து விரைந்து. 34

**கண்ணுதலே** நின்னுருட் கருத்தாரை நேசிக்க
எண்ணுதலே செய்யேனமற் றெண்ணுவனோ — மண்ணுலகில்
ஆமிடத்து **நின்னடியார்க் காசையுரைத் தில்லையென்பார்**
போமிடத்திற் போவேன் புலர்ந்து. 35

**அங்கணனே** நின்னடிக்கோ ரன்பிலரைச் சார்ந்தோர்தம்
[1]வங்கணமே வைப்பதின்னா வைத்தேனேல் — அங்கணத்தில்
நீர்போ லெனது நிலைகெடுக நிற்பழிசொற்
றார்போ லழிக தளர்ந்து 36

**பூவைவிட்டுப்** புல்லெடுப்பார் போலுன் றிருப்பாதத்
தேவைவிட்டு **வேறுபிறவித் தேவர்களைக் — கோவைவிட்டுக்**
**கூடுவார்** மற்றவரைக் கூடியிடேன் கூடுவனேல்
ஓவ்வா [2]ராவ லினை 37

**யாதோ** கனற்கண் **யமதூதர்** காய்ச்சு[3]கருந்
தாதோ தழற்பிழம்போ தானறியேன் — மீதோங்கு
நாட்டார்க்குக் கொன்றை நதிச்சடையோய் **அஞ்செழுத்தை**
நாட்டாதார் வாய்க்கு நலம் 38

**என்னெஞ்சோர்** கோயிலெனக் கொண்டோய் நின்னினையார்
தன்னெஞ்சோ கல்லாமச் சாம்பிணத்தார் — வன்னெஞ்சிற்
சார்ந்தவாக்கு மற்றவரைத் தானோக்கி வார்த்தைசொல
நேர்ந்தவாக்குங் கல்லாகு நெஞ்சு 39

**வெள்ளமுதுந்** தேனும் வியன்கரும்பு முக்கனியின்
உள்ளமுதுந் தெள்ளமுது மொவ்வாதாற் — கள்ளமிலா
நின்னன்பார் தம்புகழி னீண்மதுரந் தன்னையினி
என்னென்பன் ஐயா இயம்பு 40

[1]வங்கணம் என்பது — நட்பு [2]ஆவல் என்பதனை எதிர்காலத் தன்மை யொருமை வினைமுற்றாகக் கொள்க [3]கருந்தாது — இரும்பு

**பண்ணுலுன்** சீரினைசசம் **பந்தர்**சொல **வெள்ளெலும்பு**
பெண்ணன தெனபாா பெரிநனறே — அணுவச
சைவவடி வாஞான **சம்பந்தர் சீருரைக்கில்**
**தெய்வவடி வாஞ்சாப்பர் சேர்த்து.** 41

**எங்கோவே** யானபுகலி யெமபெருமான தனமணததில்
அஙகோர் பொருடசுமையா ளானேனேல — இஙகேநின
தாளவருநத வேணடேன றடைபடடேன ஆதலினிந
நாளவருநத வேணடுகினறேன நான. 42

**பூவுக்** கரையருமவான புஙகவரும போறறுதிரு
நாவுக கரையரெனு நனுமம — மேவுறற
தொணடர்ககு நீகட்டுச சோறெடுததா யெனறறிநதோ
**தொண்டர்க்குத் தொண்டனென்பார்** சொல. 43

[1]**எம்பரவை** யோமண ணிடநதலைநதான **சுந்தரனுர்**
தமபரவை வீட்டுத தலைககடையாய — வமபணியாய
வாயிற படியாய வடிவெடுகக நோநதிலனே
மாயப பெயாநீண்ட மால. 44

**நண்ணித்** தலையால நடககினறோ மெனபதெஙகண்
மண்ணிற பழைய வழககஙகாண — பணணிறசொல
அமமையாா வாமததோ யாயினுமுன **காரைக்கால்**
**அம்மையார்** போனடநதா ராா. 45

**வேத** முடிவோ விளஙகா கமமுடிவோ
நாத முடிவோ நவிலகணடாய — வாதமுறு
மாசகாககு ணிலலா மணிசசுடரே **மாணிக்க**
**வாசகர்க்கு** நீயுரைதத வாறு 46

**ஆர்கொண்டார்** சேயககறியிட டாரே [2]**சிறுத்தொண்டப்**
**போ**கொண்டா ராயிடிலெம பெமமானே — ஓாதொணடே
நாயககுங கடைபபடட நாஙகளெனபே மெஙகணமுடை
வாயககிங கிஃதோா வழககு 47

**கோள்கொண்ட** நஞசங குடியேனே கூர்கொண்ட
வாளகொண்டு வீசி மடியேனே — கீளகொணட
வங்கோ வணதகழகா! அமபலவா! நினபுகழை
இஙகோதி வாழததாத யான 48

**ஆயாக்** கொடியேனுககு **அன்புடையாய்! நீயருளிங்(கு)**
**ஈயாக் குறையே யிலைகணடாய்!** — [3]மாயாறகும
**விளளாத திருவடிக்கீழ் விண்ணப்பம் யான்செய்து**
**கொள்ளாக் குறையே குறை.** 49

[1]எம்பர! எனபது — அணமைவிளி, இறை — முன்னிலை
[2]செயறகரிய செயத பெரியோாககு ‘சிறுத்தொணடர்’ எனப பெயா அமை வதான, ‘தொண்டர்’ எனனும பெயாககு உரியாா யாரோ? எனபதாம்.
[3]மாயற்கு என்பது — மாயாறகென நீட்டல விகாரமாயிறறு.

**பெற்றிடுதாய்** போலவநின பெறறியெனபேன பிளளையது
மற்றழுதாற கேட்டும வராதநகே — சறறிருககப்
பெறறுள பொறுபபள பிரானீ பொறுககினுநின
பொறறுள பொருவெம புலமபு. 50

**பொன்போற்** பொறுமையுளார புநதிவிடாய் நீயென்பர்
எனபோற பொறுமையுளார யாரகணடாய — புனபோக
வலலாம படிசினநகொண டாணவஞசெய யினனுமை
யெலலாம பொறுககினறேன யான 51

**முன் மணத்திற்** சுநதரரை முனவலுவிற கொண்டதுபோல
எனமணததில நீவந திடாவிடினும — நினகணததில்
ஒனறு மொருகணமவந துறநழைககிற செயததனறி
இனறு மொருமணஞ்செய வேன 52

**செய்யா** ரழலேநின செமமேனி யெனனினுமென
அயயாநின காலபிடிததற கஞசேனகாண — மெயயாவிஞ
ஞானறுகணடு நானமகிழ நநதொணட னெனறெனையும
ஏனறுகொணடாற போது மெனககு 53

**என்பாலோ** வெனபா லிராதோடு கினறமனத
தினபாலோ வமமனததைச சோமாயை — தனபாலோ
யாாபாற பிழையுளதோ யானறியேன எனனமமை
யோாபாற கொளகினறோ யோது 54

**நாணவத்தி** னேனறனையோ நாயேனை மூடிநினற
ஆணவததை யோநா னறியேனே — வீணவததிற
றீஙகுடையா யெனனவிவண செயபிழையை நோககியருட்
பாஙகுடையாய தணடிப பது. 55

**எச்சம்** பெறுமுலகோா **எட்டிமர மானலும்**
**பச்சென றிருககப** பகர்வாாகண் — வெசசெனற
நஞசனையேன குறறமெலா நாடாது நாதவெனை
அஞசனையே லெனபா யமாநது 56

**கற்றறியே** னினனடிசசீா கறறா கழகததில
உறறறியே னுணமை யுணாநதறியேன — சிறறறிவேன்
வனசெயவே னொாவிழியாா மையவினேன மாதேவா
எனசெயவே னினனருளின றேல 57

**மெய்தா** னுடையோா விருமபுகினற **நின்னருளென்**
**செய்தால் வருமோ!** தெரியேனே — பொயதாவு
நெஞசினேன மனறு னிருதகா நினைககேழகக
அஞசினே னனபினமை யால 58

**மாதேவா** வோவா மருநதேவா மாமணியிப
போதேவா வெனறே புலமபுறறேன — நீதாவா
யாளுனை சிதத மறியே னுடமபொழிநது
போனுலென செயவேன புகல. 59

**கொள் செய்தாற்** கேறறிடுமென குறறமெலா மையவெளே
எனசெயநாற றீர்நதிடுமோ யானறியேன — முனசெயதோய்
நினபா லெனேககொடுததே னீசெயக வனறியினி
யென்பாற் செயலொன றிலே 60

**எண்ணிலெளி** யேனறவிர வெலலா வுயிர்களுநின
தண்ணிலவுந தாணீழல சாரநதிடுஙகாண — மணணிலவருந்
தீஙகெனற வெலலாமேன் சிநதையிசைந துறறனமற
ருஙகொனறு மிலலாமை யால். 61

**தாரம்விற்றுஞ் சேய்விற்றுந் தன்னைவிற்றும் பொய்யாத**
**வாரமவைத்தான்** முனனிஙகோர மனனனெனபா—நாரமவைதத
வேணிப பிரானதுதான மெயயாமே லன்றெனேநீ
யேணிற பிறபபிதத தில 62

**உள்ளொன்ற** நினனடிககன புற்றறியே னெனனுளத்தின
வெளளெனற வனமை விளஙகாதோ — நளளொனற
வசசஙகொண டேனேநினக கனபனெனபா வேழததின
எசசஙகண டாறபோல வே 63

[1]**நீத்தாடுஞ்** செஞசடையாய் நீளவேடங கட்டிவஞ்சக
கூததாடு கினறேனேக கொணடுகிலா — கூத்தாகின
பததனெனப ரெனஞே பகலவேடத தாககுமிஙகு
[2]விததமிலா நாயேறகும வேறு. 64

**அன்புடையா** ரினசொல லமுதேறு நினசெவிககே
இனபுடையா யென்பொயயு மேறகுஙகொல்— துன்புடையேன
பொயயுடையே னுயினுநின பொனனருளை வேண்டுமொரு
மெயயுடையே னெனகோ விரைநது. 65

**எனனு** ருயிர்ககுயிரா மெமபெருமா னின்பதத்தை
உனனு ருயிாககுறுதி யுணடோதான — பொனனுகத
தாககுஞ சதுமுகாககுந [3]தானத்த வாககுமறறை
யாாககும புகலுன னருள 66

**வெள்ளைப்** பிறையணிநத வேணிப பிரானேநான
பிளளைப் பிராயததிற பெற்றுளை — எளளப்
பொறுததாளத தாயிற பொறுபபுடையோய நீதான
வெறுததா லினியெனசெய வேன 67

[1]நித்கம எனபது — நீத்தெனககுறைநது நினறது
[2]வித்தம எனபது — அறிவு [3]தானம எனபது — சுவர்ககம.

**ஆயிரமன்** றேநூறு மனறேயீ ரைநதன்றே
ஆயிரமபே ரெநதையெழுத கைநதேகாண — நீயிரவும்
எலலு நினைத்தியென ஏததுகினு மெநதாயவீண்
செலலுமன மெனசெயகேன செப்பு 68

**வஞ்சந்** தருஙகாம வாழககையிடைச சிககியவென
னெஞசந திருததி நிலததிலையே — எஞசங
கரனே மழுககொள கரனே அரனே
வரனே சிதமபரனே வநது. 69

**தாழ்விக்கும்** வஞசச சகமா லொழித்தெனனை
வாழவிககு நலல மருநதெனகோ — வீழவிககு
மீஙகான மாயை யிகநதோாக கருளவோயகின
பாஙகான செமபொற பநம 70

**ஏசொலிக்கு** மானிடனு யெனபிறநதேன றெணடாகளதம
தூசொலிபபான கலலாகத தோனறிலனே—தூசொலிபபான
கலலாகத தோனறுவனோற காளகணடா! நாயேனுக
கெலலா நலமுமுள தே. 71

**குற்றம்** பலசெயினுங கோபஞ செயாதவருட
சிறறம பலமுறையுஞ சிறபரனே — வெறறமபற
போயவிடடா லனறிப் புரநதருளே னெனறெனைநீ
கைவிடடா லெனசெயகேன காண. 72

**தீக்குணத்தார்** யாவருமென சீடரெனி லெனனுடைய
தீககுணததி னெலலையெவா தேர்கிறபார — ஊககமிகும
நலலோாக களககு நதிசசடையோ யெறகருளில
எலலாககு மையுறவா மே 73

**இன்படையான்** றனபுடையா னெனறேழை யேனறலைமேல
அனபுடையாய நீயமைபபித் தாயிதற்கு — வனபடையா
தெவவணண நினனெஞ சிசைநததோ அந்நாளில
இவவணண மெனறறிகி லேன 74

**ஏய்ப்பிறப்போன்** றிலலாதோ யெனபிறபபி னேழுமடஙகோர்
பேயபபிறபபே நலல பிறபபநதோ -- வாயபபுலகம
வஞசயெனத நேக மறைததடிமண வையாமல
அஞசிநினனே டாடு மது 75

**கேடும** பிறைசசடையோய கோளுங குறுமபுஞசாக
காடும பிணிமூபபுங காறாகாண — நீடுநினைக
கணடா ரடிபபொடியைக சணடாா திருவடியைக
கணடாா வடிவுகணடாா கள 76

**மாலெங்கே** வேதனுயர் வாழ்வெங்கே இந்திரன்செங்
கோலெங்கே வானோர் குடியெங்கே — கோலஞ்சேர்
அண்டமெங்கே யவ்வவ் வரும்பொருளெங் கேநினது
**கண்டமங்கே நீலமுருக் கால்!** 77

**எவ்வேளை** யோவருங்கூற் றெம்பாலென் றெண்ணுகின்ற
அவ்வேளை தோறு மழுங்குற்றேன் — செவ்வேளை
மிக்களித்தோய் நின்கழற்கால் வீரத்தை யெண்ணுதொறும்
எக்களித்து வாழ்கின்றேன் யான். 78

**துற்சங்கத்** தோர்கணமுந் தோயாது நின்னடியர்
சற்சங்கத் தென்றனைநீ தான்கூட்டி — நற்சங்கக்
காப்பான் புகழுன் கழற்புகழைக் கேட்பித்துக்
காப்பா யிஃதென் கருத்து. 79

**என்னமுதே** முக்க ணிறையே நிறைஞான
வின்னமுதே நின்னடியை யேத்துகின்றோர்—பொன்னடிக்கே
காதலுற்றுத் தொண்டுசெயக் காதல்கொண்டே னெற்கருணீ
காதலுற்றுச் செய்தல் கடன். 80

**ஆரா** வமுதே யருட்கடலே நாயேன்றன்
பேராத வஞ்சப் பிழைநோக்கி — யாரேனும்
நின்போல்வா ரில்லாதோய் நீயே புறம்பழித்தால்
என்போல்வா ரென்சொல்லா ரீங்கு. 81

**மெய்யாக** நின்னைவிட வேறோர் துணையில்லேன்
ஐயா வதுநீ யறிந்ததுகாண் — பொய்யான
தீதுசெய்வேன் றன்பிழையைச் சித்தங் குறித்திடில்யான்
யாதுசெய்வே னந்தோ வினி. 82

**திண்ண** மறியாச் சிறியே னுளத்திருக்கும்
எண்ண மறிந்தா யிரங்குகிலாய் — அண்ணலுன்பால்
நித்த மிரங்காவென் னெஞ்சமர்ந்த தாலோநின்
சித்த மிரங்காச் செயல். 83

**கொன்னஞ்சேன்** றன்பிழையைக் கூர்ந்துற்று நானினைக்கில்
என்னெஞ்சே யென்னை யெரிக்குங்காண் — மண்ணுஞ்சீர்
எந்தாய்நின் சித்தத்திற் கேதாமோ நானறியேன்
சிந்தா குலனென்செய் வேன். 84

**நின்னன்பர்** தம்பா ணிறுத்துதியோ வன்றியெனைப்
பொன்னன்பர் தம்பாற் புணர்த்துதியோ — [1]பொன்னன்பர்
வைவமே யென்னும் வறியே னறியேனென்
தெய்வமே நின்றன் செயல். 85

[1]பொன்னன்பர் என்பது — செல்வர்.

**என்சிறுமை** நோககா தெனககருளல வேண்டுமென்றே
நினபெருமை நோககியிஙகு நிற்கினறேன — எனபெரும!
யாதோநின சிதத மறியே னடியேறகெப
போதோ வருளவாய புகல  86

**எந்தாயென்** குறறமெலா மெண்ணுஙகா லுணணடுஙகி
நொநதா குலததி னுழைகினறேன — சிநதாத
காள மகிழநின களககருணை யெணணுதொறு
மீளமகிழ கினறேன விரைநது.  87

**எள்ளலே** யெனனினுமோ ரேதததலாயக கொண்டருளெம
வளளலே யெனறுனைநீ வாழவிததால — தளளலே
வேணடுமென யாரே விளமபுவார நினனடியர
காண்டுமெனச சூழவார களிதது  88

**வேணிக்க** மேவைதத வெறபே விலையிலலா
மாணிகக மேகருணை மாகடலே — மாணிககு
**முனபொற் கிழியளித்த முத்தே**யென னுருயிாககு
நினபொற கழலே நிலை.  89

**மூத்தேவர்** போறறு முதற்றேவ நினனையனறி
எததேவா சறறே யெடுததுரைநீ — பிததேனசெய
குறறமெலா மிஙகோர குணமாகக கொணடெனனை
அறறமிலா தாளகின றவா  90

**கங்கைச்** சடையாயமுக கணணுடையாய கட்செவியாம
அஙகச சுடையா யருளுடையாய — மஙகைக
கொருகூ றளிததா யுனைததொழுமிந நாயேன
இருகூ றளிததே னிடாககு.  91

**பேசத்** தெரியேன பிழையறியேன பேதுறினுங
கூசத தெரியேன குணமறியேன — நேசததிற
கொளளுவா ருனனடிமைக கூடடததா ரலலாதார
எளளுவார கணடா யெனை.  92

**ஊணே** யுடையேயென றுடகருதி வெடகமிலேன
வீணே நன ளை விடுகினறேன — காணேனின
செமபாத மேயெனறுந தீராப பொருளெனறு
நம்பாத நாயடியே னை.  93

**சிவமே** சிவஞானச செலவமே யனபா
நவமே தவமே நலமே — நவமாம
வடிவுறற தேவேநின மாககருணை யனறே
படிவுற்ற வெனனுட பயன  94

**கோளாக்கிக்** கொளளுங கொடியே னையுநினககோ
ஆளாக்கிக கொளளற கமைவாயேல — நீளாககுஞ
செஙகேச வேணிச சிவனேயென ஞணவததிற
கெஙகே யிடஙகா ணியமபு 95

**திண்ணஞ்சற்** றீநதிடநின் சிததந திருமபாத
வண ணஞசற றேதெரிய வநதுதுகாண — எணணெஞ்சின
இத்தனையு மெனவினைகள நீஙகி லிருககவணட
மெத்தனையும போதாமை யெனறு 96

**இண்டைச்** சடையோ யெனககருள வெண்ணுதியேல
தொண்டைப பெறுமென துயரெலலாஞ — சணடைககிங(கு)
[1]உயஞசே மெனவோடு மோட்டததிற கெனனுடைய
நெஞசே பிறகிடுஙகா ணினறு 97

**கண்ணு** ணிழுதைகளபாற காட்டிக கொடுககிலெனை
அண்ணு வருளுக கழகனறே — உண்ணுடு
நினனடியார கூட்டததில நீரிவனைச சேர்ததிடுமின்!
எனனடியான எனபா யெடுதது 98

**கண்ணப்ப** னேததுநற கணணபப! மெயஞஞான
விண்ணபப **நின்றனக்கோர் விண்ணப்பம** — மண்ணிற்சில
வானவரைப போறறு மததரோா பலருணடு
நானவரைச சேராம ஞட்டு 99

**பொன்னின்** றொளிரும புரிசடையோய நினனையனறிப
பினனெனை றறியேன பிழைநோக்கி — **எனனை**
**அடித்தாலு நீயே அணைத்தாலு நீயே**
**பிடிததேனுன் பொற்பாதப பேறு.** 100

**துற்குணத்தில்** வேறு தொடாவே னெனினுமறறை
நறகுணததி லுளசீா நயபபேனகாண — சிறகுணததோய்
கூறறுவைததத நினபொற குரைகழறபூந தாளறிக
வேறறுரைததே னிலலை விரிதது. 101

**இப்பாரில்** எனபிழைக ளெலலாம பொறுததருளென
அப்பாநின றடகே யடைககலஙகாண — இபபாரில
**நான்நினது தாள்நிழல் நண்ணுமட்டும் நின்னடியர்பால்**
**நினது சீர்கேட்கப் பண் !** 102

திருச்சிற்றம்பலம்

---

[1]உயநதேம எனபது — உயஞசேம் என த திரிநதது

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# ஐந்தாவது

# மஹாதேவ மாலை

*அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்*

திருச்சிற்றம்பலம்

**கருணைநிறைந்** தகம்புறமுந் துளும்பிவழிந்
துயிர்க்கெல்லாங் களைக ணாகித்
தெருள்நிறைந்த இன்பநிலை வளர்க்கின்ற
**கண்ணுடையோய்!** சிதையா ஞானப்
பொருள்நிறைந்த மறையமுதம் பொழிகின்ற
**மலர்வாயோய்!** பொய்யே னென்றன்
மருள்நிறைந்த மனக்கருங்கற் பாறையுமுட்
கசிந்துருக்கும் **வடிவத் தோய்!**

*எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்*

திருச்சிற்றம்பலம்

**உலகநிலை** முழுதாகி ஆங்காங் குள்ள
உயிராகி உயிர்க்குயிராம் ஒளிதா னாகிக்
கலக்கநிலை யறியாத சாட்சி யாகிக்
கதியாகி மெய்ஞ்ஞானக் கண்ண தாகி
இலகுசித் தாகாசமதாய்ப் பரமா காச
இயல்பாகி யிணையொன்று மில்லா தாகி
அலகிலறி வானந்த மாகிச் **சச்சி**
**தானந்த மயமாகி** யமர்ந்த தேவே 1

**உலகமெலாந்** தனிநிறைந்த வுண்மை யாகி
யோகியர்தம் அனுபவத்தின் உவப்பா யென்றுங்
கலக்கமுறா வுபசாந்த நிலைய தாகிக்
களங்கமற்ற அருண்ஞானக் காட்சி யாகி
விலகலுறா நிபிடவா னந்த மாகி
மீதான தொளிர்கின்ற விளக்க மாகி
இலகுபரா பரமாய்ச்சிற் பரமா யன்பர்
இதயமலர் மீதிருந்த இன்பத் தேவே. 2

**வித்தாகி** முளையாகி விளைவ தாகி
விளைவிக்கும் பொருளாகி மேலு மாகிக்
கொத்தாகிப் பயனாகிக் கொள்வோ னாகிக்
குறைவாகி நிறைவாகிக் குறைவி லாத
சத்தாகிச் சித்தாகி யின்ப மாகிச்
சதாநிலையா யெவ்வுயிர்க்குஞ் சாக்ஷி யாகி
முத்தாகி மாணிக்க மாகித் தெய்வ
முழுவயிரத் தனிமணியாய் முளைத்த தேவே. 3

**வேதாந்த** நிலையாகிச் சித்தாந் தத்தின்
மெய்யாகிச் சமரசத்தின் விவேக மாகி
நாதாந்த வெளியாகி மூத்தாந் தத்தின்
நடுவாகி நவநிலைக்கு நண்ணு தாகி
மூதாண்ட கோடியெல்லாந் தாங்கி நின்ற
முதலாகி மனாதீத முத்தி யாகி
வாதாண்ட சமயநெறிக் கமையா தென்று
மௌனவியோ மத்தினிடை வயங்குந் தேவே. 4

**தோன்றுதுவி** தாத்துவித மாய்வி சிட்டாத்
துவிதமாய்க் கேவலாத் துவித மாகிச்
சான்றசுத்தாத் துவிதமாய்ச் சுத்தந் தோய்ந்த
சமரசாத் துவிதமுமாய்த் தன்னை யன்றி
ஊன்றுநிலை வேறொன்று மிலதா யென்றும்
உள்ளதாய் நிரதிசய வுணர்வா யெல்லாம்
ஈன்றருளுந் தாயாகித் தந்தை யாகி
எழிற்குருவாய்த் தெய்வதமா யிலங்குந் தேவே. 5

**பரமாகிச்** சூக்குமமாய்த் தூல மாகிப்
பரமார்த்த நிலையாகிப் பதத்தின் மேலாஞ்
சிரமாகித் திருவருளாம் வெளியா யான்ம
சிற்சத்தி யாய்ப்பரையின் செம்மை யாகித்
திரமாகித் தற்போத நிவர்த்தி யாகிச்
சிவமாகிச் சிவானுபவச் செல்வ மாகி
அரமாகி யானந்த போத மாகி
ஆனந்தா தீதமதா யமர்ந்த தேவே. 6

**இந்தியமாய்க்** கரணாதி யனைத்து மாகி
இயல்புருட னாய்க்கால பரமு மாகிப்
பந்தமற்ற வியோமமாய்ப் பரமா யப்பாற்
பரம்பரமாய் விசுவமுண்ட பான்மை யாகி
வந்தவுப சாந்தமதாய் மௌன மாகி
மகாமௌன நிலையாகி வயங்கா நின்ற
அந்தமில்தொம் பதமாய்த்தத் பதமா யொன்றும்
அசிபதமாய் அதீதமா யமர்ந்த தேவே. 7

**நின்மயமா** யெனமயமா யொனறுங காட்டா
நிராமயமாய நிருவிகறப நிலையாய மேலாந
தன்மயமாயத தறபரமாய விமல மாகித
தடததமாயச சொருபமாயச சகச மாகிச
சின்மயமாயச சிறபரமா யசல மாகிச
சிறசொலித மாயகணட சிவமா யெஙகு
மன்மயமாய வாசகா தீத மாகி
மனுதீத மாயமாநத மௌனத தேவே. 8

**அளவிறந்த** நெடுங்காலஞ் சித்தா யோகர்
அறிஞர்மல ரயனமுதலோ ரனநத வேதம்
களவிறநதுங கரணாதி யிறநதுஞ செயயுங
கடுநதவததுங காணபரிதாங கடவு ளாகி
உளவிறநத எமபோலவா ருளளத் துளளே
ஊறுகினற தெளளமுத வூற லாகிப
பிளவிறநது பிணடாணட முழுதுந தாஙயப
பிறஙகுகினற பெருஙகருணைப பெரிய தேவே. 9

**வாயாகி** வாயிறநத மௌன மாகி
மதமாகி மதஙகடநத வாயமை யாகிக
காயாகிப பழமாகித தருவாய மறறைக
கருவிகர ணாதிகளின கலபபாயப பெற்ற
தாயாகித தநதையாயப பிளளை யாகித
தானாகி நானாகிச சகல மாகி
ஓயாத சததியெலா முடைய தாகி
ஒன்றாகிப பலவாகி யோஙகுந தேவே 10

**அண்டங்கள்** பலவாகி யவறறின மேலும
அளவாகி யளவாத வதீத மாகிப
பிண்டஙக ளனநதவகை யாகிப பிணடம
பிறஙகுகினற பொருளாகிப பேதந தோறறும்
பண்டஙகள பலவாகி யிவறறைக காககும
பதியாகி யானநதம பழுததுச சாநதங
கொண்டெஙகு நிழலபரபபித தழைநத ஞானக
கொழுஙகடவுட டருவாகிக குலவுந தேவே. 11

**பொன்னாகி** மணியாகிப போக மாகிப்
புறமாகி யகமாகிப் புனித மாகி
மன்னாகி மலையாகிக கடலு மாகி
மதியாகி ரவியாகி மறறு மாகி
முனனாகிப பினனாகி நடுவு மாகி
முழுதாகி நாதமுற முழுஙகி யெஙகு
மினனாகிப பரவியினப வெளளந தேககக
வியனகருணைப பொழிமுகிலாய விளஙகுந தேவே. 12

**அரிதாகி** யரியதினு மரிய தாகி
    அநாதியா யாதியா யருள தாகிப்
பெரிதாகிப் பெரியதினும் பெரிய தாகிப்
    பேதமா யபேதமாய்ப் பிறங்கா நின்ற
கரிதாகி வெளிதாகிக் கலைக ளாகிக்
    கலைகடந்த பொருளாகிக் கரணா தீதத்
தெரிதான வெளிநடுவி லருளா னந்தச்
    செழுங்கிரணச் சுடராகித் திகழுந் தேவே. 13

**உருவாகி** யுருவினிலுள் ளுருவ மாகி
    உருவத்தி லுருவாகி யுருவுள் ளொன்றாய்
அருவாகி யருவினிலுள் ளருவ மாகி
    அருவத்தி லருவாகி யருவுள் ளொன்றாய்க்
குருவாகிச் சத்துவசிற் குணத்த தாகிக்
    குணரகிதப் பொருளாகிக் குலவா நின்ற
மருவாகி மலராகி வல்லி யாகி
    மகத்துவமா யணுத்துவமாய் வயங்குந் தேவே. 14

**சகலமாய்க்** கேவலமாய்ச் சுத்த மாகிச்
    சராசரமா யல்லவாய்த் தானே தானாய்
அகலமாய்க் குறுக்கமாய் நெடுமை யாகி
    அவையனைத்து மணுகாத வசல மாகி
இகலுறாத் துணையாகித் தனிய தாகி
    எண்குணமா யெண்குணத்தெம் மிறையா யென்றும்
உகலிலாத் தண்ணருள்கொண் டுயிரை யெல்லாம்
    ஊட்டிவளர்த் திடுங்கருணை யோவாத் தேவே. 15

**வாசகமாய்** வாச்சியமாய் நடுவா யந்த
    வாசகவாச் சியங்கடந்த மௌன மாகித்
தேசகமா யிருளகமா யிரண்டுங் காட்டாச்
    சித்தகமாய் வித்தகமாய்ச் சிறிதும் பந்த
பாசமுறாப் பதியாகிப் பசுவு மாகிப்
    பாசநிலை யாகியொன் றும்பகரா தாகி
நாசமிலா வெளியாகி யொளிதா னாகி
    நாதாந்த முடிவில்நடம் நவிற்றுந் தேவே. 16

**சகமாகிச்** சீவனா யீச னாகிச்
    சதுமுகனாய்த் திருமாலாய் அரனு ருனாகி
மகமாயை முதலாய கூட்டத் தானாகி
    வானபிரம மாகியல்லா வழக்கு மாகி
இகமாகிப் பரமாகிச் சமய கோடி
    எத்தனையு மாகியவை எட்டா வானச்சற்
பகமாகிப் பரமாகிப் பரம மாகிப்
    பராபரமாய்ப் பரம்பரமாய்ப் பதியுந் தேவே 17

**விதியாகி** யரியாகிக் கிரீச னாகி
விளங்குமகேச சுரனாகி விமல மான
நிதியாகுஞ் சதாசிவனாய் விந்து வாகி
நிகழ்நாத மாய்ப்பரையாய் நிமலா னந்தப்
பதியாகும் பரமசிவமாய்ப் பரமாய் மேலாய்ப்
பக்கமிரண் டாயிரண்டும் பகரா தாகிக்
கதியாகி அளவிறந்த கதிக ளெல்லாம்
கடந்துநின்று நிறைந்தபெருங் கருணைத் தேவே. 18

**மானாகி** மோகினியாய் விந்து வாகி
மற்றவையாற் காணாத வான மாகி
நானாகி நானல்ல னாகி நானே
நானாகும் பதமாகி நானருன் கண்ட
தானாகித் தானல்ல னாகித் தானே
தானாகும் பதமாகிச் சகச ஞான
வானாகி வானடுவில் வயங்கு கின்ற
மௌனநிலை யாகியெங்கும் வளருந் தேவே. 19

**மந்திரமாய்ப்** பதமாகி வன்ன மாகி
வளர்கலையாய்த் தத்துவமாய்ப் புவன மாகிச்
சந்திரனா யிந்திரனா யிரவி யாகித்
தானவராய் வானவராய்த் தயங்கா நின்ற
தந்திரமா யிவையொன்று மல்ல வாகித்
தானாகித் தனதாகித் தானனா காட்டா
அந்தரமா யப்பாலா யதற்கப் பாலாய்
அப்பாலுக் கப்பாலா யமர்ந்த தேவே. 20

**மலைமேலுங் கடன்மேலும் மலரின் மேலும்**
வாழ்கின்ற **மூவுருவின்** வயங்குங் கோவே
நிலைமேலு நெறிமேலு நிறுத்து கின்ற
நெடுந்தவத்தோர் நிறைமேலு நிகழ்த்தும் வேதக்
கலைமேலும் எம்போல்வா ருளத்தின் மேலும்
கண்மேலுந் தோள்மேலுங் கருத்தின் மேலும்
தலைமேலும் உயிர்மேலும் உணர்வின் மேலும்
தகுமன்பின் மேலுமவர் தாண்மெய்த்த தேவே. 21

**பொற்குன்றே** யகம்புறமும் பொலிந்து நின்ற
பூரணமே யாரணத்துட் பொருளே யென்றும்
கற்கின்றோர்க் கினியசுவைக் கரும்பே தான்
கற்பகமே கற்பகத்தீங் கனியே வாய்மைச்
சொற்குன்றா நாவகத்துண் மாறா வின்பம்
தோற்றுகின்ற திருவருட்சீர்ச் சோதியே விண்
நிற்கின்ற சுடரே அச் சுடருள் ஓங்கும்
நீளொளியே அவ்வொளிக்குள் நிறைந்த தேவே. 22

**தேசுவிரித்** திருளகற்றி என்றும் ஓங்கித்
திகழ்கின்ற செழுங்கதிரே செறிந்த வாழ்க்கை
மாசுவிரித் திடுமனத்திற் பயிலாத் தெய்வ
மணிவிளக்கே ஆனந்த வாழ்வே எங்கும்
காசுவிரித் திடுமொளிபோற் கலந்து நின்ற
காரணமே சாந்தமெனக் கருதா நின்ற
தூசுவிரித் துடுக்கின்றோர் தம்மை நீங்காச்
சுகமயமே யருட்கருணைத் துலங்குந் தேவே. 23

**கோவேஎண்** குணக்குன்றே குன்றா ஞானக்
கொழுந்தேனே செழும்பாகே குளிர்ந்த மோனக்
காவேமெய் யறிவின்ப மயமே யென்றன்
கண்ணேமுக் கண்கொண்ட கரும்பே வானத்
தேவேயத் தேவுக்குந் தெளிய வொண்ணாத்
தெய்வமே வாடாமற் றிகழ்கின்ற போதப்
பூவேயப் பூவிலுறு மணமே யெங்கும்
பூரணமாய் நிறைந்தருளும் புனிதத் தேவே. 24

**வானேயவ்** வானுலவுங் காற்றே காற்றின்
வருநெருப்பே நெருப்புறுநீர் வடிவே நீரிற்
றானேயும் புவியேயப் புவியிற் றங்கும்
தாபரமே சங்கமமே சாற்று கின்ற
ஊனேநல் லுயிரேயுள் ளொளியே யுள்ளத்(து)
உணர்வேயவ் வுணர்வுகலந் தூறு கின்ற
தேனேமுக் கனியேசெங் கரும்பே பாகின்
றீஞ்சுவையே சுவையனைத்துந் திரண்ட தேவே. 25

**விண்ணேவிண்** ணுருவேவிண் முதலே விண்ணுள்
வெளியேயவ் வெளிவிளங்கு வெளியே யென்றன்
கண்ணேகண் மணியேகண் ணொளியே கண்ணுட்
கலந்துநின்ற கதிரேயக் கதிரின் வித்தே
தண்ணேதண் மதியேயம் மதியிற் பூத்த
தண்ணமுதே தண்ணமுதச் சாரமே சொற்
பண்ணேபண் ணிசையேபண் மயமே பண்ணின்
பயனேமெய்த் தவர்வாழ்த்திப் பரவுந் தேவே. 26

**மாணேயத்** தவருளத்தே மலர்ந்த செந்தா
மரைமலரின் வயங்குகின்ற மணியே ஞானப்
பூணேமெய்ப் பொருளேயற் புதமே மோனப்
புத்தமுதே யானந்தம் பொலிந்த பொற்பே
ஆணேபெண் ணுருவமே யலியே யொன்றும்
அல்லாத பேரொளியே யனைத்துந் தாங்குந்
தூணேசிற் சுகமேயச் சுகமேற் பொங்கும்
சொரூபானந் தக்கடலே சோதித் தேவே. 27

**பூதமே** யவைதோனறிப் புகுந் தொடுங்கும்
புகலிடமே யிடமபுரிநத பொருளே போற்றும
வேதமே வேததநின விளைவே வேத
வியனமுடிவே யமமுடிவின விளஙகுங் கோவே
நாதமே நாதாநத நடமே யநத
நடத்திணையுள நடததுகினற நலமே ஞான
போதமே போதமெலாங கடநது நினற
பூரணமே யோகியருட் பொலிநத தேவே. 28

**ஞாலமே** ஞாலமெலாம விளஙக வைத்த
நாயகமே கற்பமுதல நவிலா நினற
காலமே காலமெலாங கடநத ஞானக
கதியேமெயக கதியளிககுங கடவுளே சிற்
கோலமே குணமேயுட குறியே கோலங
குணஙகுறிகள கடநதுநினற குருவே யன்பர்
சீலமே மாலறியா மனததிற கணட
செமபொருளே யுமபாபதஞ செழிககுந் தேவே. 29

**தத்துவமே** தத்துவா தீதமே சிற
சயம்புவே யெஙகுநிறை சாக்ஷியே மெய்ச்
சத்துவமே சததுவததின பயஞ மினபந
தநதருளும பெருவாழவாஞ சாமியே யெஞ
சித்தநிலே தெளிவிககு மொளியே சறறுந
தெவிட்டாத தெளளமுதே தேனே யெனறுஞ
சுத்தநெறி திறமபாதார அறிவிற றேயநத
சுகப்பொருளே மெயஞ்ஞானந துலஙகுந தேவே. 30

**யோகமே** யோகத்தின பயனே யோகத்
தொருமுதலே யோகததி னேஙகுந தூய
போகமே போகததின பொலிவே போகம
புரிநதருளும புணணியமே புனித ஞான
யாகமே யாகததின விளைவே யாகத
திறையேயவ விறைபுரியு மினபே யனபர்
மோகமே மோகமெலா மழிதது வீறும
மோனமே மோனததின முளைதத தேவே. 31

**காட்சியே** காணபதுவே ஞேயமே யுட
கண்ணுடையார் கணணிறைநத களிப்பே யோங்கு
மாட்சியே யுண்மையறி வினப மெனன
வயஙகுகினற வாழவேமா மௌனக காணி
ஆட்சியே ஆடசிசெயும அரசே சுதத
அறிவேமெய யனபேதெள ளமுதே நலல
சூட்சியே [1]சூட்சியெலாங கடநது நினற
துரியமே துரியமுடிச சோதித் தேவே. 32

[1]எதுகை நயமபறறி நினறது

**மறைமுடிக்குப்** பொருந்தமுறு மணியே ஞான
வாரிதியே அன்பர்கள்தம மனத்தே நின்ற
குறைமுடிக்குங் குணக்குன்றே! குனரு மோனக
கோமளமே தூயசிவக கொழுநதே வெள்ளைப்
பிறைமுடிககும பெருமானே! துவளு மாலைப்
பெமமானே! செங்கமலப் பிரானே! இந்த
இறைமுடிககு மூவாகட்கு மேலாய நின்ற
இறையேயிவ் வுருவுமினறி யிருநத தேவே. 33

**கோதகன்ற** யோகாமனக குகையில வாழுங்
குருவேசண் முகங்கொணட கோவே வஞ்ச
வாதகனற ஞானியாதம மதியி லூறும
வானமுதே யானநத மழையே மாயை
வேதகனற முத்தர்களை விழுஙகும் ஞான
வேழமே மெய்யினப விருநதே நெஞசில
தீதகனற மெய்யடியா தமககு வாயத்த
செலவமே யெலலையிலாச சீரமைத தேவே. 34

**அருளருவி** வழிந்துவழிந தொழுக வோஙகும
ஆனநதத தனிமலையே யமல வேதப
பொருளளவு நிறைநதவறறின மேலு மோஙகிப்
பொலிகினற பரமபொருளே புரண மாகி
இருளறுசிற பிரகாச மயமாகு சுதத
ஏகாநதப பெருவெளிககுள இருநத வாழவே
தெருளளவு முளமுழுதுங கலநது கொணடு
தித்திககுஞ செழுநதேனே தேவ தேவே. 35

**அளவையெலாங்** கடநதுமனங கடநது மற்றை
அறிவையெலாங கடநதுகடந தமல யோகர்
உளவையெலாங கடநதுபதங கடநது மேலை
ஒனறுகடந திரண்டுகடந துணரச சூழநத
களவையெலாங கடநதண்ட பிணட மெலலாங்
கடநதுநிறை வானசுகக கடலே யனபர்
வளவையெலா மிருளகறறு மொளியே மோன
வாழவேயென உயிரககுயிராய வதியுந தேவே 36

**வன்புகலந்** தறியாத மனத்தோர் தஙகள
மனஙகலநது மதிகலநது வயஙகா நினற
எனபுகலந தூனகலநது புலனக ளோடும
இநதிரியம அவைகலநதுள ளியஙகு கினற
அனபுகலந தறிவுகலந துயிரைம பூதம
ஆனமாவுங கலநதுகலந தணணித தூறி
இனபுகலந தருளகலநது துளுமபிப பொஙகி
எழுஙகருணைப பெருககாறே யினபத தேவே. 3

**தண்ணமுத** மதிகுளிரநத கிரணம வீசத
தடமபொழிறபூ மணம்வீசத் தெனறல வீச
எண்ணமுதப பனிககுநிலா முறறத தேயின
னிசைவீசத தண்பனிநீா எடுதது வீசப்
பெண்ணமுதம அனையவாவிண் ணமுதம ஊட்டப்
பெறுகினற சுகமனைத்தும் பிற்பட் டோடக்
கண்ணமுதத துடமபுயிாமற றனைதது மினபங
கலநதுகொளத தருஙகருணைக கடவுள் தேவே. 38

**சுழியாத** அருட்கருணைப பெருககே யெனறுந்,
தூண்டாத மணிவிளககின சோதியே வான்
ஒழியாது கதிரபரபபுஞ சுடரே யனபர்க(கு)
ஓவாத இனபருளும ஒனறே விணணோர்
விழியாலு மொழியாலு மனததி னாலும
விழைதருமெயத தவததாலும விளமபும எநத
வழியாலுங கணடுகொளற கரிதாயச சுத்த
மௌனவெளி யூடிருநது வயஙகுந தேவே. 39

**சொல்லொழியப்** பொருளொழியக கரண மெலலாஞ்
சோாநதொழிய வுணர்வொழியத துளஙகா நினற
அலலொழியப் பகலொழிய நடுவே நினற
ஆனநத அனுபவமே அதீத வாழவே
நெலலொழியப பதாகொளவாா போல இனப
நிறைவொழியக குறைகொளமத நெறியோர் நெஞ்சக
கலலொழிய மெயயடியாா இதய மெலலாம
கலநதுகலந தினிககினற கருணைத் தேவே. 40

**அலைகடலும்** புவிவரையும அனலகால நீரும
அநதரமும மறறையகி லாணடம யாவும
நிலைகுலையா வணணமருள வெளியி னூடு
நிரைநிரையா நிறுததியுயிா நிகழும வணணந
தலைகுலையாத் ததவஙசெய திரோதை யெனனுந
தனியாணை நடததியருள தலைததல எனறும
மலைவறவீற றிருநதருளு மரசே முததி
வழிததுணையே விழிததுணையுண மணியாந தேவே. 41

**வரம்பழுத்த** நெறியேமெயந நெறியி லினப
வளமபழுதத பெருவாழவே வானோர் தஙகள்
சிரமபழுதத பதபபொருளே யறிவா னநத
சிவமபழுதத அனுபவமே சிதாகா சத்தில்
பரமபழுதத நடததரசே கருணை யெனனும
பழமபழுதத வானறருவே பரம ஞானத
திரமபழுதத யோகியர்தம யோகத துளளே
தினமபழுதுக கனிநதவருட செலவத தேவே. 42

**அண்டமெலாங்** கண்ணுகக் கொளினுங் காண்டற்
கணுத்துணையுங் கூடாவென் றனந்த வேதம்
விண்டலறி யோலமிட்டுப் புலம்ப மோன
வெளிக்குள்வெளி யாய்நிறைந்து விளங்கும் ஒன்றே
கண்டவடி வாய்க்கண்ட மயமாய் யெங்குங்
கலந்துநின்ற பெருங்கருணைக் கடவு ளேயெஞ்
சண்டவினைத் தொடக்கறச்சின் மயத்தைக் காட்டுஞ்
சற்குருவே சிவகுருவே சாந்தத் தேவே. 43

**பேதமுறா** மெய்ப்போத வடிவ மாகிப்
பெருங்கருணை நிறம்பழுத்துச் சாந்தம் பொங்கிச்
சீதமிகுந் தருள்கனிந்து கனிந்து மாறாச்
சின்மயமாய் நின்மலமே மணந்து நீங்கா
ஆதரவோ டியன்மௌனச் சுவைமேன் மேற்கொண்
டானந்த ரசமொழுக்கி யன்பா லென்றுஞ்
சேதமுறா தறிஞருளந் தித்தித் தோங்கும்
செழும்புனிதக் கொழுங்கனியே தேவ தேவே. 44

**உடல்குளிர** உயிர்தழைக்க உணர்ச்சி யோங்க
உளங்கனிய மெய்யன்ப ருள்ளத் தூடே
கடலனைய பேரின்பந் துளும்ப நாளுங்
கருணைமலர்த் தேன்பொழியுங் கடவுட் காவே
விடலரிய எம்போல்வா ரிதயந் தோறும்
வேதாந்த மருந்தளிக்கும் விருந்தே வேதம்
தொடலரிய வெளிமுழுதும் பரவி ஞானச்
சோதிவிரித் தொளிர்கின்ற சோதித் தேவே. 45

**கிரியைநெறி** யகற்றிமறை முடிவில் நின்று
கேளாமற் கேட்கின்ற கேள்வியே சொற்
கரியவரை விடுத்துநவ நிலைக்கு மேலே
காணாமற் காண்கின்ற காட்சியே யுள்
அரியநிலை ஒன்றிரண்டின் நடுவே சற்றும்
அறியாமல் அறிகின்ற அறிவே யென்றும்
உரியசதா நிலைநின்ற உணர்ச்சி மேலோர்
உன்னாமல் உன்னுகின்ற ஒளியாந் தேவே. 46

**சொற்போதங்** கரும்பெரிய மறைகள் நாடித்
தொடர்ந்துதொடர்ந் தயர்ந்திளைத்துத் துளங்கி யேங்கிப்
பிற்போத விரைந்தன்ப ருளத்தே சென்ற
பெருங்கருணைப் பெருவாழ்வே பெயரா தென்றுந்
தற்போத ஒழிவினிடை நிறைந்து பொங்கித்
ததும்பிவழிந் தோங்கியெல்லாந் தானே யாகிச்
சிற்போதத் தகம்புறமுங் கோத்து நின்ற
சிவானந்தப் பெருக்கேமெய்ச் செல்வத் தேவே. 47

பொங்குபல சமயமெனு நதிக ளெல்லாம்
புகுந்துகலந் திடநிறைவாய்ப் பொங்கி யோங்குங்
கங்குகரை காணாத கடலே யெங்குங்
கண்ணாகக் காண்கின்ற கதியே யன்பர்
தங்கநிழற் பரப்பிமயற் சோடை யெல்லாந்
தணிக்கின்ற தருவேபூந் தடமே ஞானச்
செங்குமுத மலரவரு மதியே யெல்லாஞ்
செய்யவல்ல கடவுளே தேவ தேவே. 48

வான்காணா மறைகாணா மலரோன் காணான்
மால்காணா னுருத்திரனு மதித்துக் காணான்
நான்காணா விடத்ததனைக் காண்பே மென்று
நல்லோர்கள் நவில்கின்ற நலமே வேட்கை
மான்காணா உள்ளகமல மலர்த்தா நின்ற
வான்சுடரே! ஆனந்த மயமே யீன்ற
ஆன்காணா இளங்கன்றா யலமந் தேங்கும்
அன்பர்தமைக் கலந்துகொளும் அமலத் தேவே. 49

மெய்ஞ்ஞான விருப்பத்தி லேறிக் கேள்வி
மீதேறித் தெளிந்திச்சை விடுத லேறி
அஞ்ஞான மற்றபடி யேறி யுண்மை
அறிந்தபடி நிலையேறி அதுநா னென்னுங்
கைஞ்ஞானங் கழன்றேறி மற்ற வெல்லாங்
கடந்தேறி மௌனவியற் கதியி லேறி
எஞ்ஞானம் அற்றதெளிந்தோர் கண்டுங் காணேம்
என்கின்ற அனுபவமே யின்பத் தேவே. 50

பற்றறியா முத்தர்தமை யெல்லாம் வாழைப்
பழம்போல விழுங்குகின்ற பரமே மாசு
பெற்றறியாப் பெரும்பதமே பதத்தைக் காட்டும்
பெருமானே ஆனந்தப் பேற்றின் வாழ்வே
உற்றறியா தின்னுமின்னு மறைக ளெல்லாம்
ஓலமிடுத் தேடநின்ற ஒன்றே ஒன்றுங்
கற்றறியாப் பேதையேன் றனக்கு மின்பங்
கனிந்தளித்த அருட்கடலே கருணைத் தேவே. 51

மெய்யுணர்ந்த வாதவூர் மலையைச் சுத்த
வெளியாக்கிக் கலந்துகொண்ட வெளியே முற்றும்
பொய்யுணர்ந்த எமைப்போல்வார் தமக்கு மின்பம்
புரிந்தருளுங் கருணைவெள்ளப் பொற்பே யன்பர்
கையுறைந்து வளர்நெல்லிக் கனியே யுள்ளங்
கரைந்துகரைந் துருகவவர் கருத்தி னூடே
உய்யுநெறி யொளிகாட்டி வெளியு முள்ளும்
ஓங்குகின்ற சுயஞ்சுடரே யுண்மைத் தேவே. 52

**ஒலிவடிவு** நிறஞசுவைகள நாறற மூற்றம
உறுதொழிலகள பயனபலவே றுளவா யெங்கும
மலிவகையா யெவவகையு மொனரு யொன்றும
மாட்டாதா யெலலாமும் வலல தாகிச
சலிவகையில லாதமுதற பொருளே யெலலாந்
தனமயமாய விளஙகுகினற தனியே யாண்பெண்
அலிவகையல லாதவகை கடநது நினற
அருட்சிவமே சிவபோகத தமைநத தேவே. 53

**பேராய** வண்டஙகள பலவும பிண்ட
பேதஙகள பற்பலவும பிண்டாண் டத்தின்
வாராய பலபொருளுங் கடலு மண்ணும
மலையுளவுங கடலுளவு மணலும் வானும்
ஊராத வானமீனு மணுவு மறறை
உளளனவு மளந்திடலாம ஓகோ! உன்னை
யாராலு மளபபரிதென றனநத வேதம
அறைநதிளைகக அதிதூர மாகுந தேவே. 54

**கற்பங்கள்** பலகோடி செலலத் தீய
கனலினடு வூசியினமேற காலை யூன்றிப்
பொறபறமெய யுணவினறி யுறககமினறிப்
புலாநதெலுமபு புலபபடவைம பொறியை யோம்பி
நிற்பவருக **கொளித்து**மறைக கொளித்து யோக
நீணமுனிவாக கொளிததமரர்க கொளித்து மேலாஞ
சிறபததிற சினமயமாய நிறைநது ஞானத்
திருவாள ருடகலநத தேவ தேவே. 55

**மட்டகன்ற** நெடுஙகால மனத்தால வாககான்
மதிததிடினும புலமபிடினும வாரா தென்றே
கட்டகனற மெயயறிவோர கரண நீககிக
கலையகற்றிக கருவியெலாங கழறறி மாயை
விட்டகனறு கருமமல போதம யாவும
விடுத்தொழித்துச சகசமல வீகக நீககிச
சுட்டகனறு நிறகவவர் தமமை முறறுஞ
சூழநதுகலந திடுஞ்சிவமே துரியத் தேவே. 56

**உருநான்கு** மருநானகு நடுவே நினற
உருவருவ மொன்றுமிவை யுடனமே லுற்ற
ஒருநானகு மிவைகடநத வொனறு மாயவ
வொனறினடு வாயநடுவுள ளொனருய் நின்றே
இருநானகு மமைநதவரை நானகி னேடும
எணணுனகின மேலிருதது மிறையே மாயைக
கருநானகும பொருணனகுங காட்டு முககட்
கடவுளே கடவுளர்கள கருதுந தேவே. 57

**பாங்குளநாந்** தெரிதுமெனத் துணிந்து கோடிப்
  பழமறைகள் தனித்தனியே பாடிப் பாடி
ஈங்குளதென் றாங்குளதென் றோடி யோடி
  இளைத்திளைத்துத் தொடர்ந்துதொடர்ந் தெட்டுந்தோறும்
வாங்குபர வெளிமுழுதும் நீண்டு நீண்டு
  மறைந்துமறைந் தொளிர்கின்ற மணியே யெங்குந்
தேங்குபர மானந்த வெள்ளமே சச்
  சிதானந்த வருட்சிவமே தேவ தேவே 58

**எழுத்தறிந்து** தமையுணர்ந்த யோகர் உள்ளத்
  தியலறிவாந் தருவினிலன் பெனுமோ ருச்சிப்
பழுத்தளிந்து மௌனநறுஞ் சுவைமேற் பொங்கிப்
  பதம்பொருந்த வனுபவிக்கும் **பழமே** மாயைக்
கழுத்தரிந்து கருமமலத் தலையை வீசுங்
  கடுந்தொழிலோர் தமக்கேற்ற கருணை காட்டி
விழுத்துணையா யமர்ந்தருளும் பொருளே மோன
  வெளியினிறை யானந்த விளைவாந் தேவே 59

**உருத்திரர்நா** ரணர்பிரமர் விண்ணோர் வேந்தர்
  உறுகருடர் காந்தருவ ரியக்கர் பூதர்
மருத்துவர்யோ கியர்சித்தர் முனிவர் மற்றை
  வானவர்கண் முதலோர்தம் மனத்தாற் றேடிக்
கருத்தழிந்து தனித்தனியே சென்று **வேதங்**
  **களை**வினவ மற்றவையுங் காணே மென்று
வருத்தமுற்றுங் கவரொடு புலம்ப நின்ற
  வஞ்சவெளி யேயின்ப மயமாந் தேவே 60

**பாயிரமா** மறையனந்த மனந்த மின்னும்
  பார்த்தளந்து காண்டுமெனப் பலகால் மேவி
ஆயிரமா யிரமுகங்க ளாலும் பன்னாள்
  அளந்தளந்தோர் அணுத்துணையு மளவு காணா
தேயிரங்கி யழுதுசிவ சிவவென் றேங்கித்
  திரும்பவருட் பரவெளிவாழ் சிவமே யின்றத்
தாயிரங்கி வளர்ப்பதுபோ லெம்போல் வாரைத்
  தண்ணருளால் வளர்த்தென்றுந் தாங்குந் தேவே. 61

[பொது நூல்—வேதம்]

**அந்தரமிங்** கறிவோமற் றதனி லண்டம்
  அடுக்கடுக்கா யமைந்தவுள வறிவோ மாங்கே
உந்துறும்பல் பிண்டநிலை யறிவோஞ் சீவன்
  உற்றநிலை யறிவோமற் றனைத்து நாட்டம்
எந்தைநின தருள்விளையாட் டந்தோ வந்தோ
  எள்ளளவு மறிந்திலோ மென்னே யென்று
முந்தனந்த **மறைகளெலாம்** வழுத்த நின்ற
  முழுமுதலே யன்பர்குறை முடிக்குந் தேவே 62

[அநுபவ நூல்—உபநிடதம]

**தோன்றுபர** சாகரமுங கணடோ மநதச
சொபபனமுங கணடோமேற சுழுததி கணடோம்
ஆனறபர துரியநிலை கணடோ மபபால
அதுகணடோ மபபாலா மதுவுங கணடோம
ஏனறவுப சாநதநிலை கணடோ மபபால
இருநதநிலைக் காணகிலோ மெனனே யென்று
சானறஉப **னிடங்களெலாம்** வழுதத நினற
தனமயமே சினமயமே சகசத தேவே. 63

[சிறபபு நூல்—ஆகமம்]

**பரிக்கிரக** நிலைமுழுதுங தொடாநதோ மேலைப்
பரவிநது நிலையனைத்தும பாாதநோம பாசம
எரிககுமியற பரநாத நிலைககண மெலல
எயதினோ மபபாலு மெடடிப போனோந
தெரிககரிய வெளிமூனறுங தெரிநதோ மெஙகுஞ
சிவமேநின சினமயமோ சிறிதுந தேரோந
தரிககரிதென **ருகமங்க ளெல்லாம்** போறறத
தனிநினற பரமபொருளே சாநதத தேவே. 64

[கலைகள—பசுநூல]

**மணக்குமலர்த்** தேனுண்ட வணடே போல
வளாபரமா னநதமுணடு மகிழநதோ ரெலலாம்
இணககமுறக கலநதுகலந ததீத மாதற்
கியறகைநிலை யாததுதா னெமமாற கூறுங
கணககுவழக கனைததினையுங கடநத தநதோ
காணபரிநங கெவாககுமெனக **கலைக ளெல்லாம்**
பிணககறநின ரேலமிடத தனிதது நினற
பெருமபதமே மதாதீதப பெரிய தேவே. 65

**பொதுவென்றும்** பொதுவினடம புரியா நினற
பூரணசிற சிவமெனறும போதா னநத
மதுவெனறும பிரமமெனறும பரம மெனறும
வகுககினறோா வகுததிடுக வதுதா னெனறும
இதுவெனறுஞ் சுட்டவொணு ததனற சுமமா
இருபபதுவே துணிவெனககொண் டிருககின றோரை
**விது**[1]வெனற தணணளியாற கலநது கொண்டு
விளஙகுகினற பெருவெளியே **விமலத** தேவே. 66

**அருமறையா** கமங்கணமுத னடுவீ றெலலாம
அமைநதமைநது மறறவைககு மபபா லாகிக
கருமறைநத வுயிர்களதொறுங கலநது மேவிக
கலவாமற பனனெறியுங கடநது ஞானத
திருமணிமன றகததினப வுருவா யெனறுந
திகழகருணை நடமபுரியுஞ சிவமே மோனப
பெருமலையே பரமவினப நிலையே முககட
பெருமானே யெததிறததும பெரிய தேவே. 67

[1] **விது** எனபது—**சநதிரன,** ஈணடிரணட னுருபு விரிகக

**என்னுயிர்நீ** யென்னுயிர்க்கோ ருயிருநீ யென்
இன்னுயிர்க்குத் துணைவனீ யென்னை யீன்ற
அன்னைநீ யென்னுடைய வப்பனீ யென்
அரும்பொருணீ யென்னிதயத் தன்புநீ யென்
நன்னெறிநீ யெனக்குரிய வுறவுநீ யென்
நற்குருநீ யெனைக்கலந்த நட்புநீ யென்
றன்னுடைய வாழ்வுநீ யென்னைக் காக்குந்
தலைவனீ கண்மூன்று தழைத்த தேவே. 68

**தானாகித்** தானல்ல தொன்று மில்லாத்
தன்மையனா யெவ்வெவைக்குந் தலைவ னாகி
வானாகி வளியனலாய் நீரு மாகி
மலர்தலைய வுலகாகி மற்று மாகித்
தேனாகித் தேனினறுஞ் சுவைய தாகித்
தீஞ்சுவையின் பயனாகித் தேடு கின்ற
நானாகி யென்னிறையாய் நின்றாய் நின்னை
நாயடியே னெவ்வாறு நவிற்று மாறே. 69

**ஆனேறும்** பெருமானே யரசே யென்றன்
ஆருயிருக் கொருதுணையே யமுதே கொன்றைத்
தேனேறு மலர்ச்சடையெஞ் சிவனே தில்லைச்
செழுஞ்சுடரே யானந்தத் தெய்வ மேயென்
ஊனேறு முயிர்க்குணிறை யொளியே யெல்லாம்
உடையானே நின்னடிச்சீ ருன்னி யன்பர்
வானேறு கின்றார்நா னொருவன் பாவி
மண்ணேறி மயக்கேறி வருந்துற் றேனே. 70

**செஞ்சடையெம்** பெருமானே சிறுமா னேற்ற
செழுங்கமலக் கரத்தவனே சிவனே சூழ்ந்து
மஞ்சடையு மதிற்றில்லை மணியே யொற்றி
வளர்மருந்தே யென்னுடைய வாழ்வே வேட்கை
அஞ்சடைய வஞ்சியர்மா லடைய வஞ்ச
மடையநெடுந் துயரடைய வகன்ற பாவி
நெஞ்சடைய நினைதியோ நினைதி யேன்மெய்ந்
நெறியுடையார் நெஞ்சமர்ந்த நீத னன்றே. 71

**அன்னையினும்** பெரிதினிய கருணை யூட்டும்
ஆரமுதே யென்னுறவே யரசே யிந்த
மன்னுலகி லடியேனை யென்னே துன்ப
வலையிலகப் படவியற்றி மறைந்தா யந்தோ
பொன்னைமதித் திடுகின்றார் மருங்கே சூழ்ந்து
போனகமும் பொய்யுறவும் பொருந்த லாற்றேன்
என்னையுளங் கொள்ளுதியோ கொள்கி லாயோ
என்செய்வே னென்செய்வே னென்செய் வேனே. 72

படித்தேன்பொய் யுலகியல்நூல் எந்தாய் நீயே
படிப்பித்தா யன்றியுமப் படிப்பி லிச்சை
ஒடித்தேனென் ஒடித்தேனே வொடிப்பித் தாய்பின்
உன்னடியே துணையெனநான் உறுதி யாகப்
பிடித்தேன்மற் றதுவுநீ பிடிப்பித் தாயிப்
பேதையே னின்னருளைப் பெற்றோர் போல
நடித்தேனெம் பெருமானீ தொன்று நானே
நடித்தேனே அல்லதுநீ நடிப்பித் தாயோ. 73

மத்தேறி யலைதயிர்போல் வஞ்ச வாழ்க்கை
மயலேறி விருப்பேறி மதத்தி னேடு
பித்தேறி யுழல்கின்ற மனத்தா லந்தோ
பேயேறி நலிகின்ற பேதை யானேன்
வித்தேறி விளைவேறி மகிழ்கின் றோர்போல்
மேலேறி யன்பரெலாம் விளங்கு கின்றார்
ஒத்தேறி யுயிர்க்குயிராய் நிறைந்த வெங்கள்
உடையானே இதுதகுமோ வுணர்கி லேனே. 74

மதியணிந்த முடிக்கனியே மணியே யெல்லாம்
வல்லவருட் குருவேநின் மலர்த்தாள் வாழ்த்திக்
கதியணிந்தா ரன்பரெலாம் அடியே னொன்றுங்
கண்டறியேன் கருமத்தாற் கலங்கி யந்தோ
பொதியணிந்து திரிந்துழலும் ஏறு போலப்
பொய்யுலகிற் பொய்சுமந்து புலம்பா நின்றேன்
துதியணிந்த நின்னருளென் றனக்கு முண்டோ
இன்றெனிலிப் பாவியேன் சொல்வ தென்னே. 75

என்னரசே யென்னுயிரே யென்னை யீன்ற
என்தாயே யென்குருவே யெளியே னிங்கே
தன்னரசே செலுத்தியெங்கும் உழலா நின்ற
சஞ்சலநெஞ் சகத்தாலே தயங்கி யந்தோ
மின்னரசே பெண்ணமுதே யென்று மாதர்
வெய்யசிறு நீர்க்குழிக்கண் விழவே யெண்ணிக்
கொன்னரைசேர் கிழக்குருடன் கோல்போல் வீணே
குப்புறுகின் றேன்மயலிற் கொடிய னேனே. 76

அல்விலங்கு செழுஞ்சுடரா யடியா ருள்ளத்
தமர்ந்தருளுஞ் சிவகுருவே யடியே னிங்கே
இல்விலங்கு மடந்தையென்றே யெந்தா யந்த
இருப்புவிலங் கினையொழித்தும் என்னே பின்னும்
மல்விலங்கு பரத்தையர்தம் ஆசை யென்னும்
வல்விலங்கு பூண்டந்தோ மயங்கி நின்றேன்
புல்விலங்கு மிதுசெய்யா ஓகோ இந்தப்
புலைநாயேன் பிழைபொறுக்கிற் புதிதே யன்றே. 77

வன்கொடுமை மலநீக்கி யடியார் தம்மை
வாழ்விக்குங் குருவேநின் மலர்த்தா ளெண்ண
முன்கொடுசென் றிடுமடியேன் றன்னை யிந்த
மூடமன மிவ்வுலக முயற்சி நாடிப்
பின்கொடுசென் றலைத்திழுக்கு[1] தந்தோ நாயேன்
பேய்பிடித்த பித்தனைப்போற் பிதற்றா நின்றேன்
என்கொடுமை யென்பாவ மெந்தா யெந்தாய்
என்னுரைப்பே னெங்குருவே னென்செய் வேனே. 78

**உய்குவித்து**[2] மெய்யடியார் தம்மை யெல்லாம்
உண்மைநிலை பெறவருளு முடையா யிங்கே
மைகுவித்த நெடுங்கண்ணார் மயக்கி லாழ்ந்து
வருந்துகின்றே னல்லாலுன் மலர்த்தா ளெண்ணிக்
கைகுவித்துக் கண்களினீர் பொழிந்து நானோர்
கணமேனுங் கருதிநினைக் கலந்த துண்டோ
செய்குவித்துக் கொள்ளுதியோ கொள்கி லாயோ
திருவுளத்தை யறியேனென் செய்கு வேனே. 79

**அருள்வெளியி** லானந்த வடிவி னால்நின்
றாடுகின்ற பெருவாழ்வே யரசே யிந்த
மருள்வலையி லகப்பட்ட மனத்தா லந்தோ
மதிகலங்கி மெய்ந்நிலைக்கோர் வழிகா ணாதே
இருள்நெறியிற் கோலிழந்த குருட்டு மன்போல்
எண்ணாதெல் லாமெண்ணி யேங்கி யேங்கி
உருள் சகடக் கால்போலுஞ் சுழலா நின்றேன்
உய்யும்வகை யறியேனிவ் வொதிய னேனே. 80

**கற்றவனை** தனக்குமுண வளிக்கு முன்றன்
கருணைநிலை தனையறியேன் கடையே னிங்கே
எற்றவளை யெறும்பேபோற் றிரிந்து நாளும்
இளைத்துநின தருள்காணா தெந்தா யந்தோ
பெற்றவளைக் காணாத பிள்ளை போலப்
பேதுறுகின் றேன்செய்யும் பிழையை நோக்கி
இற்றவளைக்[3] கேள்விடல்போல் விடுதி யேல்யான்
என்செய்வே னெங்குருவே னென்சொல் வேனே. 81

---

[1] **இழுக்குது** என்பது — மரூஉ வழக்கு, அல்லதூஉம்—ஆசிரியர்—தொல்காப்பியனார் கூறிய கடிசொல்லில்லை யென்பதனாற் கோடலுமாம். இங்ஙனமாதல்—'**இனியே தெமக் குனருள் வருமோ வெனக்கருதி "யேங்குதே" நெஞ்சம்**,' எனத் தாயுமானார் முதலிய பிறசான்றோர் செய்யுட்களானு முணர்க வென்க. [2] **உய்குவித்து** என்பதனுள் -கு- சாரியை. [3] **இற்றவள்** என்பது — **மனையறங்காப்போள்**.

**அடிமைசெயப்** புகுந்திடுமெம் போல்வார் குற்றம்
ஆயிரமும் பொறுத்தருளு மரசே நாயேன்
கொடுமைசெயு மனத்தாலே வருந்தி யந்தோ
குரங்கின்கை மாலையெனக் குலையா நின்றேன்
கடுமைசெயப் பிறர்துணிந்தா லடிமைதன்னைக்
கண்டிருத்த லழகன்றே கருணைக் கெந்தாய்
செடிமையுளப் பாதகனே னென்செய் வேனின்
றிருவுளத்தை யறிந்திலேன் றிகைக்கின் றேனே. 82

**கூம்பாத** மெய்ந்நெறியோ ருளத்தே யென்றுங்
குறையாத வின்பளிக்குங் குருவே யாசைத்
தாம்பாலே யாப்புண்டு வருந்தி நாயேன்
தையலார் மையலெனுஞ் சலதி யாழ்ந்து
ஓம்பாம லுவர்நீருண் டுயங்கு கின்றேன்
உன்னடிய ரக்கரைமே லுவந்து நின்றே
தீம்பாலுஞ் சருக்கரையுந் தேனு நெய்யுந்
தேக்குகின்று ரிதுதகுமோ தேவ தேவே. 83

**வெள்ளமணி** சடைக்கனியே மூவ ராகி
விரிந்தருளு மொருதனியே விமல னேனைக்
கள்ளமனக் குரங்காட்டு மாட்ட மெல்லாங்
கண்டிருந்து மிரங்கிலையேற் கவலை யாலே
உள்ளமெலிந் துழல்கின்ற சிறியேன் பின்னர்
உய்யும்வகை யெவ்வகையீ துன்னுந் தோறும்
பொள்ளெனமெய் வியர்க்கவுளம் பதைக்கச் சோபம்
பொங்கிவழி கின்றதுநான் பொறுக்கி லேனே. 84

**எனையறியாப்** பருவத்தே யாண்டு கொண்ட
என்னரசே யென்குருவே யிறையே யின்று
மனையறியாப் பிழைகருது மகிழ்நன் போல
மதியறியேன் செய்பிழையை மனத்துட் கொண்டே
தனையறியா முகத்தவர்போ லிருந்தா யெந்தாய்
தடங்கருணைப் பெருங்கடற்குத் தகுமோ கண்டாய்
அனையறியாச் சிறுகுழவி யாகி யிங்கே
அடிநாயே னரற்றுகின்றே னந்தோ வந்தோ. 85

**தீவினைநல்** வினையெனும்வன் கயிற்று லிந்தச்
சீவர்களை யாட்டுகின்ற தேவே நாயேன்
ஏவினைநேர் கண்மடவார் மையற் பேயால்
இடருழந்துஞ் சலிப்பின்றி யென்னே பின்னும்
நாவினையென் பால்வருந்திக் கறண்டு கின்ற
நாய்க்குநகை தோன்றநின்று நயக்கின் றேனன்
ஆவினைவிட் டெருதுகறந் திடுவான் செல்லும்
அறிவிலிக்கு மறிவிலியே னை வாறே. 86

எம்பெருமா னின்விளையாட் டென்சொல் கேனுன்
ஏதுமறி யாச்சிறியே னெனைத்தா னிங்கே
செம்புனலாற் குழைத்தபுலாற் சுவர்சூழ் பொத்தைச்
சிறுவீட்டி லிருட்டறையிற் சிறைசெய் தந்தோ
கம்பமுறப் பசித்தழலுங் கொளுந்த வந்தக்
கரணமுதற் பொறிபுலப்பேய் கவர்ந்து சூழ்ந்து
வம்பியற்றக் காமாதி யரட்ட ரெல்லாம்
மடிபிடித்து வருத்தவென்றோ வளர்த்தா யெந்தாய். 87

அம்பரத்தே யானந்த வடிவா லென்றும்
ஆடுகின்ற மாமணியே யரசே நாயேன்
இம்பரத்த மெனுமலக நடையி லந்தோ
இடருழந்தேன் பன்னெறியி லெனையி ழுத்தே
பம்பரத்தி னடியலைப் படுத்து மிந்தப்
பாவிமன மெனக்குவயப் படுவ தில்லை
கொம்பரற்ற இளங்கொடிபோற் றளர்ந்தே னென்னைக்
குறிக்கொள்ளக் கருதுதியோ குறித்தி டாயோ. 88

கண்ணுடைய நுதற்கரும்பே மன்றி லாடுங்
காரணகா ரியங்கடந்த கடவு ளேநின்
தண்ணுடைய மலரடிக்கோர் சிறிது மன்பு
சார்ந்தேனே செம்மரம்போற் றணிந்த நெஞ்சேன்
பெண்ணுடைய மயலாலே சுழல்கின் றேனென்
பேதைமையை யென்புகல்வேன் பேய னேனைப்
புண்ணுடைய புழுவிரும்பும் புள்ளென் கேனே
புலைவிழைந்து நிலைவெறுத்தேன் புலைய னேனே. 89

பொன்னுடையா ரிடம்புகவோ அவர்கட் கேற்கப்
பொய்மொழிகள் புகன்றிடவோ பொதிபோ லிந்தக்
கொன்னுடையா வுடல்பருக்கப் பசிக்குச் சோறு
கொடுக்கவோ குளிர்க்காடை கொளவோ வஞ்ச
மின்னிடையார் முடைச்சிறுநீர்க் குழிக்க ணந்தோ
வீழ்ந்திடவோ தாழ்ந்திளைத்து விழிக்க வோதான்
என்னுடையா யென்னுடையா யென்னை யிங்கே
எடுத்துவளர்த் தனையறியே னென்சொல் வேனே. 90

வருகணத்து வாழ்ந்திடுமோ விழுமோ இந்த
மலக்கூடென் றறிஞரெலாம் வருந்தக் கேட்டும்
அருகணைத்துக் கொளப்பெண்பே யெங்கே மேட்டுக்
கடைத்திடவெண் சோறெங்கே ஆடை யெங்கே
இருகணுக்கு வியப்பெங்கே வசதி யான
இடமெங்கே யென்றுதிரிந் திளைத்தே னல்லால்
ஒருகணத்தும் உனைநினைந்த துண்டோ வென்னை
உடையானே யெவ்வகைநான் உய்யு மாறே. 91

**பொன்மலையோ** சிறிதெனப்பே ராசை பொங்கிப்
புவிநடையிற் பற்பலகாற் போந்து போந்து
நென்மலையோ நிதிமலையோ வென்று தேடி
நிலைகுலைந்த தன்றியுனை நினைந்து நேடி
மன்மலையோ! மாமணியோ! மருந்தோ! என்று
வழுத்தியதே யில்லையிந்த வஞ்ச நெஞ்சங்
கன்மலையோ இரும்போசெம் மரமோ பாறைக்
கருங்கல்லோ பராய்முருட்டுக் கட்டை யேயோ. 92

**தம்மைமறந்** தருளமுத முண்டு தேக்குந்
தகையுடையார் திருக்கூட்டஞ் சார்ந்து நாயேன்
வெம்மையெலாந் தவிர்ந்துமனங் குளிரக் கேள்வி
விருந்தருந்தி மெய்யறிவாம் வீட்டி லென்றுஞ்
செம்மையெலாந் தருமௌன அணைமேற் கொண்டு
செறியிரவு பகலொன்றுந் தெரியா வண்ணம்
இம்மையிலே யெம்மையினுங் காணாச் சுத்த
**இன்பநிலை யடைவேனோ**! ஏழை யேனே. 93

**அடியனேன்** பிழையனைத்தும் பொறுத்தாட் கொண்ட
அருட்கடலே மன்றோங்கு மரசே யிந்நாள்
கொடியனேன் செய்பிழையைத் திருவுள் ளத்தே
கொள்ளுதியோ கொண்டுகுலங் குறிப்ப துண்டோ
நெடியனே முதற்கடவுட் சமுகத் தோர்தந்
நெடும்பிழைக ளாயிரமும் பொறுத்து மாயை
ஒடியநேர் நின்றபெருங் கருணை வள்ளல்
எனமறைக ளோதுவதிங் குனைத்தா னன்றே. 94

**கண்மயக்கும்** பேரிருட்டுக் கங்குற் போதிற்
கருத்தறியாச் சிறுவனையோர் கடுங்கா னத்தே
உண்மயக்கங் கொளவிடுத்தே யொருவன் பின்போம்
ஒருதாய்போன் மாயையிரு ளோங்கும் போதின்
மண்மயக்கம் பெறும்விடயக் காட்டி லந்தோ
மதியிலேன் மாழாந்து மயங்க நீதான்
வண்மையுற்ற நியதியின்பின் என்னை விட்டே
மறைந்தனையே பரமேநின் வண்மை யென்னே. 95

**நற்றாயும்** பிழை குறிக்கக் கண்டோ மிந்த
நானிலத்தே மற்றவர்யார் நாடார் வீணே
பற்றாயு மவர்தமைநாம் பற்றோம் பற்றிற்
பற்றாத பற்றுடையார் பற்றி யுள்ளே
உற்றாயுஞ் சிவபெருமான் கருணை யொன்றே
உறுபிழைக ளெத்துணையும் பொறுப்ப தென்றான்
பொற்றாளை விரும்பியதும் மன்று ளாடும்
பொருளேயென் பிழையனைத்தும் பொறுக்க வன்றே. 96

**எண்ணியநம்** எண்ணமெலா முடிப்பான் மனறுள்
எமபெருமா னென்றுமகிழ்ந திறுமாந திஙகே
நண்ணியமற றையர்தமமை யுருமை பேசி
நன்குமதி யாதிருந்த நாயி னேனை த
தண்ணியநல லருட்கடலே மனறி லினபத்
தாண்டவஞ்செய் கினறபெருந தகையே யெங்கள
புண்ணியனே பிழைகுறித்து விடுத்தி யாயிற்
பொய்யனே னெஙகுற்றென புரிவே னநதோ. 97

**அன்பர்திரு** வுளங்கோயி லாகக கொண்டே
அற்புதச்சிற் சபையோஙகு மரசே யிஙகு
வன்பரிடைச சிறியேனை மயஙக வைதது
மறைநதனையே யானநத வடிவோய நினனைத்
துனபவடி வுடைப்பிறரிற் பிரிதது மேலோர்
துரியவடி வினனென்று சொனன வெலலாம
இனபவடி வடைநதனறே யெநதா யநதோ
எனனளவென சொலகேனிவ வேழை யேனே. 98

**புற்றோங்கும்** அரவமெலலாம பணியாக கொண்டு
பொனமேனி தனிலணிநத பொருளே மாயை
உறறோஙகு வஞ்சமனக களவ னேனை
உளஙகொணடு பணிகொளவு துனககே யொகக்கும்
மறறோங்கு மவரெலலாம பெருமை வேணடும்
வனமனதத ரெனைவேணடா வளளலே நான
கற்றோஙகு மறிவறியேன பலவாச சொலலுங
கருததறியே னெனககருளக கருது வாயே. 99

**அருளுடைய பரம்பொருளே!** மன்றி லாடும
ஆனநதப் பெருவாழவே யனபு ளோர்தம
தெருளுடைய வுளமுழுதுங கோயில கொணட
**சிவமே!**மெய யறிவுருவாந தெயவ மேயிம
மருளுடைய மனப்பேதை நாயி னேனசெய
வனபிழையைச சிறிதேனு மதித்தி யாயில
**இருளுடைய பவக்கடல்விட் டேறேன் என்னை**
**ஏற்றுவதற் கெண்ணுக!என் இன்பத் தேவே!** 100

திருச்சிற்றம்பலம்



உ

சிவமயம

திருச்சிற்றம்பலம்

# ஆறாவது

# திருவருண் முறையீடு

கடடளைக கலிததுறை

திருச்சிற்றம்பலம்

**அ**ருளரசே யருட குனறேமன ருடு மருளிறையே
அருளமு தேயருட் பேறே நிறைநத வருட்கடலே
அருளணி யேயருட கணணேவிண ணோஙகு மருளொளியே
அருளற மேயருட் பணபேமுக கணகொ ளருடசிவமே. 1

**துனியா** லுளநதளாந கநநோ! துருமபிற சுழலுகினறேன்
இனியா யினுமிரங காதோநின சிததமெந தாயிதெனன
அனியாய மோ'என னளவினின பாறறண ணருளிலேயோ
சனியாமென வலவினைப் போதனே போவெனகொல சாறறுவதே

**என்னே** முறையுண் டெனிற்கேளவி யுண்டெனப ரெனனளவில
இனனே சிறிது மிலலையேநின பாலிதற கெனசெயகுவேன்
மனனேமுக கணணுடை மாமணி யேயிடை வைபபரிதாம
பொனனேமின னோசடைத் தனனே ரிலாப்பரி பூரணனே. 3

**தண்டாத** சஞசலங கொணடே னிலலையித் தாரணியிற்
கண்டா ரிரங்குவர் கேடடா ருருகுவா கஙகைதிஙகட
டுணடார் மலர்சசடை யெநதா யிரங்கிலை தூயமையிலா
அணடார் பிழையும பொறுபபோ யிதுநின னருடகழகே. 4

**பொய்யா** முலக நடைநினறு சஞசலம பொஙகமுககண
ஐயாவென னுளள மழலாா மெழுகொத தழிகினறதாற்
பையா ரரவ மதிசசடை யாய்செம பவளநிறச
செய்யா யெனககருள செய்யா யெனிலெனன செய்குவனே. 5

**விடமிலை** யேர்மணி கணடாநின் சைவ விரதஞசெயயத்
திடமிலை யேயுட செறிவிலை யேயொனறன சிததததுநின
நடமிலை யேயுனற னண்பிலை யேவுனை நாடுதறகோர்
இடமிலை யேயிதை யெணணிலை யேசற றிரஙகிலையே. 6

**விண்ணுடை** யாய்வெள்ளி வெற்புடை யாய்மதி மேவுசடைக்
கண்ணுடை யாய்நெற்றிக் கண்ணுடை யாயருட் கண்ணுடையாய்
பண்ணுடை யாய்திசைப் பட்டுடை யாயிடப் பாலிலருட்
பெண்ணுடை யாய்வந்திப் பிட்டுடை யாயென் பெருஞ்செல்வமே. 7

**விடையுடை** யாய்மறை மேலுடை யாய்நதி மேவியசெஞ்
சடையுடை யாய்கொன்றைத் தாருடை யாய்கரந் தாங்குமழுப்
படையுடை யாயருட் பண்புடை யாய்பெண் பாவையின்பால்
நடையுடை யாயரு ளுடை யாய்பத நல்குகவே. 8

**கீளுடை** யாய்பிறைக் கீற்றுடை யாயெங் கிளைத்தலைமேல்
தாளுடை யாய்செஞ் சடையுடை யாயென் றனையுடையாய்
வாளுடை யாய்மலை மானுடை யாய்கலை மானுடையாய்
ஆளுடை யாய்மன்று ளாட்டுடை யாயென்னை யாண்டருளே. 9

**நான்படும்** பாடு சிவனே யுலகர் நவிலும்பஞ்சு
தான்படு மோசொல்லத் தான்படு மோவெண்ணத் தான்படுமோ
**கான்படு கண்ணியின் மான்படு மாறு கலங்கிநின்றேன்**
ஏன்படு கின்றனை யென்றிரங் காயென்னி லென்செய்வனே. 10

**பொய்யோ** வடிமை யுரைத்தலெந் தாயென்னுட் போந்திருந்தாய்
ஐயோநின் னுள்ளத் தறிந்ததன் றேவென் னுடலமெல்லாங்
கையோட வல்லவ ரோர்பதி னுயிரவ கற்பநின்று
மெய்யோ டெழுதினுந் தானடங் காத வியப்புடைத்தே. 11

**தேன்சொல்லும்** வாயுமை பாகநின் றன்னைத் தெரிந்தடுத்தோர்
தான்சொல்லுங் குற்றங் குணமாகக் கொள்ளுந் தயாளுவென்றே
நான்சொல்வ தென்னைபொன் னுண்சொல்லும வாணிதன் னுண்சொல்லுமவ்
வான்சொல்லு மெம்மலை மான்சொல்லுங் கைம்மலை மான் சொல்லுமே. 12

**வென்றே முதலையு ழூர்க்கருங் கொண்டது மீளவிடார்**
என்றே யுரைப்பரிங் கென்போன்ற மூடர்மற் றில்லைநின்பேர்
நன்றே யுரைத்துநின் றன்றே விடுத்தன னுணிலென்மட்
டின்றேயக் கட்டுரை யின்றேயென் சொல்வ திறையவனே. 13

**கைக்கின்ற** காயு மினிப்பாம் விடமுங் கனவமுதாம்
பொய்க்கின்ற கானலு நீராம்வன் பாவமும் புண்ணியமாம்
வைக்கின்ற வோடுஞ்செம் பொன்னுமென் கெட்ட மனதுநின்சீர்
துய்க்கின்ற நல்ல மனதாவ தில்லையென் சொல்லுவனே. 14

**வீணே** பொழுது கழிக்கின்ற நானுன் விரைமலர்த்தாட்
காணேன்கண் டாரையுங் காண்கின் றிலேன்சற் றுங் காணற்கன்பும்
பூணேன் தவமும் புரியே னறமும் புகல்கின் றிலேன்
நாணேன் விலங்கிழி யானே யெனுங்கடை நாயினனே. 15

**நானே** ரெளிமை யடிமையென் றோநல்ல னலலனென்று
தானேநின் னன்பர் தகாதெனப ரீதென்று தானினைத்தோ
ஏனோநின னுள்ள மிரஙகிலை யினனு மிரஙகிலையேற
கானேடு வேன்கொல் கடலவிழு வேன்கொலமுக கண்ணவனே. 16

**மின்போலுஞ்** செஞசடை வித்தக னேயொளி மேவியசெம்
பொன்போலு மேனியெம புண்ணிய னேயெனைப் போறறிபெறற
தனபோலுந **தாய்தந்தை யாயிரம் பேரிருந் தாலுமந்தோ!**
**நின்போலும் அன்புடையார் எனக் காரிந்த நீணிலத்தே!** 17

**அன்பாலென்** றனையிங காளுடை யாயிவ வடியவனேன்
நின்பாலென றுனப நெறிப்பா லகறறெனறு நினறதலலால்
துனபா லிடரைப் பிறர்பா லடுத்தொனறு சொனனதுண்டோ?
என்பா லிரஙகிலை யென்? **பாற் கடல்பிள்ளைக் கீந்தவனே.** 18

**என்போன்** மனிதரை யேனடுப் பேனெனக கெய்ப்பிலவைப்பாம்
பொனபோல விளஙகும புரிசடை யான்றனைப் போயடுத்தேன்
துனபோப ரணுவும பெறேனினி யானெனறு சொலலிவநதேன்
முனபோற பராமுகஞ செயயே லருளுக முககணனே. 19

**பொன்னுடை** யார்தமைப போயடுப் பாயென்ற புனமையினோர்க்
கெனனுடை யானறனை யேயடுப் பேனிதற கெளளளவும்
பின்னிடை யேனவர் முனனடை யேனெனப் பேசிவநதேன்
மினனிடை மாதுமை பாகாவென சோகம விலககுகவே. 20

**சாதகத்** தோர்கட்குத் தானருள வேனெனிற் றூழ்நதிடுமா
பாதகத தோனுககு முனனரு ளீநதெப் பானமைகொண்டோ
தீதகத தேனெளி யேனு யினுமுன திருவடியாம
போதகத் தேநினைக கினறேனா கருணை புரிநதருளே. 21

**அருளறி** யாசசிறு தேவருந தமமை யடுததவர்கட்(கு)
இருளறி யாவிளக கெனறூலு நெஞச மிரஙகுகினறூர்
மருளறி யாபபெருந தேவேநின றனனடி வநதடுததேன்
தெருளறி யாசசிறி யேனுபி னுஞசெயக சீரருளே. 22

**அரும்பொரு** ளேயென் னரசேயென னுருபிர்க காகவந்த
பெருமபொரு ளேயருட் பேறே சிவானநதம பெற்றவர்பால்
வருமபொரு ளேமுககண மாமணி யேநின வழியருளாற்
றருமபொரு ளேபொரு ளெனறுவந தேனெனைத தாஙகிககொள்ளே. 23

**சரங்கார்** முககதொடுத் தெய்வது போலென் றனையுலகத்
துரஙகா ரிருடபெரு வாதனையாலிட ரூட்டுநெஞசக
குரஙகான மெலிநதுநின னுமைந துணையெனக கூறுகின்றேன்
இரஙகார் தமககு மிரஙகுகின றோயெற கிரஙகுகவே. 24

**கூறுற்ற** குற்றமுந் தானே மகிழ்விற் குணமெனவே
ஆறுற்ற செஞ்சடை யண்ணல்கொள் வானென்ப ராங்கதற்கு
வேறுற்ற தோர்கரி வேண்டுகொ லோவென் னுண் மேவியென்றும்
வீறுற்ற பாதத் தவன்மிடற் றேகரி மேவியுமே. 25

**சூற்படு** மேக நிறத்தோ னு நான்முகத் தோனுமென்னைப்
போற்படும் பாடுநல் லோர்சொலக் கேட்கும் பொழுதுமனம்
வேற்படும் புண்ணிற் கலங்கியந் தோநம் விடையவன்பூங்
காற்படுந் தாளிநம் மேற்படு மோவொரு காலென்னுமே. 26

**வாளேய்** நெடுங்கண்ணி யெம்பெரு மாட்டி வருடமலர்த்
தாளே வருந்த மணிக்கூடற் பாணன் றனக்கடிமை
ஆளே யெனவிற **கேற்றுவிற் றேய்**நின் னருள்கிடைக்கும்
நாளேநன் ஞளந்த நாட்கா யிரந்தெண்ட ஞன்செய்வனே. 27

**அடுத்தார்** தமையென்று மேலோர் விடார்க ளவர்க்குப்பிச்சை
**எடுத்தா யினுமிடு வார்கள்**என் பாரதற் கேற்கச்சொற்பூத்
தொடுத்தா ரொருவர்க்குக் **கச்சூரி லேபிச்சைச் சோறெடுத்துக்**
**கொடுத்தாய்**நின் பேருளென் சொல்லுகே**னெண்** குணக்குன்றமே.

**நாடிநின்** றேநினை நான்கேட்டுக் கொள்வது நண்ணும்பத்துக்
கோடியன் றேயொரு கோடியி னூற்றொரு கூறுமன்றே
தேடிநின் றேபுதைப் போருந் தருவர்நின் சீர்நினைந்துட்
பாடியந் தோமனம் வாடிநின் றேன்முகம் பார்த்தருளே. 29

**தாயாகி** னுஞ்சற்று நேரந் தரிப்பள்நந் தந்தையைநாம்
வாயார வாழ்த்தினும் வையினுந் தன்னிடை வந்திதுநீ
ஈயா யெனிலருள் வானென் றுனையடுத் தேனுமையாள்
நேயா மனமிரங் காயாவென் னெண்ண நெறிப்படவே. 30

**நடும்பாட்டை** நாவலன் வாய்த்திருப் பாட்டை நயந்திட்டநீ
குடும்பாட்டை மேற்கொண்ட வென்றமிழ்ப் பாட்டையுங்கொண்டெனுள்ளத்
திடும்பாட்டை நீக்கிலை யென்னினுந் துன்பத் திழுக்குற்றுநான்
படும்பாட்டை யாயினும் பார்த்திரங் காயெம் பரஞ்சுடரே! 31

**ஏட்டாலுங்** கேளய லென்பாரை நான்சிரித் தென்னைவெட்டிப்
**போட்டாலும் வேறிடங் கேளேன்**என் னுனைப் புறம்விடுத்துக்
கேட்டாலு மென்னை யுடையா னிடஞ்சென்று கேட்பனென்றே
நீட்டாலும் வாயுரைப் பாட்டாலுஞ் சொல்லி நிறுத்துவனே. 32

**சீர்க்கின்ற** கூடலிற் பாணனுக் காட்படச் சென்றவந்நாள்*
வேர்க்கின்ற வெம்மண லென்றலை மேல்வைக்கு மெல்லடிக்குப்
பேர்க்கின்ற தோறு முறுத்திய தோவெனப் பேசியெண்ணிப்
பார்க்கின்ற தோறுமென் கண்ணேயென் னுள்ளம் பதைக்கின்றதே.

**நீயேயென்** றந்தை யருளுடை யாயெனை நேர்ந்துபெற்ற
தாயேநின் பாலிடத் தெம்பெரு மாட்டியித் தன்மையினல்
நாயேன் சிறிதுங் குணமில னயினு நானுமுங்கள்
**சேயே** யெனைப்புறம் விட்டா லுலகஞ் சிரித்திடுமே. 34

**தெருளும்** பொருளுநின் சீரரு ளேயெனத் தேர்ந்தபின்யான்
மருளும் புவனத் தொருவரை யேனு மதித்ததுண்டோ
வெருளும் புவியிற் றுயரால் கலங்கி வெதும்புகின்றேன்
இருளுங் கருமணி கண்டா வறிந்து மிரங்கிலையே. 35

**பெண்ணுன்** மயங்கு மெளியேனை யாளப் பெருங்கருணை
அண்ணு!நின் னுள்ள மிரங்காத வண்ண மறிந்துகொண்டேன்
கண்ணு ருலகிலென் றுன்பமெல் லாம்வெளி காணிலிந்த
மண்ணு பிலத்தொடு விண்ணுடுங் கொள்ளை வழங்குமென்றே. 36

**நெறிகொண்ட** நின்னடித் தாமரைக் காட்பட்டு நின்றவென்னைக்
குறிகொண்ட வாழ்க்கைத் துயராம் பெரிய கொடுங்கலிப்பேய்
முறிகொண் டலைக்க வழக்கோ! வளர்த்த முடக்கிழநாய்
வெறிகொண்ட தேனும் விடத்துணி யாரிவ் வியனிலத்தே. 37

**மதியாம** லாரையு நானிறு மாந்து மகிழ்கின்றதெம்
பதியா முனது திருவருட் சீருரம் பற்றியன்றோ!
எதியார் படினு மிடர்பட் டலையவிவ் வேழைக்கென்ன
விதியா வினிப்பட மாட்டே னருள்செய் விடையவனே. 38

**கற்கோட்டை** நெஞ்சருந் தம்பா லடுத்தவர் கட்குச்சும்மாச்
சொற்கோட்டை யாயினுங் கட்டுவர் நின்னைத் துணிந்தடுத்தேன்
அற்கோட்டை நெஞ்சுடை யேனுக் கிரங்கிலை யன்றுலவா
**நெற்கோட்டை யீந்தவன் நீயல்லை யோ?**முக்க ணின்மலனே!

**ஆதிக்க** மாயை மனத்தேன் கவலை யடுத்தடுத்து
வாதிக்க நொந்து வருந்துகின் றேனின் வழக்கமெண்ணிச்
சோதிக்க வென்னைத் தொடங்கே லருளத் தொடங்குகண்டாய்
போதிக்க வல்லநற் சேயுமை யோடென்னுட் புக்கவனே. 40

**பிறைமுடித்** தாண்டொரு பெண்முடித் [1]தோர்பிள்ளைப்பேர்முடித்த
நிறைமுடித் தாண்டவஞ் செவ்வேணி செய்திட நித்தமன்றின்
மறைமுடித் தாண்டவஞ் செய்வோயென் பாலருள் வைத்தெளியேன்
குறைமுடித் தாண்டுகொ ளென்னே பலமுறை கூறுவதே. 41

**நடங்கொண்ட** பொன்னடி நீழலி னுன்வந்து நண்ணுமட்டுந்
திடங்கொண்ட நின்புக ழல்லாற் பிறர்புகழ் செப்பவையேல்
விடங்கொண்ட கண்டத் தருட்குன்ற மேயிம வெற்புடையாள்
இடங்கொண்ட தெய்வத் தனிமுத லேயெம் மிறையவனே. 42

1 ஓர் பிள்ளைப்பேர் — மதலை — சரக்கொன்றை.

விழிக்கஞ்ச னந்தரு மின்னார்தம் வாழ்க்கையில் வீழ்ந்தயலோர்
மொழிக்கஞ்சி யுள்ளம் பொருதுநின் னமை மொழிந்தெளியேன்
குழிக்கஞ்சி போன் [1]மயங் கின்றே னருளக் குறித்திலையேற்
பழிக்கஞ்சி னேயின்னு மென்பழிக் கஞ்சப் படுமுனக்கே. 43

சேல்வைக்கும் கண்ணுமை பாகாநின் சித்தந் திருவருளென்
பால்வைக்கு மேவிட ரெல்லா மெனைவிட்டப் பானடக்கக்
கால்வைக்கு மேநற் சுகவாழ்வென் மீதினிற் கண்வைக்குமே
மால்வைக்கு மாயைகண் மண்வைக்கு மேதங்கள் வாய்தனிலே. 44

ஒருமாது பெற்ற மகன்பொருட் டாக வுவந்துமுன்னம்
வருமாம னாகி வழக்குரைத் தோய்என் வழக்குரைத்தற்கு
இருமா நிலத்தது போல்வேடங் கட்ட விருத்திகொலோ
திருமால் வணங்கும் பதத்தவ யானுன் சிறுவனன்றே. 45

முன்னஞ்ச முண்ட மிடற்றர சேநின் முழுக்கருணை
அன்னஞ் சுகம்பெற வுண்டுமுன் பாலன் படைந்திலதாற்
கன்னெஞ்ச மோகட்டை வன்னெஞ்ச மோவெட்டிக் காய்நெஞ்சமோ
என்னெஞ்ச மென்னெஞ்ச மோதெரி யேனிதற் கென்செய்வதே.

வானம் விடாதுறு காற்போலென் றன்னை வளைந்துகொண்ட
மானம் விடாதிதற் கென்செய்கு வேனின்னை வந்தடுத்தேன்
ஊனம் விடாதுழ லுமேயன் பிழையை யுளங் [2]கொண்டிடேல்
ஞானம் விடாத நடத்தோய்நின் றண்ணரு ணல்குகவே. 47

நாயுஞ் செயாத நடையுடை யேனுக்கு நாணமுமுள்
நோயுஞ் செயாநின்ற வன்மிடி நீக்கிநன் னேனளித்தாய்
பேயுஞ் செயாத கொடுந்தவத் தாற்பெற்ற பிள்ளைக்குநற்
றாயுஞ் செயாளிந்த நன்றிகண் டாய்செஞ் சடையவனே. 48

உருவத்தி லேசிறி யேனுகி யூக்கத்தி லொன்றுமின்றித்
தெருவத்தி லேசிறு கால்வீசி யாடிடச் சென்றவந்தப்
பருவத்தி லேநல் லறிவளித் தேஉனைப் பாடச்செய்தாய்
அருவத்தி லேயுரு வானேய்நின் றண்ணளி யார்க்குளதே. 49

மானெழுந் தாடுங் கரத்தோய்நின் சாந்த மனத்திற்சினந்
தானெழுந் தாலு மெழுகவென் றேயென் றளர்வையெல்லாம்
ஊனெழுந் தார்க்கநின் பாலுரைப் பனன்றி ஊர்க்குரைக்க
நானெழுந் தாலுமென் னுவெழு மோ! மொழி நல்கிடவே. 50

வனமெழுந் தாடுஞ் சடையோய்நின் சித்த மகிழ்தலன்றிச்
சினமெழுந் தாலு மெழுகவென் றேயென் சிறுமையைநின்
முனமெழுந் தாற்றுவ தல்லாற் பிறர்க்கு மொழிந்திடவென்
மனமெழுந் தாலுமென் வாயெழு மோ! உள்ள வாறிதுவே. 51

1 மயங்குகின்றேன் என்பதைது : மயங்கின்றேன் என விகாரமாயிற்று.
2 கொண்டிடேல் முன்னிலை யெதிர்மறை யேவன் முற்றுகக் கொள்க.

**சிற்பர** மேயென் சிவமே திருவருட் சீர்மிகுந்த
கற்பக மேயுனைச் சார்ந்தோர்க் களிக்குநின் கைவழக்கம்
அற்பமன் றேபல வண்டங் களினடங் காததென்றே
நற்பர ஞானிகள் வாசகத் தாற்கண்டு நாடினனே. 52

**வருஞ்** [1]செல்லுள் நீர்மறுத் தாலுங் கருணை மறாதவெங்கட்
பெருஞ்செல்வ மேயென் சிவமே! நினைத்தொழப் பெற்றுமிங்கே
தருஞ்செல் லரிக்கு மரம்போற் சிறுமைத் தளர்நடையால்
அருஞ்செல்லன் மூழ்கிநிற் கின்றே னிதுநின் னருட்கழகே. 53

**கருமுக** நீக்கிய **பாணனுக் கேகன கங்கொடுக்கத்**
**திருமுகஞ் சேரற் களித்தோய்**என் றன்னைத் தெரிந்தடுத்தேன்
ஒருமுகம் பார்த்தரு ளென்கின்ற வேழைக் குதவிலையேல்
[2]உருமுக வார்க்கும் விடையோ யெவர்மற் றுதவுவரே. 54

**மருப்பா** வனத்துற்ற மாணிக்கு மன்னன் மனமறிந்தோர்
திருப்பா சுரஞ்செய்து **பொற்கிழி** யீந்தநின் சீர்நினைந்தே
விருப்பா நினையடுத் தேனெனக் கீந்திட வேயின்றென்னை
கருப்பாநின் சித்தந் திருப்பாயென் மீது கறைக்கண்டனே. 55

**பிழையை** மேவுமிவ் வாழ்க்கையி லேமனம் பேதுற்றவிவ்
வேழையை நீவிட லாமோ வடிமைக் கிரங்குகண்டாய்
[3]மாழையைப் போன்முன்னர்த் தாங்கொண்டு வைத்து வளர்த்தவிள
வாழையைத் தாம்பின்னர் நீர்விட லின்றி மறுப்பதுண்டே. 56

**கருத்தறி** யாச்சிறி யேன்படுந் துன்பக் கலக்கமெல்லாம்
உருத்தறி யாமை பொறுத்தரு ளீபவ ருன்னையன்றித்
திருத்தறி யார்பிற ரன்றேமென் கன்றின் சிறுமையொன்றும்
எருத்தறி யாதுநற் சேதா வறியு மிரங்குகவே. 57

**வான்வேண்டிக்** கொண்ட மருந்தேமுக் கண்கொண்ட வள்ளலுன்னை
நான்வேண்டிக் கொண்டது நின்னடி யார்க்கு நகைதருமீ(து)
ஏன்வேண்டிக் கொண்டனை யென்பா ரிதற்கின்னு மேனிரங்காய்
தான்வேண்டிக் கொண்ட வடிமைக்குக் கூழிடத் தாழ்ப்பதுண்டே.

**பையுரைத்** தாடும் பணிப்புயத் தோய்தமைப் பாடுகின்றோர்
உய்யுரைத் தாவுள்ள தில்லதென் றில்லதை யுள்ளதென்றே
பொய்யுரைத் தாலுந் தருவார் பிறரது போலன்றிநான்
மெய்யுரைத் தாலு மிரங்காமை நின்னருண் மெய்க்கழகே. 59

**மடல்வற்றி** னாலு மணம்வற்று றாத மலரெனவென்
உடல்வற்றி னாலுமென் னுள்வற்று மோதுய ருள்ளவெல்லா
மடல்வற்று றாதநின் றாட்கன்றி யீங்கய லார்க்குரையேன்
கடல்வற்றி னாலுங் கருணைவற் றாதமுக் கண்ணவனே. 60

1 செல் என்பது-மேகம். 2 உரும் என்பது-இடி. 3 மாழை என்பது-பொன்.

**எள்ளிருக்** கின்றதற கேனுஞ சிறிதிட மின்றியெனபான
முளளிருக கின்றது போலுற்ற துன்ப முயககமெலலாம
வெளளிருக கின்றவர் தாமுஙகண் டாரெனின மேவியென்றன
உள்ளிருக கின்றநின ரூடகோத லெனனெம உடையவனே 61

[1]**பொன்கின்று** பூதத சடையாயிவ வேழைககுன பொனனருளாம
நனகின்று நீநரல வேண்டுமந தோதுயா நணணியெனனைத
தினகின்ற தேகொடும பாமபையும பாலுணச செயதுகொலலார்
எனகின்ற ஞால மிழுககுரை யாதெற் கிரஙகிடினே 62

**வாய்மூடிக்** கொலபவர் போலேயென னுளளததை வனறுயராம்
பேயமூடிக கொணடதென செய்கேன முகத்திற பிறஙகுகையைச
சேயமூடிக கொணடுநற பாறகழக கண்டுந திகழமுலையைத்
தாயமூடிக கொளளுவ துண்டோ அருளுக சஙகரனே 63

**கோள்வேண்டு** மேழை மனததினை வேருற்றுக கொடடககொளளித
தேளவேணடு மோசுடத தீவேணடு மோவதை செயதிடவோ
வாளவேணடு மோகொடுந துனபே யதிலெண மடஙகுகணடாய
ஆளவேணடு மேலெனனை யாளவேணடு மெனனு ளஞரொழிததே

**விடையிலை** யோவதன மேலேறி யெனமுன விரைநதுவரப
படையிலை யோதுய ரெலலாந துணிககப பதஙகொளருட
கொடையிலை யோவென குறைதீர நலகக குலவுமெனதாய
புடையிலை யோவென றனககாகப பேசவெம புணணியனே. 65

**நறையுள** தேமலாக கொனறைகொண டாடிய நறசடைமேற
பிறையுள தேககஙகைப பெண்ணுள தேபிறங குநகழுத்திற
கறையுள தேயரு ளெஙகுள தேயிக கடையவனேன
குறையுள தேயென றறறவுஞ சறறுங குறிததிலதே 66

**சினத்தாலுங்** காமததி னாலுமென றனனைத் திகைபபிககுமிம
மனததா லுறுநதுயா போதாமை யெனறு மதிததுசசுறறும
இனததாலும வாழககை யிடுமபையி னாலு மிளைககவைததாய
அனததான புகழும பதத்தோ யிதுநின் னருடகழகே 67

**புல்லள** வாயினு மீயாதம வாயிற புகுநதுபுகழச
சொலலள வாகின பிரபபோ ரிரககநற [2]சொனனஙகளைக
[3]கலலள வாததரு கினறோதம பாலுங கருதிசசெனறோர்
நெலலள வாயினுங கேளேனின பாலனறி நினமலனே. 68

**பிறைசூழ்ந்த** வேணி முடிககனி யேயெம பெருஞசெலவமே
கறைசூழநத கண்டததெங கறபக மேநுதற கடகருமபே
மறைசூழநத மனறொளிர மாமணி யேயென மனமுழுதுங
குறைசூழநது கொணடதென செயகே னகறறக குறிததருளே 69

1 பொன்கின்று பூத்தசடை எனபது — கொன்றை பூதத சடை
2. சொனனம்—சொரனம—பொன. 3. கல் எனபது—மலை

**கண்கட்டி** யாடும் பருவத்தி லேழுலை கண்டவொரு
பெண்கட்டி யாளை நினைக்கின்ற வோர்சிறு பிள்ளையைப்போல்
எண்கட்டி யானுன் னருள்விழைந் தேன்சிவ னேயென்னெஞ்சம்
புண்கட்டி யாயலைக் கின்றது மண்கட்டிப் போலுதிர்ந்தே. 70

**மெய்விட்ட** வஞ்சக நெஞ்சாற் படுந்துயர் வெந்நெருப்பில்
நெய்விட்ட வாறிந்த வாழ்க்கையின் வாதனை நேரிட்டதாற்
பொய்விட்ட நெஞ்சுறும் பொற்பதத் தையவிப் பொய்யனைநீ
கைவிட் டிடநினை யேலருள் வாய்கரு ணைக்கடலே. 71

**அருட்கட** லேயக் கடலமு தேயவ் வமுதத்துற்ற
தெருட்சுவை யேயச் சுவைப்பய னேமறைச் சென்னிநின்ற
பொருட்பத மேயப் பதத்தர சேநின் புகழ்நினையா
இருட்குண மாயை மனத்தே னையுமுவந் தேன்றுகொள்ளே. 72

**அண்டங்கண்** டானு மளந்தானுங் காண்டற் கரியவநின்
கண்டங்கண் டார்க்குஞ் சடைமேற் குறைந்த கலைமதியின்
துண்டங்கண் டார்க்கும் பயமுள தோவெனச் சூழ்ந்தடைந்தேன்
தொண்டன்கண் டாள்பல தெண்டன்கண் டாய்நின் றுணையடிக்கே.

**தேட்டக்கண்** டேர்மொழிப் பாகா வுலகிற் சிலர்குரங்கை
ஆட்டக்கண் டேனன்றி யக்குரங் காலவ ராடச்சற்றுங்
கேட்டுக்கண் டேனிலை நானேழை **நெஞ்சக் கிழக்குரங்கால்**
வேட்டுக்கொண் டாடுகின் றேனிது சான்ற வியப்புடைத்தே. 74

**போகங்கொண்** டார்த்த வருளா ரமுதப் புணர்முலையைப்
பாகங்கொண் டார்த்த பரம்பொரு ளேநின் பதநினையா
வேகங்கொண் டார்த்த மனத்தாலிவ் வேழை மெலிந்துமிகச்
சோகங்கொண் டார்த்துநிற் கின்றே னருளத் தொடங்குகவே. 75

**இன்றல** வேநெடு நாளாக வேழைக் கெதிர்த்ததுன்பம்
ஒன்றல வேபல வெண்ணில வேயுற் றுரைத்ததயன்
மன்றல வேபிறர் நன்றல வேயென வந்தகயக்
கன்றல வேபசுங் கன்றடி யேன்றனைக் காத்தருளே. 76

**படிபட்ட** மாயையின் பாற்பட்ட சாலப் பரப்பிற்பட்டே
மிடிபட்ட வாழ்க்கையின் மேற்பட்ட துன்ப விசாரத்தினல்
அடிபட்ட நானுனக் காட்பட்டு மின்னு மலைதல்நன்றோ
பிடிபட்ட நேரிடைப் பெண்பட்ட பாகப் பெருந்தகையே. 77

**உடையாயென் விண்ணப்ப மொன்றுண்டு கேட்டருள்** உன்
தடையாது மின்றிப் புகல்வதல் லாலிச் சகத்திடைநா [னடிச்சேர்
னடையாற் சிறுமைகொண் டந்தோ பிறரை நவின்றவர்பால்
அடையா மையுநெஞ் சுடையா மையுந்தந் தருளுகவே. 78

**தஞ்சமென்** றேநின்ற நாயேன் குறையைத் தவிருனக்கோர்
பஞ்சமின் றேயுல கெல்லாநின் சீரருட் பாங்குகண்டாய்
எஞ்சநின் றேற்குனை யல்லாற் றுணைபிறி தில்லையிது
வஞ்சமன் றேநின் பதங்காண்க முக்கண் மணிச்சுடரே. 79

**பொறுத்தாலு** நான்செயுங் குற்றங்கள் யாவும் பொறுகெனநீ
ஒறுத்தாலு நன்றினிக் கைவிட்டி டேலென் னுடையவனீ
வெறுத்தாலும் வேறிலே வேற்றோ ரிடத்தை விரும்பியென்னை
அறுத்தாலுஞ் சென்றிட மாட் டேன் எனக்குன் னருளிடமே. 80

**சேல்வரு** மேர்விழி மங்கைபங் காவென் சிறுமைகண்டான்
மேல்வரு நீவரத் தாழ்த்தாலு முன்றன் வியனருட்பொற்
கால்வரு மேயிளங் கன்றழத் தாய்ப்பசுக் காணின்மடிப்
பால்வரு மேமுலைப் பால்வரு மேபெற்ற பாவைக்குமே. 81

**வன்பட்ட** கூடலில் வான்பட்ட வையை வரம்பிட்டநின்
பொன்பட்ட மேனியிற் புண்பட்ட போதிற் புவிநடையாந்
துன்பட்ட வீரரந் தோவாத வூரர்தந் தூயநெஞ்சம்
என்பட்ட தோ! இன்று கேட்டவென் னெஞ்ச மிடிபட்டதே! 82

**நீர்சிந்துங்** கண்ணு நிலைசிந்து நெஞ்சமு நீணடையிற்
சீர்சிந்து வாழ்க்கையுந் தேன்சிந்தி வாடிய செம்மலர்போற்
கூர்சிந்து புந்தியுங் கொண்டுநின் றேனுட் குறைசிந்தும்வா
ரோர்சிந்து போலரு ணேர்சிந்த னேத்து முடையவனே. 83

**கொடிகொண்ட** வேற்றி னடையுஞ் சடையுங் குளிர்முகமும்
துடிகொண்ட கையும் பொடிகொண்ட மேனியுந் தோலுடையும்
பிடிகொண்ட பாகமும் பேரரு ளோக்கமும் பெய்கழலுங்
குடிகொண்ட நன்மன மென்மனம் போற்குறை கொள்வதின்றே. 84

**விதிக்கும்** பதிக்கும் பதிநதி யார்மதி வேணிப்பதி
திதிக்கும் பதிக்கும் பதிமேற் கதிக்குந் திகழ்பதிவான்
துதிக்கும் பதிக்கும் பதியோங்கு மாபதி சொற்கடந்த
பதிக்கும் பதிசிற் பதியெம் பதிநம் பசுபதியே. 85

**எனையடைந்** தாழ்த்திய துன்பச் சுமையை யிறக்கெனவே
நினையடைந் தேனடி நாயேற் கருள நினைதிகண்டாய்
வினையடைந் தேமன வீறுடைந் தேநின்று வேற்றவர்தம்
மனையடைந் தேமனம் வாடலுன் றொண்டர் மரபல்லவே. 86

**வனப்போய்** வருவது போலேவன் செல்வர் மனையிடத்தே
தினம்போய் வருமிச் சிறியேன் சிறுமைச் செயலதுபோய்ச்
சினம்போய்க் கொடும்பகைக் காமமும் போய்நின் றிறநிகழ்த்தா
வினம்போய்க் கொடிய மனம்போ யிருப்பதென் றென்னரசே. 87

**பெற்றா** ளனையநின் குற்றேவல் செய்து பிழைக்கறியாச்
சிற்றாள் பலரினுஞ் சிற்றா ளெனுமென் சிறுமைதவிர்த்(து)
உற்றாள் இலையெனின் மற்றார் துணையெனக் குன்கமலப்
பொற்றா ளருட்புகழ்க் கற்றாய்ந்து பாடப் புரிந்தருளே. 88

**அந்நாளை** யாதுநஞ் சேற்றயன் மான்மனை யாதியர்தம்
பொன்னாளைக் காத்த வருட்கட லேபிறர் புன்மனைபோய்
இந்நாளை யாவகை யென்னாளைக் காத்தரு ளேழைக்குநின்
தன்னாளை யையநின் றாளாளை வேறு சரணில்லையே. 89

**பவசா** தனம்பெறும பாதகர் மேவுமிப பாரிடைநற்
சிவசா தனத்தரை யேனபடைத் தாயத் திருவிலிகள
அவசா தனஙகளேக கணடிவ ருளள மமுஙகவெனரோ
கவசா தனமெனக கைமமா னுரியைக களித்தவனே 90

**நான்செய்த** புணணியம யாதோ **சிவாய நம**வெனவே
ஊனசெய்த நாவைககொண டோதப்பெற றேனெனை யொபபவரார
வான்செயத நான்முகத தோனும திருநெடு மாலுமறறைத்
தேனசெயத கறபகத தேவனும தேவருஞ செயயரிதே. 91

**உற்று** யினுமறைக கோரவரி யோயெனை யுறறுபபெறற
நற்று யினுமினி யானேநின னலலரு ணலகிலெனனை
விற்று யினுஙகொள வேணடுகின றேனென விருபபறிநதுஞ
சற்று யினுமிரங காதோநின சிததந தயாநிதியே. 92

**வான்மா றினுமொழி மாருத மாறன்** மனஙகளிககக
கானமாறி யாடிய கறபக மேநின கருணையெனமேற
றனமா றினுமவிடடு நானமாறி டேனபெறற தாயககுழலைப்
பானமாறி னுமபிளளை பானமாறு மோவதிற பல்லிடுமே. 93

**அன்பரி** தாமனத தேழையன யானறுய ரானமெலிநதே
இனபரி தாமிச சிறுநடை வாழககையி லேஙகுகினறேன
எனபரி தாப நிலைநீ யறிநது மிரஙகிலையேல
வனபரி தாநதண ணருட்கட லேயெனனை வாழவெனககே. 94

**மைகண்ட** கணடமு மானகணட வாமமும வைததருளிற
கைகணட நீயெஙகுங கணகணட தெயவங கருதிலெனறே
மெயகணட நானமறறைப பொயகணட தெய்வஙகண் மேவுவனோ
நெயகணட வுணவிட்டு நீரகணட கூழுககென னேடுவதே. 95

**வேணிக்கு** மேலொரு [1]வேணிவைத தோய்முன விருமபியொரு
மாணிககு வேதம வகுததே கிழியொனறு வாஙகிததநத
காணிககுத தானரைக காணிமட டாயினுங காட்டுகணடாய
[2]பாணிககு மோதரும [3]பாணிவங தேறறவா பானமைகணடே 96

**மறைக்கொளித்** தாயநெடு மாறகொளித் தாய்திசை மாமுகஙகொள
இறைககொளித தாயிங கதிலோர பழியிலை யெனறனமனக
குறைககொளித தாலுங குறைதீரத தருளெனக கூவிடுமென
முறைககொளித தாலு மரசேநின பாறபழி மூடிடுமே. 97

**முன்மழை** வேணடும பருவப பயிரவெயின மூடிககெடட
பினமழை பெயகதெனனை பேறுகண டாயநதப் பெறறியைப்போல
நினமழை போறகொடை யினறனறி மூபபு நெருஙகியககாற
பொனமழை பெயகதெனனை கனமழை பெயகதெனனை பூரணனே.

1. வேணி எனபது — நதி. 2. பாணிக்குமோ எனபது — தாமதிக்குமோ
3. பாணி எனபது — கை — நீர்.

**நீளா** தரவுகொண் டென்குறை யாவு நிகழ்த்தவுநீ
கேளா தவனென வாளா விருக்கின்ற கேண்மையென்னே
சூளாத முக்கண் மணியே விடேலுனைச் சூழ்ந்தவென்னை
ஆளாகக் கொள்ளினு மீளா நரகத் தழுத்தினுமே. 99

**வளங்கன்று** மாவனத் தீன்றதன் தாயின்றி வாடுகின்ற
இளங்கன்று போற்சிறு வாழ்க்கையி னின்னரு ளின்றியந்தோ
உளங்கன்று நான்செய்வ தென்னே கருணை யுதவுகண்டாய்
களங்கன்று பேரருட் காரென்று கூறுங் களத்தவனே. 100

**சோற்றுக்கு** மேல்விட்ட பஞ்சாகி யுள்ளங் கறங்கச்சென்றே
சோற்றுக்கு மேற்கதி யின்றென வேற்றகந் தோறுமுண்போர்
தூற்றுக்கு மேற்பெருந் தூறிலை யாங்கென் றுயரமெனுஞ்
சேற்றுக்கு மேற்பெருஞ் சேறிலை காணருட் செவ்வண்ணனே. 101

**அந்தோ** துயரிற் சுழன்றுடு மேழை யவலநெஞ்சஞ்
சிந்தோத நீரிற் சுழியோ விளையவர் செங்கைதொட்ட
பந்தோ சிறுவர்தம் பம்பரமோ கொட்டும் பஞ்சுகொலோ
வந்தோ டுழலுந் துரும்போவென் சொல்வதெம் மாமணியே. 102

**பொன்வச** மோபெண்க ளின்வச மோகடற் பூவசமோ
மின்வச மோவெனு மெய்வச மோவென் விதிவசமோ
தன்வச மோமலந் தன்வச மோவென் சவலைநெஞ்சம்
என்வச மோவில்லை நின்வச நானெனை யேன்றுகொள்ளே. 103

**நானடங்** காதொரு நாட்செயுங் குற்ற நடக்கையெல்லாம்
வானடங் காதிந்த மண்ணடங் காது மதிக்குமண்டந்
தானடங் காதெங்குந் தானடங் காதெனத் தானறிந்து
மானடங் காட்டு மணியெனை யாண்டது மாவியப்பே! 104

**பாம்பா** யினுமுணப் பால்கொடுப் பார்வளர்ப் பார்மனைப்பால்
**வேம்பா யினும்வெட்டல் செய்யார்** வளர்த்த வெருட்சிக்கடாத்
[1]தாம்பா யினுமொரு [2]தாம்பா யினுங்கொடு தாம்பின்செல்வார்
தேம்பாய் மலர்க்குழற் காம்பாக வென்னையுஞ் சேர்த்துக்கொள்ளே.

**நெருப்புக்கு** முட்டையுங் கூழ்க்கிட வுப்பையு நேடிச்செல்வோர்
பருப்புக்கு நெய்யுமொண் பாலுக்கு வாழைப் பழமுங்கொள்ளத்
தெருப்புக்கு வாரொடு சேர்கிலென் னுமிச் சிறுநடையாம்
இருப்புக்கு வேண்டிய நான்சிவ யோகர்பின் னெய்திலென்னே. 106

**எம்மத** மாட்டு மரியோயென் பார்வி யிடும்பைநெஞ்சை
மும்மத யானையின் காலிட் டிடறினு மொய்யனற்கண்
விம்மத மாக்கினும் வெட்டினு நன்றுன்னை விட்டவதன்
வெம்மத நீங்கலென் சம்மதங் காணெவ் விதத்தினுமே. 107

1 கடா தாம் பாயினும்—பாய்ந்தாலும், 2 தாம்பு—கயிறு.

**கல்லாத** புந்தியு மந்தோநின் றருளிற் கணப்பொழுது
நில்லாத நெஞ்சமும் பொல்லாத மாயையு நீண்மதமுங்
கொல்லாமற் கொன்றெனைத் தின்னுமற் றின்கின்ற கொள்கையயிங்
கெல்லா மறிந்த வுனக்கெளி யேனின் றிசைப்பதென்னே. 108

**தெவ்வழி** யோடு மனத்தேனுக் குன்றன் றிருவுளந்தான்
இவ்வழி யேயென் றிருவழிக் குள்விட்ட தெவ்வழியோ
அவ்வழி யேவழி செவ்வழி பாடநின் றருகின்றோய்
வெவ்வழி நீர்ப்புணைக் கென்னே செயலிவ் வியனிலத்தே. 109

**கண்ணார்** நுதற்செங் கரும்பேநின் பொன்னருட் கான்மலரை
எண்ணாத பாவியிங் கேன்பிறந் தேனினை யேத்துகின்றோர்
உண்ணாத வூணு முடுக்கா வுடையு முணர்ச்சிசற்று
நண்ணாத நெஞ்சமுங் கொண்டுல கோர்முன்னர் நாணுறவே. 110

**அம்மா** வயிற்றெரிக் காற்றே னெனநின் றழுதலறச்
சும்மாவச் சேய்முகந் தாய்பார்த் திருக்கத் துணிவள்கொலோ
இம்மா நிலத்தமு தேற்றாயி னுந்தந் திடுவள்முக்கண்
எம்மானிங் கேழை யழுமுகம் பார்த்து மிரங்கிலையே. 111

**ஓயாக்** கருணை முகிலே நுதற்கண் ணொருவநின்பாற்
றோயாக் கொடியவெந் நெஞ்சத்தை நான்சுடு சொல்லைச்சொல்லி
வாயாற் சுடினுந் தெரிந்தில தேயினி வல்வடவைத்
தீயாற் சுடினுமென் னந்தோ சிறிதுந் தெரிவதன்றே. 112

**மாலறி** யான்மல ரோனறி யான்மக வானறியான்
காலறி யான்மற்றை வானோர் கனவினுங் கண்டறியார்
சேலறி யாவிழி மங்கைபங் காநின் றிறத்தைமறை
நாலறி யாவெனி னானறி வேனென னாணுடைத்தே. 113

**ஆறிட்ட** வேணியு மாட்டிட்ட பாதமு மம்மையொரு
கூறிட்ட பாகமுங் கோத்திட்ட கொன்றையுங் கோலமிக்க
நீறிட்ட மேனியு நான்காணு நாளென் னிலைத்திலைமேல்
ஏறிட்ட கைகள்கண் டாணவப் பேய்க ளிறங்கிடுமே. 114

**அல்லுண்ட** கண்டத் தரசேநின் சீர்த்தி யமுதமுண்டோர்
கொலவுண்ட தேவர்தங் கோளுண்ட சீரெனுங் கூழுண்பரோ
[1]சொல்லுண்ட வாயினர் புல்லுண்ப ரோவின் சுவைக்கண்டெனுங்
கல்லுண்ட பேர்கருங் கல்லுண்ப ரோவிக் கடலிடத்தே. 115

**காரே** யெனுமணி கண்டத்தி னான்பொற் கழலையன்றி
யாரே துணைநமக் கேழைநெஞ் சேயிங் கிருந்துகழு
நீரே யெனினுந் தரற்கஞ்சு வாரொடு நீயுஞ்சென்று
சேரே லிறுகச் சிவாய நமவெனச் சிந்தைசெய்யே. 116

1 சொல் என்பது—நெல்.

**வலைப்பட்ட** மானென வாட்பட்ட கண்ணியர் மையலென்னும்
புலைப்பட்ட பேய்க்கு விலைப்பட்ட நான்மதி போய்ப்புலம்ப
விலைப்பட்ட விம்மன மந்தோவிவ் வேழைக்கென் றெங்கிருந்து
தலைப்பட்ட தோவிதற் கென்செய்கு வேன்முக்கட் சங்கரனே. 117

**குருந்தாமென்** சோக மனமான பிள்ளைக் குரங்குக்கிங்கே
வருந்தா ணவமென்னு மானிடப் பேயொன்று மாத்திரமோ
பெருந்தா மதமென் றிராக்கதப் பேயும் பிடித்ததெந்தாய்
திருந்தா வதன்குதிப் பென்னொரு வாய்கொண்டு செப்பரிதே. 118

**பெண்மணி** பாகப் பெருமணி யேயருட் பெற்றிகொண்ட
விண்மணி யான விழிமணி யேயென் விருப்புறுநற்
கண்மணி நேர்கட வுண்மணி யேயொரு காண்மணியைத்
திண்மணிக் கூடலில் விற்றோங்கு தெய்வ சிகாமணியே. 119

**அலையெழுத்** துக்கெறு மைந்தெழுத் தாலுன்னை யர்ச்சிக்கின்றோர்
கலையெழுத் தும்புகழ் காலெழுத் திற்குக் கனிவிரக்கம்
இலையெழுத் தும்பிறப் பீடெழுத் துங்கொண்ட வெங்கள்புழுத்
தலையெழுத் துஞ்சரி யாமோ நுதற்கண் தனிமுதலே. 120

**ஆட்சிகண்** டார்க்குற்ற துன்பத்தைத் தான்கொண் டருளளிக்கும்
மாட்சிகண் டாயெந்தை வள்ளற் குணமென்பர் மற்றதற்குக்
காட்சிகண் டேனிலை யாயினு முன்னருட் கண்டத்திலோர்
சாட்சிகண் டேன்களி கொண்டேன் கருணைத் தடங்கடலே. 121

**கண்கொண்ட** நெற்றியுங் கார்கொண்ட கண்டமுங் கற்பளிக்கும்
பெண்கொண்ட பாகமுங் கண்டேன்முன் **மாறன் பிரப்படியாற்**
**புண்கொண்ட மேனிப்** புறங்கண்டி லேனப் புறத்தைக்கண்டால்
ஒண்கொண்ட கல்லு முருகுமென் றோவிங் கொளித்தனையே. 122

**வேய்க்குப்** பொருமெழிற் றோளுடைத் தேவி விளங்குமெங்கள்
தாய்க்குக் கனிந்தொரு கூறளித் தோய்நின் றயவுமிந்த
நாய்க்குக் கிடைக்கு மெனவொரு சோதிட நல்கிலவர்
வாய்க்குப் பழத்தொடு சர்க்கரை வாங்கி வழங்குவனே. 123

**காண்டத்தின்** மேவும் உலகீர்!இத் தேகங் கரும்பனைபோல்
நீண்டத்தி லென்னை? நிலையல வேயிது நிற்றல்பசும்
பாண்டத்தி னீர்நிற்ற லன்றோ? நமைநம் பசுபதிதான்
ஆண்டத்தி லென்னை குறையோநம் மேற்குறை யாயிரமே. 124

வேணிக்க ணீர்வைத்த தேவே! மதுரை வியன்றெருவில்
**மாணிக்கம் விற்றசெம் மாணிக்க மே** எனை வாழ்வித்ததோர்
ஆணிப்பொன் னேதெள் ளமுதேநின் செய்ய வடிமலர்க்குக்
காணிக்கை யாக்கிக்கொண் டாள்வா யெனது கருத்தினையே. 125

**மாகலே** வாணர் பிறனபா லெமககு மனேககுஙகட்ட
நீகலே தாவொரு மேகலே தாவுண நெனமலேதா
போகலே யாவெனப பினரெடா வாரவா போனமனனீ
யேகலே யீகல ரேகமப வாண ரிடஞசெலகவே. 126

**ஊர்தரு** வார்நல்ல வூணதரு வாருடை யுநதருவார்
பார்தரு வாருழற கோகரு வாபொன பணநதருவார
சோாதரு வாருள ளறிவுகெ டாமற சுகிபபதறகிங
கார்தரு வாரமமை யாாதரு பாகனே யனறிநெஞசே. 127

**பண்செய்த** சொன்மஙகை பாகாவெண் பாற்கடற பளளிகொண்டோன
திணசெயத சககரங கொளவா னருசசனே செயதிடடநாள
விணசெயத நினனருட சேவடி மேறபட வேணடியவன
கண்செயத நறறவம யாதோ கருததிற கணிபபரிதே. 128

**மாப்பிட்டு** நோநதுண்டு வநதியை வாழவிதத வளளலுனவெண்
காபபிடடு மேறபல பாபபிட்ட மேனியைக கணடுதொழக
கூப்பிட்டு நாணிற்க வநதிலே நாதனேக கூடவிலலாள
பூபபிடட காலத்திற் கூபபிட்ட போதிலும போவதுணடே. 129

**என்மேற்** பிழைபிலே யானெனசெய கேனென னிடததிருநதென
சொன்மேற கொளாதெனே யினமேற றுருமபெனச சுறறுநெஞசத
தினமேற பிழையது புனமேற பனியெனச செயதொழிகக
நினமேற பரமவிடை தனமேறகொண் டனபாமுன னிறபவனே. 130

**மைவிட்டி** டாமணி கண்டாநின றனனே வழுததுமெனனே
**நெய்விட்டி டாவுணடி** போலினபி லானமெயந நெறியறியான
பொயவிடடி டானவெம **புலேவிட்டி டா**ாமயற போகமெலாங
கைவிடடி டானெனக கைவிடடி டேலவநது காததருளே. 131

**நல்லமு** தஞசிவை தானறரக கொணடுநின னறசெவிககுச
சொலலமு தநதநத வெஙகள பிரானவளஞ சூழ **மயிலே**
இலலமு தநதிகழ **பெண்ணுக வென்பை** யெழுபபியநாட்
சிலலமு தமபெறற தேவரை வானஞ சிரிததநனறே 132

**சொற்றுணே வேதிய** னெனனும பதிகச சுருதியைநின்
பொறறுணே வாாகழற கேறறியப பொனனடிப போதினேயே
நறறுணே யாககரை யேறிய புணணிய **நாவரச**ச்
கறறுணே யாதிநதக கறறுணேயாமென கனடெநஞசமே 133

**சடையவ!** நீமுன **தடுத்தாண்ட நமபி**ககுச சறறெனினுங
கடையவ னேனசெயுங கைமமா றறிநதிலன காலவருநதி
நடையுற நினனேப **பரவை**தன பாஙகா நடததியஅபா
இடைவரு முனற னிரககததைதத தானவெளி யிடடதறகே. 134

**திருவாத வூரெம் பெருமான்** பொருட்டன்று தென்னன்முன்னே
வெருவாத வைதிகப் பாய்பரி மேற்கொண்டு மேவிநின்ற
ஒருவாத கோலத் தொருவாவக் கோலத்தை யுள்குளிர்ந்தே
கருவாத நீங்கிடக் காட்டுகண் டாயென் கனவினிலே. 135

**சீர்தரு நாவுக் கரையரைப்** போலிச் சிறியனுமோர்
கார்தரு மாயைச் சமணன் மனக்கருங் கல்விற்கட்டிப்
பார்தரு பாவக் கடலிடை வீழ்த்திடப் பட்டுழன்றே
ஏர்தரும் **ஐந்தெழுத் தோதுகின்** றேன்கரை யேற்றரசே. 136

**தூக்கமுஞ்** சோம்பலுந் துக்கமும் வாழ்க்கையைத் தொட்டுவரும்
ஏக்கமு நோயு மிடையூறு மற்றை யிடரும்விட்ட
நீக்கமு நின்மல நெஞ்சமுஞ் சாந்த நிறைவுமருள
ஆக்கமு நின்பதத் தன்புந் தருக வருட்சிவமே. 137

**பொய்வந்த** வாயும் புலைவந்த செய்கையும் புன்மையெல்லாங்
கைவந்த நெஞ்சமுங் கண்டே னினிநற் கனிவுடன்யான்
மெய்வந்த வாயும் விதிவந்த செய்கையும் வீறன்பினுற்
றைவந்த நெஞ்சமுங் காண்பதென் றோசெஞ் சடைக்கனியே. 138

**கங்கைகொண்** டாய்மலர் வேணியி லேயருட் கண்ணிமலை
மங்கைகொண் டாயிடப் பாகத்தி லேயைய மற்றுமொரு
நங்கைகொண் டாலெங்கு கொண்டருள் வாயென்று நண்ணுமன்பர்
சங்கைகொண் டாலதற் கென்சொல்லு வாய்முக்கட் சங்கரனே. 139

**வாட்கொண்ட** கண்ணியர் மாயா விகார வலைபிழைத்துன்
தாட்கொண்ட நீழலிற் சார்ந்திடு மாறென் றனக்கருள்வாய்
கீட்கொண்ட கோவணப் பேரழ காவெனக் கேதமற
ஆட்கொண்ட நீயின்று வாளா விருப்ப தழகல்லவே. 140

**விட்டுத் தலைவ! நின் றுள்வணங் கார்தம் விரிதலை**சும்
மாட்டுத் தலைபட்டி மாட்டுத் தலைபுன் வராகத்தலை!
ஆட்டுத் தலைவெறி நாய்த்தலை! பாம்பி னடுந்தலைகற்
பூட்டுத் தலைவெம் புலித்தலை! நாற்றப் புழுத்தலையே! 141

**தெண்ணீர் முடியனைக் காணார்தங் கண்** இருள் சேர்குருட்டுக்
கண்ணீர் சொரிந்தகண் காசக்கண் புன்முலைக் கண்ணகக்கண்
புண்ணீ ரொழுகுங் கொடுங்கண் **பொருமைக்கண்** புன்கண்வன்கண்
மண்ணீர்மை யுற்றகண் மாமணி நீத்தகண் மாலைக்கண்ணே. 142

**கண்ணுத லான் புகழ் கேளார்** செவிபொய்க் கதையொலியும்
அண்ணுற மாதரு மைந்தருங் கூடி யழுமொலியுந்
துண்ணெனுந் தீச்சொல் லொலியுமவ் வந்தகன் றூதர்கண்மொத்
துண்ணுற வாவென் றுரப்பொலி யும்புகு மூன்செவியே. 143

**மணிகொண்ட கண்டனை வாழ்த்தார்தம் வாய்த்தெரு மண்ணுண்டவாய்**
பிணிகொண்ட வாய்விடப் பிச்சுண்ட வாய்வரும் பேச்சற்றவாய்
துணிகொண்ட வாயனற் சூடுண்ட வாய்மலஞ் சோர்ந்திழிவாய்
குணிகொண்ட வுப்பிலிக் கூழுண்ட வாயெனக் கூறுபவே. 144

**சகமிலை யேயென் றுடையானை யெண்ணலர் தங்கள் நெஞ்சம்**
சுகமிலை யேயுணச் சோறிலை யேகட்டத் தூசிலையே
அகமிலை யேபொரு ளாவிலை யேவெள்ள லாரிலையே
இகமிலை யேயொன்று மிங்கிலை யேயென் றிரங்குநெஞ்சே. 145

**பொங்கரும்** பேர்முலை மங்கைக் கிடந்தந்த புத்தமுதே
செங்கரும் பேநறுந் தேனே மதுரச் செழுங்கனியே
திங்களுங் கங்கையுஞ் சேர்ந்தொளிர் வேணிச் சிவக்கொழுந்தே
எங்களை யாட்கொண்டு மென்னே துயரி லிருத்துவதே. 146

**வில்லைப்பொன்** னுக்கரங் கொண்டோய் **வன்றொண்டர் விரும்புறச்செங்**
**கல்லைப்பொன் னுக்கிக் கொடுத்தோய்**நின் பாதங் கருத்தில்வையார்
புல்லைப்பொன் னுக்கொளும் புல்லர்கள் பாற்சென்று பொன்னளிக்க
வல்லைப்பொன் னார்புயவென் பாரிஃதென் சொல் வாணர்களே. 147

**கூத்துடை** யாயென் னுடையாய் மூத்தேவருங் கூறுகின்ற
வேத்துடை யாயன்ப ரேத்துடை யாயென்ற னெண்மைமொழிச்
சாத்துடை யாய்நின் றனக்கே பரமெனத் தாங்குதற்கோர்
வேத்துடை யார்மற் றிலையரு ளீதென்றன் **விண்ணப்பமே.** 148

**வெப்பிலை** யேயெனுந் தண்விளக் கேமுக்கண் வித்தகநின்
ஒப்பிலை யேயெனுஞ் சீர்புக லார்புற்கை யுண்ணுதற்கோர்
உப்பிலை யேபொரு ளொன்றிலை யேயென் றுழல்பவர்மேற்
றப்பிலை யேயவர் புன்றலை யேட்டிற் றவமிலையே. 149

**எனைப்பெற்ற** தாயினு மன்புடை யாயெனக் கின்பநல்கும்
உனைப்பெற்ற வுள்ளத் தவர்மலர்ச் சேவடிக் கோங்குமன்பு
தனைப்பெற்ற நன்மனந் தாம்பெற்ற மேலவர் சார்பைப்பெற்றால்
வினைப்பெற்ற வாழ்வின் மனைப்பெற்றம் போல மெலிவதின்றே. 150

**நிறைமதி** யாளர் புகழ்வோய் சடையுடை நீண்முடிமேற்
குறைமதி தானென்று கொண்டனை யேயக் குறிப்பெனவே
பொறைமதி யேன்றன் குறைமதி தன்னையும் பொன்னடிக்கீழ்
உறைமதி யாக்கொண் டருள்வா யுலக முவப்புறவே. 151

**துடிவைத்த** செங்கை யரசே! **நல்லூரினின்** றாமலர்ப்பொன்
அடிவைத்த போ**தெங்கள் அப்பர்தஞ்** சென்னி யதுகுளிர்ந்தெப்
படிவைத்த தோவின்பம் யானெனுந் தோறுமிப் பாவிக்குமால்
குடிவைத்த புன்றலை யொன்றோ மனமுங் குளிர்கின்றதே. 152

ஒருமுடி மேற்பிறை வைத்தோ யரியய ணெண்மறைதம்
பெருமுடி மேலுற வேண்ட வராதுனைப் பித்தனென்ற
மருமுடி யூரன் முடிமேன் மறுப்பவும் வந்தவர்
திருமுடி மேலென்ன வாசைகண் டாய்நின் றிருவடிக்கே. 153

வேல்கொண்ட கையுமுந் நூல்கொண்ட மார்பமு மென்மலர்ப்பொற்
கால்கொண்ட வொண்கழற் காட்சியும் பன்னிரு கண்ணும்விடை
மேல்கொண்ட செஞ்சுடர் மேனியுஞ் சண்முக வீறுங்கண்டு
மால்கொண்ட நெஞ்ச மகிழ்வதெந் நாளென்கண் மாமணியே. 154

விண்பூத்த கங்கையு மின்பூத்த வேணியு மென்முகமுங்
கண்பூத்த நெற்றியும் பெண்பூத்த பாகமுங் கார்மிடறுந்
தண்பூத்த பாதமும் பொன்பூத்த மேனியுஞ் சார்ந்துகண்டே
மண்பூத்த வாழ்க்கையை விண்பூத்த பூவின் மதிப்பதென்றே. 155

தண்மதி யோவதன் றண்ணமு தோவெனச் சார்ந்திருணீத்(து)
உண்மதி யோர்க்கின் புதவுநின் பேரரு ளூற்றிடவே
எண்மதி யோடிச்சை யெய்தா தலையுமென் னேழைமதி
பெண்மதி யோவன்றிப் பேய்மதி யோவென்னை பேசுவதே. 156

பிட்டுக்கும் வந்துமுன் மண்சுமந் தாயென்பர் பித்தனென்ற
திட்டுக்குஞ் சீரருள் செய்தளித் தாயென்பர்! தீவிறகுக்
கட்டுக்கும் பொன்முடி காட்டிநின் றாயென்பர்! கண்டிடவென்
மட்டுக்கும் வஞ்சகத் தெய்வமென் கோ!முக்கண் மாணிக்கமே. 157

மையிட்ட கண்ணியர் பொய்யிட்ட வாழ்வின் மதிமயங்கிக்
கையிட்ட நானுமுன் மெய்யிட்ட சீரருள் காண்குவனோ?
பையிட்ட பாம்பணி யையிட்ட மேனியும் பத்தருள்ள
மொய்யிட்ட காலுஞ்செவ் வையிட்டவேலுங்கொளா முன்னவனே.

தவமே புரியும் பருவமி லேன்பொய்ச் சகநடைக்கண்
அவமே புரியு மறிவிலி யேனுக் கருளுமுண்டோ
உவமேய மென்னப்ப டாதெங்கு மாகியொளி ரொளியாஞ்
சிவமேமுக் கண்ணுடைத் தேவேநின் சித்தந் தெரிந்திலனே. 159

மட்டுண்ட கொன்றைச் சடையர சேயன்று வந்தியிட்ட
பிட்டுண்ட பிச்சைப் பெருந்தகை யேகொடும் பெண்மயலாற்
கட்டுண்ட நான்சுகப் பட்டுண்டு வாழ்வனிக் கன்மனமாந்
திட்டுண்ட பேய்த்தலை வெட்டுண்ட நாளிலென் றீமையற்றே. 160

ஆட்டுக்குக் காலெடுத் தாய்நினைப் பாடல ராங்கியற்றும்
பாட்டுக்குப் பேரென்கொல் பண்ணென்கொ னீட்டியப் பாட்டெழுதும்
ஏட்டுக்கு மையென்கொல் சேற்றி லுறங்க விறங்குங்கடா
மாட்டுக்கு வீடென்கொல் பஞ்சணை யென்கொன் மதித்திடினே. 161

**ஒப்பற்ற** முக்கட் சுடரேநின் சீர்த்தி யுறுதவெறுந்
துப்பற்ற பாட்டிற் சுவையுள தோவதைச் சூழ்ந்துகற்றுச்
செப்பற்ற வாய்க்குத் திருவுள தோசிறி தேனுமுண்டேல்
உப்பற்ற புன்கறி யுண்டோர்தந் நாவுக் குவப்புளதே. 162

**செல்வருங்** கண்ணி யிடத்தோய்நின் சீர்த்தியைச் சேர்த்தியந்த
**நால்வருஞ் செய்தமிழ்** கேட்டுப் புறத்தி னடக்கச்சற்றே
கால்வரு மாயினு மின்புரு வாகிக் கனிமனமப்
பால்வரு மோவதன் பாற்பெண் களைவிட்டுப் பார்க்கினுமே. 163

**கார்முக** மாகப்பொற் கல்வளைத் தோயிக் கடையவனேன்
சோர்முக மாகநின் சீர்முகம் பார்த்துத் துவளுகின்றேன்
போர்முக மாகநின் றோரையுங் காத்தநின் பொன்னருளிப்
பார்முக மாகவென் னேர்முகம் பார்க்கப் பரிந்திலதே. 164

**வான்வளர்த்** தாயிந்த மண்வளர்த் தாயெங்கு மன்னுயிர்கள்
தான்வளர்த் தாய்நின் றகையறி யாவென் றனையரசே
ஏன்வளர்த் தாய்கொடும் பாம்பையெல் லாந்தள் ளிலைவளர்த்தாய்
மான்வளர்த் தாய்கரத் தார்நினைப் போல வளர்ப்பவரே. 165

**அற்கண்ட** மோங்கு மரசேநின் றன்னடி யார்மதுரச்
சொற்கண்ட போதுமென் புற்கண்ட நெஞ்சந் துணிந்துநில்லா
திற்கண்ட மெய்த்தவர் போலோடு கின்ற தெறிந்ததுதீங்
கற்கண் டெனினுமக் கற்கண்ட காக்கைநிற் காதென்பரே. 166

**சொல்லுகின்** றோர்க்கமு தம்போற் சுவைதருந் தொல்புகழோய்
வெல்லுகின் றோரின்றிச் சும்மா வலையுமென் வேடநெஞ்சம்
புல்லுகின் றோர்தமைக் கண்டாலென் னுங்கொல் புகல்வெறும்வாய்
மெல்லுகின் றோர்க்கொரு நெல்லவல் வாய்க்கில் விடுவரன்றே. 167

**சீரிடு** வார்பொருட் செல்வர்க் கலாமலித் தீனர்கட்கிங்
காரிடு வார்பிச்சை யாயினும் பிச்ச னசடனென்றே
பேரிடு வார்வம்புப் பேச்சிடு வாரிந்தப் பெற்றிகண்டும்
போரிடு வார்நினைப் போற்றுரென் னேமுக்கட் புண்ணியனே. 168

**சேலுக்கு** நேர்விழி மங்கைபங் காவென் சிறுமதிதான்
மேலுக்கு நெஞ்சையுட் காப்பது போனின்று வெவ்விடய
மாலுக்கு வாங்கி வழங்கவுந் தான்சம் மதித்ததுகாண்
பாலுக்குங் காவல்வெம் பூனைக்குந் தோழனென் பாரிதுவே. 169

**இணையேது** மின்றிய தேவே [1]கனலி னனிந்தெனுமுக்
கணையே [2]கொளுஞ்செங் கரும்பே பிறவிக் கடல்கடத்தும்
புணையே திருவருட் பூரண மேமெய்ப் புலமளிக்குந்
துணையேயென் றுன்பந் துடைத்தாண்டு கொள்ளத் துணிந்தருளே.

1. கனல் — அக்கினி; இனன் — சூரியன; இந்து — சந்திரன்;

**நிலைகாட்டி** யாண்டநின் ருட்கன்பி லாதன்பி னீண்டவன்போற்
புலைகாட் டியமனத் தேன்கொண்ட வேடம் புனையிடைமேற்
கலைகாட்டிக் கட்டு மயிர்த்தலை காட்டிப்புன் கந்தைசுற்றி
முலைகாட்டி யாண்மகன் பெண்வேடங் காட்டு முறைமையன்றே. 171

**விடநாகப்** பூணணி மேலோயென் னெஞ்சம் விரிதல்விட்டென்
உடனாக மெய்யன்பு ளூற்றாக நின்னரு ளூற்றிடுதற்
கிடனாக மெய்ந்நெறிக் கீடாகச் செய்குவ திங்குனக்கே
கடனாக நிற்பது கண்டேன்பின் றுன்பொன்றுங் கண்டிலனே. 172

**நயப்படு** மோர்நின் னருளெனக் கின்றெனி னைமனமென்
வயப்படு மோதுயர் மண்படு மோநல்ல வாழ்வையென்னாற்
செயப்படு மோகுணஞ் சீர்ப்படு மோபவஞ் சேரச்சற்றும்
பயப்படு மோமலம் பாழ்படு மோவெம் பசுபதியே. 173

**சோபங்கண்** டார்க்கருள் செய்வோய் மதிக்கன்றிச் சூழ்ந்திடுவெந்
தீபங்கண் டாலு மிருள்போமிவ் வேழை தியங்கும்பரி
தாபங்கண் டாயருள் செய்யாதென் குற்றந் தனைக்குறித்துக்
கோபங்கண் டாலுநன் றையாவென் றுன்பக் கொதிப்பறுமே. 174

**எல்லா** முடைய விறையவ னேநினை யேத்துகின்ற
நல்லார் தமக்கொரு நாளேனும் பூசை நயந்தியற்றிச்
சொல்லா லவர்புகழ் சொல்லாதிவ் வண்ணந் துயர்வதற்கென்
கல்லாமை யொன்றுமற் றில்லாமை யொன்றிரு காரணமே. 175

**பிறையாறு** கொண்டசெவ் வேணிப் பிரான்பதப் பேறடைவான்
மறையாறு காட்டுநின் றண்ணரு ளேயன்றி மாயையென்னும்
நிறையாறு சூழுஞ் சுரும்பாய்ச் சுழலுமென் னெஞ்சினுள்ள
குறையாறு தற்கிடம் வேறில்லை காணிக் குவலயத்தே. 176

**மாலறி** யாதவ னன்றேயத் தெய்வ வரதனுநின்
காலறி யாதவ னென்றுலக் காலையெக் காலையெமைப்
போலறி யாதவர் காண்பார்முற் கண்டமெய்ப் புண்ணியர்தம்
பாலறி யாதவ னுனிது கேட்டுணர் பாலனன்றே. 177

**ஒன்றேயென்** னுருயிர்க் கோருற வேயெனக் கோரமுதே
நன்றேமுக் கண்ணுடை நாயக மேமிக்க நல்லகுணக்
குன்றே நிறையருட் கோவே யெனது குலதெய்வமே
மன்றே யொளிர்முழு மாணிக்க மேயெனை வாழ்விக்கவே. 178

**தாழ்வேது** மின்றிய கோவே யெனக்குத் தனித்தபெரு
வாழ்வே நுதற்கண் மணியேயென் னுள்ள மணிவிளக்கே
ஏழ்வேலை யென்னினும் போதா விடும்பை யிடுங்குடும்பப்
பாழ்வே தனைப்பட மாட்டே னெனக்குன் பதமருளே. 179

**வண்டுகொண்** டார்நறுங் கொன்றையி னுன்றன் மலரடிக்குத்
தொண்டுகொண் டார்தஞ் சுகத்துக்கும் வாழ்க்கைச் சுழலிற்றள்ளும்
பெண்டுகொண் டார்தந் துயருக்கு மொப்பின்று பேசிலென்றே
கண்டுகொண் டாயினி நெஞ்சேநின் னுள்ளக் கருத்தெதுவே. 180

**மலங்கவிழ்ந்** தார்மனம் வான்கவிழ்ந் தாலுமவ் வான்புறமாஞ்
சலங்கவிழ்ந் தாலுஞ் சலியாதென் புன்மனந் தான்கடலிற்
கலங்கவிழ்ந் தார்மனம் போலே சலிப்பது காண்குடும்ப
விலங்கவிழ்ந் தாலன்றி நில்லாதென் செய்வல் விடையவனே. 181

**மைகொடுத்** தார்நெடுங் கண்மலை மானுக்கு வாய்ந்தொருபான்
மெய்கொடுத் தாய்தவர் விட்டவெம் மானுக்கு மேவுறவோர்
கைகொடுத் தாய்மயற் கண்ணியில் வீழ்ந்துட் கலங்குறுமென்
கொய்கொடுத் தாழ்மன மானுக்குக் காலைக் கொடுத்தருளே. 182

**உடம்பா** ருறுமயிர்க் காற்புழை தோறன லூட்டிவெய்ய
விடம்பாச் சியவிருப் பூசிகள் பாய்ச்சினு மெத்தென்னுமித்
தடம்பார் சிறுநடைத் துன்பஞ்செய் வேதனைத் தாங்கரிதென்
**கடம்பா! நற் பன்னிரு கண்ணா!** இனியெனைக் காத்தருளே. 183

**மண்ணாலு** மண்ணுற்ற வாழ்க்கையி னாலுமவ் வாழ்க்கைக்குற்ற
பெண்ணாலு நொந்துவந் தாரை யெலாமருட் பேறெனுமுக்
கண்ணாலும் பார்த்தைந்து கையாலு மீயுங் **கணபதி!** நின்
பண்ணாலு மாமறை மேற்றாளை யென்னுட் பதித்தருளே. 184

**வானாள** மாலயன் வாழ்வாள வன்றியிம் மண்முழுதுந்
தானாள நின்பதந் தாழ்பவர் தாழ்கவொண் சங்கையங்கை
மானாள மெய்யிடந் தந்தோய்நின் பற்ற மனமதொன்றே
நானாள வெண்ணிநின் றாளேத்து கின்றன னல்குகவே. 185

**ஈடறி** யாதமுக் கண்ணாநின் னன்ப ரியல்பினையிந்
நாடறி யாதுன் னருளன்றி யூண்சுவை நாவையன்றி
மேடறி யாதுநற் பாட்டைக்கற் றோரன்றி மேற்சுமந்த
ஏடறி யாதவை யேனறி யாவென் றிகழ்வரன்றே. 186

**சூடுண்ட** பூனைக்குச் சோறுண்ட வாய்பின் துடிப்பதன்றி
ஊடுண்ட பாலிட்ட வூண்கண்ட தேனு முணத்துணியா(து)
ஈடுண்ட வென்மன மந்தோ துயரி லிடியுண்டுமிவ்
வீடுண்ட வாழ்க்கையின் வீழுண்ட தாலெம் விடையவனே. 187

**கரங்காட்டி** மையிட்ட கண்காட்டி யென்பெருங் கன்மநெஞ்சக்
குரங்காட்டிச் செய்மையி னிற்கின்ற மாதரைக் கொண்டுகல்லார்
உரங்காட்டிக் கோலொன் றுடனீட்டிக் காட்டி யுரப்பியொரு
மரங்காட் டியகுரங் காட்டுகின் றேனென் **மணிகண்டனே.** 188

**களங்கனி** போன்மணி கண்டாநின் பொற்கழல் காணற்கென்சிற்
றுளங்கனி யாதுநின் சீர்கேட் கினுமன் புறவுருகா
வளங்கனி காமஞ் சிறவாமற் சிற்றில் வருத்துழலும்
இளங்கனி போனின்ற தென்செய்கு வேனெம் மிறையவனே. 189

**மாமத்தி** னுற்சுழல் வெண்டயிர் போன்று மடந்தையர்தங்
காமத்தி னுற்சுழ லென்றனெஞ் சோவுன்றன் காலையன்பாந்
தாமத்தி னுற்றளை யிட்டநெஞ் சோவித் தகையிரண்டில்
நாமத்தி னுற்பித்த னென்போய் நினக்கெது நல்லநெஞ்சே? 190

**ஏற்றிலிட்** டார்கொடி கொண்டோய் விளக்கினை யேற்றபெருங்
காற்றிலிட் டாலு மிடலாகென் மாவைக் கவித்திடுநீர்
ஆற்றிலிட் டாலும் பெறலாமுட் காலை யடுங்குடும்பச்
சேற்றிலிட் டாற்பின் பரிதா மெவர்க்குந் திருப்புவதே. 191

**தேரோங்கு** காழிக்கண் மெய்ஞ்ஞானப் பாலுண்ட செம்மணியைச்
சீரோங்கு **முத்துச் சிவிகையின் மேல்வைத்த தேவ!**உன்றன்
பேரோங்கு மைந்தெழுத் தன்றோ**படைப்பைப் பிரமனுக்கும்**
ஏரோங்கு **காப்பைத் திருநெடு மாலுக்கும்** ஈந்ததுவே. 192

**வேதனை** யாமது சூதனை யாவென்று வேதனையாற்
போதனை யாநின் றனைக்கூவு மேழையைப் போதனைகேள்
வாதனை யாதிங்கு வாதனை யாவென்றுன் வாய்மலாச்
சோதனை யாயினுஞ் சோதனை யாசிற் சுகப்பொருளே. 193

**இன்பற்ற** விச்சிறு வாழ்க்கையி லேவெயி லேறவெம்பும்
என்பற்ற புன்புழுப் போற்றள ரேழை யெனினுமிவன்
அன்பற்ற பாவியென் றந்தோ! எனைவிடி லையவையத்(து)
என்பற்ற தாகமற் றில்லைகண் டாயெனை யேன்றுகொள்ளே. 194

**களங்கொண்ட** வோர்மணிக் காட்சியு மூச்சுடர்க் கண்ணருளும்
வளங்கொண்ட தெய்வத் திருமுக மாட்சியும் வாய்ந்தபரி
மளங்கொண்ட கொன்றைச் சடையும்பொற் சேவடி மாண்புமொன்ற
உளங்கொண்ட புண்ணிய ரன்றோவென் றன்னை யுடையவரே. 195

**காவிக்கு** நேர்மணி கண்டாவண் டார்குழற் கற்பருளுந்
தேவிக்கு வாமங் கொடுத்தோய்நின் மாமலர்ச் சேவடிப்பால்
சேவிக்குஞ் சேவகஞ் செய்வோரை யாயினுஞ் சேவிக்கவிப்
பாவிக்கு வாய்க்கிலென் னுவிக்கு நீண்ட பயனதுவே. 196

**கொங்கிட்ட** கொன்றைச் சடையுநின் னேர்பசுங்கோமளப் பெண்
பங்கிட்ட வெண்டிரு நீற்றொளி மேனியும் பார்த்திடிற்பின்
இங்கிட்ட மாயையை யெங்கிட்ட வாவென் றிசைப்பினும்போய்ச்
சங்கிட்ட வோசையிற் பொங்கிட்ட வாய்கொடு தாண்டிடுமே. 197

**வெம்பெரு** மானுக்குக் கைகொடுத் தாண்ட மிகுங்கருணை
யெம்பெரு மானுக்கு விண்ணப்பந் தேவ ரிளம்பிடியார்
தம்பெரு மானுக்குஞ் சார்மலை மானுக்குஞ் சாற்றுமைங்கைச்
செம்பெரு மானுக்கு மெந்தாய்க்கு நான்பணி செய்யச்செய்யே. 198

**சாற்றவ** னேகநன் னுவுள்ள தாயினுஞ் சாற்றரிதாம்
வீற்றவ னேவெள்ளி வெற்பவ னேயருண் மேவியவெண்
ணீற்றவ னேநின் னருடர வேண்டு நெடுமுடிவெள்
ளேற்றவ னேபலி யேற்றவ னேயன்பர்க் கேற்றவனே. 199

**பதியே** சரணம் பரமே சரணம் பரம்பரமாந்
திதியே சரணஞ் சிவமே சரணஞ் சிவமுணர்ந்தோர்
கதியே சரணமென் கண்ணே சரணமுக் கட்கருணை
நிதியே சரணஞ் சரணமென் பான்மெய்ந் நிலையருளே. 200

**என்னுற** வேயென் குருவேயென் னுள்ளத் தெழுமின்பமே
என்னுயி ரேயென்ற னன்பே நிலைபெற்ற வென்செல்வமே
என்னறி வேயென்றன் வாழ்வேயென் வாழ்வுக் கிடுமுதலே
என்னர சேயென் குலதெய்வ மேயெனை யேன்றுகொள்ளே. 201

**கான்போ** லிருண்டவிவ் வஞ்சக வாழ்க்கையிற் கன்னெஞ்சமே
மான்போற் குதித்துக்கொண் டோடே லமுத மதிவிளங்கும்
வான்போற் குளிர்ந்த சிவானந்த வாழ்க்கையின் வாழ்வுறச்செந்
தேன்போ லினிக்குஞ் **சிவாய நம**வெனச் சிந்தைசெய்யே. 202

**வேதனென்** கோதற வேண்டுமென் கோவென விண்ணப்பஞ்செய்
பாதனென் கோகடற் பள்ளிகொண்டான் றெழும் பண்பனென்கோ
நாதனென் கோபர நாதனென் கோவெங்கள் **நம்பிக்கு**நற்
றூதனென் கோவவன் றோழனென் கோநினைத் தூய்மணியே. 203

**இயங்கா** மனமுங் கயங்கா நிலையு மிகபரத்தே
மயங்கா வறிவுந் தியங்கா நெறியு மகிழ்ந்தருள்வாய்
வயங்கா நிலத்தின் முயங்கா வுயர்தவர் வாழ்த்துகின்ற
புயங்கா துதித்தற் குயங்கா தவருட் புகுந்தவனே. 204

**சிவசங்க** ராசிவ யோகா சிவகதிச் சீரளிக்குஞ்
சிவசம்பு வேசிவ லோகா சிவானந்தச் செல்வநல்குஞ்
சிவசுந்த ராசிவ போகா சிவாகமச் செந்நெறிசொல்
சிவபுங்க வாசிவ ஞானிகள் வாழ்த்துஞ் சிவகுருவே. 205

**மதிதத்து** வாந்த வருட்சிவ மேசின் மயசிவமே
துதிசித் தெலாம்வல்ல மெய்ச்சிவ மேசிற் சுகசிவமே
கதிசித்த சுத்தச் சிவமே விளங்குமுக் கட்சிவமே
பதிசச்சி தானந்த சிற்சிவ மேயென் **பரசிவமே**. 206

கடும்புல வேடர்க ளோரைவர் இந்தியக் கள்வரைவர்
கொடுங்கர ணத்துட்டர் நால்வர்கள் வன்மலக் கோளரைவர்
அடும்படை கோடிகொண் டுற்றூர்மற் றேழையன் யானொருவன்
இடும்படை யாதுமி லேன்வெல்வ தெங்ஙு னிறையவனே. 207

இடைக்கொடி வாமத் திறைவாமெய்ஞ் ஞானிகட் கின்பநல்கும்
விடைக்கொடி யேந்தும் வலத்தாய்நின் னமம் வியந்துரையார்
கடைக்கொடி போலக் கதறுகின் றூர்பொய்க் கதையவர்தாம்
புடைக்கொடி யாலன்றிப் புல்லா லெயிலைப் புனைபவரே. 208

உருமத்தி லேபட்ட புன்புழுப் போலிவ் வுலகநடைக்
கருமத்தி லேபட்ட வென்மனந் தானின் கழலடையுந்
தருமத்தி லேபட்ட தின்றேயென் றெண்ணுந் தனையுமந்தோ!
மருமத்தி லேபட்ட வாளியைப் போன்று வருத்துவதே. 209

என்னிறை வாவிமை யோரிறை வாமறை யின்முடிபின்
முன்னிறை வாமலை மின்னிறை வாமலர் முண்டகத்தோன்
தன்னிறை வாதிதித் தானிறை வாமெய்த் தபோதனருண்
மன்னிறை வாயிங்கு வாவென் றெனக்குநல் வாழ்வருளே. 210

கஞ்சத்தி லேர்முக மஞ்சத்தி லேர்நடைக் கன்னியர்கண்
நஞ்சத்தி லேயவர் வஞ்சத்தி லேபட்டு நாணுறும்புன்
நெஞ்சத்தி லேயதன் றஞ்சத்தி லேமுக் கணித்தவென்போற்
பஞ்சத்தி லேபிர பஞ்சத்தி லேயுழைப் பாரெவரே. 211

நான்முகத் தோனுந் திருநெடு மாலுமெய்ஞ் ஞானமென்னும்
வான்முகக் கண்கொண்டு காணுமற் றம்முரு மாறியுநின்
றேன்முகக் கொன்றை முடியுஞ்செந் தாமரைச் சேவடியும்
ஊன்முகக் கண்கொண்டு தேடிநின் றூர்சற் றுணர்விலரே. 212

இருவர்க் கறியப் படாதெழுந் தோங்கிநின் றேத்துகின்றோர்
கருவர்க்க நீக்குங் கருணைவெற் பேயென் கவலையையிங்(கு)
ஒருவர்க்கு நான்சொல மாட்டேனவரென் னுடையவரோ
வெருவற்க வென்றெனை யாண்டரு ளீதென்றன் விண்ணப்பமே.

ஒண்ணுத லேழை மடவார்தம் வாழ்க்கையி னுற்றிடினும்
பண்ணுத லேர்மறை யாயிரஞ் சூழுநின் பாதத்தையான்
எண்ணுத லேதொழி லாகச்செய் வித்தென்னை ஏன்றுகொள்வாய்!
கண்ணுத லேகரு ணைக்கட லேயென் கருத்திதுவே. 214

தனைக்கின்ற மாயக் குடும்பப் பெருந்துயர் தாங்கியந்தோ
இளைக்கின்ற வேழைக் கிரங்குகண் டாய்சிறி தேயிறகு
முளைக்கின்ற போதறப் பார்போனின் னும மொழிந்திடுங்கால்
வளைக்கின்ற மாயைக்கிங் காற்றேன்முக் கண்ணுடைமா மணியே.

**மஞ்சடை** வான கிறத்தோ னயன்முதல வானவர்ககா
நஞசடை யாள மிடுமிடற றேயகஙகை நண்ணுகினற
செஞ்சடை யாய்நின றிருபபெய ராகச சிறநதவெழுத்
தஞசடை யார்கணகள பஞசடை யாமுன னறிவிலரே. 216

**இலங்கா** புரத்த னிராககதா மன்னன **இராவணன்**முன
மலஙகாநின **வெள்ளி மலைக்கீ ழிருந்து** வருநதிநினசீா
கலஙகாமற **பாடிடக் கேட்டே யிரங்கிக் கருணைசெய்த**
நலஙகாணின றனமையின றெனனள வியாண்டையி னணணியதே!

**உடையென்றும்** பூணெனறு மூணெனறு நாடி யுழனறிடுமிந
நடையெனறுஞ சஞசலஞ சஞசலங காணிதி ஞைசிறியேன
புடையெனறு வெயய துறுமபுழுப போனறு புழுஙகுகினறேன
விடையென்று மாலறங கொணடோயென றுனபம விலககுகவே.

**நிலையறி** யாத குடுமபத் துயரெனனு நீததததிலே
தலையறி யாது விழுநதேனை யாணடரு டானளிபபாய்
அலையறி யாத கடலேமுக கணகொணட வாரமுதே
விலையறி யாத மணியே விடேலிதென **விண்ணப்பமே.** 219

**மெய்யகத்** தேகணப போதும விடாது விருமபுகினறோர்
கையகத தேநின றௌிர்கனி யேநுதற் கடகருமபே
வையகத் தேநினை யலலாம னறறுணை மறறிலையிப
பொயயகத் தேனசெயுந தீஙகா யிரமும பொறுததருளே. 220

**முலைக்கலங்** கார மிடுமட வாாமயன் மூடியவா
தலைககலங கார மலர்சூடு வாாநின றணைவழுத்தாா
இலைககலங காரவ வியமனவந தாலென னிசைப்பா**வெள்ளி**
**மலைக்கலங் கார மணியே!**முக கணகொணட மாமருநதே. 221

**புரிகின்ற** வீட்டகம போநதடி பட்டுப புறஙகடையில
திரிகினற நாயககுஞ சிரிபபாமென் பாவிச சிறுபிழைப்பைச
சொரிகினற புணணிற் கனவிடல போலெணுந தோறுநெஞ்சம்
எரிகினற தெனசெயகு வேனபிறை வாாசடை யெனனமுதே. 222

**மனக்கேத** மாறறு மருநதே! பொதுவொளிா மாணிககமே!
கனககே துறவென கருததறி யாமற கழறுகினற
தனககேளா பாறசென றடியே னிதயந தளர்வதெலலாம
நினககே தெரிநத தெனககே யருள நினைநதருளே. 223

**மோகங்** கலநத மனததேன துயரஙகண முறறுமறறுத்
தேகங கலநத பவநீாககு நினபதஞ சிநதிககுநாட
போகங கலநத திருநாண் மலையற புதபபகுநதேன
பாகங கலந்தசெம பாலே நுகறகட பரஞசுடரே. 224

கோலொன்று கண்ட விறைமகன் வாழ்வினுங் கோடிபங்கு
மேலொன்று கண்டன நெஞ்சே!என் சொல்லை விரும்பினியஞ்
சேலொன்று கண்ட மணியான் வரைப்பசுந் தேன்கலந்த
பாலொன்று கண்டகண் கொண்டுயர் வாழ்வு பலித்ததுவே. 225

புலையள வோவெனு நெஞ்சக னேன்றுயர்ப் போகமெட்டு
மலையள வோவிந்த மண்ணள வோவந்த வானளவோ
வலையள வோவன்று மன்றுணின் றேங்கு மருமருந்தே
யிலையள வோவெனுந் தேவே யறிந்து மிரங்கிலையே. 226

கல்லென்று வல்லென்று மின்னார் புளகக் கனதனத்தைச்
சொல்லென்று சொல்லுமுன் சொல்லுமந் தோநின் றுணையடிக்கண்
ணில்லென்று பல்ல நிகழ்த்தினு மென்மன நிற்பதன்றே
யல்லென்று வெல்களங் கொண்டோயென் செய்வ தறிந்திலனே.

கள்ளா டியகொன்றைச் செஞ்சடை யோய்கற் கனகமன்றி
னுள்ளா டியமலர்ச் சேவடி யோயிவ் வுலகியற்கண்
எள்ளா டியசெக் கிடைப்படல் போற்றுன் பிடையிளைத்துத்
தள்ளா டியநடை கொண்டேற்கு நன்னடை தந்தருளே! 228

மருக்கா மலர்க்குழன் மின்னார் மயற்சண்ட மாருதத்தால்
இருக்கா துழலுமென் னேழைநெஞ் சேயிவ் விடும்பையிலே
செருக்கா துருகிச் சிவாய நமவெனத் தேர்ந்தன்பினால்
ஒருக்கா வுரைக்கிற் பெருக்காகு நல்லின்ப மோங்கிடுமே. 229

மதிக்கண்ணி வேணிப் பெருந்தகை யேநின் மலரடிக்குத்
துதிக்கண்ணி சூட்டுமெய்த் தொண்டரிற் சேர்ந்துநின் தூயஒற்றிப்
பதிக்கண்ணி நின்னைப் பணிந்தேத்தி யுள்ளம் பரவசமாக்
கதிக்கண்ணி வாழும் படியரு ளாயென் கருத்திதுவே. 230

இரையேற்று துன்பக் குடும்ப விகார விருட்கடலிற்
புரையேற்று நெஞ்சம் புலர்ந்துநின் றேனைப் பொருட்படுத்திக்
கரையேற்ற வேண்டுமென் கண்ணே! பவத்தைக் கடிமருந்தே!
திரையேற்று செஞ்சடைத் தேவே! யமரர் சிகாமணியே. 231

போற்றியென் ஆவித் துணையே!என் அன்பிற் புகுஞ்சிவமே!
போற்றியென் வாழ்வின் பயனே!என் இன்பப் புதுநறவே!
போற்றியென் கண்ணுண் மணியே! என் உள்ளம் புனையணியே!
போற்றியென்னேர் பெருந் தேவே!
கருணை புரிந்தருளே! 232

திருச்சிற்றம்பலம்

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# ஏழாவது

# வடிவுடை மாணிக்கமாலை



**காப்பு**

*கட்டளைக் கலித்துறை*

**திருச்சிற்றம்பலம்**

**சீர்கொண்ட** வொற்றிப் பதியுடை யானிடஞ் சேர்ந்தமணி
வார்கொண்ட கொங்கை வடிவாம் பிகைதன் மலரடிக்குத்
தார்கொண்ட **செந்தமிழ்ப் பாமாலை சாத்தத்** தமியனுக்கே
ஏர்கொண்ட **நல்லரு ளீயுங் குணாலய வேரம்பனே!**

*கட்டளைக் கலித்துறை*

**திருச்சிற்றம்பலம்**

**கடலமு** தேசெங் கரும்பே யருட்கற் பகக்கனியே
உடலுயி ரேயுயிர்க் குள்ளுணர் வேயுணர் வுள்ளொளியே
அடலவி டையாரொற் றியாரிடங் கொண்ட வருமருந்தே
மடலவிழ் ஞான மலரே **வடிவுடை மாணிக்கமே** 1

**அணியே** யணிபெறு மொற்றித் **தியாகர்தம்** மன்புறச்சற்
குணியேயெம் வாழ்க்கைக் குலதெய்வ மேமலைக் கோனறவமே
பணியேன் பிழைபொறுத் தாட்கொண்ட தெய்வப் பதிகொள்சிந்தா
**மணியே**யென் கண்ணுண் மணியே வடிவுடை மாணிக்கமே. 2

**மானேர்** விழிமலை மானேயெம் மானிடம் வாழ்மயிலே
கானே ரளகப் பசுங்குயி லேயருட் கட்கரும்பே
தேனே **திருவொற்றி மாநகர் வாழுஞ் சிவசத்தியே!**
வானே கருணை வடிவே வடிவுடை மாணிக்கமே. 3

**பொருளே** யடியர் புகலிட மேயொற்றிப் பூரணன்றன்
னருளே யெம்மாருயிர்க் கார்த்துணை யேவிண் ணவர்புகழுந்
தெருளே மெய்ஞ்ஞானத் தெளிவே மறைமுடிச் செம்பொருளே
மருளேத நீக்கு மொளியே வடிவுடை மாணிக்கமே. 4

**திருமாலு** நான்முகத் தேவுமுன் னுள்ளிகத் தேடிமனத்(து)
அருமா லுழக்க வனலுரு வாகி யமர்ந்தருளும்
பெருமானெம் மானொற்றிப் பெம்மான் கைம்மான் கொளும்பித்தன்மலை
மருமா னிடங்கொள்பெண் மானே வடிவுடை மாணிக்கமே. 5

**உன்னே** ரருட்டெய்வங் காணேன் மனத்து முரைக்கப்படாப்
பொன்னேயப் பொன்னற் புதவொளி யேமலர்ப் பொன்வணங்கும்
அன்னே யெம்மாருயிர்க் கோருயி ரேயொற்றி யம்பதிவாழ்
மன்னே ரிடம்வளர் மின்னே வடிவுடை மாணிக்கமே. 6

**கண்ணேயக்** கண்ணின் மணியே மணியிற் கலந்தொளிசெய்
விண்ணே வியனொற்றி யூரண்ணல் வாமத்தில் வீற்றிருக்கும்
பெண்ணே மலைபெறும் பெண்மணி யேதெய்வப் பெண்ணமுதே
மண்ணேய நீத்தவர் வாழ்வே வடிவுடை மாணிக்கமே. 7

**மலையான்** றவஞ்செய்து பெற்றமுத் தேயொற்றி வாழ்கனகச்
சிலையான் மணக்க மணக்குந்தெய் வீகத் திருமலரே
அலையான் மலிகடற் பள்ளிகொண் டான்றெழு மாரமுதே
வலையா னருமை மகளே வடிவுடை மாணிக்கமே. 8

**காமம்** படர்நெஞ் சுடையோர் கனவினுங் காணப்படாச்
சேமம் படர்செல்வப் பொன்னே மதுரச் செழுங்கனியே
தாமம் படரொற்றி யூர்வாழ் பவளத் தனிமலையின்
வாமம் படர்பைங் கொடியே வடிவுடை மாணிக்கமே. 9

**கோடா** வருட்குணக் குன்றே **சிவத்திற் குறிப்பில்லரை**
**நாடாத வானந்த நட்பே!**மெய் யன்பர் நயக்குமின்பே
பீடார் திருவொற்றிப் பெம்மா னிடஞ்செய் பெருந்தவமே
வாடா மணிமலர்க் கொம்பே வடிவுடை மாணிக்கமே. 10

**நாலே** யெனுமறை யந்தங்க ளின்னமு நாடியெனைப்
போலே வருந்த வெளியொளி யாயொற்றிப் புண்ணியர்தம்
பாலே யிருந்த நினைத்தங்கை யாகப் பகரப்பெற்ற
மாலே தவத்திற் பெரியோன் வடிவுடை மாணிக்கமே. 11

**கங்கைகொண்** டோனொற்றி யூரண்ணல் வாமங் கலந்தருள்செய்
நங்கையெல் லாவுல குந்தந்த நின்னையக் **நாரணற்குத்**
தங்கையென் கோவன்றித் தாயரென் கோசொற் றழைக்குமலை
மங்கையங் கோமள மானே வடிவுடை மாணிக்கமே. 12

**சோலையிட்** டார்வய லூரொற்றி வைத்துத்தன் றொண்டரன்பின்
வேலையிட் டாற்செயும் பித்தனை மெய்யிடை மேவுகரித்
தோலையிட் டாடுந் தொழிலுடை யோனைத் துணிந்துமுன்னாள்
மாலையிட் டாயிஃ தென்னே வடிவுடை மாணிக்கமே. 13

**தனையாள்** பவரின்றி நிற்கும் பரமன் றனியருளாய்
வினையா ளுயிர்மல நீக்கிமெய் வீட்டின் விடுத்திடுநீ
எனையா ளருளொற்றி யூர்வா ழவன்றன் னிடத்துமொரு
மனையா ளெனநின்ற தென்னே வடிவுடை மாணிக்கமே. 14

**பின்னீன்ற** பிள்ளையின் மேலார்வந் தாய்க்கெனப் பேசுவர்நீ
முன்னீன்ற பிள்ளையின் மேலாசை யுள்ளவர் மொய்யசுரர்
கொன்னீன்ற போர்க்கிளம் பிள்ளையை யேவக் கொடுத்ததென்னே
மன்னீன்ற வொற்றி மயிலே வடிவுடை மாணிக்கமே. 15

**பையாளு** மல்குற் சுரர்மட வார்கள் பலருளுமிச்
செய்யாளும் வெண்ணிற மெய்யாளு மெத்தவஞ் செய்தனரோ
கையாளு நின்னடிக் குற்றேவல் செய்யக் கடைக்கணித்தாய்
மையாளுங் கண்ணொற்றி வாழ்வே வடிவுடை மாணிக்கமே. 16

**இலையாற்று** நீமலர்க் காலாற் பணிக்குங்குற் றேவலெலாந்
தலையாற் செயும்பெண்கள் பல்லோரிற் பூமகள் தன்னைத்தள்ளாய்
நிலையாற் பெரியநின் றொண்டர்தம் பக்க நிலாமையினான்
மலையாற் கருளொற்றி வாழ்வே வடிவுடை மாணிக்கமே. 17

**கலைமக** ளோநின் பணியையன் போடுங் கடைப்பிடித்தாள்
அலைமக ளோவன் பொடுபிடித் தாளெற் கறைதிகண்டாய்
தலைமக ளேயருட் டாயேசெவ் வாய்க்கருந் தாழ்குழற்பொன்
மலைமக ளேயொற்றி வாழ்வே வடிவுடை மாணிக்கமே. 18

**பொன்னோடு** வாணியென் போரிரு வோரும் பொருணற்கல்வி
தன்னோ டருளுந் திறநின்குற் றேவலைத் தாங்கிநின்ற
பின்னோ வலததன் முன்னோ தெளிந்திடப் பேசுகநீ
மன்னோ டெழிலொற்றி யூர்வாழ் வடிவுடை மாணிக்கமே. 19

**காமட்** டலர்திரு வொற்றிநின் னையகன் கந்தைசுற்றி
யேமட் டரையொடு நிற்பது கண்டு மிரங்கலர்போல்
நீமட்டு மேபட் டுடுக்கின் றனையுன்ற னேயமென்னோ
மாமட் டலர்குழன் மானே வடிவுடை மாணிக்கமே. 20

**வீற்றூர்நின்** றன்மணத் தம்மியின் மேற்சிறு மெல்லணிச்ச
மாற்றுநின் சிற்றடிப் போதினைத் தூக்கிவைத் தாரெனின்மால்
ஏற்றூர் திருவொற்றி யூரார் களக்கறுப் பேற்றவரே
மாற்று வியல்கொண் மயிலே வடிவுடை மாணிக்கமே. 21

**பொருப்புறு** நீலியென் பார்நின்னை மெய்யது போலுமொற்றி
விருப்புறு நாயகன் பாம்பா பரணமும் வெண்டலையும்
நெருப்புறு கையுங் கனன்மேனி யுங்கண்டு நெஞ்சமஞ்சாய்
மருப்புறு கொங்கை மயிலே வடிவுடை மாணிக்கமே. 22

**அனம்பொறுத்** தான்புக ழொற்றிநின் னையக னங்குமிழித்
தனம்பொறுத் தாளொரு மாற்றளைத் தன்முடி தன்னில்வைத்தே
தினம்பொறுத் தானது கண்டுஞ் சினமின்றிச் சேர்ந்தநின்போல்
மனம்பொறுத் தாரெவர் கண்டாய் வடிவுடை மாணிக்கமே. 23

ஒருரு வாயொற்றி யூரமர்ந் தார்நின் னுடையவர்பெண்
சீருரு வாகுநின் மாற்றளை நீதெளி யாத்திறத்தில்
நீருரு வாக்கிச் சுமந்தா ரதனை நினைந்திலையே
வாருரு வார்கொங்கை நங்காய் வடிவுடை மாணிக்கமே. 24

**சார்ந்தேநின்** பாலொற்றி யூர்வாழு நாயகர் தாமகிழ்வு
கூர்ந்தே குலாவுமக் கொள்கையைக் காணிற் கொதிப்பளென்று
தேர்ந்தேயக் கங்கையைச் செஞ்சடை மேற்சிறை செய்தனரொண்
வார்ந்தே குழைகொள் விழியாய் வடிவுடை மாணிக்கமே. 25

**நீயே** யெனது பிழைகுறிப் பாயெனி னின்னடிமைப்
பேயேன் செயும்வண்ண மெவ்வண்ண மோவெனைப் பெற்றளிக்குந்
தாயே கருணைத் தடங்கட லேயொற்றிச் சார்குமுத
வாயோர் [1]சவுந்தர மானே வடிவுடை மாணிக்கமே. 26

**முப்போது** மன்பர்கள் வாழ்த்தொற்றி யூரெம் முதல்வர்மகிழ்
ஒப்போ தருமலைப் பெண்ணமு தேயென்று வந்துநினை
எப்போதுஞ் சிந்தித் திடர்நீங்கி வாழவெனக் கருள்வாய்
மைப்போ தனையகண் மானே வடிவுடை மாணிக்கமே. 27

**மீதலத்** தோர்களுள் யார்வணங் காதவர் மேவுநடுப்
பூதலத் தோர்களுள் யார்புக ழாதவர் போற்றிநிதம்
பாதலத் தோர்களுள் யார்பணி யாதவர் பற்றிநின்றாள்
மாதலத் தோங்கொற்றி வாழ்வே வடிவுடை மாணிக்கமே. 28

**சேய்க்குற்றந்** தாய்பொறுத் தேடா வருகெனச் செப்புவளிந்
நாய்க்குற்ற நீபொறுத் தாளுதல் வேண்டு நவின்மதியின்
தேய்க்குற்ற மாற்றுந் **திருவொற்றி நாதர்தந் தேவியன்பர்**
வாய்க்குற்ற நீக்கு மயிலே வடிவுடை மாணிக்கமே. 29

**செங்கம** லாசனன் றேவிபொன் னனுந் திருமுதலோர்
சங்கம தாமிடற் றேங்குபொன் னனுந் தலைகுனித்துத்
துங்கமு றுதுள நாணத் திருவொற்றித் தோன்றல்புனை
மங்கல நாணுடை யாளே வடிவுடை மாணிக்கமே. 30

**சேடா** ரியன்மணம் வீசச் செயன்மணஞ் சேர்ந்துபொங்க
வேடார் பொழிலொற்றி யூரண்ண னெஞ்ச மிருந்துவக்க
வீடா விருளு முகிலும்பின் னிட்டு வெருவவைத்த
வாடா மலர்க்குழ லாளே வடிவுடை மாணிக்கமே. 31

1. சௌந்தரம் என்பது — சவுந்தரம் எனப் போலியாயிற்று.

புரநோக்கி னுற்பொடி தேக்கிய வொற்றிப் புனிதர்களக்
¹கரநோக்கி நல்லமு தாக்கிநிற் போற்றுங் கருத்தினரா
தரநோக்கி யுள்ளிரு ணீக்கிமெய்ஞ் ஞானத் தனிச்சுகந்தான்
வரநோக்கி யாள்விழி மானே வடிவுடை மாணிக்கமே. 32

உன்னுந் திருவொற்றி யூருடை யார்நெஞ் சுவப்பவெழிற்
றுன்னு முயிர்ப்பயி ரெல்லாந் தழைக்கச் சுகக்கருணை
யென்னுந் திருவமு தோயாம லூற்றி யெமதுளத்தின்
மன்னுங் கடைக்கண் மயிலே வடிவுடை மாணிக்கமே. 33

வெள்ளங் குளிருஞ் சடைமுடி யோனொற்றி வித்தகன்றன்
உள்ளங் குளிரமெய் பூரிப்ப வானந்த மூற்றெடுப்பத்
தெள்ளங் குளிரின் னமுதே யளிக்குஞ்செவ் வாய்க்குமுத
வள்ளங் குளிர்முத்த மானே வடிவுடை மாணிக்கமே. 34

மாநந்த மார்வயற் காழிக் கவுணியர் மாமணிக்கன்(று)
ஆனந்த வின்னமு தூற்றுந் திருமுலை யாரணங்கே
கானந்த வோங்கு மெழிலொற்றி யாருட் களித்தியலும்
வானந் தருமிடை மானே வடிவுடை மாணிக்கமே. 35

வான்றேட நான்கு மறைதேட மாலுடன் வாரிசமே
லான்றேட மற்றை யருந்தவர் தேடவென் னன்பின்மையால்
யான்றேட வென்னுளஞ் சேரொற்றி யூரெம் மிருநிதியே
மான்றேடும் வாட்கண் மயிலே வடிவுடை மாணிக்கமே. 36

முத்தேவர் ²விண்ணன் முதற்றேவர் சித்தர் முனிவர் மற்றை
எத்தே வருநின் னடிநினை வார்நினைக் கின்றிலர்தாஞ்
செத்தே பிறக்குஞ் சிறியரன் றோவொற்றித் தேவர்நற்று
மத்தேவர் வாம மயிலே வடிவுடை மாணிக்கமே. 37

திருநாள் நினைத்தொழு நன்னாள் தொழாமற் செலுத்தியநாள்
கருநாள் எனமறை யெல்லாம் புகலுங் கருத்தறிந்தே
ஒருநா ளினுநின் றனைமற வாரன்ப ரொற்றியில்வாழ்
மருநாண் மலர்க்குழன் மானே வடிவுடை மாணிக்கமே. 38

வாணா ளடைவர் வறுமை யுறுநர்நன் மனைமக்கள்பொன்
பூணா ளிடம்புகழ் போதம் பெறுவர்பின் புன்மையொன்றுங்
காணார்நின் னாமங் கருதுகின் றோர்ஒற்றிக் கண்ணுதல்பால்
மாணார்வ முற்ற மயிலே வடிவுடை மாணிக்கமே. 39

சீரறி வாய்த்திரு வொற்றிப் பரம சிவத்தைநினைப்
போரறி வாயவ் வறிவாம் வெளிக்கப் புறத்துநின்றாய்
யாரறி வார்நின்னை நாயே னறிவ தழகுடைத்தே
வாரெறி பூண்முலை மானே வடிவுடை மாணிக்கமே. 40

1. கரம் என்பது — விடம். 2. விண்ணன் என்பது — இந்திரன்

**போற்றிடு வோர்தம் பிழையா யிரமும் பொறுத்தருள்செய்**
வீற்றெளிர் ஞான விளக்கே! மரகத மென்கரும்பே
யேற்றெளி ரொற்றி யிடத்தா ரிடத்தி லிலங்குமுயர்
மாற்றெளி ரும்பசும் பொன்னே வடிவுடை மாணிக்கமே. 41

**ஆசையுள்** ளாரயன் மாலாதி தேவர்கள் யாருநின்றாட்
பூசையுள் ளாரெனி லெங்கே யுலகர்செய் பூசைகொள்வார்
தேசையுள் ளாரொற்றி யூருடை யாரிடஞ் சேர்மயிலே
[1]மாசையுள் ளார்புகழ் மானே வடிவுடை மாணிக்கமே. 42

**அண்டாரை** வென்றுல காண்டுமெய்ஞ் ஞான மடைந்துவிண்ணிற்
பண்டாரை சூழ்மதி போலிருப் போர்கணின் **பத்தர்பதங்**
**கண்டாரைக் கண்டவ ரன்றோ!** திருவொற்றிக் கண்ணுதல்சேர்
வண்டாரை வேலன்ன மானே வடிவுடை மாணிக்கமே. 43

**அடியார்** தொழுநின் னடிப்பொடி தான்சற் றணியப்பெற்ற
முடியா லடிக்குப் பெருமைபெற் றாரம் முகுந்தன்சந்தக்
கடியார் மலரயன் முன்னோர்தென் னொற்றிக் கடவுட்செம்பால்
வடியாக் கருணைக் கடலே வடிவுடை மாணிக்கமே. 44

**ஓவா** தயன்முத லோர்முடி கோடி யுறழ்ந்துபடி
லாவா வணிச்சம் பொருமலர்ச் சிற்றடி யாற்றுங்கொலோ
காவா யிமயப்பொற் பாவா யருளொற்றிக் காமர்வல்லி
வாவா வெனுமன்பர் வாழ்வே வடிவுடை மாணிக்கமே. 45

**இட்டார்** மறைக்கு முபநிட தத்திற்கு மின்னுஞ்சற்றும்
எட்டாநின் **பொன்னடிப்** போதெளி யேன்றலைக் கெட்டுங்கொலோ
கட்டார் சடைமுடி யொற்றியெம் மானெஞ்ச கத்தமர்ந்த
மட்டார் குழன்மட மானே வடிவுடை மாணிக்கமே. 46

**வெளியாய்** வெளிக்குள் வெறுவெளி யாய்ச்சிவ மேநிறைந்த
ஒளியா யொளிக்கு ளொளியாம் பரைநினை யொப்பவரார்
எளியார்க் கெளியர் திருவொற்றி யார்மெய் யினிதுபரி
மளியாநின் றோங்கு மருவே வடிவுடை மாணிக்கமே. 47

**விணங்கா** தலன்பர்த மன்பிற்கு நின்புல விக்குமன்றி
வணங்கா மதிமுடி யெங்கள் பிரானொற்றி வாணனுநின்
குணங்கா தலித்துமெய்க் கூறுதந் தானெனக் கூறுவருன்
மணங்கா தலித்த தறியார் வடிவுடை மாணிக்கமே. 48

**பன்னும்பல்** வேறண்ட மெல்லாமவ் வண்டப் பரப்பினின்று
துன்னுஞ் சராசரம் யாவையு மீன்றது சூழ்ந்துமுன்னை
இன்னு மிளந்தை யழியாத கன்னிகை யென்பதென்னே
மன்னுஞ் சுகாநந்த வாழ்வே வடிவுடை மாணிக்கமே. 49

1 மாசை என்பது — பொன்

**சினங்கடந்** தோருள்ளச் செந்தா மரையிற் செழித்துமற்றை
மனங்கடந் தோதுமவ் வாக்குங் கடந்த மறையன்னமே
தினங்கடந் தோர்புக ழொற்றியெம் மாணிடஞ் சேரமுதே
வனங்கடந் தோன்புகழ் மானே வடிவுடை மாணிக்கமே. 50

**வல்லாரும்** வல்லவ ரல்லாரு மற்றை மனிதர்முதல்
எல்லாரு நின்செய லல்லா தணுவு மியக்கிலரேல்
இல்லாமை யாதுழல் புல்லேன்செய் குற்றங்க ளேதுகண்டாய்
மல்லார் வயலொற்றி நல்லாய் வடிவுடை மாணிக்கமே. 51

**எழுதா** வெழிலுயிர்ச் சித்திர மேயின் னிசைப்பயனே
தொழுதாடு மன்பர்த முட்களிப் பேசிற் சுகக்கடலே
செழுவார் மலர்ப்பொழி லொற்றியெம் மான்றன் றிருத்துணையே
வழுவா மறையின் பொருளே வடிவுடை மாணிக்கமே. 52

**தெருட்பா** லுறுமைங்கைச் செல்வர்க்கு நல்விளஞ் சேய்க்குமகிழ்ந்
தருட்பா லளிக்குந் தனத்தன மேயெம் மகங்கலந்த
இருட்பா லகற்று மிருஞ்சுட ரேயொற்றி யெந்தையுள்ள
மருட்பால் பயிலு மயிலே வடிவுடை மாணிக்கமே, 53

**அயிலேந்தும்** பிள்ளைநற் றாயே திருவொற்றி யையர்மலர்க்
[1]கயிலேந் தரும்பெறன் முத்தே யிசையிற் கனிந்தகுரற்
குயிலே குயின்மென் குழற்பிடி யேமலைக் கோன்பயந்த
மயிலே மதிமுக மானே வடிவுடை மாணிக்கமே. 54

**செய்யக** மோங்குந் திருவொற்றி யூரிற் சிவபெருமான்
மெய்யக மோங்குநல் லன்பேநின் பாலன்பு மேவுகின்றோர்
கையக மோங்குங் கனியே தனிமெய்க் கதிநெறியே
வையக மோங்கு மருந்தே வடிவுடை மாணிக்கமே. 55

**தரும்பே** ரருளொற்றி யூருடை யானிடஞ் சார்ந்தபசுங்
கரும்பே யினியகற் கண்டே மதுரக் கனிநறவே
**இரும்பேய் மனத்தினர் பாலிசை யாத இளங்கிளியே!**
வரும்பே ரொளிச்செஞ் சுடரே வடிவுடை மாணிக்கமே. 56

**சேலேர்** விழியருட் டேனே யடியருட் டித்திக்குஞ்செம்
பாலே மதுரச்செம் பாகேசொல் வேதப் பனுவன்முடி
மேலே விளங்கும் விளக்கே யருளொற்றி வித்தகனர்
மாலே கொளுமெழின் மானே வடிவுடை மாணிக்கமே. 57

**எம்பா** லருள்வைத் தெழிலொற்றி யூர்கொண் டிருக்குமிறைச்
செம்பால் கலந்தபைந் தேனே கதலிச் செழுங்கனியே
வெம்பாலை நெஞ்சருண் மேவா மலர்ப்பத மென்கொடியே
வம்பா லணிமுலை மானே வடிவுடை மாணிக்கமே. 58

1. கையிலேந்தெனற்பாலது — கயிலேந்தெனப் போலியாயிற்று.

**ஏமமுய்ப்** போரெமக கெனறே யிளைககி லெடுககவைதத
சேமவைப் பேயன்பா தேடுமெயஞ ஞானத திரவியமே
தாமமைக காமலாக கூநதற பிடிமென றனிநடையாய
வாமநற் சீரொறறி மானே வடிவுடை மாணிககமே. 59

**மன்னேர்** மலையன் மனையுநற காஞசன மாலையுநீ
அனனே யெனததிரு வாயா லழைககபபெற றரவாதாம
முனனே யருநதவ மெனனே முயனறனா முனனுமொறறி
வனனே ரிளமுலை மினனே வடிவுடை மாணிககமே. 60

**கணமொன்றி** லேனுமென னுளளக கவலைக கடலகடநதே
குணமொனறி லேனெது செயவேனின உளளக குறிபபறியேன
பணமொனறு பாமபணி யொறறியெம மானிடப பாலிறறெயவ
மணமொனறு பசசைக கொடியே வடிவுடை மாணிககமே 61

**கருவே** தனையற வெனனெஞ சகத்திற களிப்பொடொற்றிக
குருவே யெனுநின கணவனு நீயுங குலவுமநதத
திருவே யருளசெந திருவே முதறபணி செயயததநத
மருவே மருவு மலரே வடிவுடை மாணிககமே. 62

**எண்ணிய** வெண்ணஙக ளெலலாம பலிகக வெனககுனருள
பண்ணிய வுளளஙகொ ளுளளும புறமபும பரிமளிககும
புணணிய மலலிகைப போதே யெழிலொறறிப பூரணாபான
மணணிய பசசை மணியே வடிவுடை மாணிககமே. 63

**தீதுசெய்** தாலுநின னனபாகள தமமுன செருககிநினறு
வாதுசெய தாலுநின ருணமறந தாலு மதியிலியேன
ஏதுசெய தாலும பொறுததருள வாயொறறி யினனிடைப்பூ
மாதுசெய தாழகுழன மானே வடிவுடை மாணிககமே 64

**மருந்திரின்** றுனைறறி யூர்வாழு னினறன மகிழநனமுனனுந
திருநதிநின ரூபுகழ நினமுனனு நலலருட் டேனவிழைநதே
விருநதினின றேனசறறு முளளிரங காத விததைதைககணடு
வருநதிநின றேனிது நனறோ வடிவுடை மாணிககமே. 65

**என்போற்** குணததி லிழிநதவ ரிலலையெப போதுமெஙகும்
நினபோ லருளிற சிறநதவ ரிலலையிந நீமையினற்
பொனபோலு நினனரு ளனனே யெனககும் புரிதிகண்டாய
மனபோ லுயரொறறி வாழவே வடிவுடை மாணிககமே 66

**துன்பே** மிகுமிவ வடியேன மனததினின றுயயவருள
இனபே மிகுவதெந நாளோ? எழிலொறறி யெநதையுயிரக
கனபேமெயத் தொணட ரறிவே சிவநெறிக கனபிலாபால
வனபே மெயப்போத வடிவே வடிவுடை மாணிககமே. 67

**சற்றே** யெனினுமென் னெஞ்சத் துயரந் தவிரவுநின்
பொற்றே மலர்ப்பதம் போற்றவு முள்ளம் புரிதிகண்டாய்
சொற்றே ரறிஞர் புகழொற்றி மேவுந் துணைவர்தஞ்செம்
மற்றோர் புயத்தணை மானே வடிவுடை மாணிக்கமே. 68

**சந்தோட** மாப்பிற ரெல்லா மிருக்கவுஞ் சஞ்சலத்தால்
அந்தோ வொருதமி யேன்மட்டும் வாட லருட்கழகோ
நந்தோட நீக்கிய நங்கா யெனத்திரு நான்முகன்மால்
வந்தோது மொற்றி மயிலே வடிவுடை மாணிக்கமே. 69

**அடியேன்** மிசையெப் பிழையிருந் தாலு மவைபொறுத்துச்
செடியேத நீக்கிநற் சீரருள் வாய்திகழ் தெய்வமறைக்
கொடியே மரகதக் கொம்பே யெழிலொற்றிக் கோமளமே
வடியே ரயில்விழி மானே வடிவுடை மாணிக்கமே. 70

**கண்ணப்ப** னேத்துநற் காளத்தி யார்மங் கலங்கொளொற்றி
நண்ணப்பர் வேண்டு நலமே பரானந்த நன்னறவே
எண்ணப் படாவெழி லோவிய மேயெமை யேன்றுகொண்ட
வண்ணப் பசும்பொன் வடிவே வடிவுடை மாணிக்கமே. 71

**கற்பே** விகற்பங் கடியுமொன் றேயெங்கள் கண்ணிறைந்த
பொற்பே மெய்த் தொண்டர்தம் புண்ணிய மேயருட் போதவின்பே
சொற்பே ரறிவுட் சுகப்பொரு ளேமெய்ச் சுயஞ்சுடரே
மற்பேர் பெறுமொற்றி மானே வடிவுடை மாணிக்கமே. 72

**மிகவே** துயர்க்கடல் வீழ்ந்தேனை நீகை விடுதலருட்
டகவே யெனக்குநற் றுயே யகில சராசரமுஞ்
சுகவேலை மூழ்கத் திருவொற்றி யூரிடந் துன்னிப்பெற்ற
மகவே யெனப்புரக் கின்றோய் வடிவுடை மாணிக்கமே. 73

**வேதங்க** ளாயொற்றி மேவுஞ் சிவத்தின் விளைவருளாய்ப்
பூதங்க ளாய்ப்பொறி யாய்ப்புல னாகிப் புகல்கரண
பேதங்க ளாயுயி ராகிய நின்னையிப் பேதையென்வாய்
வாதங்க ளாலறி வேனே வடிவுடை மாணிக்கமே. 74

**மதியே** மதிமுக மானே யடியர் மனத்துவைத்த
நிதியே கருணை நிறைவே சுகாநந்த நீணிலையே
கதியே கதிவழி காட்டுங்கண் ணேயொற்றிக் காவலர்பால்
வதியே ரிளமட மானே வடிவுடை மாணிக்கமே. 75

**ஆறுத்** துயரத் தழுந்துகின் றேனையிங் கஞ்சலென்றே
**கூறுக் குறையென் குறையே** யினிநின் குறிப்பறியேன்
தேறுச் சிறியர்க் கரிதாந் திருவொற்றித் தேவர்மகிழ்
மாறுக் கருணை மழையே வடிவுடை மாணிக்கமே. 76

**எற்றே** நிலையொன்று மில்லா துயங்கு மெனக்கருளச்
சற்றேநின் னுள்ளந் திரும்பிலை யான்செயத் தக்கதென்னே
சொற்றே னிறைமறைக் கொம்பேமெய்ஞ் ஞானச் சுடர்க்கொழுந்தே
மற்றே ரணியொற்றி வாழ்வே வடிவுடை மாணிக்கமே. 77

**செவ்வேலை** வென்றகண் மின்னே நின்சித்தந் திரும்பியெனக்
கெவ்வேலை செய்யென் றிடினுமவ் வேலை யியற்றுவல்காண்
தெவ்வேலை வற்றச்செ யவ்வேலை யீன்றொற்றித் தேவர்நெஞ்சை
வவ்வேல வார்குழன் மானே வடிவுடை மாணிக்கமே. 78

**தாயே** மிகவுந் தயவுடை யாளெனச் சாற்றுவரிச்
சேயேன் படுந்துயர் நீக்கவென் னேயுளஞ் செய்திலையே
நாயேன் பிழையினி நாடாது நல்லரு ணல்கவரு
வாயேயெம் மொற்றி மயிலே வடிவுடை மாணிக்கமே. 79

**நானே** நினக்கடி யேனென் பிழைகளை நாடியநீ
தானே யெனைவிடி லந்தோ வினியெவர் தாங்குகின்றோர்
தேனே நல்வேதத் தெளிவே கதிக்குச் செலுநெறியே
வானோர் பொழிலொற்றி மானே வடிவுடை மாணிக்கமே. 80

**கல்லா** ரிடத்திலென் னில்லாமை சொல்லிக் கலங்கியிடா
நல்லாண்மை யுண்டருள் வல்லாண்மை யுண்டெனி னல்குவையோ
வல்லா ரெவர்கட்கும் வல்லார் திருவொற்றி வாணரொடு
மல்லார் பொழிலொற்றி வாழ்வோய் வடிவுடை மாணிக்கமே. 81

**சுந்தர** வாண்முகத் தோகாய் மறைகள்சொலும் பைங்கிள்ளாய்
கந்தர வார்குழற் பூவாய் கருணைக் கடைக்கணங்காய்
அந்தர நேரிடைப் பாவா யருளொற்றி யண்ணன்மகிழ்
மந்தர நேர்கொங்கை மங்காய் வடிவுடை மாணிக்கமே. 82

**பத்தர்தம்** முள்ளத் திருக்கோயின் மேவும் பரம்பரையே
சுத்தமெய்ஞ் ஞான வொளிப்பிழம் பேசிற் சுகாநந்தமே
நித்தநின் சீர்சொல வெற்கருள் வாயொற்றி நின்மலருன்
மத்தர்தம் வாம மயிலே வடிவுடை மாணிக்கமே. 83

**பூவாய்** மலர்க்குழற் பூவாய்மெய் யன்பர் புனைந்ததமிழ்ப்
**பாவாய்** நிறைந்தபொற் பாவாய்செந் தேனிற் பகர்மொழியாய்
காவா யெனவயன் காவாய் பவனுங் கருதுமலர்
மாவா யெழிலொற்றி வாழ்வே வடிவுடை மாணிக்கமே. 84

**தாதா** வுணவுடை தாதா வெனப்புல்லர் தம்மிடைப்போய்
மாதாக முற்றவர் வன்னெஞ்சி னின்னடி வைகுங்கொலோ
காதார் நெடுங்கட் கரும்பேநல் லொற்றிக் கருத்தர்நட
வாதா ரிடம்வளர் மாதே வடிவுடை மாணிக்கமே. 85

களந்திரும் பாவிக் கடையேனை யாளக் கருணைகொண்டுன்
உளந்திரும் பாமைக்கென் செய்கேன் துயர்க்கட லூடலைந்தேன்
குளந்திரும் பாவிழிக் கோமா னொடுந்தொண்டர் கூட்டமுற்ற
வளந்திரும் பாவொற்றி வாழ்வோய் வடிவுடை மாணிக்கமே. 86

ஆரணம் பூத்த வருட்கோ மளக்கொடி யந்தரிபூந்
தோரணம் பூத்த வெழிலொற்றி யூர்மகிழ் சுந்தரிசற்
காரணம் பூத்த சிவைபாரப் பதிநங் கௌரியென்னும்
வாரணம் பூத்த தனத்தாய் வடிவுடை மாணிக்கமே. 87

திருவல்லி யேத்து மபிடேக வல்லியெஞ் சென்னியிடை
வருவல்லி கற்பக வல்லியொண் பச்சை மணிவல்லியெங்
கருவல்லி நீக்குங் கருணைப் பகவல்லி கண்கொளொற்றி
மருவல்லி யென்று மறைதேர் வடிவுடை மாணிக்கமே. 88

உடையென்ன வொண்புலித் தோலுடையார்கண்டு (உ)வக்குமிள
நடையன்ன மேமலர்ப் பொன்முத லாம்பெண்கள் நாயகமே
படையன்ன நீள்விழி மின்னனே ரிடைப்பொற் பசுங்கிளியே
மடைமன்னு நீரொற்றி வாழ்வே வடிவுடை மாணிக்கமே. 89

கற்பதுங் கேட்பது மெல்லாநின் னற்புதக் கஞ்சமலர்ப்
பொற்பதங் காணும் பொருட்டென வெண்ணுவர் புண்ணியரே
சொற்பத மாயவைக் கப்புற மாய்நின்ற தூயச்சுடரே
மற்பதஞ் சேரொற்றி வாழ்வே வடிவுடை மாணிக்கமே 90

நின்னா லெனக்குள வெல்லா நலனு நினையடைந்த
என்னா லுனக்குள தென்னைகண் டாயெமை யீன்றவளே
முன்னால் வருக்கருள் ஒற்றியெம் மான்கண் முழுமணியே
மன்னா மறையின் முடிவே வடிவுடை மாணிக்கமே. 91

நன்றே சிவநெறி நாடுமெய்த் தொண்டர்க்கு நன்மைசெய்து
நின்றேநின் சேவடிக் குற்றேவல் செய்ய நினைத்தனனீ
தென்றே முடிகுவ தின்றே முடியி லினிதுகண்டாய்
மன்றே ரெழிலொற்றி வாழ்வே வடிவுடை மாணிக்கமே. 92

அத்தனை யொற்றிக் கிறைவனை யம்பலத் தாடுகின்ற
முத்தனைச் சேர்ந்தவொண் முத்தே மதிய முகவமுதே
இத்தனை யென்றள வேலாத குற்ற மிழைத்திடுமிம்
மத்தனை யாள வழக்கோ வடிவுடை மாணிக்கமே 93

கூறாத, வாழ்க்கைச் சிறுமையை நோக்கிக் குறித்திடுமென்
தேறாத விண்ணப்பஞ் சற்றேனு நின்றன் றிருச்செவியில்
ஏறாத வண்ணமென் னேற்றிதி யாக ரிடப்புறத்தின்
மாறா தமர்ந்த மயிலே வடிவுடை மாணிக்கமே. 94

ஓயா விடர்கொண் டுலைவேனுக் கன்பர்க் குதவுதல்போல்
ஈயா விடினுமோ ரெள்ளள வேனு மிரங்குகண்டாய்
சாயா வருடருந் தாயே யெழிலொற்றித் தற்பரையே
மாயா நலமருள் வாழ்வே வடிவுடை மாணிக்கமே. 95

பெரும்பேதை யேன்சிறு வாழ்க்கைத் துயரெனும் பேரலையிற்
றுரும்பே யெனவலை கின்றேன் புணைநின் றுணைப்பதமே
கரும்பே கருணைக் கடலே யருண்முக் கனிநறவே
வரும்பே ரருளொற்றி வாழ்வே வடிவுடை மாணிக்கமே. 96

காதர வாலுட் கலங்கிநின் றேனின் கடைக்கணருள்
ஆதர வான்மகிழ் கின்றே னினியுன் னடைக்கலமே
சீதர னேத்துந் திருவொற்றி நாதர்தந் தேவியெழின்
மாதர சேவொற்றி வாழ்வே வடிவுடை மாணிக்கமே. 97

பொன்னுடையா ரன்றிப் போற்றுநற் கல்விப் பொருளுடையார்
என்னுடை யாரென வேசுகின் றாரிஃ தென்னையன்னே
மின்னுடை யாய்மின்னிற் றுன்னிடை யாயொற்றி மேவுமுக்கண்
மன்னுடை யாயென் னுடையாய் வடிவுடை மாணிக்கமே. 93

பொய்விட் டிடாதவன் னெஞ்சகத் தேனைப் புலம்பும்வண்ணங்
கைவிட் டிடாதின்னுங் காப்பா யதுநின் கடன்கரும்பே
மெய்விட் டிடாருள் விளையின்ப மேயொற்றி வித்தகமே
மைவிட் டிடாவிழி மானே வடிவுடை மாணிக்கமே. 99

நேயானு கூல மனமுடை யாயினி நீயுமென்றன்
தாயாகில் யானுன் தனயனு மாகில்என் றன்னுளத்தில்
ஓயா துறுந்துய ரெல்லாந் தவிர்த்தருள் ஒற்றியிற்செவ்
வாயா ரமுத வடிவே! வடிவுடை மாணிக்கமே! 100

வாழிநின் சேவடி போற்றிநின் பூம்பத வாரிசங்கள்
வாழிநின் றாண்மலர் போற்றிநின் றண்ணளி வாழிநின்சீர்
வாழியென் னுள்ளத்தில் நீயுநின் னொற்றி மகிழ்நருநீ
வாழி!என் ஆருயிர் வாழ்வே! வடிவுடை மாணிக்கமே. 101

திருச்சிற்றம்பலம்



உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# எட்டாவது

# இங்கிதமாலை*

**காப்பு**

*அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்*

**திருச்சிற்றம்பலம்**

**ஒருமா முகனை** யொருமாவை யூர்வான் கனமா யுறநோக்கித்
திருமான் முதலோர் சிறுமையெலாந் தீர்த்தெம் மிருகண்மணியாங்
கருமா லகற்றுங் **கணபதி**யாங் கடவு ளடியுங் களித்தவர்பின்
வருமா கருணைக் கடற்குமர **வள்ள** லடியும் வணங்குவாம்

**திருச்சிற்றம்பலம்**

---

* **திருவருட் பிரகாச வள்ளலார்** தமது மாணவருள் ஒருவராகிய **கூடலூர் அய்யாசாமிப் பிள்ளையவர்கள் இங்கிதமாலை** என்னுந் தொடர்க்குப் பொருள் அருள் செய்யும்படி வேண்ட, **விளக்கியவாறு :**

" **இந்நூல்** யாது பெயர்த்தோவெனின் **இங்கிதமாலை** என்னும் பெயர்த்து.

**இந்நாம** வாக்கியத்தைப் பகுபாடு செய்க எனின், **இங்கிதம், மாலை** எனப் பகுபாடு செய்க.

**இங்கிதம்** என்பது என்னையெனின், **குறிப்பால் நிகழும் உறுப்பின் தொழில்** என்பொருள் தருவதன்றி, **அடையாளம், இனிமை, எண்ணக் குறிப்பு, எண்ணம், கருத்து, அறிவு, சயிக்கினை, நோக்கம்** எனவும் பொருள் தரும்.

**இந்நூல்** யாது காரணத்தால் இப்பெயர் அடைந்ததோ? எனின், **நாயக நாயிகா விவகாரத்தில்** நிகழ்ந்த அங்கோபாங்கப் பிரத்தியங்கப் பிரேரக ஞாய சகித பாவனை சயிக்கினை நயமும் நல்லறிவு சகித சயிக்கினா வசன **விசேடத்தால் பாலென வெளிறுதும், கனியெனச் சிதறுதும் தேனெனக் கழறுதுமாகி** நோக்கத் •**சல்லாப வியன்மொழியின்** எண்ணக் குறிப்பும் சொலிக்க, **ஆன்ம சிற்சத்தியாகிய தலைவி கடவுளாய தலைவரோடு** சயிக்கினை புரிந்த ஐக்கியானுபவ சையோக விவகாரத்தைப் **பராசத்தியாராய உயிர்ப் பாங்கியா**ரிடத்து வினவிய " **தலைவி பாங்கிக் குரைத்தல்** " என்னும் துறை நயத்தால் இப்பெயர் எய்தியது எனக்கொள்க."

## பாடாண்டிணை

### கடவுள் மாட்டு மானிடப்பெண்டிர் நயந்த பக்கம்

### (வினாவுத்தரம்)

*அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்*

**திருச்சிற்றம்பலம்**

**திருவார்** கமலத் தடம்பணைசூழ் செல்வப் பெருஞ்சீ ரொற்றியில்வாழ்
மருவார் கொன்றைச் சடைமுடிகொள் வள்ள லிவர்க்குப் பலிகொடுநான்
ஒருவா தடைந்தே னினிநமக்கிங் குதவ வருந்தோ றுன்முலைமேல்
இருவா ரிடுநீ யென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 1

**தண்ணார்** மலரை மதிநதியைத் தாங்குஞ் சடையா ரிவர்தமைநான்
அண்ணா லொற்றி யிருந்தவரே யைய ரேநீர் யாரென்றேன்
நண்ணா ரிடத்து மம்பலத்து நடவா தவர்நா மென்றுசொலி
எண்ணா தருகே வருகின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 2

**பிட்டி** னதிமண் சுமந்தவொற்றிப் பிச்சைத் தேவ ரிவர்தமைநான்
தட்டின் மலர்க்கை யிடத்தெதுவோ தனத்தைப் பிடியு மென்றுரைத்தேன்
மட்டி னொருமூன் றுடனேழு மத்தர் தலையீ தென்றுசொலி
எட்டி முலையைப் பிடிக்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 3

**மடையிற்** கயல்பா யொற்றிநகர் வள்ள லாகு மிவர்தமைநான்
அடையிற் கனிவாற் பணியென்றே யருளீ ருரியீ ருடையென்றேன்
கடையிற் படுமோர் பணியென்றே கருதி யுரைத்தே மென்றுரைத்தென்
இடையிற் கலையை யுரிகின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 4

**மன்றன்** மணக்கு மொற்றிநகர் வாணா ராகு மிவர்தமைநான்
இன்றன் பொடுங்கை யேந்தனத்தை யேற்றோர் கலத்திற்கொளு மென்றேன்
அன்றன் புடையா யெண்கலத்தி னுங்கொண் டிடுவேமென் றுசொலி
என்றன் முலையைத் தொடுகின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 5

**கோமாற்** கருளுந் திருவொற்றிக் கோயி லுடையா ரிவரைமத
மாமாற் றியநீ ரேகலவி மகிழ்ந்தின் றடியேன் மனையினிடைத்
தாமாற் றிடக்கொண் டேகுமென்றேன் றாவென்றார் தந்தாலென்னை
ஏமாற் றினையே யென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 6

**அம்மா** லயனுங் காண்பரியீர்க் கமரும் பதிதான் யாதென்றேன்
இம்மா லுடையா யொற்றுதற்கோ ரெச்ச மதுகண் டறியென்றார்
செம்மா விஃதொன் றென்னென்றேன் றிருவே புரிமேற் சேர்கின்ற
எம்மான் மற்றொன் றென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 7

**கண்கள்** களிப்ப வீண்டுநிற்குங் கள்வ ரிவரூ ரொற்றியதாம்
பண்க ளியன்ற திருவாயாற் பலிதா வென்றார் கொடுவந்தேன்
பெண்கள் தரலீ தன்றென்றார் பேசப் பலியா தென்றேனின்
எண்கண் பலித்த தென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 8

**ஆரா** மகிழ்வு தருமொருபே ரழக ரிவரூ ரொற்றியதாம்
நேராய் விருந்துண் டோவென்றார் நீர்தான் வேறிங் கிலையென்றேன்
வாரார் முலையாய் வாயமுது மலர்க்கை யமுது மனையமுதும்
ஏரா யுளவே யென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 9

**அடுத்தார்க்** கருளு மொற்றிநக ரைய ரிவர்தா மிகத்தாகங்
கடுத்தா மென்றார் கடிதடநீர் கண்டீ ரையங் கொளுமென்றேன்
கொடுத்தாய் கண்ட தில்லையயங் கொள்ளு மிடஞ்சூழ்ந் திடுங்கலையை
எடுத்தாற் காண்பே மென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 10

**இந்தா** ரிதழி யிலங்குசடை யேந்த லிவரூ ரொற்றியதாம்
வந்தார் பெண்ணே யமுதென்றார் வரையின் சுதையிங் குண்டென்றேன்
அந்தார் குழலாய் பசிக்கினும்பெண் ணுசை விடுமோ வமுதின்றேல்
எந்தா ரந்தா வென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 11

**தன்னந்** தனியா யிங்குநிற்குஞ் சாமி யிவரூ ரொற்றியதாம்
அன்னந் தருவீ ரென்றார்நா னழைத்தே னின்னை யன்னமிட
முன்னம் பசிபோ யிற்றென்றார் முன்னின் றகன்றே னிவ்வன்னம்
இன்னந் தருவா யென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 12

**மாறா** வழகோ டிங்குநிற்கும் வள்ள லிவரூ ரொற்றியதாம்
வீறா முணவீ யென்றார்நீர் மேவா வுணவிங் குண்டென்றேன்
கூறா மகிழ்வே கொடுவென்றார் கொடுத்தா லிதுதா னன்றென்றே
ஏறா வழக்குத் தொடுக்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 13

**வண்மை** யுடையார் திருவொற்றி வாண ரிவர்தாம் பலியென்றார்
உண்மை யறிவீர் பலியெண்மை யுணர்கி லீரென் னுழையென்றேன்
பெண்மை சிறந்தாய் நின்மனையிற் பேசும்பலிக்கென் றடைந்ததுநாம்
எண்மை யுணர்ந்தே யென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 14

**திருவை** யளிக்குந் திருவொற்றித் தேவ ரீர்க்கென் விழைவென்றேன்
வெருவ வுனது பெயரிடையோர் மெய்நீக் கியநின் முகமென்றார்
தருவ லதனை வெளிப்படையாற் சாற்று மென்றேன் சாற்றுவனேல்
இருவை மடவா யென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 15

**முந்தை** மறையோன் புகழொற்றி முதல்வ ரிவர்தம் முகநோக்கிக்
கந்தை யுடையீ ரென்னென்றேன் கழியா வுன்றன் மொழியாலே
இந்து முகத்தா யெமக்கொன்றே யிருநான் குனக்குக் கந்தையுள
திந்த வியப்பென் னென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 16

**துன்ன** வுடையா ரிவர்தமைநீர் துன்னும் பதிதான் யாதென்றேன்
என்ன விரவி லெமைத்தெளிவா னன்ற நினது பெயரென்றார்
உன்ன வுறுவீர் வெளிப்படவீ துரைப்பீ ரென்றே னுரைப்பேனேல்
இன்ன லடைவா யென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடி. 17

**சிமைக்கொள்** சூலத் திருமலர்க்கைத்தேவர்நீரெங்கிருந்ததென்றேன்
எமைக்கண் டளவின் மாதேநீ யிருந்த தெனயா மிருந்ததென்றார்
அமைக்கு மொழியிங் கிதமென்றே னுமன் மொழியிங் கிதமன்றே
இமைக்கு மிழையா யென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 18

**நடங்கொண்** பதத்தீர் திருவொற்றி நங்கள் பெருமா னீரன்றே
திடங்கொள் புகழ்க்கச் சூரிடஞ்சேர்ந் தீரென் றேனின் னடுநோக்காக்
குடஞ்சேர்ந் ததுமாங் கஃதென்றார் குடம்யா தென்றே னஃதறிதற்
கிடங்கர் நடுநீக் கென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 19

**சங்க** மருவு மொற்றியுளீர் சடைமே லிருந்த தென்னென்றேன்
மங்கை நினது முன்பருவ மருவு முதனீத் திருந்ததென்றார்
கங்கை யிருந்த தேயென்றேன் கமலை யனையாய் கழுக்கடையும்
எங்கை யிருந்த தென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 20

**துதிசே** ரொற்றி வளர்தரும துரையே நீர்முன் னுடலுறும்
பதியா தென்றே னம்பெயர்முற் பகரீ ரெழுத்தைப் பறித்ததென்றார்
திதிசேர் திடுமப் பெயர்யாது நிகழ்த்து மென்றே னீயிட்ட
தெதுவோ வதுகா ணென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 21

**உடற்கச்** சுயிரா மொற்றியுளீ ருமது திருப்பேர் யாதென்றேன்
குடக்குச் சிவந்த பொழுதினைமுன் கொண்ட வண்ண ராமென்றார்
விடைக்குக் கருத்தா வாநீர்தாம் விளம்பன் மிகக்கற் றவரென்றேன்
இடைக்குப் புகன்றா யென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 22

**மணங்கே** தகைவான் செயுமொற்றி வள்ள விவரை வல்விரைவேன்
பிணங்கேஞ் சிறிது நில்லுமென்றேன் பிணங்கா விடினு நென்னலென
வணங்கே நினக்கொன் றினிற்பாதி யதிலோர் பாதி யாகுமிதற்
கிணங்கேஞ் சிறிது மென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 23

**ஒற்றி** நகரா ரிவர்தமைநீ ருவக்கே றுவதிங் கியாதென்றேன்
மற்றுன் பருவத் தொருபங்கே மடவா யென்றார் மறைவிடையீ
திற்றென் றறிதற் கரிதென்றே னெம்மை யறிவா ரன்றியஃ
தெற்றென் றறிவா ரென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 24

**கண்ணின்** மணிபோ லிங்குநிற்குங் கள்வ ரிவரு ரொற்றியதாம்
பண்ணின் மொழியாய் நின்பாலோர் பறவைப்பெயர்வேண் டினம்படைத்தான்
மண்ணின் மிசையோர் பறவையதா வாழ்வாயென்றா ரென்னென்றேன்
எண்ணி யறிநீ யென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 25

**சேடார்** வளஞ்சூ ழொற்றிநகர் செல்வப் பெருமா னிவர்தமைநான்
ஓடார் கரத்தீ ரெண்டோள்க ளுடையீ ரென்னென் றுரைத்தேனீ
கோடா கோடி முகநூறு கோடா கோடிக் களமென்னே
ஈடா யுடையா யென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 26

**துருமஞ்** செழிக்கும் பொழிலொற்றித் தோன்றா லிங்கு நீர்வந்த
கருமஞ் சொலுமென் றேனிவண்யாங் கடாதற்குன்பா லெம்முடைமைத்
தருமம் பெறககண் டாமென்றார் தருவ லிருந்தா லென்றேனில்
இருமந் தரமோ வென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 27

**ஒருகை** முகத்தோர்க் கையரெனு மொற்றித் தேவ ரிவர்தமைநான்
வருகை யுவந்தீ ரென்றனைநீர் மருவி யணைதல் வேண்டுமென்றேன்
தருகை யுடனே யகங்காரந் தனையெம் மடியார் தமைமயக்கை
இருகை வளைசிந் தென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 28

**திருத்த** மிகுஞ்சீ ரொற்றியில்வாழ் தேவ ரேயிங் கெதுவேண்டி
வருத்த மலர்க்கா லுறநடந்து வந்தீ ரென்றேன் மாதேநீ
அருத்தந் தெளிந்தே நிருவாண மாக வுன்ற னகத்தருட்கண்
இருத்த வடைந்தே மென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 29

**வளஞ்சே** ரொற்றி மாணிக்க வண்ண ராகு மிவர்தமைநான்
குளஞ்சேர்ந் திருந்த துமக்கொருகண் கோலச் சடையீ ரழகிதென்றேன்
களஞ்சேர் குளத்தி னெழின்முலைக்கண் காண வோரைந் துனக்கழகீ
திளஞ்சேல் விழியா யென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 30

**பலஞ்சே** ரொற்றிப் பதியுடையீர் பதிவே றுண்டோ நுமக்கென்றேன்
உலஞ்சேர் வெண்பொன்மலையென் றுருண்டோநீண்டமலையென்றேன்
வலஞ்சே ரிடைத்தவ் வருவித்த மலைகா ணதனின் மம்முதல்சென்
றிலஞ்சேர்ந் ததுவு மென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 31

**வயலா** ரொற்றி வாணரிவர் வந்தார் நின்றார் வாய்திறவார்
செயலார் விரல்கண் முடக்கியடி சேர்த்தீ ரிதழ்கள் விரிவித்தார்
மயலா ருளத்தோ டென்னென்றேன் மறித்தோர் விரலா லென்னுடைய
வியலார் வடிவிற் சுட்டுகின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 32

**பேர்வா** ழொற்றி வாணரிவர் பேசா மௌன யோகியராய்ச்
சீர்வாழ் நமது மனையினிடைச் சேர்ந்தார்விழைவென் செப்புமென்றேன்
ஓர்வா முடியுங் குழலணியு மொருநல் விரலாற் சுட்டியுந்தம்
மேர்வா ழொருகை பார்க்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 33

**பெருஞ்சீ** ரொற்றி வாணரிவர் பேசா மௌனம் பிடித்திங்கே
விரிஞ்சீர் தரநின் றுடன்கீழு மேலு நோக்கி விரைந்தார்யான்
வருஞ்சீ ருடையீர் மணிவார்த்தை வகுக்க வென்றேன் மார்பிடைக்காழ்
இருஞ்சீர் மணியைக் காட்டுகின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 34

**வலந்தங்** கியசீ ரொற்றிநகர் வள்ள லிவர்தாம் மௌனமொடு
கலந்திங் கிருந்த வண்டசத்தைக் காட்டி மூன்று விரனீட்டி
நலந்தங் குறப்பின் னடுமுடக்கி நண்ணு மிந்த நகத்தொடுவாய்
இலந்தங் கரத்தாற் குறிக்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 35

**தேனார்** பொழிலா ரொற்றியில்வாழ் தேவ ரிவர்வாய் திறவாராய்
மானார் கரத்தோர் நகந்தெறித்து வாளா நின்றார் நீளார்வந்
தானா ருளத்தோ டியாதென்றேன் றங்கைத் தலத்திற் றலையையடி
யேனா டுறவே காட்டுகின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 36

செச்சை யழகர் திருவொற்றித் தேவ ரிவர்வாய் திறவாராய்
மெச்சு மொருகாற் கரந்தொட்டு மீண்டு மிடற்றக் கரம்வைத்தார்
பிச்ச ரடிகேள் வேண்டுவது பேசீ ரென்றேன் றமைக்காட்டி
இச்சை யெனையுங் குறிக்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 37

**மன்றார்** நிலையார் திருவொற்றி வாண ரிவர்தா மௌனமொடு
நின்றா ரிருகை யொலியிசைத்தார் நிமிர்ந்தார் தவிசி னிலைகுறைத்தார்
நன்றா ரமுது சிறிதுமிழ்ந்தார் நடித்தா ரியாவு மையமென்றேன்
இன்றா மரைக்கை யேந்துகின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 38

**வாரா** விருந்தாய் வள்ளலிவர் வந்தார் மௌன மொடுநின்றார்
நீரா ரெங்கே யிருப்பதென்றே னீண்ட சடையைக் குறிப்பித்தார்
ஊரா வைத்த தெதுவென்றே னெண்கையோடென் னிடத்தினில்வைத்
தேரார் கரத்தாற் சுட்டுகின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 39

**செங்கேழ்** கங்கைச் சடையார்வாய் திறவா ராக வீண்டடைந்தார்
எங்கே யிருந்திங் கணைந்ததுகா ணெங்கள் பெருமா னென்றேனென்
னங்கே முருகி னகன்றுபோ யங்கே யிறைப்போ தமர்ந்தெழுந்தே
இங்கே நடந்து வருகின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 40

**கொடையா** ரொற்றி வாணரிவர் கூறா மௌன ராகின்றார்
தொடையாரிதழிமதிச்சடையெந்துரையேவிழைவேதுமக்கென்றேன்
உடையார் துன்னற் கந்தைதனை யுற்று நோக்கி நகைசெய்தே
இடையாக் கழுமுட் காட்டுகின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 41

**பொன்னைக்** கொடுத்தும் புணர்வரிய புனித ரிவரூ ரொற்றியதாம்
முன்னைத் தவத்தால் யாங்காண முன்னே நின்றார் முகமலர்ந்து
மின்னிற் பொலியுஞ் சடையீரென் வேண்டுமென்றே னுணச்செய்யாள்
இன்னச் சினங்கா ணென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 42

**வயலார்** சோலை யெழிலொற்றி வாண ராகு மிவர்தமைநான்
செயலா ரடியர்க் கருள்வீர்நுஞ் சிரத்து முரத்துந் திகழ்கரத்தும்
வியலாய்க்கொண்ட தென்னென்றேன் விளங்கும் பினாகமவைமூன்றும்
இயலாற் காண்டி யென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 43

**பொதுநின்** றருள்வீ ரொற்றியுளீர் பூவுந் தியதென் விழியென்றேன்
இதுவென் றறிநா மேறுகின்ற தென்றா ரேறு கின்றதுதான்
எதுவென் றுரைத்தே னெதுநடுவோ ரெழுத்திட்டறிநீ யென்றுசொலி
எதிர்நின் றுவந்து நகைக்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 44

**இட்டங்** களித்த தொற்றியுளீ ரீண்டிவ் வேளை யெவனென்றேன்
சுட்டுஞ் சுதனை யென்றார்நான் சுட்டி யறியச் சொலுமென்றேன்
பட்டுண் மருங்குற் பாவாய்நீ பரித்த தன்றே பாரென்றே
எட்டுங் களிப்பா லுரைக்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 45

**பாற்றக்** கணத்தா ரிவர்காட்டுப் பள்ளித் தலைவ ரொற்றியினின்
றாற்றப் பசித்து வந்தாரா மன்ன மிடுமி னென்றுரைத்தேன்
சோற்றுக் கிளைத்தோ மாயினும்யாஞ் சொல்லுக் கிளையேங் கீழ்ப்பள்ளி
யேற்றுக் கிடந்தா யென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 46

**குருகா** ரொற்றி வாணர்பலி கொள்ள வகையுண் டோவென்றேன்
ஒருகா லெடுத்தீண் டுரையென்றூ ரொருகாலெடுத்துக்காட்டுமென்றேன்
வருகா விரிப்பொன் னம்பலத்தே வந்தாற் காட்டு கின்றும்வீழ்
இருகா லுடையா யென்கின்றூ ரிதுதான் சேடி யென்னேடீ. 47

**வேலை** ஞாலம் புகழொற்றி விளங்குந் தேவ ரணிகின்ற
மாலை யாதென் றேனயன்மான் மாலை யகற்று மாலையென்றூர்
சோலை மலரன் றேயென்றேன் சோலை யேநாந் தொடுப்பதென
வேல முறுவல் புரிகின்றூ ரிதுதான் சேடி யென்னேடீ. 48

**உயிரு** ளுறைவீர் திருவொற்றி யுடையீர் நீரென் மேற்பிடித்த
வயிர மதனை விடுமென்றேன் வயிரி யலநீ மாதேயாஞ்
செயிர தகற்றுன் முலையிடங்கொள் செல்வ னலகாண்டெளியென்றே
இயல்கொண் முறுவல் புரிகின்றூ ரிதுதான் சேடி யென்னேடீ. 49

**தண்கா** வளஞ்சூழ் திருவொற்றித் தலத்தி லமர்ந்த சாமிநுங்கை
எண்கார் முகமாப் பொன்னென்றே னிடையிட் டறித லரிதென்றூர்
மண்கா தலிக்கு மாடென்றேன் மதிக்குங் கணவில் லன்றென்றே
எண்கா ணகைசெய் தருள்கின்றூ ரிதுதான் சேடி யென்னேடீ. 50

**செய்கோண்** வளஞ்சூ ழொற்றியுளீர் திருமான்முதன்முத்தேவர்கட்கும்
ஐகா ணீரென் றேனிதன்மே லணங்கே நீயே முடைதியென்றூர்
மெய்கா ணதுதானென்னென்றேன் விளங்குஞ்சுட்டுப்பெயரென்றே
எய்கா ணுறவே நகைக்கின்றூ ரிதுதான் சேடி யென்னேடீ. 51

**விண்டு** வணங்கு மொற்றியுளீர் மென்பூ விருந்தும் வன்பூவில்
வண்டு விழுந்த தென்றேனெம் மலர்க்கை வண்டும் விழுந்ததென்றூர்
தொண்டர்க் கருள்வீர்மிகவென் றேன் றூகாய்நாமேதொண்டனென
வெண்டங் குறவே நகைக்கின்றூ ரிதுதான் சேடி யென்னேடீ. 52

**மட்டார்** மலர்க்கா வொற்றியுளீர் மதிக்குங்கலைமேல்விழுமென்றேன்
எட்டா மெழுத்தை யெடுத்ததுநா மிசைத்தே மென்றூ ரெட்டாக
உட்டா வுறுமவ் வெழுத்தறிய வுரைப்பீ ரென்றே னந்தணரூர்க்
கிட்டார் நாம மென்கின்றூ ரிதுதான் சேடி யென்னேடீ. 53

**ஒற்றி** நகரீர் மனவசிதா னுடையார்க் கருள்வீர் நீரென்றேன்
பற்றி யிறுதி தொடங்கியது பயிலு மவர்க்கே யருள்வதென்றூர்
மற்றி துணர்கி லேனென்றேன் வருந்தே லுள்ள வன்மையெலாம்
எற்றி லுணர்தி யென்கின்றூ ரிதுதான் சேடி யென்னேடீ. 54

**வான்றோய்** பொழில்சூழொற்றியுளீர்வருந்தாதணைவேனைவென்றேன்
ஊன்றோ யுடற்கென் றூர்தெரிய வுரைப்பீ ரென்றே னைவிதுதான்
சான்றோ ருமது மரபோர்ந்து தரித்த பெயர்க்குத் தகாதென்றே
யென்றோர் மொழிதந் தருள்கின்றூ ரிதுதான் சேடி யென்னேடீ. 55

**தீது** தவிர்க்கு மொற்றியுளீர் செல்ல லறுப்ப தென்றென்றே
ஈது நமக்குத் தெரிந்ததென்றா ரிறையா மோவிங் கிதுவென்றேன்
ஓது மடியார் மனக்கங்கு லோட்டு நாமே யுணரன்றி
ஏது மிறையன் றென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 56

**ஒண்கை** மழுவோ டனலுடையீ ரொற்றி நகர்வா ழுத்தமர்நீர்
வண்கை யொருமை நாதரென்றேன் வண்கைப்பன்மை நாதரென்றார்
எண்க ணடங்கா வதிசயங்கா ணென்றேன் பொருளன் றிவைய நற்கென்
றெண்சொன் மணிதந் தருள்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 57

**ஒருவ** ரெனவா ழொற்றியுளீ ருமக்கம் மனையுண் டோவென்றேன்
இருவ ரொருபே ருடையவர்கா ணென்றா ரென்னென் றேனெம்பேர்
மருவு மீறற் றயலகரம் வயங்கு மிகர மானதென்றே
இருவு மொழிதந் தருள்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 58

**பேரா** ரொற்றி யீருஞ்மைப் பெற்றா ரெவரென் றேனவர்தம்
மேரார் பெயரின் முன்பினிரண் டிரண்டா மெழுத்தா ரென்றாரென்
நேரா யுரைப்பீ ரென்றேனீ நெஞ்ச நெகிழ்ந்தா லுரைப்பாமென்
றோரா யுரைசெய் தருள்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 59

**தளிநான்** மறையீ ரொற்றிநகர் தழைக்க வாழ்வீர் தனிஞான
வொளிநா வரசை யைந்தெழுத்தா லுவரி கடத்தி னீரென்றேன்
களிநா வலனை யீரெழுத்தாற் கடலில் வீழ்த்தி னேமென்றே
எளியேற் குவப்பின் மொழிகின்றா ரிதுதான சேடி யென்னேடீ. 60

**ஓமூன்** றுளத்தீ ரொற்றியுளீ ருற்றோர்க் களிப்பீ ரோவென்றேன்
தாமூன் றெனபார்க் கயன்மூன்றுங் கருவே மென்றா ரம்மமிகத்
தேமூன் றினநும் மொழியென்றேன் செவ்வா யுறுமுன் னகையென்றே
ஏமூன் றுறவே நகைக்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 61

**மன்னி** விளங்கு மொற்றியுளீர் மடவா ரிரக்கும் வகையதுதான்
முன்னி லொருதா வாமென்றேன் முத்தா வெனலே முறையென்றார்
என்னி லிதுதா னையமென்றே னெமக்குந் தெரியு மெனத்திருவாய்
இன்ன லமுத முகுக்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 62

**வளஞ்சே** ரொற்றி யீரெனக்கு மாலை யணிவீ ரோவென்றேன்
குளஞ்சேர் மொழிப்பெண் பாவாய்நின் கோல மணக்க ணுமகிழ்வால்
உளஞ்சேர்ந் தடைந்த போதேநின் னுளத்திலணிந்தே முணரென்றே
இளஞ்சீர் நகைசெய் தருள்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ 63

**வீற்றா** ரொற்றி நகரமர்ந்தீர் விளங்கு மலரே விளம்புநெடு,
மாற்றா ரென்றே னிலைகாணெம் மாலை முடிமேற் பாரென்றார்
சாற்றாச் சலமே யீதென்றேன் சடையின் முடிமே லன்றென்றே
ஏற்றா தரவான் மொழிகின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 64

**புயப்பா** லொற்றி யீரச்சம் போமோ வென்றே னுமென்றார்
வயப்பா வலருக் கிறையானீர் வஞ்சிப் பாவிங் குறைத்ததென்றேன்
வியப்பா நகையப் பாவெ னும்பா வெண்பாகலிப்பாவுரைத்து மென்றே
இயற்பான் மொழிதந் தருள்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ.65

**தண்ணம்**பொழில்சூழொற்றியுளீர்சங்கங்கையிற்சேர்த்திடுமென்றேன்
திண்ணம் பலமேல் வருங்கையிற் சேர்த்தோமுன்னர்தெரியென்றார்
வண்ணம் பலவிம் மொழிக்கென்றேன் மடவாயுனது மொழிக்கென்றே
எண்ணங் கொளநின் றுரைக்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 66

**உகஞ்சே** ரொற்றி யூருடையீ ரொருமா தவரோ நீரென்றேன்
முகஞ்சேர் வடிவே யிரண்டுடையாய் மும்மா தவர் நாமென் றுரைத்தார்
சுகஞ்சேர்ந்திடுநும்மொழிக்கென்றேன்றேகாயுனதுமொழிக்கென்றே
இகஞ்சேர் நயப்பா லுரைக்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 67

**ஊரா** மொற்றி யீராசை யுடையே னென்றே னெமக்கலது
நேரா வழக்குத் தொடுக்கின்றாய் நினக்கே தென்றார் நீரெனக்குச்
சேரா வணமீ தென்றேன்முன் சேர்த்தீ தெழுதித் தந்தவர்தாம்
யாரார் மடவா யென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 68

**வருத்தந்** தவிரீ ரொற்றியுளீர் மனத்தி லகாத முண்டென்றேன்
திருத்தந் தொழுநம் மடியவரை நினைக்கின் றோரைக் காணினது
உருத்தன் பெயர்முன் னெழுத்திலக்க முற்றே மற்ற வெல்லையகன்
றிருத்த லறியா யென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 69

**மைய** லகற்றீ ரொற்றியுளீர் வாவென் றுரைப்பீ ரோவென்றேன்
செய்ய வதன்மேற் சிகரம்வைத்துச் செவ்வ னுரைத்தா லிருவாவென்
றுய்ய வுரைப்பே மென்றார்நும் முரையென் னுரையென் றேனிங்கே
எய்யுன் னுரையை யென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 70

**தாவென்** றருளு மொற்றியுளீர் தமியேன் மோக தாகமற
வாவென் றருள்வீ ரென்றேனவ் வாவின் பின்னர் வருமெழுத்தை
மேவென் றதனிற் சேர்த்ததிங்கே மேவி னன்றே வாவென்பேம்
ஏவென் றிடுகண் ணென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 71

**என்மே** லருள்கூர்ந் தொற்றியுளீ ரென்னை யணைவா னினைவீரேற்
பொன்மேல் வெள்ளி யாமென்றேன்பொன்மேற்பச்சையாங்கதன்மேல்
அன்மேற் குழலாய் சேயதன்மே லலவ னதன்மேன் ஞாயிறஃ
தின்மே லொன்றின் றென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ, 72

**வயலா** ரொற்றி மேவுபிடி வாதர் நாம மியாதென்றேன்
மயலா யிடுமிப் பெயர்ப்பின்னர் வந்த விளைய நாமமென்றார்
செயலார் கால மறிந்தென்னைச் சேர்வீ ரென்றேன் சிரித்துனக்கிங்
கியலா ரயலா ரென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 73

**நாலா** ரணஞ்சூ ழொற்றி யுளீர் நரகம் வாங்க லென்னென்றேன்
காலாங் கிரண்டிற் கட்டவென்றார் கலைத்தோல் வல்லீர் நீரென்றேன்
வேலார் விழிமாப் புலித்தோலும் வேழத் தோலும் வல்லேமென்
றேலா வழுத முருக்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 74

**முடியா** வளஞ்சூ ழொற்றியுளீர் முடிமே லிருந்த தென்னென்றேன்
கடியா வுள்ளங் கையின்முதலைக் கடிந்த தென்றார் கமலமென
வடிவார் கரத்தி லென்னென்றேன் வரைந்த வதனீ றகன்றதென்றே
இடியா நயத்தி னகைக்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 75

**ஒன்றும்** பெருஞ்சீ ரொற்றிநக ருடையீர் யார்க்கு முணர்வரியீர்
என்றும் பெரியீர் நீர்வருதற் கென்ன நிமித்த மென்றேன்யான்
துன்றும் விசும்பே காணென்றார் சூதா முமது சொல்லென்றேன்
இன்றுன் முலைதா னென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 76

**வானோர்** வணங்கு மொற்றியுளீர் மதிவாழ் சடையீர் மரபிடைநீர்
தானோ ரென்றே னனிப்பள்ளித் தலைவ ரெனவே சாற்றினர்காண்
ஆனா லொற்றி யிருமென்றே னுண்டே யிருந்து வந்தனஞ்சேய்
ஈனா தவள்நீ யென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 77

**பற்று** முடித்தோர் புகழொற்றிப் பதியீர் நுமது பசுவினிடைக்
கற்று முடித்த தென்னிருகைக் கன்று முழுதுங் காணென்றேன்
மற்று முடித்த மாலையொடுன் மருங்குற் கலையுங் கற்றுமுடிந்
திற்று முடித்த தென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 78

**வானங்** கொடுப்பீர் திருவொற்றி வாழ்வீ ரன்று வந்தெனது
மானங் கெடுத்தீ ரென்றுரைத்தேன் மாநன் றிஃதுன் மானன்றே
ஊனங் கலிக்குந் தவர்விட்டா ருலக மறியுங் கேட்டறிந்தே
ஈனந் தவிர்ப்பா யென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 79

**ஞானம்** படைத்த யோகியர்வாழ் நகரா மொற்றி நலத்தீர்மால்
ஏனம் புடைத்தீ ரணையென்பீ ரென்னை யுவந்திப் பொழுதென்றேன்
ஊனந் தவிர்த்த மலர்வாயி னுள்ளே நகைசெய் திஃதுரைக்கேம்
ஈனம் புகன்றா யென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 80

**கருமை** யளவும் பொழிலொற்றிக் கணத்தீர் முனிவர் கலக்கமறப்
பெருமை நடத்தி னீரென்றேன் பிள்ளை நடத்தி னேனென்றார்
தரும மலவிவ் விடையென்றேன் றரும விடையு முண்டெம்பால்
இருமை விழியா யென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 81

**ஓசிய** விடுகு மிடையாரை யொற்றி யிருந்தே மயக்குகின்ற
வசியர் மிகநீ ரென்றேனெம் மகன்கா ணென்றார் வளர்காமப்
பசிய தொடையுற் றேனென்றேன் பட்ட மவிழ்த்துக் காட்டுதியேல்
இசையைக் காண்பே மென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 82

**கலையா** ளுடையீ ரொற்றிநின்றீர் காம மளித்தீர் களித்தணைவீர்
மலையா ளுமது மனையென்றேன் மருவின் மலையா ளல்லவென்றார்
அலையாண் மற்றை யவளென்றே னறியி னலையா ளல்லளுனை
இலையா மணவ தென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 83

**சீலம்** படைத்தீர் திருவொற்றித் தியாக ரேநீர் திண்மையிலோர்
சூலம் படைத்தீ ரென்னென்றேன் றோன்று முலகுய்ந் திடவென்றார்
ஆலங் களத்தீ ரென்றேனீ யாலம் வயிற்று யன்றேநல்
ஏலங் குழலா யென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ 84

**ஞால** நிகழும் புகழொற்றி நடத்தீர் நீர்தா னிட்டமுறும்
பால ரலவோ வென்றேனெம் பாலர் பாலைப் பருவத்திற்
சால மயல்கொண் டிடவருமோ தனிமைப் பாலா யாமென்றே
ஏல முறுவல் புரிகின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 85

**வண்மை** தருவீ ரொற்றிநகர் வாழ்வீ ரென்னை மருவீரென்
உண்மை யறியீ ரென்றேனியா முண்ணாநதே யகல நின்றதென்றார்
கண்மை யிலரோ நீரென்றேன் கள்மை யுடையேங் கண்மையுறல்
எண்மை நீயே யென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ 86

**தவந்தங்** கியசீ ரொற்றிநகர் தனைப்போ லினைத்தென மனையடைந்தீர்
உவந்தென் மீதிற் றேவாதிரு வுள்ளந் திரும்பிற் றேவென்றேன்
சிவந்தங் கிடநின் னுள்ளமெம்மேற் றிரும்பிற் றதனைத் தோந்தன்றே
இவர்ந்திங் கணைந்தா மென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 87

**ஒன்னார்** புரமூன் றெரிசெய்தீ ரொற்றி யுடையீ ருமதுடைய
பொன்னார் சடைமேல் வெள்ளெருக்கம்பூவைமிலைந்தீரென்னென்றே
னின்னா ரளகத் தணங்கேநீ நெட்டி மிலைந்தா யிதிலதுநீழ்
என்னா ருலக ரென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 88

**கனிமா** னிதழி முலைச்சுவடு களித்தீ ரொற்றிக் காதலர்நீர்
தனிமா னேந்தி யாமென்றேன் றடங்கண் மடந்தாய் நின்முகமும்
பனிமா னேந்தி யாமென்றா பரைமான் மருவி னீரென்றேன்
இனிமான மருவி யென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 89

**சிறியேன்** றவமோ வெனைப்பெற்றார் செய்த தவமோ வீண்டடைந்தீர்
அறியே னொற்றி யடிகேளிங் கடைந்த வாறென் னினைத்தென்றேன்
பொறியே ருனது பொற்கலையைப் பூவா கலையாக் குறிநினைத்தே
எறிவேல் விழியா யென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 90

**அளிக்குங்** குணத்தீர் திருவொற்றி யழக ரேநீ ரணிவேணி
வெளிக்கொண் முடிமே லணிந்ததுதான்விளியா விளம்பத் திரமென்றேன்
விளிக்கு மிளம்பத் திரமுடி மேலே மிலைந்தாம் விளங்கிழைநீ
வெளிக்கொண் டுரையே லென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ.

**வாசங்** கமழு மலர்ப்பூங்கா வனஞ்சூ ழொற்றி மாநகரீர்
நேசங் குறிப்ப தென்னென்றே னீயோ நாமோ வுரையென்றார்
தேசம் புகழ்வீ ரானென்றேன் றிகழ்தைத் திரித்த திரியேயாம்
ஏசங் குறிப்ப தென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ 92

**பேசுங்** கமலப் பெண்புகழும் பெண்மை யுடைய பெண்களெலாங்
கூசும் படியிப் படியொற்றிக் கோவே வந்த தென்னென்றேன்
**மாசுந் தரிநீ யிப்படிக்கு மயங்கும் படிக்கு மாதருனை**
யேசும் படிக்கு மென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 93

**கொடியா** லெயில்சூ ழொற்றியிடங் கொண்ட ரடிகள் குருவுருவாம்
படியா லடியி லிருந்தமறைப் பண்பை யுரைப்பீ ரென்றேனின்
மடியா லடியி லிருந்தமறை மாண்பை வகுத்தா யெனிலதுநாம்
இடியா துரைப்பே மென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடி. 94

**என்னே** ருளத்தி னமர்ந்தீர்நல் லெழிலா ரொற்றி யிடையிருந்தீர்
என்னே யடிகள் பலிகேற்ற லேழ்மை யுடையீர் போலுமென்றேன்
இன்னே கடலி னிடைநீபத் தேழ்மை யுடையாய் போலுமென
வின்னே யங்கொண் டுரைக்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 95

**நல்லார்** மதிக்கு மொற்றியுளீர் நண்ணு முயிர்க டொறுநின்றீர்
எல்லா மறிவீ ரென்னுடைய விச்சை யறியீர் போலுமென்றேன்
வல்லா யறிவின் மட்டொன்று மனமட் டொன்று வாய்மட்டொன்
றெல்லா மறிந்தே மென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 96

**மறிநீர்ச்** சடையீர் சித்தெல்லாம் வல்லீ ரொற்றி மாநகரீர்
பொறிசே ருமது புகழ்பலவிற்பொருந்துங்குணமேவேண்டுமென்றேன்
குறிசே ரெமது விற்குணத்தின் குணத்தா யதனால் வேண்டுற்றாய்
எறிவேல் விழியா யென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 97

**ஊரு** ரிருப்பீ ரொற்றிவைத்தீ ரூர்தான் வேறுண் டோவென்றேன்
ஓரூர் வழக்கிற் கரியையிறை யுன்னி வினவு மூரொன்றோ
**பேரூர் தினையூர் பெரும்புலியூர் பிடவூர் கடவூர்** முதலாக
வேரூ ரனந்த மென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 98

**விழியொண்** ணுதலீ ரொற்றியுளீர் வேதம் பிறவி யிலரென்றே
மொழியு நுமைத்தான் மேயின்ற முத்த ரெனலிங்கென்னென்றேன்
பழியன் றணங்கே யவ்வேய்க்குப் படுமுத் தொருவித் தன்றதனால்
இழியும் பிறப்போ வென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 99

**விண்ணோர்** பொழில்சூ ழொற்றியுளீர் விளங்குந் தாம மிகுவாசத்
தண்ணார்மலர்வேதனை யொழிகதரு நல்வேண்டுமெனக்கெனறேன்
பண்ணார் மொழியா யுபகாரம பண்ணாப் பகைவ ரேனுமிதை
யெண்ணா ரெண்ணா ரென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 100

**செம்பான்** மொழியார் முன்னரெனைச் சேர்வீ ரென்கோ திருவொற்றி
யம்பார் சடையீ ருமதாட லறியே னருளல் வேண்டுமென்றேன்
வம்பார் முலையாய் காட்டுகின்றா மன்னும் பொன்னா ரம்பலத்தே
யெம்பால் வாவென் றுரைக்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 101

**மைக்கோண்** மிடற்றீ ரொற்றி வைத்தீ ருண்டோ மனையென்றேன்
கைக்க ணிறைந்த தனத்தினுந்தங் கண்ணி னிறைந்த கணவனையே
துய்க்கு மடவார் விழைவரெனச் சொல்லும் வழக்கி தறிந்திலையோ
வெய்க்கு மிடையா யென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 102

**ஆறுமுகத்தார்** தமையீன்ற வைந்து முகத்தா ரிவர்தமைநான்
மாறு முகத்தார் போலொற்றி வைத்தீர் பதியை யென்னென்றேன்
நாறு மலர்ப்பூங் குழனீயோ நாமோ வைத்த துன்மொழிமன்
றேறு மொழியன் றென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 103

**வள்ளன்** மதியோர் புகழொற்றி வள்ளா லுமது மணிச்சடையின்
வெள்ள மகண்மேற் பிள்ளைமதி விளங்க லழகீ தென்றேனின்
உள்ள முகத்தும் பிள்ளைமதி யொளிகொண் முகத்தும் பிள்ளைமதி
யெள்ள லுடையா யென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 104

**உள்ளத்** தனையே போலன்ப ருவக்குந் திருவா ழொற்றியுளீர்
கள்ளத் தவர்போ லிவணிற்குங் கரும மென்னீ ரின்றென்றேன்
மெள்ளக் கரவு செயவோநாம் வேட மெடுத்தோ நின்சொனினை
எள்ளப் புரிந்த தென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 105

**அச்சை** யடுக்குந் திருவொற்றி யவர்க்கோர்பிச்சைக்கொடுமென்றேன்
விச்சை யடுக்கும் படிநம்பான் மேவி னோர்க்கிவ் வகிலநடைப்
பிச்சை யெடுப்பே மலதுன்போற் பிச்சைக் கொடுப்பே மலவென்றே
இச்சை யெடுப்பா யுரைக்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 106

**அள்ளற்** பழனத் திருவொற்றி யழக ரிவர்தம் முகநோக்கி
வெள்ளச் சடையீ ருள்ளத்தே விருப்பேதுரைத்தாற் றருவலென்றேன்
கொள்ளக் கிடையா வலர்குழுதங் கொண்டவமுதங் கொணர்ந்தின்னும்
எள்ளத் தனதா வென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 107

**விஞ்சு** நெறியீ ரொற்றியுளீர் வியந்தீர் வியப்பென் னிவணென்றேன்
கஞ்ச மிரண்டு நமையங்கே கண்டு குவிந்த விரிந்திங்கே
தஞ்ச விருதா மரைமுகையை மறைக்கின றனநின் பால்வியந்தாம்
எஞ்ச லறநா மென்கின்றா ரிதுதான சேடி யென்னேடீ. 108

**அளியா** ரொற்றி யுடையாருக் கன்ன நிரம்ப விடுமென்றேன்
அளியார் குழலாய் பிடியன்ன மளித்தாற் போது மாங்கதுநின்
ஒளியார் சிலம்பு சூழ்கமலத் துளதாற் கடகஞ் சூழ்கமலத்
தெளியார்க் கிடுநீ யென்கின்றா ரிதுதான் சேடி யெனனேடீ. 109

**விச்சைப்** பெருமா னெனுமொற்றி விடங்கப் பெருமா னீர்முன்னம்
பிச்சைப் பெருமா னின்றுமணப் பிள்ளைப் பெருமா னுமென்றேன்
அச்சைப் பெறுநீ யம்மணப்பெண் ணாகி யிடையி லையங்கொள்
இச்சைப் பெறும்பெண் ணென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ.

**படையும்** புயத்தோன் புகழொற்றிப் பதியீ ரரவப் பணிசுமந்தீர்
புடையம்புயத்திலென்றேன்செம்பொன்னேகொடையம்புயத்தினுநன்
னடையம் புயத்துஞ் சுமந்தனைநீ நானு வரவப் பணிமற்றும்
இடையம் பகத்து மென்கின்றா ரிதுதான் சேடி யெனனேடீ. 111

**கூம்பா** வொற்றி யூருடையீர் கொடும்பாம்பணிந்தீரென்னென்றேன்
ஓம்பா துரைக்கிற்பார்த்திடினுள்ளுன்னில்விடமேற்றுன்னிடைக்கீழ்ப்
பாம்பா வதுவே கொடும்பாம்பெம்பணிப்பாம் பதுபோற்பாம்பலவென்
றேம்பா நிற்ப விசைக்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 112

**புயல்சூ** ழொற்றி யுடையீரென்புடையென் குறித்தோபோந்ததென்றேன்
கயல்சூழ் விழியாய் தனத்தவரைக் காண விரப்போ ரெதற்கென்றார்
மயல்சூழ் தனமிங் கிலையென்றேன்மறையாதெதிர்வைத்திலையென்றல்
இயல்சூ ழறமன் றென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 113

**நடவாழ்** வொற்றி யுடையீர்நீர் நாக மணிந்த தழகென்றேன்
மடவா யதுநீர் நாகமென மதியே லயன்மான் மனனடுங்க
விடவா யுமிழும் படநாகம் வேண்டிற் காண்டி யென்றேயென்
இடவா யருகே வருகின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 114

**கோடா** வொற்றி யுடையீர்நுங் குலந்தான் யாதோ கூறுமென்றேன்
வீடார் பிரம குலந்தேவர் வேந்தர் குலநல் விணவசியப்
பாடார் குலமோர் சக்கரத்தான் பள்ளிக் குலமெல் லாமுடையேம்
ஏடார் குழலா யென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 115

**நலமா** மொற்றி யுடையீர்நீர் நல்ல வழக ரானாலுங்
குலமே துமக்கு மாலைபிடக் கூடா தென்றே னின்குலம்போல்
உலகோ துறுநங் குலமொன்றோ ஓரா யிரத்தெட் டுயர்குலமிங்
கிலகா நின்ற தென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 116

**மதிலொற்** றியினீர் நும்மனையாண் மலையின் குலநும் மைந்தருளோர்
புகல்வர்க் கானைப் பெருங்குலமோர் புதல்வர்க் கிசையம் புலிகுலமாம்
எதிரற் றருள்வீர் நுங்குலமிங் கெதுவோ வென்றேன் மனைவியருள்
இதுமற் றொருத்திக் கென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 117

**தேமாம்** பொழில்சூ ழொற்றியுளீர் திகழுந் தகரக் காற்குலத்தைப்
பூமா னிலத்தில் விழைந்துற்றீர் புதுமை யிஃதும் புகழென்றேன்
ஆமா குலத்தி லரைக்குலத்துள் ளணைந்தேபுறமற்றரைக்குலங்கொண்
டேமாந் தனைநீ யென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 118

**அனஞ்சூ** ழொற்றிப் பதியுடையீ ரகில மறிய மன்றகத்தே
மனஞ்சூழ் தகரக் கால்கொண்டீர் வனப்பா மென்றே னுலகறியத்
தனஞ்சூ ழகத்தே யணங்கேநீ தானுந் தகரத் தலைகொண்டாய்
இனஞ்சூ ழழகா மென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 119

**பங்கே** ருகப்பூம் பணையொற்றிப் பதியீர் நடுவம் பரமென்னும்
அங்கே யாட்டுக் காலெடுத்தீ ரழகென் றேனவ் வம்பரமேல்
இங்கே யாட்டுத் தோலெடுத்தா யாமொன் றிரண்டு நீயென்றால்
எங்கே நின்சொல் லென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 120

**மாணப்** புகழ்சே ரொற்றியுளீர் மன்றூர் தகர வித்தைதனைக்
காணற் கினிநான் செயலென்னே கருதியுரைத்தல் வேண்டுமென்றேன்
வேணச் சுறுமெல் லியலேயாம் விளம்பு மொழியவ் வித்தையுனக்
கேணப் புகலு மென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 121

**நல்லா** ரொற்றி யுடையீர்யா னடக்கோ வெறும்பூ வணையணைய
வல்லா லவணும் முடன்வருகோ வணையா தவலத் துயர்துய்க்கோ
செல்லா வென்சொன் னடவாதோ திருக்கூத் தெதுவோ வெனவிடைகள்
எல்லா நடவா தென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 122

**ஆட்டுந்** தலைவர் நீரொற்றி யழகீ ரதனற் சிறுவிதிக்கோர்
ஆட்டுத் தலைதந் தீரென்றே னன்றா லறவோ ரறம்புகல
ஆட்டுத் தலைமுன் கொண்டதனை யஃதே பின்ன ரளித்தாமென்
றீட்டுத் தரமீந் தருள்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 123

**ஒற்றிப்** பெருமா னுமைவிழைந்தா ரூரில் வியப்பொன் றுண்டிரவிற்
கொற்றக் கமலம் விரிந்தொருகீழ்க் குளத்தே குமுதங் குவிந்ததென்றேன்
பொற்றைத் தனத்தீர் நுமைவிழைந்தார் புரத்தே மதியந் தேய்கின்ற
தெற்றைத் தினத்து மென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 124

**இடஞ்சே** ரொற்றி யுடையீர்நீ ரென்ன சாதி யினரென்றேன்
தடஞ்சேர் முலையாய் நாந்திறலாண் சாதி நீபெண் சாதியென்றார்
விடஞ்சேர் களத்தீர் நும்மொழிதான் வியப்பாமென்றே னயப்பாநின்
இடஞ்சேர் மொழிதா னென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 125

**உடையா** ரென்பா ருமையொற்றி யுடையீர் பணந்தா னுடையீரோ
நடையா யேற்கின் றீரென்றே னங்காய் நின்போ லொருபணத்தைக்
கடையா ரெனக்கீழ் வைத்தருமை காட்டேம் பணிகொள் பணங்கோடி
இடையா துடையே மென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 126

**என்னு** ருயிர்க்குப் பெருந்துணையா மெங்கள் பெருமா னீரிருக்கும்
நன்னு டொற்றி யன்றேதா னவில வேண்டு மென்றுரைத்தேன்
முன்னு ளொற்றி யெனினுமது மொழித லழகோ தாழ்தலுயர்
வின்னா னிலத்துண் டென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 127

**பெருந்தா** ரணியோர் புகழொற்றிப் பெருமா னிவர்தம் முகநோக்கி
யருந்தா வமுத மனையீரிங் கடுத்த பரிசே தறையுமென்றேன்
வருந்தா திங்கே யருந்தமுத மனைய ளாக வாழ்விநெடும்
இருந்தா யடைந்தே மென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 128

**செம்மை** வளஞ்சூ ழொற்றியுளீர் திகழாக் கரித்தோ லுடுத்தீரே
உம்மை விழைந்த மடவார்க ளுடுக்கக் கலையுண் டோவென்றேன்
எம்மை யறியா யொருகலையோ விரண்டோ வனந்தங் கலைமெய்யில்
இம்மை யுடையே மென்கின்ற ரிதுதான் சேடி யென்னேடீ. 129

**கற்றைச்** சடையீர் திருவொற்றிக் காவ லுடையீ ரிங்கடைந்தீர்
இற்றைப் பகலே நன்றென்றே னிற்றை யிரவே நன்றெமக்குப்
பொற்றைத் தனத்தாய் கையமுதம் பொழியா தலர்வாய்ப் புத்தமுதம்
இற்றைக் களித்தா யென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 130

**கற்றீ** ரொற்றீர் முன்பொருவான் காட்டிற் கவர்ந்தோர் நாட்டில்வளை
விற்றீ ரின்றென் வளைகொண்டீர் விற்கத் துணிந்தீ ரோவென்றேன்
மற்றீர்ங் குழலாய் நீயெம்மோர் மனையின் வளையைக் கவர்ந்துகளத்
திற்றீ தணிந்தா யென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 131

**உடுக்கும்** புகழா ரொற்றியுளா ருடைதா வென்றார் திகையெட்டு
முடுக்கும் பெரியீ ரதுகண்டோ வுரைத்தீ ரென்றேன் றிகைமுழுதும்
உடுக்கும் பெரிய வரைச்சிறிய வொருமன் றானை யான்மூடி
எடுக்குந் திறங்கண் டென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 132

**காவா** யொற்றிப் பதியுடையீர் கல்லா னைக்குக் கரும்பன்று
தேவாய் மதுரை யிடத்தளித்த சித்த ரலவோ நீரென்றேன்
பாவா யிருகல் லானைக்குப் பரிவிற் கரும்பிங் கிரண்டொருநீ
ஈவா யிதுசித் தென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 133

**ஊட்டுந்** திருவா ழொற்றியுளீ ருயிரை யுடலாஞ் செப்பிடைவைத்
தாட்டுந் திறத்தீர் நீரென்றே னணங்கே யிருசெப் பிடையாட்டுந்
தீட்டும் புகழன் றியுமுலகைச் சிறிதோர் செப்பி லாட்டுகின்றாய்
ஈட்டுந் திறத்தா யென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 134

**கந்த** வனஞ்சூ ழொற்றியுளீர் கண்மூன் றுடையீர் வியப்பென்றேன்
வந்த வெமைத்தான் பிரிபோது மற்றை யவரைக் காண்போதுஞ்
சந்த மிகுங்க ணிருமூன்றுந் தகுநான் கொன்றுந் தானடைந்தாய்
இந்த வியப்பென் னென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 135

**ஆழி** விடையீர் திருவொற்றி யமர்ந்தீ ரிருவர்க் ககமகிழ்வான்
வீழி யதனிற் **படிக்காசு** வேண்டி யளித்தீ ராமென்றேன்
வீழி யதனிற் படிக்காசு வேண்டா தளித்தா யளவொன்றை
ஏழி லகற்றி யென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 136

**உற்ற** விடத்தே பெருந்துணையா மொற்றிப் பெருமா னும்புகழைக்
கற்ற விடத்தே முக்கனியுங் கரும்பு மமுதுங் கயவாவோ
மற்ற விடச்சீ ரென்னென்றேன் மற்றை யுபய விடமுமுதல்
எற்ற விடமே யென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 137

**யான்செய்** தவத்தின் பெரும்பயனே யென்னாரமுதேயென் றுணையே
வான்செய் யரசே திருவொற்றி வள்ளால் வந்த தென்னென்றேன்
மான்செய் விழிப்பெண் ணேநீயாண் வடிவா னதுகேட் டுள்ளம்வியந்
தேன்கண் டிடவே யென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 138

**கருணைக்** கடலே யென்னிரண்டு கண்ணே முக்கட் கரும்பேசெவ்
வருணப் பொருப்பே வளரொற்றி வள்ளன் மணியே மகிழ்ந்தணையத்
தருணப் பருவ மிஃதென்றேன் றவிரன் றெனக்காட் டியதுன்றன்
இருணச் சளக மென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 139

**காவிக்** களங்கொள் கனியேயென் கண்ணுண் மணியே யணியேயென்
ஆவித் துணையே திருவொற்றி யரசே யடைந்த தென்னென்றேன்
பூவிற் பொலியுங் குழலாய்நீ பொன்னி னுயர்ந்தா யெனக்கேட்டுன்
ஈவைக் கருதி யென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 140

**கண்ணு** மனமுங் களிக்குமெழிற் கண்மூன் றுடையீர் கலையுடையீர்
நண்ணுந் திருவா மொற்றியுளீர் நடஞ்செய் வல்லீர் நீரென்றேன்
வண்ண முடையாய்நின் றனைப்போன்மலர்வாய்நடஞ்செய்வல்லோமோ
எண்ண வியப்பா மென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 141

**தாங்கும்** விடைமே லழகீரென் றன்னைக் கலந்துந் திருவொற்றி
ஓங்குந் தளியி லொளித்தீர்நீ ரொளிப்பில் வல்ல ராமென்றேன்
வாங்கு நுதலாய் நீயுமெனை மருவிக் கலந்து மலர்த்தளியில்
ஈங்கின் றொளித்தா யென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 142

**அம்மை** யடுத்த திருமேனி யழகீ ரொற்றி யணிநகரீர்
உம்மை யடுத்தோர் மிகவாட்ட முறுத லழகோ வென்றுரைத்தேன்
நம்மை யடுத்தாய் நமையடுத்தோர் நம்போ லுறுவ ரன்றெனிலே
தெம்மை யடுத்த தென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 143

**உண்கண்** மகிழ்வா லளிமிழற்று மொற்றி நகரீ ரொருமூன்று
கண்க ளுடையீ ரென்காதல் கண்டு மிரங்கீ ரென்னென்றேன்
பண்கொண் மொழியாய்நின்காதல்பன்னுண்சுவைசெய்பழம்போலும்
எண்கொண் டிருந்த தென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 144

**வணங்கே** ழிலங்குஞ் செஞ்சடையீர் வளஞ்சே ரொற்றி மாநகரீர்
குணங்கேழ் மிடற்றீர் பாலிருளைக் கொண்டீர் கொள்கை யென்னென்றேன்
அணங்கேயொருபாலன்றிநின்போலெம்பாலிருள்கொண்டிடச்சற்றும்
இணங்கே மிணங்கே மென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 145

**கரும்பி** லினியீ ரென்னிரண்டு கண்க ளனையீர் கறைமிடற்றீர்
பெரும்பை யணியீர் திருவொற்றிப் பெரியீரெதுநும் பெயரென்றேன்
அரும்பண் முலையாய் பிறர்கேட்க வறைந்தா லளிப்பீ ரெனச்சூழ்வர்
இரும்பொ னிலையே யென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 146

**நிலையைத்** தவறுர் தொழுமொற்றி நிமலப் பெருமா னீர்முன்னம்
மலையைச் சிலையாக் கொண்டீர்நும் மாவல் லபமற் புதமென்றேன்
வலையத் தறியாச் சிறுவர்களு மலையைச் சிலையாக் கொள்வர்களீ
திலையற் புதந்தா னென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 147

**உதயச்** சுடரே யனையீர்நல் லொற்றி யுடையீ ரென்னுடைய
இதயத் தமர்ந்தீ ரென்னேயென் னெண்ண மறியீ ரோவென்றேன்
சுதையிற் றிகழ்வா யறிந்தன்றோ துறந்துவெளிப்பட்டெதிரடைந்தாம்
இதையுற் றறிநீ யென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 148

**புரக்கும்** குணத்தீர் திருவொற்றிப் புனித ரேநீர் போர்க்களிற்றை
உரக்கும் கலக்கம் பெறவுரித்தீ ருளத் திரக்க மென்னென்றேன்
கரக்கு மிடையாய் நீகளிற்றின் கன்றைக் கலக்கம் புரிந்தனையின்
இரக்க மிதுவோ வென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 149

**பதங்கூ** றொற்றிப் பதியீர்நீர் பசுவி லேறும் பரிசதுதான்
விதங்கூ றறத்தின் விதிகாணோ விலக்கோ விளம்பல் வேண்டுமென்றேன்
இதங்கூ றிடுநற் பசுங்கன்றை நீயு மேறி யிடுகின்றாய்
இதங்கூ றிடுக வென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 150

**யோக** முடையார் புகழொற்றி யூரிற் பரம யோகியராந்
தாக முடையா ரிவர்தமக்குத் தண்ணீர் தரநின் றனையழைத்தேன்
போக முடையாய் புறத்தண்ணீர் புரிந்து விரும்பா மகத்தண்ணீர்
ஈக மகிழ்வி னென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 151

**வளநீ** ரொற்றி வாணரிவர் வந்தார் நின்றார் மாதேநாம்
உளநீர்த் தாக மாற்றுறுநீ ருதவ வேண்டு மென்றார்நான்
குளநீ ரொன்றே யுளதென்றேன் கொள்ளே மிடைமேற் கொளுமிந்த
இளநீர் தருக வென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 152

**மெய்ந்நீ** ரொற்றி வாணரிவர் வெம்மை யுளநீர் வேண்டுமென்றார்
அந்நீ ரிலைநீர் தண்ணீர்கா ணருந்தி லாகா தோவென்றேன்
முந்நீர் தனையை யனையீரிம் முதுநீ ருண்டு தலைக்கேறிற்
றிந்நீர் காணடி யென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ 153

**சீலஞ்** சேர்ந்த வொற்றியுளீர் சிறிதாம் பஞ்ச காலத்துக்
கோலஞ் சார்ந்து பிச்சைகொளக் குறித்து வருவீ ரென்னென்றேன்
**காலம் போதுர் வார்த்தை நிற்கும்** கண்டா யிதுசொற் கடனேமோ
ஏலங் குழலா யென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ 154

**ஊற்றூர்** சடையீ ரொற்றியுளீ ரூரூ ரிரக்கத் துணிவுற்றீர்
நீற்றால் விளங்குந் திருமேனி நோந்திங் கிளைத்தீர் நீரென்றேன்
சோற்றா லிளைத்தே மன்றுமது சொல்லா லிளைத்தே மின்றினிநாம்
ஏற்றா லிகழ்வே யென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 155

**நீரை** விழுங்குஞ் சடையுடையீ ருளது நுமக்கு நீரூந்
தேரை விழுங்கும் பசுவென்றேன் செறிந்த கலைக்கு ளொன்றுளது
காரை விழுங்கு மெமதுபசுக் கன்றின் றேரை நீத்தேரை
ஈர விழுங்கு மென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ 156

**பொன்னேர்** மணிமன் றுடையீர்நீர் புரிந்த தெதுவெம் புடையென்றேன்
இன்னே யுரைத்தற் கஞ்சுதுமென் றாரென் னென்றே னியம்புதுமேன்
மின்னே நினது நடைப்பகையா மிருகம் பறவை தமைக்குறிக்கும்
என்னே யுரைப்ப தென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ. 157

**அடையார்** புரஞ்செற் றம்பலத்தே யாடு மழகீ ரணப திழுக்க
கடையா முடலின் றலைகொண்டீர் கரமொன் றினிலற் புதமென்றேன்
உடையாத் தலைமேற் றலையாக வுனக்கை யீரைஞ் ஞூறுகொண்ட
திடையா வளைக்கே யென்கின்றா ரிதுதான் சேடி யென்னேடீ 158

**தேவர்க்** கரிய வானங்கத் திருத்காண் டவஞசெய் பெருமானீர்
மேவக குகுகு குகுகுவணி வேணி யுடையீ ராமெனறேன
தாவக குகுகு குகுகுகுத் தாமே யைந்து விளஙகவணி
ஏவற் குணத்தா யென்கின்ரு ரிதுதான சேடி யெனனேடீ. 159

**கொன்றைச்** சடையீர் கொடுஙகோளுா குறிதகீா வருதற கஞசுவல்யான
ஒன றப பெருஙகோ ளெனமீது முரைபபா ருண்டென றுணாஙதெனறேன
நன்றப படியேற் கோளிலியா நகரு மூடையே நஙகாயநீ
இன்றச சுறலென் னெனகின்ரு ரிதுதான சேடி யெனனேடீ. 160

**புரியுஞ்** சடையீ ரமர்ந்திடுமூர் புலியூ ரெனிலெம போலவார்ககும
உரியும புலித்தோ லுடையீரோபோ லுறுதற கியலு மோவென்றேன்
திரியும புலியூ ரன்றுகினபோற் றெரிவை யரைககண் டிடிற்பயநதே
இரியும புலியூ ரென்கின்ரு ரிதுதான சேடி யெனனேடீ. 161

**தெவ்வூர்** பொடிககுஞ சிறுநகையித தேவர் தமைநா னீரிருத்தல
எவவூ ரென்றே னகைத்கணஙகே யேழூர் நாலூ ரென்ரூாபின
அவவூரத தொகையி னிருதகலரி தாமென றேன்மற றதிலொவவூர்
இவவூ ரெடுத்தா யென்கின்ரு ரிதுதான சேடி யெனனேடீ. 162

**மணங்கொ** ளிதழிச சடையீரநீர் வாழும பதியா தெனறேனின
குணஙகொண மொழிகேட டோரளவு குறைநத குயிலாம பதியெனரூா
அணஙகின மறையூ ராமெனறே னஃதன றருளோத் துரிஃதும
இணஙக வுடையே மெனகின்ரு ரிதுதான சேடி யெனனேடீ. 163

**ஆற்றுச்** சடையா ரிவாபலியென றடைநதார் நுமதூரியாதெனறேன்
சோறறுத துறையென ரூாநுமககுச சோறறுக கருபபேன சொலுமென்றேன
தோறறுத திரிவே மனறுகினபோற சொலலுங கருபபென றுலகியமப
ஏறறுத திரியே மென்கின்ரு ரிதுதான சேடி யெனனேடீ. 164

**ஓங்குஞ்** சடையீா நெலவாய லுடையே மெனறீ ருடையீரேற்
ருஙகும புகழநும மிடைசசிறுமை சாநத தெவணீா சாறறுமெனறேன
ஏஙகும படிநும மிடைசசிறுமை யெயதிற றலதீண டெமககின்ரல
ஈஙகுங காணடி ரெனகின்ரு ரிதுதான சேடி யெனனேடீ. 165

**மையய** லழகீ ரொராறறி வைததீ ருளவோ மனையெனறேன்
**கையி னிறைந்த தனத்தினுந்தங் கண்ணி னிறைந்த கணவனையே**
மெயயின விழைவா ரொருமனையோ விளமபின மனையு மிகப்பலவாம
எயயி லிடையா யெனகின்ரு ரிதுதான சேடி யெனனேடீ. 166

திருச்சிற்றம்பலம்

## முதல் திருமுறை

முற்றிற்று.



உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

அருட்பெருஞ்ஜோதி

# திருவருட்பா

# இரண்டாவது திருமுறை



## 1. புண்ணிய விளக்கம்



*அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்*

திருச்சிற்றம்பலம்

**பாடற் கினிய** வாக்களிக்கும் பாலுஞ் சோறும் பரிந்தளிக்கும்
கூடற் கினிய **அடியவர்தங் கூட்ட மளிக்கும்** குணமளிக்கும்
ஆடற் கினிய நெஞ்சேநீ யஞ்சே லென்மே லாணைகண்டாய்
தேடற் கினிய சீரளிக்குஞ் **சிவாய நமவென் றிடுநீறே.** 1

**கருமா** லகற்றும் பிறப்பதனைக் களையு நெறியுங் காட்டுவிக்கும்
பெருமா லதனுன் மயக்குகின்ற **பேதை மடவார் நசையறுக்கும்**
அருமா லுழந்த நெஞ்சேநீ யஞ்சே லென்மே லாணைகண்டாய்
திருமா லயனுந் தொழுதேத்துஞ் **சிவாய நமவென் றிடுநீறே.** 2

**வெய்ய** வினையின் வேரறுக்கு மெய்ம்மை ஞான வீட்டிலடைத்
துய்ய வமல நெறிகாட்டு மூன்னற் கரிய வுணர்வளிக்கும்
ஐய மடைந்த நெஞ்சேநீ யஞ்சே லென்மே லாணைகண்டாய்
செய்ய மலர்க்கண் மால்போற்றுஞ் சிவாய நமவென் றிடுநீறே.3

**கோல** மலர்த்தாட்டுணைவழுத்துங் குலத்தொண்டடையக்கூட்டுவிக்கும்
நீல மணிகண் டப்பெருமா னிலையை யறிவித் தருளளிக்கும்
ஆல விணையா னெஞ்சேநீ யஞ்சே லென்மே லாணைகண்டாய்
சீல மளிக்குந் திருவளிக்குஞ் சிவாய நமவென் றிடுநீறே. 4

**வஞ்சப்** புலக்கா டெறியவருள் வாளு மளிக்கு மகிழ்வளிக்கும்
கஞ்சத் தவனுங் கரியவனுங் காணற் கரிய கழலளிக்கும்
அஞ்சிற் புகுந்த நெஞ்சேநீ யஞ்சே லென்மே லாணைகண்டாய்
செஞ்சொற் புலவர் புகழ்ந்தேத்துஞ் சிவாய நமவென் றிடுநீறே. 5

**கண்கொண்** மணியை முக்கனியைக் கருமபைக்கரும்பின் கட்டிதனை
விண்கொ ளமுதை நம்மரசை விடைமே னமக்குத் தோற்றுவிக்கும்
அண்கொள் விணையா னெஞ்சேநீ யஞ்சே லென்மே லாணைகண்டாய்
திண்கொண் முனிவர் சுரர்புகழுஞ் சிவாய நமவென் றிடுநீறே. 6

**நோயை யறுக்கும் பெருமருந்தை** நோக்கற் கரிய நுண்மைதனைத்
தூய விடைமேல் வருமமுது சொந்தத் துணையைத் தோற்றுவிக்கும்
ஆய விணையா னெஞ்சேநீ யஞ்சே லென்மே லாணைகண்டாய்
சேய வயனமா னுடரிதாஞ் சிவாய நமவென் றிடுநீறே. 7

**எண்ண** வினிய வின்னமுதை யின்பக் கருணைப் பெருங்கடலை
உண்ண முடியாச் செழுந்தேனை யொருமால் விடைமேற்காட்டுவிக்கும்
அண்ண விணையா னெஞ்சேநீ யஞ்சே லென்மே லாணைகண்டாய்
திண்ண மளிக்குந் திறமளிக்குஞ் சிவாய நமவென் றிடுநீறே 8

**சிந்தா மணியை** நாம்பலநாள் தேடி யெடுத்த செல்வமதை
இந்தார் வேணி முடிக்கனியை யின்றே விடைமேல் வரச்செய்யுங்காண்
அந்தோ விணையா னெஞ்சேநீ யஞ்சே லென்மே லாணைகண்டாய்
செந்தா மரையோன் றெழுதேத்துஞ் சிவாய நமவென் றிடுநீறே. 9

**உள்ளத்** தெழுந்த மகிழ்வைநமக் குற்ற துணையை யுளுறவைக்
கொள்ளக் கிடையா மாணிக்கக் கொழுந்தைவிடைமேற்கூட்டுவிக்கும்
அள்ளற் றுயரா னெஞ்சேநீ யஞ்சே லென்மே லாணைகண்டாய்
தெள்ளக் கடலான் புகழ்ந்தேத்துஞ் சிவாய நமவென் றிடுநீறே. 10

**உற்ற** விடத்தி லுதவநமக் குடையோர் வைத்த வைப்புதனைக்
கற்ற மனத்திற் புகுங்கருணைக் கனியை விடைமேற் காட்டுவிக்கும்
அற்ற மடைந்த நெஞ்சேநீ யஞ்சே லென்மே லாணைகண்டாய்
செற்ற மகற்றுந் திறலளிக்குஞ் சிவாய நமவென் றிடுநீறே. 11

திருச்சிற்றம்பலம்

## 2 அருள் நாம விளக்கம்

எண்சீரக் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

**வாங்கு** வின்னுதன் மங்கையர் விழியால்
மயங்கி வஞ்சர்பால் வருந்திநா டோறும்
ஏங்கு கின்றதி லென்பயன் கண்டாய்
எழிற்கொ ளொற்றியூர்க் கென்னுடன் போந்து
தேங்கு லாவுசெங் கரும்பினு மினிதாய்த்
தித்தித் தன்பர்தஞ் சித்தத்துள் ளூறி
ஓங்கும் ஓம்சிவ சண்முக சிவஓம்
ஓம்சி வாயவென் றுன்னிநீ மனனே. 1

**தவம** தின்றிவண் மங்கையர் முயக்காற்
றரும மின்றுவஞ் சகர்கடுஞ் சார்வால்
இவகை யானமிக வருந்துறி லென்னாம்
எழிற்கொ ளொற்றியூர்க் கென்னுடன் போந்து
பவம தோட்டிநல் லானந்த வுருவாம்
பாங்கு காட்டிநற் பதந்தரு மடியார்
உவகை யோம்சிவ சண்முக சிவஓம்
ஓம்சி வாயவென் றுன்னிநீ மனனே. 2

**மின்னு** நுண்ணிடைப் பெண்பெரும் பேய்கள்
வெய்ய நீர்க்குழி விழுந்தது போக
இன்னும் வீழ்கிலை யுனக்கொன்று சொல்வேன்
எழிற்கொ ளொற்றியூர்க் கென்னுடன் போந்து
பொன்னு லாவிய புயமுடை யானும்
புகழு லாவிய பூவுடை யானும்
உன்னும் ஓம்சிவ சண்முக சிவஓம்
ஓம்சி வாயவென் றுன்னிநீ மனனே. 3

**பொன்றும** வாழ்க்கையை நிலையென நினைந்தே
புலைய மங்கையர் புழுநெளி யளற்றில்
என்றும் வீழ்ந்துழன் மடமையை விடுத்தே
யெழிற்கொ ளொற்றியூர்க் கென்னுடன் போந்து
துன்று தீம்பலாச் சுளையினு மினிப்பாய்த்
தொண்டர் தங்களுச் சுவைபெற வூறி
ஒன்றும் ஓம்சிவ சண்முக சிவஓம்
ஓம்சி வாயவென் றுன்னிநீ மனனே 4

**வரைக்கு** நேர்முலை மங்கையர் மயலால்
மயங்கி வஞ்சரால் வருத்தமுற் றஞராம்
இரைக்கு மாக்கட லிடைவீழ்ந் தயரேல்
எழிற்கொ ளொற்றியூர்க் கென்னுடன் போந்து

கரைகரு தெள்ளிய வமுதமோ தேனோ
கனிகொ லோவெனக் கனிவுட னுயர்ந்தோர்
உரைக்கும் ஓம்சிவ சண்முக சிவவோம்
ஓம்சி வாயவென் றுன்னிதி மனனே. 5

வாது செய்மட வார்தமை விழைந்தாய்
மறலி வந்துனை வாவென வழைக்கில்
ஏது செய்வையோ வேழைநீ யந்தோ
எழில்கொ ளொற்றியூர்க் கென்னுடன் போந்து
போது வைகிய நான்முகன் மகவான்
புணரி வைகிய பூமகள் கொழுநன்
ஓதும் ஓம்சிவ சண்முக சிவவோம்
ஓம்சி வாயவென் றுன்னிதி மனனே. 6

நண்ணு மங்கையர் புழுமலக் குழியில்
நாளும் வீழ்வுற்று நலிந்திடே னிதமாய்
எண்ணு மென்மொழி குருமொழி யாக
எண்ணி ஒற்றியூர்க் கென்னுடன் போந்து
பண்ணு மின்சுவை யமுதினு மினிதாய்ப்
பத்தர் நாடொறுஞ் சித்தமுள் ளூற
உண்ணும் ஓம்சிவ சண்முக சிவவோம்
ஓம்சி வாயவென் றுன்னிதி மனனே. 7

பந்த வண்ணமா மடந்தையர் மயக்காற்
பசையி னெஞ்சரா றப் பரிவுறு கின்றாய்
எந்த வண்ணநீ யுய்வண மந்தோ
எழில்கொ ளொற்றியூர்க் கென்னுடன் போந்து
சந்த மாம்புக ழுடியரிற் கூடிச்
சனன மென்னுமோர் சாகர நீந்தி
உந்த ஓம்சிவ சண்முக சிவவோம்
ஓம்சி வாயவென் றுன்னிதி மனனே. 8

மட்டின் மங்கையர் கொங்கையை விழைந்தாய்
மட்டி லாததோர் வன்றுய ரடைந்தாய்
எட்டி யன்னாபா விரந்தலை கின்றாய்
எழில்கொ ளொற்றியூர்க் கென்னுடன் போந்து
தட்டி லாதநற் றவத்தவர் வானோர்
சார்ந்துங் காண்கிலாத் தற்பரம் பொருளை
ஒட்டி ஓம்சிவ சண்முக சிவவோம்
ஓம்சி வாயவென் றுன்னிதி மனனே. 9

நிலவு மொண்மதி முகத்தியர்க் குழன்றாய்
நீச நெஞ்சத நெடுங்கடை தனிற்போய்
இலவு காத்தனை யென்னினி மதியே
எழில்கொ ளொற்றியூர்க் கென்னுடன் போந்து

பலவு மாயநதுநன குணமையை யுணாந்த
பதத ருளளகப பதுமஙக டோறும
உலவும ஓமசிவ சணமுக சிவவோம
ஓமசி வாயவென றுனனுதி மனனே. 10

திருச்சிற்றமபலம

## 3 ஸ்ரீ சிவஷண்முகநாம ஸங்கீர்த்தனலகரி

*எணசீாக கழிநெடிலடி ஆசிரிய விருததம*

திருச்சிறறம்பலம

**பழுது** நோகினற வஞசகா கடைவாயப
பறறி நினறதிற பயனெது கணடாய
பொழுது போகினறது எழுதியென னெஞசே
பொழிலகொள ஒறறியம புரிதனக கேகி
தொழுது **சண்முக சிவசிவ** வெனாநத
தோனற லாதமைத துதிததவா திருமுன
பழுது சொலலுதும ஐயுற லெனமேல
ஆணை காணவ ரருளபெற லாமே 1

**சூது** நோகினற முலைசசியா பொருடடாயச
சுறறி நினறதிற சுகமெது கணடாய
போது போகினறது எழுதியென னெஞசே
பொழிலகொள ஒறறியம புரிதனக கேகி
ஓது சணமுக சிவசிவ வெனவே
உனனி நெககுவிட டுருகிநந துயராம
ஆது சொலலுதும ஐயுற லெனமேல
ஆணை காணவ ரருளபெற லாமே 2

**ஞாலஞ்** செலகினற வஞசகர் கடைவாய
நணணி நினறதில நலமெது கணடாய்
காலஞ செலகினறது எழுதியென னெஞசே
கருதும ஒறறியங கடிநகாக கேகிக
கோலஞ செயயருட சண்முக சிவவோங
குழக வோமெனக கூவிநந துயராம
ஆலஞ சொலலுதும ஐயுற லெனமேல
ஆணை காணவ ரருள பெறலாமே. 3

**மருட்டி** வஞ்சக மதித்திடுங கொடியார்
வாயல காத்தினனும வருநதிலென பயனே
இருட்டிப் போகினற தெழுதியென னெஞ்சே
எழிலகொ ளொறறியூ ரெனுநதலத தேகித்
தெருட்டி றஞசெயுஞ சணமுக சிவவோஞ
சிவந மாவெனச செபபிநந துயராம
அரிட்டை யோதுது மையுற லெனமே
லாணை காணவ ரருளபெற லாமே 4

**இல்லை** யென்பதே பொருளெனக் கொண்டோர்
ஈன வாயிலில் இடர்ப்படு கின்றாய்
எல்லை செல்கின்ற தெழுதியென் னெஞ்சே
எழில்கொ ளொற்றியூ ரெனுந்தலத் தேகித்
தொல்லை யோஞ்சிவ சண்முக சிவவோம்
தூய வென்றடி தொழுதுநா முற்ற
அல்ல லோட்டுது மையுற லெனமே
லாணை காணவ ருள்பெற லாமே. 5

**கரவு** நெஞ்சினர் கடைத்தலைக் குழன்றாய்
கலங்கி யின்னுநீ கலுழ்ந்திடற் கடிதே
இரவு போந்திடு மெழுதியென் னெஞ்சே
எழில்கொ ளொற்றியூ ரெனுந்தலத் தேகிப்
பரவு சண்முக சிவசிவ சிவவோம்
பரசு யம்புசங் கரசம்பு நமவோம்
அரவென் றேத்துது மையுற லெனமே
லாணை காணவ ருள்பெற லாமே. 6

**ஏய்ந்து** வஞ்சகர் கடைத்தலை வருந்தி
யிருக்கின் றாயினி யிச்சிறு பொழுதுஞ்
சாய்ந்து போகின்ற தெழுதியென் னெஞ்சே
தகைகொ ளொற்றியந் தலத்தினுக் கேகி
வாய்ந்து சண்முக நமசிவ சிவவோம்
வரசு யம்புசங் கரசம்பு வெனவே
ஆய்ந்து போற்றுது மையுற லெனமே
லாணை காணவ ருள்பெற லாமே 7

**ஈர்ந்த** நெஞ்சின ரிடந்தனி லிருந்தே
இடர்கொண் டாயினி யிச்சிறு பொழுதும்
பேர்ந்து போகின்ற தெழுதியென் னெஞ்சே
பிறங்கு மொற்றியம் பெருநகர்க் கேகி
ஓர்ந்து சண்முக **சரவண சிவவோம்**
ஓம்சு யம்புசங் கரசம்பு வெனவே
ஆர்ந்து போற்றுது மையுற லெனமே
லாணை காணவ ருள்பெற லாமே. 8

**கமைப்பி** னீங்கிலா வஞ்சகர் கடையைக்
காத்தி ருக்கலை கடுகியிப் பொழுதும்
இமைப்பிற் போகின்ற தெழுதியென் னெஞ்சே
எழில்கொ ளொற்றியூ ரெனுந்தலத் தேகி
எமைப்பு ரந்தசண் முகசிவ சிவவோம்
இறைவ சங்கர அரகர வெனவே
அமைப்பி னேத்துது மையுற லெனமே
லாணை காணவ ருள்பெற லாமே. 9

**உறைந்து** வஞ்சர்பால் குறையிரந் தவமே
யுழல்கின் றயினி யுரைக்குமிப் பொழுதுங்
குறைந்து போகின்ற தெழுதியென் னெஞ்சே
குலவு மொற்றியங் கோநகர்க் கேகி
**நிறைந்த சண்முக்** குருநம சிவவோம்
நிமல சிற்பர வரகர வெனவே
அறைந்து போற்றுது மையுற லென்மே
லாணை காணவ ரருள்பெற லாமே. 10

திருச்சிற்றம்பலம்

---

## 4. நமச்சிவாய ஸங்கீர்த்தனலகரி

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

**சொல்ல** வாவிய தொண்டர்தம் மனத்திற்
சுதந்த ரங்கொடு தோன்றிய துணையைக்
கல்ல வாவிய வேழையே னெஞ்சுங்
கரைந்து வந்திடக் கலந்திடுங் களிப்பை
செல்ல வாவிய பொழிற்றிரு வொற்றித்
தேனைத் தில்லைச்சிற் றம்பலத் தாடும்
நல்ல வாழ்வினை நான்மறைப் பொருளை
**நமச்சி வாயத்தை நான்மற வேனே!** 1

**அட்ட** மூர்த்தம தாகிய பொருளை
அண்ட ராதியோ ரறிகிலாத் திறத்தை
விட்ட வேட்கையர்க் கங்கையிற் கனியை
வேத மூலத்தை வித்தக விளைவை
எட்ட ரும்பர மானந்த நிறைவை
எங்கு மாகிநின் றிலங்கிய வொளியை
நட்ட மாடிய நடனநா யகத்தை
நமச்சி வாயத்தை நான்மற வேனே. 2

**உம்பர்** வான்றுய ரொழித்தருள் சிவத்தை
உலகெ லாம்புக ழுத்தமப் பொருளைத்
தம்ப மாயகி லாண்டமுந் தாங்குஞ்
சம்பு வைச்சிவ தருமத்தின் பயனைப்
பம்பு சீரருள் பொழிதரு முகிலைப்
பரம ஞானத்தைப் பரமசிற் சுகத்தை
**நம்பி னோர்களை வாழ்விக்கு நலத்தை**
நமச்சி வாயத்தை நான்மற வேனே. 3

**மாலி** னுச்சிமேல் வதிந்தமா மணியை
வழுத்து நாவக மணக்குநன் மலரைப
பாலி னுள்ளினித் தோங்கிய சுவையைப்
பத்தர் தம்முளம் பரிசிக்கும் பழத்தை

ஆவி ஞோங்கிய வானநதக கடலை
அமப லத்திலா மமுதை வேதஙகள்
நாலி ஞெற்றியூ ரமர்நதிடுஞ் சிவத்தை
நமச்சி வாயத்தை நானமற வேனே. 4

**உண்ணி** றைநதெனை யொளித்திடு மொளியை
உண்ண வுணணமே லுவட்டுறா நறவைக
கண்ணி றைந்ததோர் காடசியை யாவுங
கடந்த மேலவர் கலந்திடு மூறவை
எண்ணி றைநதமா லயனமுதற் றேவர்
யாருங காணகிலா வினபததி னிறைவை
நண்ணி யொற்றியூ ரமர்நதருள சிவததை
நமசசி வாயததை நானமற வேனே. 5

**திக்கு** மாறினு மெழுகடற் புவிமேற்
சென்று மாறினுஞ் சேண்விளங கொளிகள
உககு மாறினும பெயலின்றி யுலகில
உணவு மாறினும புவிகளோ ரேழும
மிககு மாறினு மணடஙக ளெலலாம
விழுந்து மாறினும வேதங்க ளுணரா
நகக னெமபிரா னருட்டிருப பெயராம
நமசசி வாயததை நானமற வேனே. 6

**பெற்ற** தாய்தனை மகமறந தாலும
பிள்ளை யைபபெறுந தாய்மறந் தாலும
உற்ற தேகத்தை யுயிர்மறந தாலும
உயிரை மேவிய வுடனமறந தாலுங
கற்ற நெஞசகங கலைமறந தாலுங
கணகள நினறிமைப் பதுமறந தாலும்
நற்ற வத்தவ ருளளிருந தோஙகும
நமசசி வாயததை நான்மற வேனே. 7

**உடையு** டுத்திட இடைமறந தாலும
உலகு ளோர்பசிக குணமறந தாலும
படையெ டுத்தவர் படைமறந் தாலும
பரவைதா னலைப பதுமறந தாலும
புடைய டுத்தவர் தமைமறந தாலும
பொன்னை வைத்தவப் புதைமறந தாலும
நடைய டுத்தவர் வழிமறந தாலும
நமசசி வாயத்தை நான்மற வேனே 8

**வன்மை செய்திடும் வறுமை**வந தாலும
மகிழவு செய்பெரு வாழவுவந தாலும
புன்மை மஙகையர் புணாசசிநேர்ந தாலும
பொருநதி னுலுநின றுலுஞ்சென றுலுந

தனமை யிலலவர் சார்பிருந தாலுஞ்
சானற மேலவா தமையடைந தாலும
நனமை யெனபன யாவையு மளிககும
நமசசி வாயததை நானமற வேனே. 9

இன்னும் பற்பல நாளிருந தாலும
இக்க ணந்தனி லேயிறந் தாலுந்
துனனும வானகதிக கேபுகுந தாலுஞ
சோரநது மாநர கததுழன றாலும
எனன மேலுமிங கெனககுவந தாலும
எம்பிரா னெனக்கு யாதுசெய் தாலும்
நனனா நெஞசக நாடிநின றேஙகும
நமச்சி வாயத்தை நான்மற வேனே 10

திருச்சிறறமபலம

# 5. நற்றுணை விளக்கம்

எணசீாக கழிநெடிலடி ஆசிரிய விருததம
திருச்சிறறமபலம

எஞ்ச வேண்டிய வைமபுலப் பகையால்
இடர்கொண டோயநதனை யென்னினு மினிநீ
அஞச வேண்டிய தெனனையென நெஞ்சே!
அஞச லஞசலகா ணருமறை நானகும
விஞச வேண்டிய மாலவன மலரோன
விளஙக வேணடியு மிடறறினக ணமுதாம
நஞசை வேணடிய நாதனறன னுமம
நமச்சி வாயங்காண நாம்பெறுந் துணையே! 1

காவின் மனனவ னெதிாககினுங காமன
கணைக ளேவினுங காலனே வரினும
பூவின மனனவன சீறினுந திருமால
போாககு நேரினும பொருளல நெஞசே!
ஓவின மாதுய ரெறறினுக கடைநதாய
ஒனறு மஞசனீ யுளவறிந திலையோ
நாவின் மன்னரைக் கரைதனிற் சேர்த்த
நமச்சி வாயங்காண் நாம்பெறுந துணையே! 2

நீட்ட முறறதோா வஞசக மடவாா
நெடுஙகண வேலபட நிலையது கலஙகி
வாட்ட முற்றனை யாயினு மஞசேல
வாழி நெஞசமே! மலாககணை தொடுப்பான
கோடட முறறதோா நிலையொடு நினற
கொடிய காமனைக் கொளுவிய நுதற்றீ
நாடட முறறதோா நாதனறன னுமம
நமசசி வாயஙகாண நாமபெறுந துணையே. 3

எம்மை வாட்டுமிப் பசியினுக் கெவர்பால்
ஏகு வோமென வெண்ணலை நெஞ்சே!
அம்ம வொன்றுநீ யறிந்திலை போலும்
ஆலக் கோயிலு ளன்றுகூந் தரர்க்காய்ச்
செம்மை மாமலர்ப் பதங்களைந் திடவே
சென்று சோறிரந் தளித்தருள் செய்தோன்
நம்மை யாளுடை நாதன்றன் னாமம்
நமச்சி வாயங்காண் நாம்பெறுந் துணையே. 4

ஓடு கின்றனன் கதிரவ னவன்பின்
ஓடு கின்றன வொவ்வொரு நாளாய்
வீடு கின்றன வென்செய்வோ மினியவ்
வெய்ய கூற்றுவன் வெகுண்டிடி லென்றே
வாடு கின்றனை யஞ்சலை நெஞ்சே!
மார்க்கண் டேயர்தம் மாண்பறிந் திலையோ
நாடு கின்றவர் நாதன்றன் னாமம்
நமச்சி வாயங்காண் நாம்பெறுந் துணையே. 5

மலங்கு மாலுடற் பிணிகளை நீக்க
மருந்து வேண்டினை வாழியென் னெஞ்சே!
கலங்கு றேலருட் டிருவெண்ணீ றெனது
கரத்தி ருந்தது கண்டிலை போலும்
விலங்கு றுப்பெருங் காமநோய் தவிர்க்க
விரும்பி யேங்கினை வெம்புறே லழியா
நலங்கொள் செஞ்சடை நாதன்றன் னாமம்
நமச்சி வாயங்காண் நாம்பெறுந் துணையே. 6

மாலுந் துஞ்சுவான் மலரவ னிறப்பான்
மற்றை வானவர் முற்றிலு மழிவார்
ஏலு நற்றுணை யார்நமக் கென்றே
எண்ணி நிற்றியோ வேழைநீ நெஞ்சே!
கோலு மாயிரங் கோடியண் டங்கள்
குலைய நீக்கியு மாக்கியு மளிக்கும்
நாலு மாமறைப் பரம்பொரு ளாமம்
நமச்சி வாயங்காண் நாம்பெறுந் துணையே. 7

கந்த வண்ணமாங் கமலன்மான் முதலோர்
கண்டிலா ரெனிற் கைலையம் பதியை
எந்த வண்ணநாங் காண்குவ தென்றே
எண்ணி யெண்ணிநீ யேங்கினை நெஞ்சே!
அந்த வண்ணவெள் ளானைமே னம்பி
அமர்ந்து சென்றதை யறிந்திலை போலும்
நந்தம் வண்ணமா நாதன்றன் னாமம்
நமச்சி வாயங்காண் நாம்பெறுந் துணையே. 8

வீர மாந்தரு முனிவருஞ் சுரரும்
மேவு தற்கொணு வெள்ளியங் கிரியைச்
சேர நாஞ்சென்று வணங்கும்வா றெதுவோ
செப்பென் றேயெனை நச்சிய நெஞ்சே!
ஊர னுருடன் சேரனுர் துரங்கம்
ஊர்ந்து சென்றவவ் வுளவறிந் திலையோ
நார மார்மதிச் சடையவ னமம்
நமச்சி வாயங்காண் நாம்பெறுந் துணையே. 9

தலங்க டோறுஞ்சென் றவ்விடை யமர்ந்த
தம்பி ரான்றிருத் தாளிணை வணங்கி
வலங்கொ ளும்படி யென்னையுங் கூட
வாவென் கின்றனை வாழியென் னெஞ்சே!
இலங்க டோறுஞ்சென் றிரந்திடு மவனே
என்னை யுன்னையு மீர்க்குவ னதற்கு
நலங்கொ ளுந்துணை யாதெனிற் கேட்டி
**நமச்சி வாயங்காண் நாம்பெறுந் துணையே!** 10

திருச்சிற்றம்பலம்



## 6. திருவருள் வழக்க விளக்கம்



கட்டளைக் கலித்துறை

திருச்சிற்றம்பலம்

**தோ**டுடை யார்புலித் தோலுடை யார்கடற் றூங்குமொரு
மாடுடை யார்மழு மானுடை யார்பிர மன்றலையாம்
ஓடுடை யாரொற்றி யூருடை யார்புக ழோங்கியவெண்
காடுடை யார்நெற்றிக் கண்ணுடை யாரெங் கடவுளரே. 1

**வண்ணப்பன்** மாமலர் மாற்றும் படிக்கு மகிழ்ந்தெமது
திண்ணப்பர் சாத்துஞ் செருப்படி மேற்கொண்டு தீஞ்சுவைத்தாய்
உண்ணப் பரிந்துநல் லூன்றர வுண்டுகண் ணொத்தக்கண்டே
**கண்ணப்ப! நிற்க!**வெனக் கைதொட் டாரெங் கடவுளரே. 2

**செல்லிடிக்** குங்குரற் கார்மத வேழச் சினவுரியார்
வல்லடுக் குங்கொங்கை மாதொருபாகர் வடப்பொன் வெற்பாம்
வில்லெடுக் குங்கையர் **சாக்கியர்** அன்று விரைந்தெறிந்த
**கல்லடிக் குங்கதி காட்டினர்** காணெங் கடவுளரே. 3

**ஏழியற்** பண்பெற் றமுதோ டளாவி **இலங்குதமிழ்க்**
கேழியர் **சம்பந்த** ரந்தணர் வேண்டக் கிளர்ந்தநற்சீர்
வீழியிற் றம்பதிக் கேவிடை கேட்கவெற் பாளுடனே
காழியிற் றன்னுருக் காட்டின ராலெங் கடவுளரே. 4

**நாயேன்** றனபக கடலவீழநது நலித லழகோ நலலோர்ககிங
கீயே னெனறு மிலலேனு னெனசெய கேனே வெனனுடைய
தாயே யனையாய சிறிதெனமேற றயவு புரிநதா லாகாதோ
சேயேன றனனை விடுபபாயோ விடுததா லுலகஞ சிரியாதோ. 6

**சிரிப்பார்** நினபே ரருளபெறறோ சிவனே சிவனே சிவனேயோ
விரிப்பார பழிசசொல லனறியெனை விடடால வெளளைவிடையோனே
தரிபபா யிவனை யருளிடததே யெனறு நினறு தருமவணணந
தெரிபபார் நினககு மெவாகணடாய தேவா தேடற கரியானே 7

**அரிய** பெருமா னெளியோமை யாளும பெருமான் யாவாகடகும
பெரிய பெருமான சிவபெருமான பிததப் பெருமா னெனறுனனை
உரிய பெருமா தவாபழிசச லுணமை யெனிலென னுடையானே
கரிய பெருமா னுடையேறகு மருள லுனறன கடனனறே. 8

**அன்றுஞ்** சிறியே னறிவறியே னதுநீ யறிநது மருளசெயதாய
இனறுஞ சிறியே னறிவறியே னிதுநீ யறிநது மருளாயேல
எனறு மொருதன மையனெஙக ளிறைவ னெனமா மறைகளெலாந
தொனறு மொழிநத தூமொழிதான சூது மொழியோ சொலலாயே.

**சொல்லற்** கரிய பெரியபரஞ சுடரே முககட சுடாகசொழுநதே
மலலற கருமா லயனமுதலோா வழுத்தும பெருஞ்சீா மணிககுனறே
புலலற் கரிதா மெளியேனறன பிழைகள யாவும பொறுததிநத
அலலற் கடனின றெனையெடுத்தே யருளவா யுனற னருணலமே.10

திருச்சிறறமபலம்

# 87 அடிமைப் பதிகம்

## கோயில்

எணசீாக கழிநெடிலடி ஆசிரிய விருத்தம

திருச்சிறறம்பலம

**ஆள்வினையாற்** பயனுறுவா ரசதி யாட
அநதோவிப புலைநாயே னனபா னினபால
வேளவிசெயும பெருநதவாககே வேளவி செயய
வேணடுமிதற கெமபெருமான கருணை செயயும
நாளவிளைவிற சினனுளே யிதுதா னுணமை
நமபுமென நவினறுனையே நமபி நினறேன
**கேள்வியிலாத் துரைத்தனமோ** வலது நாயேன
கிளககுமுறை கிளககிலனோ கேடடி லாயே 1

**கேட்டிலா** யடியேனசெய முறையை யநதோ
கேடிலாக குணததவாபாற கிடடு கினறேய
ஏட்டிலா யிரஙகோடி யெனினுஞ சறறும
எழுதமுடி யாககுறைகொண டிளைககின் றேனை

சேட்டியா விடினுமெனைச் சேட்டித் தீர்க்குஞ்
சிறுமனத்தாற் செய்பிழையைத் தேர்தி யாயில்
நாட்டிலார் காக்கவல்லா ரென்னை யெந்தாய்
நாள்கழியா வண்ணமினி நல்கல் வேண்டும். 2

**வேண்டாமை** வேண்டுகின்றோர் நிற்க மற்றை
வேண்டுவார் வேண்டுவன விரும்பி நல்குந்
துண்டாத மணிவிளக்கே பொதுவி லாடுஞ்
சுடர்க்கொழுந்தே யென்னுயிர்க்குத் துணையே என்னை
**ஆண்டாறு மூன்றாண்டில் ஆண்டு கொண்ட**
அருட்கடலே யென்னுள்ளத் தமர்ந்த தேவே
ஈண்டாவ வெனச்சிறிய வடியே னுள்ளத்
தெண்ணமறிந் தருளாயே லென்செய் கேனே. 3

**என்னையறி** யாப்பருவத் தாண்டு கொண்ட
என்குருவே யெனக்குரிய வின்ப மேயென்
றன்னையின்று விடத்துணிந்தாய் போலு மந்தோ
தகுமோநின் பெருங்கருணைத் தகவுக் கெந்தாய்
உன்னையலா தொருவர்தம்பாற் செல்லே னென்னை
உடையானே யென்னுள்ளத் துள்ளே நின்று
முன்னைவினைப் பயனூட்ட நினைப்பிக் கின்றாய்
முடிப்பிக்கத் துணிந்திலையேன் மொழிவ தென்னே. 4

**என்னுணை** யறிந்துமென்னை யந்தோ வந்தோ
இவ்வகைசெய் திடத்துணிந்தா யென்னே யெந்தாய்
நின்னுணை நின்னையலா தொன்றும் வேண்டேன்
நீயிதனை யறிந்திலையோ நினைப்பிக் கின்ற
மன்னுமென் னுருயிர்க்கு வாழ்வே யென்கண்
மணியேயென் குருவேயென் மருந்தே யின்னும்
உன்னுலிங் குயிர்தரித்து வாழ்கின் றேனென்
உள்ளமறிந் துதவுதியோ வுணர்கி லேனே. 5

**உள்ளமறிந்** துதவுவனம் முடையா னெல்லாம்
உடையான்மற் றொருகுறையிங் குண்டோ வென்னக்
கள்ளமனத் தேனந்தோ களித்தி ருந்தேன்
கைவிடுவார் போலிருந்தாய் கருணைக் குன்றே
எள்ளலுறப் படுவேனிங் கேது செய்வேன்
எங்கெழுகேன் யார்க்குரைப்பே னின்னு முன்றன்
வள்ளலருட் டிறநோக்கி நிற்கின் றேனென்
மனத்துயர்போம் வகையருள மதித்தி டாயே. 6

**வகையறியேன்** சிறியேன்சன் **மார்க்க மேவும்**
மாண்புடைய பெருந்தவத்தோர் மகிழ வாழுந்
தகையறியே னலமொன்று மறியேன் பொய்மை
தானறிவே னல்லோரைச் சலஞ்செய் கின்ற

மிகையறிவேன் றீங்கென்ப வெல்லா மிங்கே
மிகவறிவே னெனினுமெனை விடுதி யாயிற்
பகையறிவே னின்மீதிற் பழிவைத் திந்தப்
பாவியுயிர் விடத்துணிவேன் பகர்ந்திட் டேனே. 7

**இட்டவகை** வாழ்கின்றே னெந்தாய் நானே
எண்ணுகிலே னெண்ணுவித்தா லென்செய் வேனின்
மட்டலர்சே வடியானை நினைத்த வண்ணம்
வாழ்விக்க வேண்டுமிந்த வண்ண மல்லால்
துட்டனென விடத்துணிதி யாயி லந்தோ
சூறையுறு துரும்பெனவுஞ் சுழன்று வானில்
விட்டசிலை யெனப்பவத்தில் விழுவே னன்றி
வேறெதுசெய் வேனிந்த விழல னேனே. 8

**விழற்கிறைத்து** மெலிகின்ற வீண னேனிவ்
வியனுலகில் விளைத்திட்ட மிகைக ளெல்லாம்
அழற்கிறைத்த பஞ்செனவே யாக்கி நீயே
ஆட்கொண்டாற் றடுப்பவரிங் காரே யையா
கழற்கடிமை யெனவுலக மறிய வொன்றுங்
கருதறியாச் சிறுபருவத் தென்னை யாண்டு
நிழற்கருணை யளித்தாயே யிந்நா ணீகை
நெகிழவிட்டா லென்செய்வே னிலையி லேனே. 9

**நிலையறியே** னிலையறிந்து பெற்ற நல்லோர்
நெறியறியே னெனினுமுன்ற னேச மன்றி
இலையறியேன் மற்றவரைக் கனவி லேனும்
எட்டுணையோர் துணையெனவு மெண்ணு றேனற்
கலையறியேன் கருத்திலிருந் தறிவித் தாய்நான்
கண்டறிந்தே னெனினுமவை போற்காட்ட வேண்டும்
அலையறியா வருட்கடலே யமுதே தேனே
அம்பலத்தென் குருவேநா னடிமை யாளே. 10

திருச்சிற்றம்பலம்

## 88 வேட்கைக் கொத்து

### தலைமகள் பாங்கியொடு கூறல்

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

**விண்படைத்த** புகழ்த்தில்லை யம்பலத்தா னெவர்க்கும்
மேலான னன்பருள மேவுநட ராஜன்
பண்படைத்த வெனையறியா விளம்பருவந் தனிலே
பரிந்துவந்து மாலையிட்டான் பார்த்தறியான் மீட்டும்
பெண்படைத்த பெண்களெலா மவமதித்தே வலது
பேசுகின்றார் கூசுகின்றேன் பிச்சியென லானேன்
கண்படைத்துங் குழியில்விழக் கணக்குமுண்டோ அவன்றன்
கணக்கறிந்தும் விடுவேனோ கண்டாயென் றோழி. 1

**சித்தமணி** யமபலத்தா னெனபிராண நாதன்
சிவபெருமா னெமபெருமான செல்வநட ராஜன்
வாயததவெனனை யறியாத விளமபருவந தனிலே
மகிழநதுவநது மாலையிடடா மறிததுமுகம பாரார்
ஆயததகலை கறறுணாநத வணஙகனையார் தமககுள
ஆசெயத போதனையோ வாளுலு மிதுகேள
காயத்தமரம வளையாத கணககுமுணடோ அவன்றன்
கணககறிநதும விடுவேனோ கணடாயென றோழி. 2

**என்னுயிரிற்** கலநதுகலந தினிககினற பெருமான்
எனனிறைவன பொதுவினட மியற்றுநட ராஜன
தனனையறி யாபபருவத் தெனனைமணம புரிநதான
தனையறிநத பருவததே யெனையறிய விருமபான
பினனையனறி முனனுமொரு பிழைபுரிநதே னிலலை
பெணபரிதா பஙகாணல பெருநதகைககு மழகோ
கனனலென்றுற கைககினற கணககுமுண்டோ அவனறன்
கணககறிநதும விடுவேனோ கணடாயென றோழி. 3

**தெருளமுதத்** தனியோகா சிநதையிலு ஞானச
செலவரறி விடத்துநடஞ செயயுநட ராஜன
அருளமுத மளிபபனெனறே யனறுமணம புணாநதான
அளித்தறியா னுணுததுணையு மநுபவிதது மறியேன்
மருளுடையா னலலனொரு வஞசகனு மலலன
மனமிரகக மிகவுடையான வலவினையே னளவில
இருளுடையார் போவிருககு மியலபெனனை அவனறன
இயலபறிநதும விடுவேனோ வினிததானென் றோழி 4

**சின்மயமாம்** பொதுவினிலே தனமயமாய நினறு
திருநடஞசெய பெருஙகருணைச செலவநட ராஜன்
எனமயநா னறியாத விளமபருவந தனிலே
எனனைமணம புரிநதனனீ தெலலாரு மறிவார்
இனமயமில லாதவாபோ லினறுமணந தருளான
இறையளவும பிழைபுரிநதே னிலலையவ னிதயங
கனமயமோ வனறுசுவைக கனிமயமே யெனனுங
கணககறிநதும விடுவேனோ கண்டாயென றோழி. 5

**எண்குணத்தா** னெலலார்கககு மிறைவனெலலாம வலலான்
எனனகத்தும புறததுமுளா னினபநட ராஜன
பெணகுணததை யறியாத விளமபருவந தனிலே
பிசசேறறி மணமபுரிநதான பெரிதுகளித திருநதேன்
வணகுணததா லநுபவநா னறியநினற பொழுதில
வநதறியா னினபமொனறுந தநதறியா னவனும
வெணகுணததா னலலனமிகு நலலனெனப் பலகால
விழிததறிநதும விடுவேனோ விளமபாயென றோழி. 6

**பொய்யாத** புகழுடையான பொதுவினடம புரிவான
புணணியர்பா னணணியநற புனிதநட ராஜன
கொயயாத வருமபனைய விளமபருவந தனிலே
குறிததுமணம புரிநதனனை மறிததுமவரக காணேன்
செயயாத செயகையொனறுஞ செயதறியேன சிறிதுந
திருவுளமே யறியுமறறென னுருவுளததின செயலகள
நையாக வெனறனுயிர நாதனருட பெருமை
நானறிநதும விடுவேனோ நவிலாயென றோழி. 7

**கண்ணனையா** னெனனுயிரிற கலநதுநினற கணவன
கணககறிவான பிணககறியான கருணைநட ராஜன
தணணனையா மிளமபருவந தனனிலெனைத தனிததுத
தானேவந தருளபுரிநது தனிமாலை புனைநதான
பெணணனையார் கணடபடி பேசவுநான கூசாப
பெருமையொடு மிருநதேனென னருமையெலா மறிநதான
உணணனையா வகைவரவு தாழததனனின றவனறன
உளமறிநதும விடுவேனோ வுரையாயென றோழி. 8

**ஊன்மறந்த** வுயிரகததே யொளிநிறைநத வொருவன
உலகமெலா முடையவனென னுடையநட ராஜன
பானமறநத சிறியவிளம பருவமதின மாலைப
பரிநதணிநதான றெரிநததனிப பருவமிதிற பரியான
தானமறநதா னெனினுமிஙகு நானமறகக மாடடேன
தவததேறி யவததிழியச சமமதமும வருமோ
கோனமறநத குடியேபோன மிடியேனு னவனறன
குணமறிநதும விடுவேனோ கூறாயென றோழி. 9

**தனித்தபர** நாதமுடித தலததினமிசைத தலததே
நலலவரெலாம வணஙகநினற நலலவனட ராஜன
இனிததசுக மறிநதுகொளளா விளமபருவந தனிலே
எனபுருவ நடுவிருநதான பினபுகணடே னிலலை
அனிததமிலா விசசரிதம யாரககுரைபபே னநதோ
அவனறிவா னறிவே னயலறிவா ருளரோ
துனிததநிலை விடுததொருகாற சுததநிலை யதனிற
சுகஙகணடும விடுவேனோ சொலலாயென றோழி 10

திருசசிறறமபலம்

## 89 சரணப் பதிகம்

### கோயில்

கலிநிலைததுறை

திருசசிறறமபலம

**மதிவார்சடை** மாமணி யேயருள வளள லேநன
னிதியேதிரு வமபலத தாடலசெய நிதத னேநிற
றுதியே னெனினு முனையனறித துணையி லேனென
பதியேயென தெணணம பலிககும படிகக ருளே. 1

படிமேலடி யேனுனை யன்றியோர் பற்றி லேனென்
முடிமேலடி வைத்தருள் செய்திட முன்னு கண்டாய்
கொடிமேல் விடைநாட் டியவெண் குணக்குன் றமே
பொடிமேல் விளங்குந்திரு மேனியெம் புண்ணி யனே. 2

புண்ணுமனஞ் சஞ்சலித் துள்ளம் புலர்ந்து நின்றேன்
அண்ணுவெனை யாட்கொள வேண்டு மகற்று வாயேல்
கண்ணார்களை கண்பிறி தொன்றிலை கள்ள னேனை
எண்ணுவினை யென்செயு மோவிதற் கென்செய் வேனே. 3

செய்வேனவ மன்றித் தவமொன்றுஞ் செய்த றியேன்
நைவேன்பிழை யாவும் பொறுத்தரு ணல்கு வாயேல்
உய்வேனல துய்வகை யின்றுமன் றேங்கு கின்றேய்
வைவேன்றுதிப் பேனுனை யென்று மறந்தி லேனே. 4

மறவாதுனை வாழ்த்துமெய் யன்பரை மாநி லத்தே
இறவாவகை யாட்கொண் டருளியவீச னேமெய்
உறவாகிய நின்பத மன்றியொன் றோர்கி லேனன்
பிறவாநெறி தந்தரு ளென்பதென் பேசி டாயே. 5

என்னேயினு நின்னரு ளெய்தில னேழை யேனை
முன்னேவலிந் தாட்கொண்ட தின்று முனிந்த தேயோ
பொன்னேரணி யம்பலத் தாடிய புண்ணி யாவென்
அன்னேயர சேயமு தேயரு ளாண்ட வனே. 6

ஆண்டாயெனை யேழ்பிறப் பும்முனை யன்றி யொன்றுந்
தீண்டாதென துள்ளமென் றுலென் சிறுமைதீர்க்க
வேண்டாதய லாரெனக் காண்பதென் மெய்ய னேபொன்
ஆண்டான்றிரு வெய்தநஞ் சைக்கள நாட்டி னேயே. 7

நாட்டார்நகை செய்வரென் றேவரு ணல்கி லாய்நீ
வீட்டார்நினை யென்னினைப் பாரெனை மேவி லாயேல்
தாட்டாமரை யன்றித் துணையொன்றுஞ் சார்ந்தி லேனென்
மாட்டாமை யறிந்தருள் வாய்மணி மன்று ளானே. 8

மன்றாடிய மாமணி யேதனி வான வாவோர்
மின்றாழ்சடை வேதிய னேநினை வேண்டு கின்றேன்
பொன்றாதமெய் யன்பருக் கன்புளம் பூண்டு நின்று
நன்றாவிர வும்பக லுமுனை நாடு மாறே. 9

மாறுமன மாயையி னுன்மதி மாழ்கி மாழ்கி
ஏறும விறங்கு கின்றே னிதற்கென் செய்வேன்
தேறுவுளத் தேன்றனை யேறிடச் செய்தி கண்டாய்
பேறுமணி யம்பல மேவிய பெற்றி யானே. 10

ஆனேறிவந் தன்பரை யாட்கொளு மைய னேயெம்
மானேமணி மன்றில் நடம்புரி வள்ள லேசெந்
தேனேயமு தேமுத லாகிய தெய்வ மேநீ
தானேயெனை யாண்டருள் வாய்நின் சரண் சரணே 11

திருச்சிற்றம்பலம்

## 90 நற்றாய் கவன்றது

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

**திருவருட்** புனிதை மகிழ்நின் றாடுந் தில்லைமன் றழகனே யென்பாள்
மருவருட் கடலே மாணிக்க மலையே மதிச்சடை வள்ளலே யென்பாள்
இருவருக் கரியவொருவனே யெனக்கிங் கியார்துணை நின்னலா தென்பாள்
வெருவியுட் குழைவாள் விழிகணீர் துளிப்பாள் வெய்துயிர்ப் பாளென்றன் மின்னே

**ஓடுவாள்** தில்லைத் திருச்சிற்றம் பலமென் றுருகுவா ளுணர்வில ளாகித்
தேடுவாள் திகைப்பாள் தியங்குவா ளையோ தெய்வமே தெய்வமே யென்பாள்
பாடுவாள் பதைப்பாள் பதறுவாள் நான்பெண் பாவிகாண் பாவிகா ணென்பாள்
வாடுவாள் மயங்கி வருந்துவா ளிருந்து வல்வினை யேன்பெற்ற மகளே.

**உலகெலாந்** தழைப்பப் பொதுவினி லோங்குமொருதனித் தெய்வமென் கின
இலகுபே ரின்பவாரியென் கின்றாளென் னுயிர்க்கிறைவனென் கின்றாள் [றாள்
அலகிலாக் கருணை யமுதனென் கின்றா ளன்பர்கட் கன்பனென் கின்றாள்
திலகவா ணுதலா ளிவ்வண்ணம் புலம்பித் தியக்குற் றழுங்குகின் றாளே.

**திருவெலா** மளிக்குந் தெய்வமென் கின்றாள் திருச்சிற்றம் பலவனென் கின்றாள்
உருவெலா முடைய வொருவனென் கின்றா ளுச்சிமேற் கரங்குவிக் கின்றாள்
கருவெலாங் கடந்தான் கவன்றிரு மேனி காணப்கெந் நாள்கொலென் கின்றாள்
மருவெலா மயங்கு மலர்க்குழன் முடியாள் வருந்துகின் றாளென்றன் மகளே 4

**மின்னிணைச்** சடில விடங்கனென் கின்றாள் விடைக்கொடி விமலனென் கின்றாள்
பொன்னிணை மலர்த்தாட் புனிதனென் கின்றாள் பொதுவிலே நடிப்பனென் கின்றாள்
என்னிணை விழிக ளவன்றிரு வழகை யென்றுகொல் காண்பதென் கின்றாள்
துன்னிணை முலைகள் விம்முற விடைபோல் துவள்கின்றாள் பசியபொற் றொடியே 5

**கருங்களிற்** றுரிபோர்த் தம்பலத் தாடுங் கருணையெங் கடவுளென் கின்றாள்
பெருங்களி துளும்ப வடவனத் தோங்கும் பித்தரிற் பித்தனென் கின்றாள்
ஒருங்களி மிழற்றுங் குழலினா ரென்போ லுறுவரோ வவனையென் கின்றாள்
தருங்களி யுண்டாள் போல்கின்றா ளூணுந் தவிர்கின்றா ளென்னருந் தவளே. 6

**மன்றிடை** நடிக்கு மணாளனை யல்லால் மதிப்பனோ பிறரையென் கின்றாள்
வன்றுயர் நீக்கு மவன்றிரு வடியை மறப்பனோ கணமுமென் கின்றாள்
ஒன்றுமில் லவனென் றுரைக்கினு மெல்லா முடையவ னாகுமென் கின்றாள்
பொன்றுதல் பிறழ்த லினியுறே னென்றே பொற்றொடி பொங்குகின் றாளே 7

திருத்தகுதில்லைத்திருச்சிற்றம்பலத்தேதெய்வமொன் றுண்டெமக்கென்பாள்
பெருத்தகுங் குமம்பொற்கலசவாண்முலையார்பேசுகபலபல வென் பாள்
மருத்தகு குழலாள் மனமொழி யுடல மற்றவு மவன்கழற் கென்பாள்
குருத்தகு குவளைக் கண்ணினீர் கொழிப்பாள் குதுகுலிப் பாள்பசுங் கொடியே.

**அம்பலத்** தாடு மழகனைக்காணு தருந்தவும்பொருந்துமோ வென்பாள்
கம்பமுற் றிடுவாள் கண்கணீ ருகுப்பாள் கைகுவிப் பாளுளங்கனிவாள்
வம்பணி முலைகளிரண்டுநோக் கிடுவாள் வள்ளலைப் பரிகிலீரென்பாள்
உம்பரன் றவஞ்செய்திடுமினீரென் பாளுயங்குவாள் மயங்குவாளுணர்வே.

திருச்சிற்றம்பலம்

## 91. உள்ளப் பஞ்சகம்

கட்டளைக் கலித்துறை

திருச்சிற்றம்பலம்

**நீரார்** சடையது நீண்மால் விடையது நேர்கொள்கொன்றைத்
தாரார் முடியது சீரா ரடியது தாழ்வகற்றும்
பேரா யிரத்தது பேரா வரத்தது பேருலகம்
ஓரா வளத்ததொன் றுண்டேமுக் கண்ணுடைன் னுள்ளகத்தே. 1

**மட்டுப்** படாதது மாமறை யாலு மலப்பகையாற்
கட்டுப் படாதது மாலா தியர்தங் கருத்தினுக்குந்
தட்டுப் படாதது பார்முதற் பூதத் தடைகளினல்
ஒட்டுப் படாதவொன் றுண்டேமுக் கண்ணுடைன் னுள்ளகத்தே.

**பேதப்** படாதது பற்பல கற்பங்கள் பேர்ந்திடினுஞ்
சேதப் படாதது நன்றிது தீதெனச் செய்கைகளால்
ஏதப் படாததுள் ளெட்டப் படாததிங் கியாவர்கட்கும்
ஓதப் படாதவொன் றுண்டேமுக் கண்ணுடைன் னுள்ளகத்தே. 3

**தண்ணு** ரளியது விண்ணே ரொளியது சாற்றுமறைப்
பண்ணார் முடிவது பெண்ணார் வடிவது பண்புயர்நீக்
கண்ணார் நுதலது கண்ணார் மணியது கண்டுகொள்ள
ஒண்ணு நிலையதொன் றுண்டேமுக் கண்ணுடைன் னுள்ளகத்தே.

**பிறவா** நெறியது பேசா நிலையது பேசிலென்றும்
இறவா வுருவதுள் ளேற்றூல் வருவ திருளகன்றோர்
மறவா துடையது மாதோர் புடையது வாழ்த்துகின்றோர்
உறவா யிருப்பதொன் றுண்டேமுக் கண்ணுடைன் னுள்ளகத்தே.

திருச்சிற்றம்பலம்

## 92. சிவசிதம்பர சங்கீர்த்தனம்

கட்டளைக் கலிப்பா
திருச்சிற்றம்பலம்

உலக முஞ்சரா சரமுநின் றுநின் றுலவுகின் றபே ருலக மென்பதும்
கலகமின் றியெங் கணுநி றைந்தசிற் கநம்விளங்குசிற்ககந மென்ப துங்
இலக வொன் றிரண் டெனல கன்றதோ ரிணையி லின்பமா மிதயமென் பதும்
திலக மென் றநங் குருசி தம்பரஞ் சிவசி தம்பரஞ் சிவசி தம்பரம்.

வரமு றுஞ்சுதந் தரசு கந்தரு மனம டங்குசிற் கனந டந்தரும்
உரமு றும்பதம் பெறவ ழங்குபே ரொளிந டந்தரும் வெளிவிடந்தரும்
பரமு றுங்குணங் குறிக டந்தசிற் பரம மாகியே பரவு மாமறைச்
சிரமு றும்பரம் பரசி தம்பரஞ் சிவசி தம்பரஞ் சிவசி தம்பரம். 2

நித்தி யம்பரா பரநி ராதர நிர்க்கு ணஞ்சதா நிலய நிட்களஞ்
சத்தி யங்கநா கநமி குந்ததோர் தற்ப ரஞ்சிவஞ் சமர சத்துவம்
வித்தி யஞ்சுகோ தயநிகேதநம் விமல மென் றுநால் வேதமுந்தொழுஞ்
சித்தி யங்குசிற் கநசி தம்பரஞ் சிவசி தம்பரஞ் சிவசி தம்பரம். 3

அருள ளித்துமெய் யன்பர் தம்மையுள் ளங்கை நெல்லிபோ லாக்கு கின்றதும்
பொருள ளித்துநான் மறையி னந்தமே புகலு கின்றதோர் புகல ளிப்பதும்
வெருள ளித்திடா விமல ஞாநவன் வெளியி லேவெளி விரவி நிற்பதாந்
தெருள ளிப்பதும் இருள்கெ டுப்பதுஞ் சிவசி தம்பரஞ் சிவசிதம்பரம். 4

பெத்த முஞ்சதா முத்தி யும்பெரும் பேத மாயதோர் போதவாதமுஞ்
சுத்த முந்தெரு வித்த முந்தருஞ் சொரூப வின்பமே துய்க்கும் வாழ்க்கையும்
நித்த முந்தெரிந் துற்ற யோகர்தந் நிமலமாகி மெய்ந் நிறைவு கொண்டசிற்
சித்த முஞ்செலாப் பரம ராசியஞ் சிவசி தம்பரஞ் சிவசி தம்பரம்.5

திருச்சிற்றம்பலம்

## 93. திருக்குறிப்பு நாட்டம்

ஆசிரியத் தாழிசை
திருச்சிற்றம்பலம்

ஆற்றுக்கேபிறைக் கீற்றுக்கேசடை யாக்கிச்சேவடி தூக்கியாருயிர்ப்
பேற்றுக் கேநடிப் பாய்மணி மன் றிற் பெருந்தகையே
சோற்றுக்கேயிதஞ் சொல்லிப்பேதையர் சூழல்வாய்த்துயர்சூழ்ந்துமேற்றிசைக்
காற்றுக் கேகறங் காய்ச்சுழன் றேனைக் கருதுதியோ. 1

ஞாலத் தார்தமைப் போலத்தா மிங்கு நண்ணுவர்நின்னை யெண்ணு வர்மிகு
சீலத் தார்சிவ மேயெவை யும்மெனத் தேர்ந்தனராற்
சாலத் தான்கொடுஞ் சாலத் தாலத்தைத்தாவி நான்பெரும் பாவி யாயினன்
ஏலத் தார்குழ லாளிடத் தாயெனை யெண்ணுதியோ. 2

அன்ன லேநின்னை யெண்ண லேனென்னை யாண்டு கொண்டனை மீண்டும
நண்ண லேயறி யேனகடை யேனசிறு நாயனேயேன [விண்டனன
பெண்ண லேனிய லாண லேனலிப பேய னேனகொடும பேதை யேனபிழை
கண்ண லேபுரி யாதினனு மீட்கக கருதுதியோ 3

வல்லி யாநந்த வலலி சேர்மண வாள னேயரு ளாள னேமலை
விலலி யாயநகைத் கேபுரம வீழதத விடையவனே
புலவி யானபுலைப போகமவேட்டுநின பொனனடித துணைப போகமபோககினென்
இலவி யார்கடம போலிருந தேனெனை யெணணுதியோ 4

திருச்சிற்றம்பலம்

## 94. தனித் திருப் புலப்பல்

அறுசீரக கழிநெடிலடி ஆசிரிய விருததம
திருசசிற்றமபலம்

**திங்கள்** விளங்குஞ சடைத்தருவைததீமபாறசுவையைச செநதேனைச
செஙகை மருவுஞ செழுஙகனியைச சீரா ருககட செஙகருமபை
மஙகை மலையாண மணநகபெரு வாழவைப பவள மலைதனனை
எங்கள பெருமான றனையநதோ வெனனே யெணணு திருநதேனே

**அன்ப** ரிதய மலாகசோயி லமாநத பரமா னநததைத
துனப மகலச சுகமளிககுந தூய துணையைச சுயஞசுடரை
வனப ரிடததின மருவாத மணியை மணியா மிடறறனை
இனப நிறைவை யிறையோனை யெனனே யெணணு திருநதேனே 3

ஒருமைப பயனை யொருமைநெறி யுணாநதா ருணாவி னுளளுணாவைப
பெருமைக கதியைப பசுபதியைப பெரியோ ரெவாககும பெரியோனை
அருமைக களத்திற கருமையணி யமமான றனனை யெமமானை
இருமைப பயனுந தருவானை யெனனே யெணணு திருநதேனே 3

கறையோ கணடத தணிநதருளுங கருணை நிதியைக கணணுதலை
மறையோ னெடுமாற கரியசிவ மலையை யலையில வாரிதியைப
பொறையோ ருளளம புகுநதொளிரும புனித வொளியைப பூரணதமை
இறையோன றனையநதோநா னெனனே யெணணு திருநதேனே

திருசசிறறமபலம

## 95. பரமராசியம்

எணசீரககழி நெடிலடி ஆசிரிய விருததம
திருசசிறறமபலம

**விதியெ** லாமவிலக கெனவிலக கிடுவேனா
விலககெ லாஙகொணடு விதியென விதிபபேனா
நிதியெ லாமபெற நினைதெழு கினறேனா
நிலமெ லாஙகொளு நினைபபுறு கினறேனா

எதியெ லாமவெறுத திடடசிற றாழை
　　இனபெ லாஙகொள வெண்ணிஙின றயர்வேன்
பதியெ லாஙகடந் தெவவண முயவேன
　　பரம ராசியப பரம்பரப் பொருளே　　1

செடிய னேனகடுந தீமையே புரிவேன
　　தெளிவி லேனடனச செறிவெனப தறியேன்
கொடிய னேனகொடுங கொலைபயி லினததேன்
　　கோள னேனெடு நீளவஞ சகனேன
அடிய னேனபிழை யனைததையும பொறுத்துன
　　அனபா தஙகளோ டின்புற வருளவாய
படிய னேகமுங கடநதசிற சபையிற
　　பரம ராசியப் பரமபரப் பொருளே.　　2

திருச்சிற்றமபலம்

## 96 திருவடிப் புகழ்ச்சி

எழுசீரக கழிநெடிலடி ஆசிரிய விருததம

திருச்சிறறமபலம

திருவுளந் தெரியேன திகைபபுறு கினறேன்
　　சிறியரிற சிறியனேன வஞசக
கருவுளக கடையேன பாவியேன கொடிய
　　கனமனக குரஙகனே னாகதோ
வெருவுறு கினறே னஞசலென றினனே
　　விருமபியாட கொளளுதல வேண்டும
மருவுமா கருணைப பெருஙகட லமுதே
　　வளளலே யெனபெரு வாழவே　　1

அருள்பழுத் தோஙகுங கறபகத் தருவே
　　அருணமருந தொளிருஙணக குன்றே
அருளெனு மமுதந தருமொரு கடலே
　　அருடகிர ணஙகொளளுஞ சுடரே
அருளொளி வீசு மருமபெறன மணியே
　　அருடசுவை கனிநதசெம பாகே
அருணமணம வீசு மொருதனி மலரே
　　அருணமய மாமபர சிவமே.　　2

எணசீரக கழிநெடிலடி ஆசிரிய விருததம

தாயுந் தநதையுந தெயவமுங குருவுந
　　தாஙகு கினறதோ தலைவனும பொருளும
ஆயு மினபமு மனபுமெய யறிவும
　　அனைதது நீயென வாதரித திருநதேன
ஏயு மெனனள விரககமொன றிலையேல
　　எனசெய வேனிதை யாககெடுத துரைப்பேன
சேயு னினனரு ணசையுறங கண்டாய
　　தில்லை மனறிடைத திகழொளி விளககே.　　3

திருச்சிறறம்பலம

## 97. திருமருந்தருணிலை

*அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்*

**திருச்சிற்றம்பலம்**

**பனகவணைத்**திருநெடுமாலயன்போற்றப்புலவரெலாம் பரவவோங்கும்
கனகமணியம்பலத்தே பெரியமருந்தொன் றிருக்கக்கண்டேன்கண்டேன்
அனகநடத் ததுசச்சி தானந்த வடிவதுபே ரருள்வாய்ந் துள்ள
தெனகமமர்ந் திருப்பதெல்லாம் வல்லதுபேர் நடராஜ னென்ப தம்மா.

**திருநெடுமா** லயன்றேடத்துரியநடுவொளித்ததெனத்தெளிந்தோர்சொல்லும்
ஒருகருணை மருந்துதிரு வம்பலத்தே யிருந்திடக்கண் டுவந்தே னந்தோ
அருவுருவங் கடந்ததுபே ரானந்த வடிவதுநல் லருள்வாய்ந் துள்ள
திருமையுநன் களிப்பதெல்லாம் வல்லதுபேர் நடராஜ னென்ப தம்மா.

**திருச்சிற்றம்பலம்**

## 98. திருவருள் விலாசம்

*எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்*

**திருச்சிற்றம்பலம்**

**ஆண்டவனீ** யாகிலுனக் கடியனுநா னாகில்
அருளுடையா யின்றிரவி லருளிறையாய் வந்து
நீண்டவனே முதலியருந் தீண்டரிதாம் பொருளின்
நிலைகாட்டி யடிமுடியி னெறிமுழுதுங் காட்டி
வீண்டவனே காலையினீ விழித்தவுட னெழுந்து
விதிமுடித்துப் புரிதியிது விளங்குமெனப் புகல்வாய்
தாண்டவனே யருட்பொதுவிற் றனிமுதலே கருணைத்
தடங்கடலே நெடுந்தகையே சங்கரனே சிவனே. 1

**திருநெறிமெய்த் தமிழ்மறையாந்** திருக்கடைக்காப் பதனுற்
றிருவுளங்காட் டியநாளிற் றெரிந்திலனிச் சிறியேன்
பெருநெறியென் னுளத்திருந்து காட்டியநா ளறிந்தேன்
பிழைபடாத் தெய்வமறை யிதுவெனப்பின் புணர்ந்தேன்
ஒருநெறியி லெனதுகரத் துவந்தளித்த நாளில்
உணராத வுளவையெலா மொருங்குணர்ந்து தெளிந்தேன்
தெருணெறிதந் தருளுமறைச் சிலம்பணிந்த பதத்தாள்
சிவகாம வல்லிமகிழ் திருநடத்தெள் ளமுதே.

**திருச்சிற்றம்பலம்**

## 99. சல்லாப லகரி

*கலிச் சந்த விருத்தம்*

**திருச்சிற்றம்பலம்**

**சுந்தர** நீறணி சுந்தரர் நடனத் தொழில்வல்லார்
வந்தன ரிங்கே வந்தன மென்றேன் மாதேநீ
மந்தண மிதுகே ளந்தன மிலநம் வாழ்வெல்லாம்
அந்தர மென்று ரென்னடி யம்மா வவர்சூதே. 1

நம்பல மாமென நமனை புக்கார் நடராஜர்
எம்பல மாவீ ரெம்பெரு மானீ ரேயென்றேன்
வம்பல மடவா யெம்முடை யின்ப வாழ்வெல்லாம்
அம்பல மென்று ரென்னடி யம்மா வவர்சூதே. 2

திருச்சிற்றம்பலம்

## 100. அறநிலை விளக்கம்

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

மருவாணைப் பெண்ணாக்கி ஒருகணத்திற் கண்விழித்து வயங்கு மப்பெண்
உருவாணை யுருவாக்கி இறந்தவரை யெழுப்புகின்ற வுறுவ னேனும்
[1]கருவாணை யுறஇரங்கா துயிருடம்பைக் கடிந்துண்ணுங் கருத்த னேல்லக்
குருவாணை யெமது சிவக் கொழுந்தானை ஞானியெனக் கூறேனுதே.

திருச்சிற்றம்பலம்

## 101. அருள்நிலை விளக்கம்

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

மெய்விளக்கே விளக்கல்லால் வேறுவிளக் கில்லையென்றூர் மேலோர்நானும்
பொய்விளக்கே விளக்கெனவுட் பொங்கிவழி கின்றேனோ புதுமை யன்றே
செய்விளக்கும் புகழுடைய சென்னநகர் நண்பர்களே செப்பக் கேளீர்
நெய்விளக்கே போன்றொருதண் ணீர்விளக்கு மெரிந்தது சந்நிதியின் முன்னே.

திருச்சிற்றம்பலம்

## 102. வினுவுத்தரம்

கண்ணிகள்

திருச்சிற்றம்பலம்

ஆகமமு மாரணமு மரும்பொருளென் றொருங்குரைத்த
ஏகவுரு வாகிநின்று ரிவரார்சொல் தோழி. 1

மாகநதி முடிக்கணிந்து மணிமன்று ளநவரத
நாகமணி மிளிரநட நவில்வார்காண் பெண்ணே. 2

திருச்சிற்றம்பலம்

## 103. நெஞ்சொடு நெகிழ்தல்

கட்டளைக் கலித்துறை

திருச்சிற்றம்பலம்

சீர்தரு வார்புகழ்ப் பேர்தரு வாரருட் டேன்றருவார்
ஊர்தரு வார்மதி யுந்தரு வார்கதி யுந்தருவார்
ஏர்தரு வார்தரு வாரொற்றி யூரெம் மிறைவரன்றி
யார்தரு வார்நெஞ்ச மேயிங்கு மங்கு மியம்புகவே. 1

1. கருவாணையுற என்பது—கருவாள், நையுற.

**வாடக்கற்** றாயிலே தெனனெஞ் சேயினை வாயநதசிநது
பாடககற றாயிலே பொயவேடங கட்டிப் படிமிசைககூத்
தாடககற றாயிலே யகதோ பொருளுனக காாதருவாா
நீடககற றாயுக ழொற்றியெம மானை நினையினியே 2

**நேரா** வழுககுத் துணியாகி லுனறனை நேரிறசணடும்
பாரா தவரென நிற்பார் **உடுத்தது பட்டெனிலோ**
**வாரா திருப்பதென் வாருமென் பாரிந்த வஞ்சகர்பாற்**
சேராது நனனெஞச மேயொற்றி யூரனை சோவிரைந்தே 3

**பொய்விரிப்** பாாககுப்பொருள விரிபபாாநற் பொருட்பயனும
மெயவிரிப பார்ககிரு கைவிரிப பாாபெடடி மேவுபணப்
பைவிரிப பாரலகுற ளைவிரிப பாாககவா பாறபரவி
மைவிரிப பாயமன மேயெனகொ லோநின மதியின்மையே.

**வாழைக்** கனியுண மாட்டாது வானின வளாநதுயர்நத
தாழைக கனியுணத தாவுகின றோரிற சயிலமபெற்ற
மாழைக கனிதிகழ வாமத்தெம மானறெணடா மாட்டகனறே
ஏழைக கனிக ருளத்தினா பாறசெனற தெனனெஞசே 5

**காயாா** சரிநைக கலிஙகமுணடேலிக [1]கலிஙகங கண்டால
நீயாாநின பேரெது நினனூ ரெதுநின னிலையெதுநின
தாயார்நின் றநதை யெவனகுல மேதெனபா சாறறுமவவல
வாயா ரிடஞ்செல னெஞசே விடைதர வலலையன்றே. 6

எணசீாககழி கழிநெடிலடி ஆசிரிய விருததம

**துட்ட** வஞசக நெஞசக மேயொனறு
சொலலக கேளகட்ல சூழல கத்திலே
இட்ட மெனகொ லிறையள வேனுமோர்
இனப மிலலே யிடைகிடை யினனலால
நட்ட மிககுறல கணடுகண டேஙகினே
நாணு கினறிலே நாயககுங கடையைநீ
பட்ட வனமைக ளெணணி லெனககுடல
பதைககு முளளம பகிலென வேஙகுமே. 7

அறுசீாக கழிநெடிலடி ஆசிரிய விருததம

**பெரியபொரு** ளைவைககு முதறபெரும பொருளா மரும்பொருளைப்பேசறகொ
துரியநிலே யநுபவததைச சுகமயமா யெஙகுமுளள தொனமைதனனை [ணணத
அரியபரம பரமான சிதமபரதகே நடமபுரியு மழுகை யகதோ
உரியபர கதியடைதற குனனினையென மனனேநீ யுயகுவாயே 8

வேறு

**சொன்னிலைக்கும்** பொருணிலைககுநதுரியதாயானநதசசுடரா யனபர்
தனனிலைககுஞ் சென்னிலைகககு மணமையதா யருளபழுககுந தருவாயெனறு
முனனிலைககு நினனிலைககுங காண்பரிதாய மூவாத முதலாயச்சுத்த
நனனிலைககு நிலையாய பசுபதியை மனனேநீ நவினறிடாயே 9

[1] கலிங்கம் எனபது—வஸதிரம், கலிஙகதேசததில செயத வஸதிரம கலிங்கம எனபபெயா எயதியது.

**மண்முகத்திற்** பலவிடய வாதனையான் மனனேநீ வருந்தி யந்தோ
புண்முகத்திற் சுவைவிரும்பு மெறும்பெனவா ளாசைப்போக்குகின்றாய்
சண்முகத்தெம் பெருமானை ஐங்கரனை நடராஜத் தம்பி ரானை
உண்முகத்திற் கருதியநுபவமயமாயிருக்கிலைநின் னுணர்ச்சியென்னே.

**மாலெடுத்துக்** கொண்டுகரு மாலாகித்திரிந்து முளமாலாய்ப் பின்னும்
வாலெடுத்துக் கொண்டுநடந் தனிவிடையாய்ச் சுமக்கின்றான் மனனேநீயக்
காலெடுத்துக் கொண்டுசுமந் திடவிரும்பு கிலையந்தோ கருதும் வேத
நாலெடுத்துக் கொண்டுமுடிசுமப்பதையு மறிகிலைநின் னலந்தா னென்னே.

ஆசிரியத் தாழிசை

**உலக** மேத்திநின் றேங்க வோங்கிய வொளிகொண் மன்றிடை யளி
இலகுசேவடிக் கேயன்பு கூர்ந்திலை யேழை நெஞ்சே [கொண்மாநடம்
திலக வாணுதலார்க் குழன்றனை தீமையே புரிந்தாய் விரிந்தனை
கலக மேகனிந் தாயென்னை காணின் கடைக் கருத்தே. 12

திருச்சிற்றம்பலம்

# 104. பொதுத்தனித் திருவெண்பா

நேரிசை வெண்பா

திருச்சிற்றம்பலம்

**வந்திக்கு** மெய்யடியார் மாலற்ற வோர்மனத்திற்
சந்திக்கு மெங்கள் சயம்புவே — பந்திக்கும்
வன்மலக்கட் டெல்லாம் வலிகெட் டறநினது
நின்மலக்கட் டண்ணருடா னேர். 1

**சங்கரா** முக்கட் சயம்புவே தாழ்சடைமேற்
பொங்கராத் திங்கள் பொலிந்தோனே — வெங்கரா
வாய்நின்று பிள்ளை வரப்பாடும் வன்றொண்டர்க்
காய்நின்று சந்துரைத்த தார். 2

**நீலக்** களங்கொண்ட நீடொளியே நீள்கங்கை
கோலச் சடைக்கணிந்த கோமளமே — ஞாலத்தில்
அந்தோ சிறியே னருளின்றி வாடுவது
சந்தோட மோநின் றனக்கு. 3

**நான்சிறியே** னென்னினுமிந் நானிலத்தி னுன்செய்பிழை
தான்சிறிதோ வன்றுலகிற் றான்பெரிதே — மான்கரத்தோய்
அங்ஙனமே னும்முன் னருட்பெருமைக் கிப்பெருமை
எங்ஙனமென் றுள்ள மெழும். 4

**ஆவித்** துணையேயென் னாரமுதே நின்வடிவைப்
[1]பாவித்து ணையேனிப் பாவியேன் — சேவித்து
வாழ்த்தேனின் பொன்னடியில் வந்தென் றலைகுனித்துத்
தாழ்த்தேனென் செய்தேன் றவம். 4

1. பாவித்துணையேன் என்பது — பாவித்து, உள், நையேன்

**உன்னைநினைந்** திங்கே யுலாவுகின்றே னன்றியெந்தாய்
பின்னை நினைப்பொன்றும் பெற்றிலேன் — என்னை
விடாதேநின் பொன்னடியை மேவார்சேர் துன்பங்
கொடாதே யெனையேன்று கொள். 6

**என்னரசே** நின்னடிக்கீ ழென்னிடரை நீக்கெனநான்
சொன்னதலாற் றுயுடனுஞ் சொன்னேனோ—இன்னுமிந்தத்
துன்பச் சுமையைச் சுமக்கமுடி யாதென்னல்
அன்பர்க் கருள்வோ யருள். 7

**அன்னேயென்** னப்பாவென் னுருயிர்க்கோ ராதரவே
என்னேநின் னுள்ள மிரங்கிலையே — பொன்னே
யுடையா ரிடையென் னுளநொந்து வாடிக்
கடையேன் படுந்துயரைக் கண்டு. 8

[1]**பகுதி** தகுதி விகுதியெனும் பாட்டில்
இகலி விடையை யிரட்டித் — தகவின்
அருச்சித்தான் முன்னு மதுகடையாங் கண்டீர்
திருச்சிற் சபையானைத் தேர்ந்து. 9

[2]**தாதாதா** தாதாதா தாக்குறைக்கென் செய்குதும்யாந்
[3]தாதாதா வென்றுலகிற் றுனலைந்தோம் — போதாதா
நந்தா மணியே நமச்சிவாயப் பொருளே
யெந்தா யெனப்புகழ வே. 10

**பொய்கண்டாய்** காமப் புதுமயக்கிற் போயுழலக்
கைகண்டா யென்னபலன் கண்டாயே — மெய்கண்ட
பொன்னே யனையார்பாற் போய்வணங்கக் கற்றிலையோ
என்னேநின் றன்மைமன மே. 11

**இவ்வழியிற்** செல்லாதே யென்னுடையான் றன்னடிசேர்
அவ்வழியிற் செல்லென் றடிக்கடிக்குச் — செவ்வழியிற்
சொன்னாலுங் கேட்கிலைநீ துட்டமன மேயுனக்கிங்
கென்னு னுறவே தினி. 12

**கால்வாங்** கியவுட் கதவங் கொளுமகத்தின்
பால்வாங் கியகாற் பரம்பரனே — மால்வாங்
கரிதார மூனுதி யாமயல்கொண் டேழைப்
பெரிதார வோர்மொழியைப் பேசு. 13

திருச்சிற்றம்பலம்

---

[1] **பகுதி, தகுதி, விகுதி:**—இம்மூன்று மொழிகளில் இடையெழுத்தாகிய 'கு' இரட்டித்தால் குகு. குகு. குகு— அறுகு (அறுகம்புல்) முதலெழுத்துக்களைக் கூட்டின் ப, த, வி—பதவி (பதமுத்தி) கடையெழுத்துக்களைக் கூட்டின் தி, தி, தி — முத்தி (ஐக்கியமுத்தி). அறுகம்புல்லால் அருச்சித்தால் பதமுத்தியும் ஐக்கிய முத்தியும் சித்திக்கும்.

[2]. எழு தா — எழுதா. குறை சேர்க்க, (தலையில்) எழுதாக்குறை.

[3]. தாதா என்பது — வள்ளலே; தா என்பது கொடு.

# 105. தனித்திரு விருத்தம்

கட்டளைக் கலித்துறை

திருச்சிற்றம்பலம்

**நீர்பூத்த** வேணியு மானந்தம் பூத்து நிறைமதியின்
சீர்பூத் தமுத விளநகை பூத்த திருமுகமும்
பார்பூத்த பச்சைப் பசுங்கொடி பூத்தசெம் பாகமுமோர்
கார்பூத்த கண்டமுங் கண்பூத்த காணுமென் கண்விருந்தே. 1

**வீழாக** ஞானற்செவ் வேணிப் பிரானென் வினையிரண்டுங்
கீழாக நான்றன் மேலாக நெஞ்சக் கிலேசமெல்லாம்
பாழாக வின்பம் பயிராக வாய்க்கிலப் பாற்பிறவி
ஏழாக வன்றிமற் றெட்டாக விங்கென்னை யென்செயுமே. 2

**ஆயிரங்** கார்முகி னீர்விழி நீர்தர வையநின்பாற்
சேயிரங் காரெனக் கென்றேநின் பொற்பதஞ் சிந்திக்கின்றேன்
நீயிரங் காயெனி லென்செய்கு வேனிந் நிலத்திற்பெற்ற
தாயிரங் காளெனப் பண்டோதன் பிள்ளை தளர்ச்சிகண்டே 3

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

**செம்பவளத்** தனிக்குன்றே யருளா னந்தச்
செழுங்கனியே முக்கணுடைத் தேவே மூவா
அம்புவிநீ ரனல்வளிவா னாதி யாய
அரசேயென் னுயிர்க்கோ ரரண மாகுஞ்
சம்புசிவ சயம்புவே சங்க ராவெண்
சைலமவளர் செய்யவத்தவான் றருவே மிக்க
வம்பவிழுமென் குழலொருபால் விளங்க வோங்கும்
மழவிடைமேல் வருங்காட்சி வழங்கு வாயே. 4

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

**நீடுகின்ற** மாமறையு நெடுமாலுந் திசைமுகனு நிமல வாழ்க்கை
நாடுகின்ற முனிவரரு முருத்திரருந் தேடவரு ணட்டங் கொண்டு
பாடுகின்ற மெய்யடிய ருளமவிரும்பி யானந்தப் படிவமாகி
ஆடுகின்ற மாமணியை யாரமுதை நினைந்துநினைந் தன்பு செய்வாம் 5

**நிதியைநினைந்** துனைமறந்த மதியைநினைந் தழுகேனோ நிமலா னந்தக்
கதியையிகழ்ந் திருள்விழைந்த விதியைநினைந் தழுகேனோ கண்போல் வாய்ந்த
பதியையுனைப் பாடாத பாடைநினைந் தழுகேனோ படிற்று நெஞ்சச்
சதியைநினைந் தழுகேனோ யாதுகுறித் தழுகேனித் தமியனேனே. 6

ஷை வேறு

**தாய்தடை** யென்றேன் பின்னாத் தாரமே தடையென் றேனுன்
சேய்தடை யென்றே னிந்தச் சிறுதடை யெல்லாந் தீர்ந்துந்
தோய்தடைச் சிறியே னின்னுந் துறந்திலே னென்னே தடுக்க
ஏய்தடை யாதோ வெந்தா யென்செய்கே னென்செய் கேனே. 7

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

**எண்கடந்த** வுயிர்கடொறு மொளியாய் மேவி
இருந்தருளும் பெருவாழ்வே யிறையே நின்றன்
விண்கடந்த பெரும்பதத்தை விரும்பேன் றூய்மை
விரும்புகிலே னின்னருளை விழைந்தி லேனுன்
பெண்கடந்த மயலெனுமோர் முருட்டுப் பேயாற்
பிடியுண்டே னடியுண்ட பஞ்சு போன்றேன்
கண்கடந்த குருட்டுமர் கதைபோ னின்சீர்க்
கண்டுரைப்ப லென்கேனோ கடைய னேனே. 8

ஷை வேறு

**மின்னைப்** போலிடை மெல்லிய லாரென்றே
விடத்தைப் போல்வரும் வெம்மனப் பேய்களைப்
பொன்னைப் போன்மிகப் போற்றி யிடைநடுப்
புழையி லேவிரல் போதப்பு குத்தியித்
தன்னைப் போன்முடை நாற்றச்ச லத்தையே
சந்த னச்சலந் தானெனக் கொள்கின்றேன்
என்னைப் போல்வது நாய்க்குலந் தன்னிலும்
இல்லை யல்ல தெவற்றினு மில்லையே. 9

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

**கள்ளுருகு** மலர்மணம்போற் கலந்தெங்கு நிறைந்தோய்நின் கருணைக்கந்தோ
முள்ளுருகும் வலியபராய் முருடுருகு முருகாத முறைசேர் கல்லும்
வள்ளுருகு மலையுருகு மண்ணுருகு மரமுருகு மதியி லேன்றன்
உள்ளுருகும்வகையிலையென் செய்கேனேனென்பிறந்தேனெதியனேனே.

**மன்னுயிர்க்குத்** தாய்தந்தை குருதெய்வ முறவுமுதன் மற்று நீயே
பின்னுயிர்க்கோர் துணைவேறுபிறிதிலையென் றியானறிந்தபின்பொய்யான
மின்னுடற்குத் தாய்தந்தை யாதியரை மதித்தேனோ விரும்பி னேனோ
என்னுயிர்க்குத்துணைவாநின் னைனயொன்று மறியேனை னிரங்கிடாயே.

**மாற்றரியபசும்பொன்னே**மணியேயென் கண்ணேகண் மணியேயார்க்குந்
தோற்றரிய சுயஞ்சுடரே யானந்தச் செழுந்தேனே சோதி யேநீ
போற்றரிய சிறியேனைப்புறம்விடினும்வேற்றவர்பாற்போகேன்வேதந்
தேற்றரிய திருவடிக்கண் பழிவிளைப்பே னின்னைனச் சிறிய னேனே.

**உள்ளுணர்வோ** ருளத்துநிறைந்தூற்றெழுந்தெள்ளமுதேயுடையாய்வஞ்ச
நள்ளுணர்வேன் சிறிதேனு நலமறியேன்வெறித்துழலுநாயிற்பொல்லேன்
வெள்ளுணர்வே னெனினுமென்னை விடுதியோ விடுதியேல்வேறென்செய்கேன்
தள்ளுணர்வோனெனினுமகன் றனையீன்றோர்புறம்பாகத் தள்ளாரன்றே

**கலைபயின்று** நெறியொழுகு கருத்துடையேனலனின்னைக்கனவிலேனு
மலைபயின்றபெருங்குணத்தெம்வள்ளலேயெனத்துதியேன்வஞ்சமில்லா
நிலைபயின்ற நல்லோர்தந் நேசமிலேன் கைதவமேநினைப்பேனந்தோ
உலைபயின்றவரக்கெனநெஞ்சுருகேனேனேன்பிறந்தேனெதியனேனே

**இநம்புன்னை**மலர்சசடையா யிவ்வுலகிற் சிலர்தஙகட்கென் றுவாய்த்த
அருமபினனை மார்பகததோ னயனுநி சிறுதெயவ மரபெனரே தூங
கருமபொன்னைச செமபொனனிற கைவிடா திருககினருா கடைய னேறகே
தருமபொனனை மாறறழிககு மருமபொனனீ கிடைததுமுனைத தழுவிலேனே.

**கஞ்சமலர்த்** தவிசிருநத நானமுகனு நெடுமாலுங கருதிப் போறற
அஞசநடை யமமைகணடு களிககப் பொன னமபலத்தி லாடுகினற
எஞசலிலாப்பரமபொருளே யெனகுருவே யேழையினேனிடதது நீயும
வஞசனினைத் தனையாபி லெனசெயவே னெனசெயவேனமதியிலேனே

கடடளைக் கலிததுறை

**வேம்புக்குந்** தண்ணிய நீரவிடு கின்றனர் வெவவிடஞ்சேர்
பாமபுககும பாலுண வீகின றனரிப படிமிசையான
வீமபுககுந தீமபுககு மானே னெனினும விடேலெனைநீ
தேமபுககும வார்சடைத் தேவே கருணைச சிவககொழுநதே. 17

**அடமுடி** யாதுபல லாற்றுலு மேழைக கடுத்ததுன்பம
படமுடி யாதெனனை செயகேனென றனமுகம பாாத்திரஙகாய்
திடமுடி யாலயன் மாலவணங குநதுணைச சேவடியாய
தடமுடி யாய்செஞ சடைமுடி யாயநந் தயாநிதியே 18

அறுசீரக கழிநெடிலடி ஆசிரிய விததம்

**பொல்லா** வாழககைத துயரமெனும புணரிப பெருககில வீழநதழுநதிப
பலலார் நகைககப் பாவிபடுமபாட்டை முழுதும பார்ததிருநதுங
**கல்லா லமர்ந்தீர்** என்னிரண்டு கண்களனையீர் கறைமிடறறீா
எலலா முடையீர் மாலவிடையீ ரெனனே யிரஙகி யருளீரே. 19

**பொன்னை**யுடையார் மிகுஙகலவிப் பொருளையுடையா ரிவர்முனனே
இன்ன லெனுமோர் கடலவீழநதிவ வேழைபடுமபா டறிநதிருநதும
மினனை நிகருஞ சடைமுடியீா விடஙகொண் மிடறறீர் வினைதவிர்ப்பீர்
எனனை யுடையீர் வெளவிடையீ ரெனனே யிரஙகி யருளீரே. 20

கலி விருததம

**ஆயும்** வஞசக நெஞசனிவ வடியனே னையா
நீயும வஞசக நெஞ்சனென ருலிநத நிலத்தே
ஏயு மிஙகிதற கெனசெயவே னெனசெயவே னைவகுந்
தாயுந தநதையு மாகியுண ணிற்கினறேய சாறறுய. 21

**நானும்** பொயயனின னடியனேன றணணரு ணிதிநீ
தானும பொயயனென ருலிதற கெனசெய்வேன றலைவா
தேனும பாலுநதீங கடடியு மாகிநிற றெளிநதோர்
ஊனு முளளமு முயிருமண் ணிககினற வுரவோய. 22

காலடித தரவு கொச்சகக கலிபபா

**நேசனுநீ** சுறறமுநீ நேர்நின றளிததுவரும
ஈசனுநீ யீனறுளு மெநதையுநீ யெனறேநின
தேசுறுசீ ரைநதெழுததுஞ செப்புகினற நாயேனை
ஆசகலும வணண மருள புரிநதா லாகாதோ 23

கடடளைக கலிததுறை

**ஆற்றல்** விளஙகுஞ் சடையோயிவ வேழை யடியனும்பல்
லாறறல வருநதும வருத்தமெல லாமுற றறிநதுமினனம
ஆறறு திருததனின பேரரு ளாறறுக கழகுகொலோ
ஆறறுமை மேறகொண டமுதா லெவரெனை யாறறுவரே 24

அறுசீரக கழிநெடிலடி ஆசிரிய விருததம

**படியே** யளந்த மாலவனும் பழைய மறைசொற் பண்ணவனும
முடியீ றறியா முதறபொருளே மொழியு மொறறி நகாககிறையே
அடியார களுககே யிரஙகி முன மடுத்த சுரநோய தடுததது போற்
படிமீ திடியேற குறுபிணிபோம படிநீ கடைககண பார்த்தருளே.

ஷ வேறு

**அருளா** ரமுதே யரசேநின னடியேன கொடியேன் முறையேயோ
இருளசேர் மனதே டிடருழநதே னெநதா யிதுதான முறையேயோ
மருளசோ மடவாா மயலாலே மாழகின றேனுன முறையேயோ
தெருளோா சிறிது மறியாதே திகையா நினறேன முறையேயோ. 26

**ஒழியாக்** கவலை யுறுகினறே னுடையாய முறையோ முறையேயோ
அழியாக கருணைக கடலேயென னரசே முறையோ முறையேயோ
பொழியாப புயலே யனையாாபால புகுவித் தனையே முறையேயோ
இழியாத் திரிதந துழலகினறே னிறைவா முறையோ முறையேயோ.

எழுசீரக கழிநெடிலடி ஆசிரிய விருததம

**மதியொளிர்** கஙகைச சடையபெருஙகருணை வளளலேதெளிளியவமுதே
நிதியொளிர வாழககை யிநதிரன முதலோா நிலைததவாா செலவமு மணணிற
பதியொளிர வாழககை மணிமுடி யரசா படைததிடுஞ செலவமும வேணடேன
கதியொளிர நினதுதிருவருடசெலவக களிபபையேகருதுகினறனனே.

எணசீரக கழிநெடிலடி ஆசிரிய விருததம

**மன்றுடு** மாமணியே நினபொறபாத
மலாத்துணையே துணையாக வாழகின் றோர்கது
ஒனறுலுங குறைவிலலை யேழையேன யான
ஒனறுமிலே னிவவுலகி னுழலா நினறேன
இனறுக ஙாடகழியி லெனனே செயகேன
இணைமுலையாா மையலினு லிளைதது நினறேன
எனறுனுஞ சிறிதெளியேற கிரஙகல வேணடும
எழிலாரு மொறறியூ ரினபவாழவே. 29

கடடளைக கலிததுறை

**வெள்ளங்கொண்** டோஙகும விரிசடை யாய்மிகு மேட்டினின் றும
பளளஙகொண டோஙகும புனலபோனின றணணருட பணபுநலலோா
உளளஙகொண டோஙகு மவமே பருதத வொதியனையேன
களளஙகொண டோஙகு மனததுறு மோவுறிற காண்குவனே. 30

**ஐயாமுக்** கண்கொண்ட வாரமு தேயரு ளார்பவள
மெய்யாமெய்ஞ் ஞான விளக்கே கருணை விளங்கவைத்த
மையார் மிடற்று மணியேயென் றென்னை மகிழ்ந்ததந்தோ
பொய்யாவென் செய்வ லருளா யெனிலெங்கு போதுவனே. 31

**நாராய** ணன்றிசை நான்முக னாதியர் நண்ணிநின்று
பாராய ணஞ்செயப் பட்டநின் சேவடிப் பங்கயமேற்
சீராய ணம்பெறப் பாடுந் திறமோர் சிறிதுமிலேன்
ஆரா யணங்குற நின்றேன்பொன் மன்றத் தமர்ந்தவனே. 32

**பேய்கொண்ட** நெஞ்சகப் பாழால் வருமென் பெருந்துயரை
வாய்கொண் டநந்த ரநந்தர்க்குஞ் சொல்ல வராதெனிலிந்
நாய்கொண் டுரைக்க வருமோவென் செய்குவ னச்சுமரக்
காய்கொண்டு வாழைக் கனியைக் கைவிட்ட கடையவனே. 33

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

**வன்மானங்** கரத்தேந்து மாமணியே மணிகண்ட மணியே யன்பர்
நன்மானங் காத்தருளு மருட்கடலே யானந்த நடஞ்செய் வாழ்வே
பொன்மானம்பிணைப்பொருந்துமம்பிணைவைத் தாண்டருளும் பொருளேநீயிங்
கென்மானங் காத்தருள வேண்டுதியோ வேண்டாயே லென்செய் வேனே.

கலி விருத்தம்

**வைவ** மென்றெழு கின்றவர் தமக்குநல் வாழ்வு
செய்வ மென்றெழு கின்றமெய்த் திருவருட் செயலுஞ்
**சைவ மென்பதுஞ்** சைவத்திற் சாற்றிடுந் தலைமைத்
தெய்வ மென்பது மென்னள வில்லையென் செய்வேன். 35

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

**ஐய** ரேயும தடியனு னாகில்
அடிக ணீரென தாண்டவ ராகில்
பொய்ய னேனுளத் தவலமும் பயமும்
புன்க ணுந்தவிர்த் தருளுதல் வேண்டும்
தைய லோர்புற நின்றுளங் களிப்பச்
சச்சி தானந்தத் தனிநடம் புரியும்
மெய்ய ரேமிகு துய்யரே தரும
விடைய ரேயென்றன் விழியமர்ந் தவரே. 36

கலி விருத்தம்

**பொன்ன** ளிக்குநற் புத்தியுந் தந்துநின்
தன்னருட் டுணைத் தாண்மலர்த் தியானமே
மன்ன வைத்திட வேண்டுமெம் வள்ளலே
என்னை நான்பல காலிங் கியம்பலே. 37

**தாயுந்** தந்தையுஞ் சற்குரு நாதனும்
ஆயுந் தெய்வமு நீயென்ற றிந்தனன்
பாயு மால்விடை யேறும் பரமனே
நீயுங் கைவிட வென்னை நினைத்தியோ. 38

ஷை வேறு

ஒழியா மயல்கொண் டுழல்வே னவமே
அழியா வகையே யருள்வா யருள்வாய்
மொழியா மறையின் முதலே நுதலேய
விழியாய் விழியாய் வினைதூள் படவே. 39

ஆசிரியத் தாழிசை

உலகெ லாநிறைந் தோங்கு பேரரு ளுருவ மாகியெவ் வுயிரு முய்ந்திட
இலகு வானொளி யாமணி மன்றிடை யென்று நின்றே
அலகி லானந்த நாடகஞ் செயு மம்பொற் சேவடிக் கபய மென்னையுந்
திலக நீவிழை வாய்நட ராஜ சிகா மணியே 40

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

என்னிருகண் காணுமது பெருந்தவமெய்ப்
புவந்ததில யாதான் செய்வர்
முன்னிருவர் காணும லலைந்தனரால்
இனுங்காண முயலா நின்றார்
நன்னிருபா தொழுதேத்து மம்பலத்தே
யோரிடத்தோ நாளா நித்தா
பன்னிருவ ரொளிமாறும் பரவொளியைப்
பார்த்துயர்ந்தீர் பண்பி னீரே. 41

சேணுடர் முனிவருயர் திசைமுகன்மா
லுருத்திரனத் திரளோர் சற்றுங்
காணாத காட்சியைநான் கண்டேன்சிற்
றம்பலத்தின் கண்ணே பன்னாள்
ஆணாகப் பிறந்ததடியே னருந்தவமென்
புரிந்தேனோ வறிகி லேன்முன்
பேணாத பிறப்பெல்லாம் பிறப்பலவிப்
பிறப்பேயென் பிறப்பா மந்தோ. 42

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

இருளற வோங்கும் பொதுவிலே நடஞ்செய்
எங்குரு நாதனெம் பெருமான்
அருளெனும் வடிவங் காட்டியொண் முகத்தே
அழகுறும் புன்னகை காட்டித்
தெருளுற வருமைத் திருக்கையாற் றடவித்
திருமணி வாய்மலர்ந் தருகிற
பொருளுற விருந்தோர் வாக்களித் தென்னுட்
புகுந்தனன் புதுமையீ தந்தோ. 43

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

பொன்னென்கோ மணியென்கோ புனிதவொளித்
திரளென்கோ பொற்பி னோங்கும்
மின்னென்கோ விளக்கென்கோ விரிசுடர்க்கோர்
சுடரென்கோ வினைய னேனையான

என்னென்கோ வென்னென்கோ வெம்பெருமான்
திருமேனி யிருந்த வண்ணம்
முன்னென்கோ தறுதவத்தாற் கண்டுகளித்
திடப்பெற்றேன் முக்கண் மூர்த்தி. 44

ஷை வேறு

**வஞ்சகர்க்கெல்** லாமுதலா யறக்கடையாய்
மறத்தொழிலே வலிக்கும் பாவி
நெஞ்சகத்துன் மார்க்கனமா பாதகனைக்
கொடியேனை நீச னேனை
அஞ்சலெனக் கருணைபுரிந் தாண்டுகொண்ட
அருட்கடலை யமுதைத் தெய்வக்
கஞ்சமல ரவனெடுமாற் கரும்பொருளைப்
பொதுவினில்யான் கண்டுய்ந் தேனே. 45

**நாதாபொன்** னம்பலத் தேயறி வானந்த நாடகஞ்செய்
பாதா துரும்பினும் பற்றாதவென்னைப் பணிகொண் டெல்லாம்
ஓதா துணர வுணர்த்தியுள் ளேநின் றுளவுசொன்ன
நீதா நினைமறந் தென்னினைக் கேனிந்த நீணிலத்தே. 46

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

**கந்த** நாண்மலர்க் கழலிணை யுளத்துறக் கருதுகின் றவர்க்கெல்லாம்
பந்த நாண்வலை யவிழ்த்தருள் சிதம்பரை பரம்பரை யுடனுடும்
அந்த நாண்மகிழ் வடைபவ ருளர்சில ரவரெவ ரெனிலிங்கே
இந்த நாண்முறை திறம்பல ராயுயிர்க் கிதஞ்செயு மவரன்றே. 47

வேறு

**மறைமுடி** விளக்கே போற்றி மாணிக்க மலையே போற்றி
கறைமணி கண்ட போற்றி கண்ணுதற் கரும்பே போற்றி
பிறைமுடிச் சடைகொண் டோங்கும் பேரருட் குன்றே போற்றி
சிறைதவிர்த் தெனையாட் கொண்ட சிவசிவ போற்றி போற்றி. 48

திருச்சிற்றம்பலம்

## 106. நிந்தாஸ்துதி

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

**இறகெடுத்த** வமணர்குலம் வேரறுத்த சொக்கேயீ தென்ன ஞாயம்
அறுகெடுத்த சடைமுடிமேல் மண்ணெடுக்க மாட்டாம லடிபட்டு ஐயோ
பிறகெடுத்தீர் வளையல் விற்றீர் சொற்கேளாப் பிள்ளைகளைப் பெற்ற தோஷம்
விறகெடுத்தீர் என்செய்வீர்விதிவசந்தான்யாவரையும்விடாதுதானே.

இப்பதிகத்துள்—கலித்துறைகளும் விரவிநிற்கவும், விருத்தமெனக் குறியிட்டாளப் பட்டமைக்கிண்டு விதியெழுதப்புகின் மிகப்பெருகுமாதலின் விடுக்கப்பட்டது. சைவம்பன்னிரண்டு திருமுறைகளுள்—ஆளுடைய வாகீச—**அப்பர்சுவாமிகள்** திருவாய் மலர்ந்தருளிய திருமுறையில் "குலம்பலம் பாவரும்" என்றற்றொடக்கத் திலக்கியங்களாற் கண்டுகொள்க. (தேவாரம் 4-ந் திருமுறை) (திருவாரூர், திருவிருத்தம்)

## 107. பெரியநாயகியம்மை தோத்திரம்

### திருவதிகைத் திருவீரட்டானம்

கலி விருத்தம்

திருச்சிற்றம்பலம்

உரிய நாயகி யோககதி கைப்பதித்
துரிய நாயகி தூயவீ ரட்டற்கே
பிரிய நாயகி பேரரு ளுயகி
பெரிய நாயகி பெற்றியைப் பேசுவாம். 1

பன்னிருசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

உலகந் தழைக்க வுயிர்தழைக்க வுணர்வு தழைக்க வொளிதழைக்க
உருவந் தழைத்த பசுங்கொடியே உள்ள ததிக்குந் தெள்ளமுதே
திலகந் தழைத்த நுதற்கரும்பே செல்வத் திருவே கலைக்குருவே
சிறக்கு மலைப்பெண் மணியேமா தேவி யிசைசை ஞானமொடு
வலகந் தழைக்குங் கிரியையின்பம் வழங்கு மாதி பரையென்ன
வயங்கு மொருபே ருருளேயெம் மதியை விளக்கு மணிவிளக்கே
அலகந் தழைக்குந் திருவதிகை ஐயர் விரும்பும் மெய்யுறவே
அரிய பெரிய நாயகிப்பெண் அரசே என்னை யாண்டருளே. 2

தன்னே ரறியாப் பரவெளியிற் சத்தா ஞு சுத்த வநுபவத்தைச
சாரந் தின்ற பெரியவாக்குந் தாயே யெமக்குந் தனித்தாயே
மின்னே மின்னே ரிடைப்பிடியே விளங்கு மிதய மலரன்மே
வேதம் புகலும் பசுங்கிளியே விமலக் குயிலே யிளமயிலே
பொன்னே யெல்லாம் வல்லதிரி புரையே பரையே பூரணமே
புனித மான புண்ணியமே பொற்பே கற்ப கப்பூவே
அன்னே முன்னே என்னேயத் தமர்ந்த வதிகை யருட்சிவையே
அரிய பெரிய நாயகிப்பெண் அரசே யென்னை யாண்டருளே. 3

திருச்சிற்றம்பலம்

## 108. ஞானசிகாமணி தோத்திரம்

### திருவோத்தூர்

பன்னிருசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

அணிவா யுலகத் தம்புயனு மளிக்குந் தொழிற்பொன் னம்புயனும்
அறியா வருமைத் திருவடியை யடியேன் தரிசித் தகங்குளிர
மணிவாய் மலர்ந்தெம் போலவார்க்கு மறையுண் முடிபை வகுத்தருள
வயங்குங் கருணை வடிவெடுத்து வந்து விளங்கு மணிச்சுடரே
பிணிவாய் பிறவிக் கொருமருந்தே பேரா னந்தப் பெருவிருந்தே
பிறங்கு கதியி னருளாறே பெரியோர் மகிழவிற் பெரும்பேறே
திணிவா யெயிற்சூழ் திருவோத்தூர் திகழ வமர்ந்த சிவநெறியே
தேவர் புகழுஞ் சிவஞானத் தேவே ஞான சிகாமணியே 1

**நின்பா** லறிவு நின்செயலு நீயும் பிறிதன் றெமதருளே
நெடிய விகற்ப வுணர்ச்சிகொடு நின்றா யதனால் நேர்ந்திலைகாண்,
அன்பா லுன்பா லொருமொழிதந் தனமிம் மொழியா லறிந்தொருங்கி
அளவா வறிவே யுருவாக வமரென் றுணர்த்து மரும்பொருளே
இன்பா லென்பாற் றருதாயி னினிய கருணை யிருங்கடலே
இகத்தும் பரத்துந் துணையாகி என்னு ளிருந்த வியனிறைவே
தென்பால் விளங்குந் திருவோத்தூர் திகழு மதுரச் செழுங்கனியே
தேவர் புகழுஞ் சிவஞானத் தேவே ஞான சிகாமணியே. 2

**அசையும்** பரிசாந் தத்துவமன் றவத்தை யகன்ற வறிவேநீ
யாகு மதனை யெமதருளா லலவா மென்றே யுலவாமல்
இசையும் விகற்ப நிலையையொழித் திருந்த படியே யிருந்தறிகாண்
என்றென் னுணர்வைத்தெளித்தநினக் கென்னேகைம்மா றறியேனே
நசையும்வெறுப்புந் தவிர்ந்தவர்பால் நண்ணுந்துணையேநன்னெறியே
நான்றா னென்ன லறத்திகழ்ந்து நாளு மோங்கு நடுநிலையே
திசையும் புவியும் புகழோத்தூர் சீர்கொண் மதுரச் செழும்பாகே
தேவர் புகழுஞ் சிவஞானத் தேவே ஞான சிகாமணியே. 3

திருச்சிற்றம்பலம்

## 109. வயித்தியநாதர் பதிகம்

பதினான்குசீரடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

**ஓகைமட** வாரல்குலே பிரம பதமவர்கள்
உந்தியே வைகுந்த மேல்
ஓங்குமுலை யேகைலை யவர்குமுத வாயினிதழ்
ஊறலே யமுத மவர்தம்
பாகனைய மொழியேநல் வேதவாக் கியமவர்கள்
பார்வையே கருணை நோக்கம்
பாங்கினவ ரோடுவிளை யாடவரு சுகமதே
பரமசுக மாகு மிந்த
ஊகமறி யாமலே தேகமிக வாடினீர்
உறுசுவைப் பழமெ றிந்தே
உற்றவெறு வாய்மெல்லும் வீணர்நீ ரென்றுநல்
லோரை நிந்திப்ப ரவர்தம்
வாகைவாய் மதமற மருந்தருள்க தவசிகா
மணியுலக நாத வள்ளல்
மகிழவரு வேளூரி லன்பர்பவ ரோகமற
வளர் வயித்திய நாதனே. 1

**உண்டதே** யுணவுதான கண்டதே காட்சியிதை
உற்றறிய மாட்டார் களாய
உயிருண்டு பாவபுண் ணியமுண்டு வினைகளுண்
டுறுபிறவி யுண்டு துனபத்
தொண்டதே செயுநரக வாதையுண டினபமுறு
சொர்ககமுண டிவையு மனறித்
தொழுகடவு ளுண்டுகதி யுண்டெனறு சிலர்சொலுந்
துாபபுத்தி யாலுல கிலே
கொண்டதே சாதகம வெறுத்துமட மாதர்தங்
கொஙகையும வெறுததீர கையில்
கொண்டதீங கனியைவிட டநதரத் தொருபழங
கொளளுவீ ரெனப ரநத
வண்டர்வா யறவொரு மருநதருளக தவசிகா
மணியுலக நாத வளளல
மகிழவரு வேளுரி லன்பாபவ ரோகமற
வளர் வயிததிய நாதனே. 2

**உம்பர்வா** னமுதனைய சொறகளாற பெரியோர்
உரைத்தவாய மைகளை நாடி
ஓதுகின றார்தமைக கண்டவமதித் தெதிரில
ஒதிபோல நிற்பது மலால
கம்பர்வாய் இவாவாயக கதைபபெனபர் சிறுகருங்
காககைவாயக கத்த லிவாவாய்க
கத்தலிற் சிறிதெனபர் சூடேறு நெய்யொரு
கலஙகொளள வேண்டு மென்பர்
இமபர்நாங கேடடகதை யிதுவெனப ரனறியும
இவர்ககேது தெரியு மென்பர்
இவையெலா மெவனோவோர் வமபனும வீணனமுன்
இடடகட் டெனபா அநத
வமபர்வா யறவொரு மருநதருளக தவசிகா
மணியுலக நாத வளளல்
மகிழவரு வேளுரி லனபர்பவ ரோகமற
வளர் வயித்திய நாதனே. 3

**கல்லையு** முருககலாம நாருரித் திடலாம
கனிநதகனி யாசசெய யலாம
கடுவிடமு முணணலாம அமுதாகக லாஙகொடுங்
கரடிபுலி சிஙக முதலா
வெலலுமிரு கஙகளையும வசமாககலா மனறி
விததை யுஙகற பிககலாம
மிககவா ழைததணடை விறகாகக லாமணலை
மேவுதோ வடமாக கலாம

இல்லையொரு தெய்வமவே றில்லையெம் பாலின்பம்
ஈகின்ற பெண்கள் குறியே
எங்கள்குல தெய்வமென மூடரைத் தேற்றவெனில்
எதுதுணையு மரிதரிது காண்
வல்லையவ ருணர்வுற மருந்தருள்க தவசிகா
மணியுலக நாத வள்ளல
மகிழவரு வேளூரி லனபாபவ ரோகமற
வளர் வயித்திய நாதனே. 4

**படியளவு** சாம்பலைப் பூசியே சைவம்
பழுத்த பழமோ பூசணைப்
பழமோ வெனக்கருங் கலபோலு மசையாது
பாழாகு கின்றாாக ளோர்
பிடியளவு சாதமுங் கொள்ளார்கள் அல்லதொரு
பெண்ணை யெனினுங் கொளகிலா
பேய்கொண்ட தோவன்றி நோய்கொண்ட தோபெரும்
பித்தேற்ற தோவறிகி லேன
செடியளவு மூத்தைவாயப் பலலழுக கெல்லாந்
தெரிந்திடக் காட்டி நகைதான்
செய்துவலை யாபபெருஞ செம்மரத் துண்டுபோற்
செம்மாப்ப ரவர்வாய் மதம்
மடியளவ தாவொரு மருந்தருள்க தவசிகா
மணியுலக நாத வள்ளல
மகிழவரு வேளூரி லனபாபவ ரோகமற
வளா வயித்திய நாதனே. 5

**பெண்கொண்ட** சுகமதே கணகண்ட பலனிது
பிடிக்கவறி யாதுசிலா தாம்
பேரூரி லாதவொரு வெறுவெளியி லேசுகம்
பெறவே விரும்பி வீணிற
பண்கொண்ட வுடலவெளுத துளளே நரம்பெலாம்
பசையற்று மேலெ ழும்பப
பட்டினி கிடந்து சாகின்றாாக ளீதென்ன
பாவமிவ ருண்மை யறியாா
கண்கொண்ட குருடரே யென்றுவாய்ப் பலலெல்லாங்
காட்டிச் சிரித்து நீண்ட
கழுமரக கட்டைபோல நிறபார்க ளையவிக
கயவாவாய மதமு முதுமே
மண்கொண்டு போகவோா மருந்தருளக தவசிகா
மணியுலக நாத வள்ளல
மகிழவரு வேளூரி லனபர்பவ ரோகமற
வளா வயித்திய நாதனே 6

**தி**ருத்தமுடை யோர்கருணை யாலிந்த வுலகில்
தியங்குவீ ரழியாச சுகம
சேருலக மாமபரம பதமதனை யடையுநெறி
சேரவா ருஙக ளெனறுல
இருத்தினிய சுவையுணவு வேண்டுமணி யாடைதரும்
இடமவேணடு மிவைக ளெலலாம
இலலையா யினுமிரவு பகலெனப தறியாமல்
இறுகப் பிடித்த ணைககப்
பெருத்தமுலை யோடிளம பருவமுட னழகுடைய
பெண்ணகப் படுமா கிலோ
பேசிட ரப்பரம பதநாடடி னுககுநும
பிறகிதோ வருவ மென்பார்
வருத்துமவ ருறவற மருநதருளக தவசிகா
மணியுலக நாத வள்ளல
மகிழுவரு வேளூரி லன்பர்பவ ரோகமற
வளா வயித்திய நாதனே. 7

**பே**தையுல கீர்விரத மேதுதவ மேதுவீண்
பேசசிவை யெலாம வேதனும
பித்தன்வாயப பித்தேறு கத்துநூல் கத்திய
பெருமபுரட டாகு மலலால
ஓதையுறும உலகா யததிலுள வுண்மைபோல
ஒருசிறிது மிலலை யிலலை
உளளதறி யாதிலவு காததகிளி போலுடல்
உலர்நதீர்க ளினியா யினும
மேதையுண வாதிவேண டுவவெலா முண்டுநீர்
விரைமலாத தொடை யாதியா
வேண்டுவ வெலாஙகொண்டு மேடைமேற் பெண்களொடு
விளையாடு வீக ளெனபார்
வாதையவர் சாபற மருநதருளக தவசிகா
மணியுலக நாத வளளல
மகிழுவரு வேளூரி லனபாபவ ரோகமற
வளா வயிததிய நாதனே. 8

**ஈனம்** பழுத்தமன வாதையற நினனருளை
எண்ணிநல லோாக ளொருபால
இறைவநின தோத்திர மியமபியிரு கண்ணீர்
இறைபப வதுகணடு நினறு
ஞானம பழுததுவிழி யாலொழுகு கின்றநீா
நமமுலகி லொருவ ரலவே
ஞானியிவா யோனிவழி தோனறியவ ரோவென
நகைபபா சுமமா வமுகிலோ

ஊனங் குழுததகண் ணுமெனப ருலகத்தில
உயாபெணடு சாககொ டுத்த
ஒருவனமுக மெனனவிவர் முகமவாடு கின்றதென
உளறு வார்வா யடஙக
மானம பழுத்திடு மருநதருளக தவசிகா
மணியுலக நாத வளளல
மகிழவரு வேளூரி லனபாபவ ரோகமற
வளர் வயிததிய நாதனே.

**கற்பவை** யெலாஙகற றுணர்நதபெரி யோர்தமைக
காணபதே யருமை யருமை
கறபதரு மிடியனிவ னிடையடைந தாலெனக
கருணையா லவர் வலியவந
திறபுற னிருப்பவது கணடுமந தோகடி
தெழுநதுபோயத தொழுது தங்கட
கியலுறுதி வேணடாது கணகெட்ட குருடர்போல
ஏமாந திருபப ரிவர்தாம
பொற்பினறு சுவையறியு மறிவுடைய ரன்றுமேற்
புலலாதி யுணு முயிாகளும
போனறிடா ரிவாகளைக கூரைபோயப் பாழாம
புறசசுவ ரெனப புகலலாம
வற்புறும படிதரும வழியோஙகு தவசிகா
மணியுலக நாத வளளல
மகிழவரு வேளூரி லனபாபவ ரோகமற
வளா வயிததிய நாதனே. 10

**மெய்யோர்** தினைத்தனையு மறிகிலார் பொயககதை
விளமபவெணி லிவவு லகிலோ
மேலுலகி லேறுகினு மஞசாது மொழிவர்தெரு
மேவுமண் ணெனினு முதவக
கையோ மனத்தையும விடுககவிசை யார்களகொலை
களவுகட் காம முதலாக
கண்டதீ மைகளனறி நனமையென பதனையொரு
கனவிலுங கணடறி கிலார
ஐயோமு னிவாதமை விதிபபடி படைத்தவிதி
யஙகைதாங கஙகை யெனனும
ஆறறிற குளிககினுந தீமுழகி யெழினுமவ
வசுதத நீஙகாது கணடாய
மையோ ரணுதநணையு மேவுறுத தவசிகா
மணியுலக நாத வளளல
மகிழவரு வேளூரி லனபாபவ ரோகமற
வளா வயிததிய நாதனே 11

இளவேனின் மாலையாய்க குளிர்சோலை யாய்மலர்
இலஞ்சியூம பொயகை யருகாய
ஏற்றசந திரகாநத மேடையா யதனமேல்
இலஙகு மரமிய வணையுமாய்
தளவேயு மலலிகைப் பநதராய்ப் பாலபோற
றழைததிடு நிலாக காலமாய்த
தனியிளந தென றலாய நிரைநரம புளவீணை
தனனிசைப் பாட லிடமாய
களவே கலநதகற புடையமட வரலபுடை
கலநதநய வார்த்தை யுடனாய்க
களிகொள இருநதவாகள் கண்டசுகம நின்னடிக்
கழனிறற சுக நிகருமே
வளவேலை சூழுலகு புகழகினற தவசிகா
மணியுலக நாத வளளல்
மகிழவரு வேளுரி லனபாபவ ரோகமற
வளா வயிததிய நாதனே.

திருச்சிற்றம்பலம்

## 110. ஸ்ரீ ராமநாமத் திருப்பதிகம்

எழுசீரடி ஆசிரிய விருததம

திருச்சிற்றமபலம

**காராய** வண்ண மணிவணண கண்ண கனசங்கு சகர தரநீள்
சீராய தூய மலர்வாய நேய ஸ்ரீராம ராம னெனவே
தாராய வாழவு தருநெஞ்சு சூழக தாமோத ராய நமவோம்
நாராய ணாய நமவாம ணாய நமகேச வாய நமவே. 1

எணசீரடி ஆசிரிய விருததம

**திருமகளெம்** பெருமாட்டி மகிழும வண்ணச
செழுஙகனியே கொழுமபாகே தேனே தெய்வத்
தருமகனைக காததருளக கரத்தே வென றித்
தநுவெடுதத வொருமுதலே தருமப பேறே
இருமையுமென னுளத்தமாநத ராம நாமத
தெனனரசே யெனனமுதே யெனறு யேநின்
மருமலாபபொன னடிவழுததுஞ சிறியேன அநதோ
மனநதளாநதேன அறிநதும அருள வழஙகி லாயே. 2

**கலைக்கடலே** கருணைநெடுங கடலே கானங
கடநததடங கடலேயென கருத்தே ஞான
மலைககணெழுஞ சுடரேவான சுடரே யனபா
மனத்தொளிருஞ சுயஞசுடரே மணியே வானோர்
தலைககணுறு மகுடசிகா மணியே வாய்மைத்
தசரதனறன் குலமணியே தமியேன உளளம
நிலைககணுறுஞ ஸ்ரீராம வளளலே யென
நிலையறிநதும அருளவினனு நினைநதி லாயே. 3

**மண்ணுளா** நினறவர்தம வாழவு வேணடேன
மறறவாபோற் பறறடைநது மாள வேண்டேன்
விண்ணுளா நினறவொரு மேனமை வேணடேன
வித்தகநின றிருவருளே வேணடி நினறேன
புண்ணுளா நினறமன முடையேன செயத
பொயயனைததுந திருவுளததே பொறுபபா யனறிக
கண்ணுளா சுடாககமலக கண்ணு எனனைக
கைவிடிலென செயவேனே கடைய னேனே. 4

**தெவ்வினையார்** அரககாகுலஞ செற்ற வெற்றிச
சிஙகமே யெஙகளகுல தெயவ மேயோ
வெவவினைதீர்த தருளகினற ராம நாம
வியனசுடரே யிவவுலக விடயக காடடில
இவவினையேன அகபபடடேன புலனுங களவாக
கிலகசானேன துணையொனறு மிலலேன அநதோ
செயவினையொன றறியேனிங கெனனை யெநதாய
திருவுளததிற் சேர்ததிலையேற செயவ தெனனே. 5

**வான்வண்ணக்** கருமுகிலே மழையே நீல
மணிவணணக கொழுஞசுடரே மருநதே வானத்
தேனவணணச செழுஞசுவையே ராம நாமத்
தெய்வமே நினபுகழைத் தெளிந்தே ஓதா
ஊன்வண்ணப புலைவாயா இடததே சென்றுங
குழைககின்றேன செயவகையொன றுணரேன அநதோ
கான்வணணக குடுமபத்திற் கிலககா வெனனைக
காடடினையே யெனனேநின கருணை யீதோ 6

**பொன்னுடையார்** வாயிலிறபோய வீணே காலம
போககுகினறேன இவவுலகப் புணாபபை வேண்டி
எனனுடையாய நினனடியை மறநதேன அநதோ
எனசெயகேன எனசெய்கேன ஏழையே னன
பின்னுடையேன பிழையுடையேன அலலா லுனறன
பேரருளும உடையேனோ பிறநதேன வாளா
உனனுடைய திருவுளதெதன னினைதி யோவென
ஒருமுதலவா ஸ்ரீராமா வுணாகி லேனே. 7

**அறப்பழுக்குந்** தருவேயென குருவே யெனறன
ஆருயிருக கொருதுணையே யரசே பூவை
நிறமபழுகக அழகொழுகும வடிவக குனறே
நெடுஙகடலுக கணையளிதத நிலையே வெயய
மறமபழுககும **இலங்கையிரா வணனைப்** பணடோரா
வாளியினுற பணிகொணட மணியே வாயமைத
திறமபழுககும ஸ்ரீராம வளள லேநின
திருவருளே யனறிமறறோர செயலி லேனே. 8

**கல்லாய** வன்மனத்தர் தமபாற் சென்றே
கண்கலககங கொளகினறேன் கவலை வாழவை
எலலாமுள் ளிருந்தறிநதா யனறே சறறும
இரஙகிலையெம பெருமானே யென்னே யெனனே
பொலலாத வெவவினையேன எனினும எனனைப்
புணணியனே புரபபதருட் புகழசசி யன்றே
அலலாநத துயர்ககடனின றெடுதது டாயேல
ஆற்றேனுன் பழிநினபால ஆககு வேனே. 9

**மையான** நெஞசகத்தோா வாயில சார்நதே
மனநதளர்நதேன வருநதுகினற வருத்த மெல்லாம
ஐயாவென உளத்தமர்நதாய நீதான சறறும
அறியாயோ அறியாயேல அறிவா ரியாரே
பொயயான தனமையினேன எனினு மெனனைப்
புறமவிடுததல அழகேயோ பொருளா வெணணி
மெயயாவென றனையநநாள ஆணடா யிநநாள
வெறுததனையேல எஙகேயான மேவு வேனே. 10

**கூறுவதோர்** குணமிலலாக கொடிதாஞ செலவக
குருடடறிவோர் இடைபபடுமென குறைக ளெல்லாம
ஆறுவதோா வழிகாணேன அநதோ அநதோ
அவலமெனுங கருஙகடலில அழுநது கின்றேன்
ஏறுவதோர் வகையறியேன எநதா யெநதாய
ஏறறுகினறோர் நினனையனறி இலலேன எனனைச்
சீறுவதோ இரஙகுவதோ யாதோ வுனறன
திருவுளத்தைத் தெரியேனே சிறிய னேனே. 11

திருச்சிற்றம்பலம்

## திருவெவ்வுளூர் ஸ்ரீ வீரராகவப்பெருமாள்

# 111. போற்றித் திருப்பஞ்சகம்

அறுசீரடி ஆசிரிய விருததம

திருசசிற்றம்பலம்

**தண்ணமர்** மதியே சாந்த தழைத்தசத் துவனே போற்றி
வண்ணமா மணியே போற்றி மணிவண்ணத் தேவா போற்றி
அண்ணலே எவவு ளூரில அமாநதரு ளாதி போறறி
விண்ணவர் முதலவா போறறி வீரரா கவனே போற்றி. 1

**பாண்டவர்** தூத னைகப் பலிததருள பரனே போறறி
நீண்டவ் னெனன வேதம நிகழததுமா நிதியே போறறி
தூணடலில லாம லோஙகுஞ ஜோதிநல விளககே போற்றி
வேணடவ ரெவவு ளூாவாழ வீரரா கவனே போற்றி 2

**மேதினி** புரக்கும் வேந்தர் வீறெலாம் நினதே போற்றி
கோதிலா மனத்தே நின்று குலாவிய கோவே போற்றி
ஓதிய எவ்வு ளூரில் உறைந்தருள் புரிவாய் போற்றி
வேதியன் றன்னை யீன்ற வீரரா கவனே போற்றி. 3

**இளங்கொடி** தனைக்கொண் டேகும் இராவணன் றனை யழித்தே
களங்கமில் **விபீட ணர்க்குக்** கனவர சளித்தாய் போற்றி
துளங்குமா தவத்தோ ருற்ற துயரெலாந் தவிர்த்தாய் போற்றி
விளங்குநல் எவ்வு ளூர்வாழ் வீரரா கவனே போற்றி. 4

**அற்புதத்** திருவை மார்பில் அணைத்தபே ரழகா போற்றி
பொற்புறு **திகிரி சங்கு** பொருந்துகைப் புனிதா போற்றி
வற்புறு பிணிதீர்த் தென்னை மகிழ்வித்த வரதா போற்றி
வெற்புய ரெவ்வு ளூர்வாழ் வீரரா கவனே போற்றி. 5

திருச்சிற்றம்பலம்

### திருக்கண்ணமங்கை

## 112. இலக்குமி தோத்திரம்

*பன்னிருசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்*

திருச்சிற்றம்பலம்

**உலகம்** புரக்கும் பெருமான்றன் உளத்தும் புயத்தும் அமர்ந்தருளி
உவகை யளிக்கும் பேரின்ப வுருவே யெல்லாம் உடையாளே
திலகஞ் செறிவா ணுதற்கரும்பே தேனே கனிந்த செழுங்கனியே
தெவிட்டா தன்பர் உளத்துள்ளே தித்தித்தெழுமோர் தெள்ளமுதே
மலகஞ் சுகத்தேற் கருளளித்த வாழ்வே யென்கண் மணியேயென்
வருத்தந் தவிர்க்க வருங்குருவாம் வடிவே ஞான மணிவிளக்கே
சலகந் தரம்போற் கருணைபொழி தடங்கண் திருவே கண்ணமங்கைத்
தாயே சரணஞ் சரணமிது தருணங் கருணை தருவாயே.

திருச்சிற்றம்பலம்

### சென்னப்பட்டணம் ஏழுகிணற் றருகிலிருக்கும்

## துலுக்காணத் தம்மன்பேரில்

## *பஞ்சரத்தினம்

**சீர்வளர்** மதியுந்திருவளர்வாழ்க்கைச்செல்வமுங்கல்வியும் பொறையும்
பார்வளர் திறனும் பயன்வளர் பரிசும் பத்தியு மெனக்கருள் பரிந்தே
வார்வளர் தனத்தாய்மருவளர் குழலாய் மணிவளரணிமலர் முகத்தாய்
ஏர்வளர்குணத்தாயிசைதுலுக்காணத்திரேணுகையெனுமொருதிருவே.

**உவந்தொரு**காசும்உதவிடாக்கொடியஉலுத்தர்தங்கடைதொறுமோடி
அவந்தனி லலையாவகையெனக்குன்றன் அகமலர்ந்தருளுதல் வேண்டும்
நவந்தரு மதிய நிவந்தபூங் கொடியே நலந்தரு நகைமணிக் கோவை
இவந்தொளிர் பசுந்தோ ளிசைதுலுக்காணத்திரேணுகையெனுமொருதிருவே.

**விருந்தினர்** தமமை யுபசரித் திடவும விரவுறு முறவினர் மகிழத்
திருநதியமனத்தால நன்றிசெய்திடவுஞ்சிறியனேறகருளுதல வேணடும
வருநதிவந தடைநதோர்க கருளசெயுஙகருணை வாரியேவடிவுறு மயிலே
இருநதிசைபுகழு மிசைதுலுககாணத் திரேணுகை யெனுமொருதிருவே.

**புண்ணியம்** புரியும் புனிதர்தஞ் சார்பும புத்திரர் மனைவியே முதலாய்
நண்ணிய குடுமப நலமபெறப் புரியும நனகுமென றனககருள் புரிவாய்
விண்ணிய கதிரி ஞெளிசெயு மிழையாய் விளங்கருளொழுகிய விழியாய
எண்ணிய அடியர்ககிசைதுலுககாணத்திரேணுகையெனுமொருதிருவே.

**மனமெலி** யாமற பிணியடை யாமல வஞசகா தமைமரு வாமற்
சினமிலை யாம லுடலசலி யாமற சிறியனே னுறமகிழந தருளவாய்
அனமகிழ நடையாயணிதுடியிடையாய அழகுசெய காஞசனவுடையாய்
இனமகிழசெனனை யிசைதுலுககாணத்திரேணுகையெனுமொருதிருவே

திருச்சிற்றம்பலம

இரண்டாவது திருமுறை
முற்றிற்று



*இப்பஞ்சரத்தினம் — முதல இரணடு பதிபபுகளில காணபபடவிலலை. திரு-
காரணப்பட்டு கந்தசாமி பிள்ளை பாாவையிடட தீ. நா. முத்தைய்ய
செட்டியார் பதிபபில மடடும உளது

**குறிப்பு.—இரண்டாவது திருமுறையில்உள்ள கீர்த்தனைகள்
யாவும் ஆறுவது திருமுறையில்உள்ள கீர்த்தனை
களுடன் சேர்க்கப்பட்டுள்ளன**



உ

சிவமயம

திருச்சிற்றம்பலம்

அருட்பெருஞ்ஜோதி

# திருவருட்பா

# மூன்றாவது திருமுறை



திருவொற்றியூர்

## 1 திருவுலாப்பேறு



### தலைவி பாங்கியோடு கிளத்தல்

*அறுசீரக் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம*

திருசசிறறமபலம

**சீரார்** வளஞ்சேர் ஒற்றிநகர்த் தியாகப் பெருமான் பவனிதனை
ஊரா ருடனசென றெனதுநெஞச முவகையோஙகப பாாத்தனன்காண்
வாரார் முலைகண் மலைகளென வளாநத வளைகள தளாநதனவால
ஏரார் குழலா யெனனடிநா னிசசை மயமாய நினறதுவே. 1

**சீரத்தேன்** பொழிலா ரொறறிநகாத தியாகப பெருமான் பவனிவரப்
பார்த்தேன கணகளிமைததிலகாண பைமபொன வளைக ளமைததிலகாண
தார்த்தேன குழலுஞ சரிநதனகாண தானையிடையிற பிரிநதனகாண
ஏர்த்தேன குழலா யெனனடிநா னிசசை மயமாய நினறதுவே. 2

**சீதப்** புனல்சூழ் வயலொற்றித் தியாகப் பெருமான் றிருமாட
வீதிப் பவனி வரக்கண்டேன் மென்பூந் துகில்வீழ்ந் ததுகாணேன்
போதிற் றெனவு முணர்ந்திலேன் பொன்ன ரைப்பின் போதுகிலேன்
ஈதற் புதமே யென்னடிநா னிச்சை மயமாய் நின்றதுவே. 3

**தென்னூர்** சோலைத் திருவொற்றித் தியாகப் பெருமான் பவனிவரப்
பொன்னூர்வீதி தனிற்பார்த்தேன்புளகம் போர்த்தேன்மயல்பூத்தேன்
மின்னூர் பலர்க்கு முன்னுகை மேவி யவன்ற னெழில்வேட்டு
என்னு ரணங்கே யென்னடிநா னிச்சை மயமாய் நின்றதுவே. 4

**சீலக்** குணத்தோர் புகழொற்றித் தியாகப் பெருமான் பவனியிராக்
காலத் தடைந்து கண்டேனென் கண்க ளிரண்டோ வாயிரமோ
ஞாலத் தவர்க ளலர்தூற்ற நற்றா சிடையி னழுவிவிழ
ஏலக் குழலா யென்னடிநா னிச்சை மயமாய் நின்றதுவே. 5

**சேயை** யருளுந் திருவொற்றித் தியாகப் பெருமான் வீதிதனில்
தூய பவனி வரக்கண்டேன் சூழ்ந்த மகளிர் தமைக்காணேன்
தாயை மறந்தே னன்றியுமென் றனையு மறந்தேன் றனிப்பட்டே
ஏயென் றோழி யென்னடிநா னிச்சை மயமாய் நின்றதுவே. 6

**திங்க** ளுலவும் பொழிலொற்றித் தியாகப் பெருமான் றிருவீதி
அங்கண் களிக்கப் பவனிவந்தா னதுபோய்க் கண்டேன் தாயரெலாந்
தங்கள் குலத்துக் கடாதென்றார் தம்மை விடுத்தேன் தனியாகி
எங்க ணணையா யென்னடிநா னிச்சை மயமாய் நின்றதுவே. 7

**தேசார்** மணிசூ ழொற்றிநகர்த் தியாகப் பெருமான் பவனிவரக்
கூசா தோடிக் கண்டரையிற் கூறை யிழந்தேன் கைவளைகள்
வீசா நின்றேன் தாயரெலாம் வீட்டுக் கடங்காப் பெண்ணெனவே
ஏசா நிற்க வென்னடிநா னிச்சை மயமாய் நின்றதுவே. 8

**தேடார்க்** கரியா ரொற்றிநகர்த் தியாகப் பெருமான் பவனிவரத்
தோடார்பணைத்தோட் பெண்களொடுஞ் சூழ்ந்து மகிழ்ந்துகண்டதன்றி
வாடாக் காதல் கொண்டறியேன் வளையுந் துகிலுஞ் சோர்ந்ததுடன்
ஏடார் கோதை யென்னடிநா னிச்சை மயமாய் நின்றதுவே. 9

**திருமாற்** கரியா ரொற்றிநகர்த் தியாகப் பெருமான் பவனிவரப்
பெருமான் மனமு நாணுமுன்னும் பின்னுஞ் சென்று கண்டேமால்
பொருமா நின்றேன் தாயரெலாம் போவென் றீர்க்கப் போதுகிலேன்
இருண்மாண் குழலா யென்னடிநா னிச்சை மயமாய் நின்றதுவே. 10

திருச்சிற்றம்பலம்

திருவொற்றியூர்

## 2. நாரையுங் கிளியும் நாட்டுறு தூது

### தலைவி பறவைமேல் வைத்துப் பையுளெய்தல்

*அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்*

**திருச்சிற்றம்பலம்**

**கண்ண** னெடுநாண் மண்ணிடந்துங் காணக்கிடையாக் கழலுடையார்
நண்ணும் **ஒற்றி நகரார்க்கு** நாராய் சென்று நவிற்றாயோ
அண்ண லுமது பவனிகண்ட வன்று முதலா யின்றளவும்
உண்ணு முணவோ டுறக்கமுநீத் துற்றா ளென்றிவ் வொருமொழியே.

**மன்னுங்** கருணை வழிவிழியார் மதுர மொழியா ரொற்றிநகர்த்
துன்னு மவர்தந் திருமுன்போய்ச் சுகங்கா ணின்று சொல்லீரோ
மின்னுந் தேவர் திருமுடிமேல் விளங்குஞ் சடையைக் கண்டவுடன்
பின்னுஞ்சடையை யவிழ்த்தொன் றும்பேசாளும்மைப் பிரிந்தென்றே.

**வடிக்குந்** தமிழ்த்தீந் தேனென்ன வசனம் புகல்வா ரொற்றிதனில்
நடிக்குந் தியாகர் திருமுன்போய் நாராய் நின்று நவிற்றாயோ
பிடிக்குங் கிடையா நடையுடைய பெண்க ளெல்லாம் பிச்சியென
நொடிக்கும் படிக்கு மிகுங்காம நோயால் வருந்தி நோவதுவே. 3

**மாய** மொழியார்க் கறிவறியார் வண்மை யுடையார் மறைமணக்குந்
தூய மொழியா ரொற்றியிற்போய்ச் சுகங்கா ணின்று சொல்லீரோ
நேய மொழியாள் பந்தாடா ணில்லாள் வாச நீராடாள்
ஏய மொழியாள் பாலனமு மேலா ளும்மை யெண்ணியென்றே. 4

**ஒல்லார்** புரமூன் றெரிசெய்தா ரொற்றி யமர்ந்தா ரெல்லார்க்கும்
நல்லார் வல்லா ரவர்முன்போய் நாராய் நின்று நவிற்றுதியே
அல்லார் குழலாள் கண்ணீரா மாற்றி லலைந்தா ளணங்கனையார்
பல்லார் சூழ்ந்து பழிதூற்றப் படுத்தாள் விடுத்தாள் பாயலென்றே.5

**ஓவா** நிலையார் பொற்சிலையா ரொற்றி நகரா ருண்மைசொலுந்
தூவாய் மொழியா ரவர்முன்போய்ச் சுகங்கா ணின்று சொல்லீரோ
பூவார் முடியாள் பூமுடியாள் போவாள் வருவாள் பொருந்துகிலாள்
ஆவா வென்பாள் மகளிரொடு மாடாள் தேடா ளனமென்றே. 6

**வட்ட** மதிபோ லழகொழுகும் வதன விடங்க ரொற்றிதனில்
நட்ட நவில்வா ரவர்முன்போய் நாராய் நின்று நவிற்றாயோ
கட்ட விழ்ந்த குழன்முடியாள் கடுகி விழுந்த கலைபுனையாள்
முட்ட விலங்கு முலையிணையு மூடாள் மதனை முனிந்தன்றே. 7

**வேலை** விடத்தை மிடற்றணிந்த வெண்ணீற் றழகர் விண்ணளவுஞ்
சோலை மருவு மொற்றியிற்போய்ச் சுகங்கா ளவர்முன் சொல்லீரோ
மாலை மனத்தாள் கற்பகப்பூ **மாலை** தரினும் வாங்குகிலாள்
காலை யறியாள் பகலறியாள் கங்கு லறியாள் கனிந்தென்றே. 8

**மாண்காத்** தளிர்கு யொறறியினா வான மகளீா மஙகலப்பொன்
ஞண்காத் தளித்தா ரவர்முனபோய நாராய் நினறு நவிற்றுதியோ
பூண்காத் தளியாள புலமபிநினருள புரண்டா ளயனமா லாதியராகு
சேண்காத் தளிப்போர் தேற்றுகிஞர தேருள் மனது திறனென்றே.

**தேசு** பூத்த வடிவழகா திருவா ழொற்றித் தேவாபுலித்
தூசு பூத்த கீளுடையார் சுகஙகா ளவர்முன சொலலீரோ
மாசு பூத்த மணிபோல வருநதா நினருள மஙகையாவாய்
ஏசு பூத்த வலாகொடியா யினைத்தா ளுமமை யெண்ணியெனறே.10

திருச்சிற்றம்பலம்

திருவொறறியூா

## 3. இரங்கன் மாலை

### தலைவி இரங்கல்

*அறுசீாக கழிநெடிலடி ஆசிரிய விருததம*

திருச்சிற்றம்பலம்

**நின்று** புரிவாா திருவொற்றி நாத ரெனது நாயகனுர்
மனறு ளமர்வாா மாலவிடைமேல வருவா ரவரை மாலையிடட
அனறு முதலா யினறளவு மககோ சறறு மணநதறியேன
குனறு நிகாபூண முலையாயென குறையை யெவாககுக கூறுவனே 1

**தகைசே** ரொறறித தலததமாநதாா தரியாா புரஙகள தழலாகக
நகைசோந தவரை மாலையிடட நாளே முதலிந நாளளவும
பகைசோ மதனபூச சூடலனறிப பதப்பூச சூடப பாாததறியேன
குகைசே ரிருடபூங குழலாயென குறையை யெவாககுக கூறுவனே.2

**தோடார்** குழையா ரொறறியினா் தூயர்க கலது சுகம்ருள
நாடா ரவாககு மாலையிட்ட நாளை முதலிந நாளளவுஞ
சூடா மலாபோ லிருநததலலாற சுகமோ ரணுவுந துயத்தறியேன
கோடா வொலகுஙகொடியேயென குறையையெவர்ககுக கூறுவனே.

**அண்ட** ரெவாககு மறிவொணு ரணியா ரொறறி யாாநீல
கணட ரவாககு மாலையிடட கடனேயனறி மறறவரால
பண்ட மறியேன பலனறியேன பரிவோ டணையப பாாததறியேன்
கொண்டனமணககுஙகோதாயென குறையை யெவர்ககுககூறுவனே.

**பாடல்** கமழும பதமுடையாா பணைசே ரொறறிப பதியுடையார்
வாட லெனவே மாலையிட்ட மாணபே யனறி மறறவரால
ஆட லளிசூழ குழலாயுன ஞணை யொனறு மறியனடி
கூடல பெறவே வருநதுகினறேன குறையை யெவாககுக கூறுவனே.

**துடிசேர்** கரத்தா ரொற்றியிலவாழ சோதி வெண்ணீற றழகரவர்
கடிசோந தெனனை மாலையிட்ட கடனே யனறி மறறவராற
பிடிசேர்நடைநோ பெணகளைபபோற பினனையாதும பெறறறியேன
கொடிநே ரிடையா யெனனடியென குறையையெவாககுக கூறுவனே

**ஒற்றி** நகர்வா ழுத்தமனு ருயர்மால் விடையா ருடையார்தாம்
பற்றி யென்னை மாலையிட்ட பரிசே யன்றிப் பகைதெரிந்து
வெற்றி மதனன் வீறடங்க மேவி யணைந்தா ரல்லரடி
குற்ற மணுவுஞ் செய்தறியேன் குறையை யெவர்க்குக் கூறுவனே. 7

**வானும்** புவியும் புகழொற்றி வாணர் மலர்க்கை மழுவினொடு
மானு முடையா ரென்றனக்கு மாலை யிட்ட தொன்றல்லால்
நானு மவருங் கூடியொரு நாளுங் கலந்த தில்லையடி
கோனுந் தியவேற் கண்ணையென் குறையை யெவர்க்குக் கூறுவனே.

**தெறித்து** மணிக ளலைசிறக்குந் திருவா ழொற்றித் தேவரெனை
வறித்திங் கெளியேன் வருந்தாமல் மாலை யிட்ட நாளலது
மறித்து மொருநாள் வந்தென்னை மருவி யணைய நானறியேன்
குறித்திங்குழன்றேன் மாதேயென் குறையை யெவர்க்குக் கூறுவனே.

**மின்னே** டொக்கும் வேணியினர் விமல ரொற்றி வாணரெனைத்
தென்னே டொக்க மாலையிட்டுச் சென்றார் பின்பு சேர்ந்தறியார்
என்னே டொத்த பெண்களெலா மேசி நகைக்க விடருழந்தேன்
கொன்னே டொத்த கண்ணையென் குறையை யெவர்க்குக் கூறுவனே.

**உடுக்கு** மதளா ரொற்றியினு ருலகம் புகழு முத்தமனார்
தொடுத்திங் கெனக்கு மாலையிட்ட சுகமே யன்றி யென்னுடனே
படுத்து மறியா ரெனக்குரிய பரிவிற் பொருளோ ரெள்ளளவுங்
கொடுத்து மறியார் மாதேயென் குறையை யெவர்க்குக் கூறுவனே.

**உழையொன்** றணிகைத் தலமுடையா ரொற்றியுடையா ரென்றனக்கு
மழையொன் றலர்பூ மாலையிட்டார் மறித்தும் வந்தா ரல்லரடி
பிழையொன்றறியேன்பெண்களெலாம்பேசிநகைக்கப்பெற்றேன்காண்
குழையொன் றியகண்மாதேயென் குறையை யெவர்க்குக் கூறுவனே.

**ஏடார்** பொழில்சூ ழொற்றியினு ரென்கண் ணனையா ரென்றலைவர்
பீடார் மாலை யிட்டதன்றிப் பின்னோர் சுகமும் பெற்றறியேன்
வாடாக் காதற் பெண்களெலாம் வலது பேச நின்றனடி
கோடார் கொங்கை மாதேயென் குறையை யெவர்க்குக் கூறுவனே.

**கஞ்ச** னறியா ரொற்றியினர் கண்மூன் றுடையார் கனவினிலும்
வஞ்ச மறியா ரென்றனக்கு மாலை யிட்ட தொன்றல்லான்
மஞ்ச மதனி லென்னோடு மருவி யிருக்க நானறியேன்
கொஞ்ச மதிநேர் நுதலாயென் குறையை யெவர்க்குக் கூறுவனே. 14

**ஆல** மிருந்த களத்தழக ரணிசே ரொற்றி யாலயத்தார்
சால வெனக்கு மாலையிட்ட தன்மை யொன்றே யல்லாது
கால நிரம்ப வவர்புயத்தைக் கட்டி யணைந்த தில்லையடி
கோல மதிவாண் முகத்தாயென் குறையை யெவர்க்குக் கூறுவனே

**நெய்தற்** பணைசூ ழொற்றியினர் நிருத்தம் பயில்வார் மாலயனும்
எய்தற்கரியார் மாலையிட்டா ரெனக்கென் றுரைக்கும் பெருமையல்லால்
உய்தற் கடியேன் மனையின்கண் ணொருநா ளேனு முற்றறியார்
கொய்தற் கரிதாங் கொடியேயென் குறையை யெவர்க்குக் கூறுவனே.

**போர்க்கு** மரியார் மால்பிரமன் போகி முதலாம் புங்கவர்கள்
யார்க்கு மரியா ரெனக்கெளிய ராகி யென்னை மாலையிட்டார்
ஈர்க்கும் புகுதா முலைமதத்தை யின்னுந் தவிர்த்தா ரல்லரடி
கூர்க்கு நெடுவேற் கண்ணுயென் குறையை யெவர்க்குக் கூறுவனே.17

**இறையா** ரொற்றி யூரினிடை யிருந்தா ரினியா ரென்கணவர்
மறையா ரெனக்கு மாலையிட்டார் மருவா ரென்னை வஞ்சனையோ
பொறையா ரிரக்க மிகவுடையார் பொய்யொன் றுரையார் பொய்யலடி
குறையா மதிவாண் முகத்தாயென் குறையை யெவர்க்குக் கூறுவனே.

**உடுப்பார்** கரித்தோ லொற்றியெனு மூராரென்னை யுடையவனுர்
மடுப்பா ரின்ப மாலையிட்டார் மருவா ரெனது பிழையுரைத்துக்
கெடுப்பா ரில்லை யென்சொலினுங் கேளா ரெனது கேள்வரவர்
கொடுப்பா ரென்றே மாதேயென் குறையை யெவர்க்குக் கூறுவனே.

**எந்தில்** வருவா ரொற்றியுளா ரென்று யகனு ரெனக்கினியார்
வருதி யெனவே மாலையிட்டார் வந்தா லொன்றும் வாய்திறவார்
கருதி யவர்தங் கட்டளையைக் கடந்து நடந்தே னல்லவடி
[1]குருகுண் கரத்தா யென்னடியென் குறையை யெவர்க்குக் கூறுவனே.

**மாவென்** றுரித்தார் மாலையிட்ட மணுள ரென்றே வந்தடைந்தால்
வாவென் றுரையார் போவென்னுர் மௌனஞ் சாதித்திருந்தனர்காண்
ஆவென் றலறிக் கண்ணீர்விட் டழுதாற் றுயர மாறுமடி
[2]கோவென் றிருவேற்கொண்டாயென்குறையையெவர்க்குக்கூறுவனே.

**நாட்டும்** புகழார் திருவொற்றி நகர்வாழ் சிவனுர் நன்மையெலாங்
காட்டும் படிக்கு மாலையிட்ட கணவ ரெனவோர் காசளவிற்
கேட்டு மறியேன் தந்தறியார் கேட்டா லென்ன விளையுமடி
கோட்டு மணிப்பூண் முலையாயென் குறையை யெவர்க்குக் கூறுவனே.

**வெற்பை** வளைத்தார் திருவொற்றி மேவி யமர்ந்தா ரவரெனது
கற்பை யழித்தார் மாலையிட்டுக் கணவ ராணு ரென்பதல்லாற்
சிற்ப மணிமே டையிலென்னைச் சேர்ந்தா ரென்ப தில்லையடி
கொற்பை யரவி னிடையாயென் குறையை யெவர்க்குக் கூறுவனே

[1]குருகு என்பது — கைவளை. கோ என்பது — அம்பு.

என்ன கொடுத்துங் கிடைப்பரியா ரெழிலா ரொற்றி நாதரெனைச்
சின்ன வயதின் மாலையிட்டுச் சென்றார் சென்ற திறனல்லால்
இன்னு மருவ வந்திலர்காண் யாதோ வவர்தம் மெண்ணமது
கொன்னுண் வடிவேற்கண்ணாயென் குறையையெவர்க்குக்கூறுவனே.

**கரும்பி** னினியார் கண்ணுதலார் கடிசே ரொற்றிக் காவலனார்
இரும்பின் மனத்தென் றனைமாலை யிட்டா ரிட்ட வன்றலது
திரும்பி யொருகால் வந்தென்னைச் சேர்ந்து மகிழ்ந்த தில்லையடி
குரும்பை யனைய முலையாயென் குறையை யெவர்க்குக் கூறுவனே. 25

**தீது** தவிர்ப்பார் திருவொற்றித் தியாக ரழியாத் திறத்தரவர்
மாது மகிழ்தி யெனவென்னை மாலை யிட்டார் மாலையிட்ட
போதுகண்ட திருமுகத்தைப் போற்றி மறித்துங் கண்டறியேன்
கோது கண்டேன் மாதேயென் குறையை யெவர்க்குக் கூறுவனே. 27

**வென்றிக்** கொடிமேல்விடையுயர்த்தார்மேலாரொற்றி யூரரென்பாற்
சென்றிக் குளிர்பூ மாலையிட்டார் சேர்ந்தா ரல்லர் யானவரை
அன்றிப் பிறரை நாடினனோ வம்மா வொன்று மறியனடி
குன்றிற் றுயர்கொண்டழுமெனது குறையையெவர்க்குக் கூறுவனே.

**தோளா** மணிநேர் வடிவழகர் சோலை சூழ்ந்த வொற்றியினார்
மாளா நிலைய ரென்றனக்கு மாலை யிட்டார் மருவிலர்காண்
கேளாய் மாதே யென்னிடையே கெடுதி யிருந்த தெனினுமதைக்
கோளா ருரைப்பாரென்னடியென் குறையை யெவர்க்குக் கூறுவனே.

**வாடா** திருந்தேன் மழைபொழியு மலர்க்கா வணஞ்சூ ழொற்றியினார்
ஏடா ரணிபூ மாலையெனக் கிட்டா ரவர்க்கு மாலையிட்டேன்
தேடா திருந்தே னல்லடியான் தேடி யருகிற் சேர்ந்துமெனைக்
கூடா திருந்தா ரென்னடியென் குறையை யெவர்க்குக் கூறுவனே. 29

**நலத்திற்** சிறந்த வொற்றிநகர் நண்ணு மெனது நாயகனார்
வலத்திற் சிறந்தார் மாலையிட்டு மறித்து வருவார் வாராரேல்
நிலத்திற் சிறந்த வுறவினர்க ணிந்தித் தையோ வெனைத்தமது
குலத்திற் சேரா ரென்னடியென் குறையை யெவர்க்குக் கூறுவனே.

**ஈர்ந்தே** னளிசூ ழொற்றியுளா ரென்கண் மணியா ரென்கணவர்
வார்ந்தேன் சடையார் மாலையிட்டும் வாழா தலைந்து மனமெலிந்து
சோர்ந்தேன் பதைத்துத் துயர்க்கடலைச் சூழ்ந்தேனின்னுந் துடிக்கின்றேன்
கூர்ந்தேன்குழலாயென்னடியென் குறையை யெவர்க்குக் கூறுவனே.

திருச்சிற்றம்பலம்

திருவொற்றியூர்

## 4. திருவுலா வியப்பு

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

**வெள்ளச்** சடையார் விடையார்செவ் வேலார் நூலார் மேலார்தம்
உள்ளத் துறைவார் நிறைவார்நல் லொற்றித் தியாகப் பெருமானுர்
வள்ளற் குணத்தார் திருப்பவனி வந்தா ரென்று ரம்மொழியை
விள்ளற் குள்ளே மனமென்னை விட்டங் கவர்முன் சென்றதுவே. 1

**அந்தா** ரணியுஞ் செஞ்சடையா ரடையார் புரமூன் றவையனலின்
உந்தா நின்ற வெண்ணகையா ரொற்றித் தியாகர் பவனியிங்கு
வந்தா ரென்று ரந்தோநான் மகிழ்ந்து காண வருமுன்னம்
மந்தா கினிபோன் மனமென்னை வஞ்சித் தவர்முன் சென்றதுவே. 2

**பொன்னேர்** சடையார் கீளுடையார் பூவை தனையோர்புடையுடையார்
தென்னேர் பொழில்சூ ழொற்றியூர்த் திகழுந் தியாகர் திருப்பவனி
இன்னே வந்தா ரென்றூர்நா னெழுந்தே ணனங் கெழுவதற்கு
முன்னே மனமென் றனைவிடுத்து முந்தி யவர்முன் சென்றதுவே. 3

**காண** வினியா ரென்னிரண்டு கண்க ளனையார் கடல்விடத்தை
ஊணி னுகர்ந்தா ருயர்ந்தார்நல் லொற்றித் தியாகப் பெருமானுர்
மாண வீதி வருகின்று ரென்றூர் காண வருமுன்னன்
நாண வெனைவிட் டென்மனந்தா னயந்தங் கவர்முன் சென்றதுவே. 4

**செழுந்தெண்** கடற்றெள் ளமுதனையார் தியாக ரெனுமோர் திருப்பெயரார்
கொழுந்தண் பொழில்சூ ழொற்றியினுர் கோலப் பவனியென்றூர்நான்
எழுந்திங் கவிழ்ந்த கலைபுனைந்தங் கேகு முன்ன ரெனைவிடுத்தே
அழுந்து நெஞ்சம் விழுந்துகூத் தாடி யவர்முன் சென்றதுவே. 5

**சால** மாலு மேலுமிடந் தாலு மறியாத் தழலுருவார்
சேலும் புனலுஞ் சூழொற்றித் திகழுந் தியாகப் பெருமானுர்
பாலுந் தேனுங் கலந்ததெனப் பவனி வந்தா ரென்றனர்யான்
மேலுங் கேட்கு முன்னமனம் விட்டங் கவர்முன் சென்றதுவே. 6

**பின்றாழ்** சடையார் தியாகரெனப் பேசு மருமைப் பெருமானுர்
மன்றூர் நடத்தா ரொற்றிதனில் வந்தார் பவனி யென்றூர்நான்
நன்றூத் துகிலைத் திருத்துமுன்ன நலஞ்சேர் கொன்றை நளிர்ப்பூவின்
மென்றூர் வாங்க மனமென்னை விட்டங் கவர்முன் சென்றதுவே. 7

**கண்ணூர்** நுதலார் மணிகண்டர் கனக வரையாங் கனசிலையார்
பெண்ணூர் பாகர் தியாகரெனப் பேசு மருமைப் பெருமானுர்
தண்ணூர் பொழில்சூ ழொற்றிதனிற் சார்ந்தார் பவனியென்றனர்நான்
நண்ணு முன்ன மென்மனந்தா னடி யவர்முன் சென்றதுவே. 8

**ஈமப்** புறங்காட் டெரியாடு மெழிலார் தில்லை யினிதமர்வார்
சேமப் புலவர் தொழுமொற்றித் திகழுந் தியாகப் பெருமானார்
வாமப் பாவை யொடும்பவனி வந்தா ரென்றா ரதுகாணப்பான்
காமப் பறவை போலென்மனங் கடுகி யவர்முன் சென்றதுவே. 9

**சூலப்** படையார் பூதங்கள் சூழும் படையார் துதிப்பவர்தஞ்
சீலப் பதியார் திருவொற்றித் திகழுந் தியாகப் பெருமானார்
நீலக் களத்தார் திருப்பவனி நேர்ந்தா ரென்றா ரதுகாணப்பான்
சாலப் பசித்தார் போன்மனந்தான் தாவி யவர்முன் சென்றதுவே. 10

திருச்சிற்றம்பலம்

## 5. சல்லாப வியன்மொழி

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

**காது** நடந்த கண்மடவாள் கடிமா மனைக்குக் காலவருந்தத்
தூது நடந்த பெரியவர்சிற் சுகத்தா ரொற்றித் தொன்னகரார்
வாது நடந்தான் செய்கின்றீரோ மாது நடந்து வாவென்றார்
போது நடந்த தென்றேனெப் போது நடந்த தென்றாரே. 1

**கச்சை** யிடுவார் படவரவைக் கண்மூன் றுடையார் வாமத்திற்
பச்சை யிடுவா ரொற்றியுள்ளார் பரிந்தென் மனையிற் பலிக்குற்றார்
இச்சை யிடுவா ருண்டியென்றா ருண்டே னென்றே னெனக்கின்று
பிச்சை யிடுவா யென்றார்நான் பிச்சை யடுவே னென்றேனே. 2

**கருதற்** கரியார் கரியார்முன் காணக் கிடையார் கழலடியார்
மருதத் துறைவார் திருவொற்றி வாண ரின்றென் மனைக்குற்றார்
தருதற் கென்பா லின்றுவந்தீ ரென்றே னதுநீ தானென்றார்
வருதற் குரியீர் வாருமென்றேன் வந்தே னென்று மறைந்தாரே. 3

**கல்லை** வளைக்கும் பெருமானார் கழிசூ ழொற்றிக் கடிநகரார்
எல்லை வளைக்குந் தில்லையுள்ளா ரென்றன் மனைக்குப் பலிக்குற்றார்
அல்லை வளைக்குங் குழலன்ன மன்பி னுதவா விடிலோபம்
இல்லை வளைக்கு மென்றார்நா னில்லை வளைக்கு மென்றேனே 4

**வெற்றி** யிருந்த மழுப்படையார் விடையார் மேரு வில்லுடையார்
பெற்றி யிருந்த மனத்தார்தமுட் பிறங்குந் தியாகப் பெருமானார்
சுற்றி யிருந்த பெண்களெல்லாஞ் சொல்லி நகைக்க வருகணைந்தார்
ஒற்றி யிருமென் றுரைத்தேனுன் னொற்றி யிருந்தே னென்றாரே 5

**விண்டங்** கமரர் துயர்தவிர்க்கும் வேற்கை மகனை விரும்பினரோ
வண்டங் கிசைக்கும் பொழிலொற்றி வதிவா ரென்றன் மனையடைந்தார்
தண்டங் கழற்கு நிகரானீர் தண்டங் கழற்கென் றேன்மொழியாற்
கண்டங் கறுத்தா யென்றார்நீ கண்டங் கறுத்தீ ரென்றேனே. 6

**விற்கண்** டாத நுதன்மடவாள் வேட்ட நடன வித்தகனார்
சொற்கண் டாத புகழொற்றித் தூய ரின்றென் மனைபுகுந்தார்
நிற்கண் டார்கண் மயலடைவா ரென்றார் நீர்தா நிகழ்த்தியசொற்
கற்கண் டாமென் றுரைத்தேனென் கற்கண் டாமென் றுரைத்தாரே. 7

**விடையார்** கொடிமே லுயர்த்தருளும் வேத கீதப் பெருமானார்
உடையா ரொற்றி யூரமர்ந்தா ருவந்தென் மனையி னின்றடைந்தார்
இடையா வையமென் றார்நா னிடைதா னைய மென்றேனற்
கடையா ரளியா ரென்றார்கட் கடையா ரளியா ரென்றேனே. 8

**நாடொன்** றியசீர்த் திருவொற்றி நகரத் தமர்ந்த நாயகனார்
ஈடொன் றில்லா ரென்மனையுற் றிருந்தார் பூவுண் டெழில்கொண்ட
மாடொன்றெங்கேயென்றேனுன் மனத்திலென்றார்மகிழ்ந்தமர்வெண்
காடொன் றுடையீரென்றேன்செங் காடொன் றுடையேனென்றாரே.9

**சொல்லா** லியன்றதொடைபுனைவார் தூயா ரொற்றித்தொன்னகரார்
அல்லா லியன்ற மனத்தார்பா லணுகா ரென்றன் மனைபுகுந்தார்
வல்லா லியன்ற முலையென்றார் வல்லார் நீரென் றேனுன்சொற்
கல்லா லியன்ற தென்றார்முன் கல்லா லியன்ற தென்றேனே. 10

திருச்சிற்றம்பலம்

திருவொற்றியூர்

## 6. இன்பக்கிளவி

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

**தில்லை** வளத்தா ரம்பலத்தார் திருவேட் களத்தார் செவ்வணத்தார்
கல்லை வளைத்தா ரென்றன்மனக் கல்லைக் குழைத்தார் கங்கணத்தால்
எல்லை வளத்தார் தியாகர்தமை யெழிலா ரொற்றி யெனுநகரில்
ஒல்லை வளைத்துக் கண்டேனா னென்று முரையா திருந்தாரே. 1

**இருந்தார்** திருவா ரூரகத்தி லென்னைக் கொடியா ரிதயத்திற்
பொருந்தார்கொன்றைப் பொலன்பூந்தார் புனைந்தார்தம்மைப்புகழ்ந்தார்கண்
விருந்தார் திருந்தார் புரமுன்றீ விளைத்தா ரொற்றி நகர்கிளைத்தார்
தருந்தார் காம மருந்தாரித் தாணி யிடத்தே தருவாரே. 2

**தருவார்** தருவார் செல்வமுதற் றருவா ரொற்றித் தலமமர்வார்
மருவார் தமது மனமருவார் மருவார் கொன்றை மலர்புனைவார்
திருவார் புயனு மலரோனுந் தேடுந் தியாகப் பெருமானார்
வருவார் வருவா ரெனநின்று வழிபார்த் திருந்தேன் வந்திலரே. 3

**வந்தா** ரல்லர் மாதேநீ வருந்தே லென்று மார்பிலங்குந்
தந்தா ரல்லல் தவிர்ந்தோங்கத் தந்தா ரல்லர் தயையுடையார்
சந்தார் சோலை வளரொற்றித் தலத்தார் தியாகப் பெருமானார்
பந்தார் முலையார்க் கவர்கொடுக்கும் பரிசே தொன்றும் பார்த்திலமே.4

இலமே செறிததார் தாயரினி யெனசெய குவதென றிருநதேற்கு
நலமே தருவார போலவநதென னலமே கொணடு நழுவினாகாண
உலமே யனைய திருத்தோளா ரொறறித தியாகப் பெருமானார்
வலமே வலமென வலமவல மாதே யினியென வழுததுவதே. 5

**வழுத்தார்** புரததை யெரித்தார்நல வலத்தார் நடன மலரடியார்
செழுததார மாரபா திருவொற்றித் திகழுந தியாகப பெருமானார
கழுததார விடத்தார தமதழகைக கணடு கனிநது பெருஙகாமம
பழுததார் தமமைக கலநதிடநற் பததா ரெனறும பார்ததிலரே.

**பாரார** திருநதார தமதுமுகம பாரதது வருநதும பாவைதனைச
சேரார திருநதார திருவொற்றித திகழுந தியாகப பெருமானார
வாரா திருநதா ரினனுமிவள வருததங கேட்டு மாலைதனைத
தாரா திருநதார் சலமகளைத் தாழநத சடையிற றரித்தாரே. 7

**சடையிற்** றரிததாரொருததிதனைத தழுவிமகிழமறறொருபெண்ணைப்
புடையிற் றரிததார மகளேநீ போனா லெஙகே தரிப்பாரோ
கடையிற றரிதத விடமதனைக களததிற றரிததார் கரிததோலை
இடையிற் றரிததா ரொறறியூ ரிருநதா ரிருநதா ரெனனுளத்தே 8

**உளத்தே** யிருந்தார் திருவொறறி யூரிலிருநதா ருவர்விடத்தைக
களததே வதிநதா ரவரெனறன கணணுள வதிநதா கடலமுதாம
இளததே மொழியா யாதலினா லிமையே னிமைதத லியலபனறே
வளததே மனததும புகுகினறா வருநதேன சறறும வருநதேனே.

**வருந்தேன்** மகளீ ரெனையொவவா வளஞசே ரொறறி மனனவனார
தருநதே னமுத முணடெனறுஞ சலிய வாழவிற றருககிமகிழந
திருநதேன மனனா ரெனைபபிரியா ரெனறும புணாசசிக கேதுவிதா
மருநதேன மையற பெருநோயை மறநதே னவரை மறநதிலனே. 10

திருச்சிற்றம்பலம

## 7. இன்பப் புகழ்ச்சி

அறுசீரக கழிநெடிலடி ஆசிரிய விருததம

திருச்சிற்றம்பலம

**மாடோன்** றுடையா ருணவினறி மணணுண டதுகாண மலரோனறன
ஓடொன றுடையா ரொறறிவைததா ருரை மகிழ்வோ டுவநதாலங
காடொன றுடையார கணடமட்டுங கறுததார பூத கணததோடும
ஈடொன றுடையார மகளேநீ யேதுக கவரை விழைநதனையே

**பித்த** ரெனும்பேர் பிறங்கநின்றார் பேயோ டாடிப் பவுரிகொண்டார்
பத்தர் தமக்குப் பணிசெய்வார் பணியே பணியாப் பரிவுற்றார்
சித்தர் திருவா ழொற்றியினர் தியாக ரென்றன் கலைகவர்ந்த
எத்த ரன்றே மகளேநீ யேதுக் கவரை விழைந்தனையே. 2

**கடுத்தாழ்** களத்தார் கரித்தோலார் கண்ணுன் மதனைக் கரிசெய்தார்
உடுத்தார்முன்னோர்மண்ணோட்டை யொளித்த தொண்ட னெடும்வழக்குத்
தொடுத்தார் பாம்பும் புலியுமெச்சித் துதிக்க வொருகா லம்பலத்தில்
எடுத்தா ரன்றே மகளேநீ யேதுக் கவரை விழைந்தனையே. 3

**உரப்பார்** மிசையிற் பூச்சூட வொட்டார் சடைமே லொருபெண்ணைக்
கரப்பார் மலர்தூ வியமதனைக் கண்ணுற் சுட்டார் கல்லெறிந்தோன்
வரப்பார் மிசைக்கண்வாழ்ந்திருக்கவைத்தார்பலிக்குமனைதொறும்போய்
இரப்பா ரன்றே மகளேநீ யேதுக் கவரை விழைந்தனையே. 4

**கருது** மவரை வெளிக்கிழுப்பார் காணு தெல்லாங் காட்டிநிற்பார்
மருதி லுறைவா ரொற்றிதனில் வதிவார் புரத்தை மலைவில்லாற்
பொருது முடிப்பார் போனகைப்பார் பூவுண் டுறங்கும் புதுவெள்ளை
எருதில் வருவார் மகளேநீ யேதுக் கவரை விழைந்தனையே. 5

**ஆக்க** மில்லார் வறுமையிலா ரருவ மில்லா ருருவமிலார்
தூக்க மில்லார் சுகமில்லார் துன்ப மில்லார் தோன்றுமல
வீக்க மில்லார் குடும்பமது விருத்தி யாக வேண்டுமெனும்
ஏக்க மில்லார் மகளேநீ யேதுக் கவரை விழைந்தனையே. 6

**ஊரு** மில்லா ரொற்றிவைத்தா ருறவொன் றில்லார் பகையில்லார்
பேரு மில்லா ரெவ்விடத்தும் பிறவா ரிறவார் பேச்சில்லார்
நேரு மில்லார் தாய்தந்தை நேயர் தம்மோ டுடன்பிறந்தோர்
யாரு மில்லார் மகளேநீ யேதுக் கவரை விழைந்தனையே. 7

**தங்கு** மருப்பார் கண்மணியைத் தரிப்பா ரென்பின் றார்புனைவார்
துங்கு மருட்கார் முகிலனையார் சொல்லு நமது சொற்கேட்டே
இங்கு மிருப்பா ரங்கிருப்பா ரெல்லா மியல்பிற் றமுணர்ந்தே
எங்கு மிருப்பார் மகளேநீ யேதுக் கவரை விழைந்தனையே. 8

**துத்திப்** படத்தார் சடைத்தலையார் தொலையாப் பலிதேர் தொன்மையினர்
முத்திக் குடையார் மண்ணெடுப்பார் மொத்துண் டுழல்வார் மொய்கழற்காம்
புத்திக் குரிய பத்தர்கடம் பொருளை யுடலை யாவையுமே
எத்திப் பறிப்பார் மகளேநீ யேதுக் கவரை விழைந்தனையே. 9

**மாறித்** திரிவார் மனமடையார் வணங்கு மடியார் மனந்தோறும்
வீறித் திரிவார் வெறுவெளியின் மேவா நிற்பார் விறகு விலை
கூறித் திரிவார் குதிரையின்மேற் கொள்வார் பசுவிற் கோல்வளையோ
டேறித் திரிவார் மகளேநீ யேதுக் கவரை விழைந்தனையே. 10

திருச்சிற்றம்பலம்

திருவொற்றியூர்

# 8. திருவுலாத்திறம்

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

**தேனார்** கமலத் தடஞ்சூழுந் திருவா ழொற்றித் தியாகரவர்
வானோ ரமரர் முனிவர்தொழ மண்ணோர் வணங்க வரும்பவனி
தானார் வங்கொண் டகமலரத் தாழ்ந்து சூழ்ந்து கண்டலது
கானா ரலங்கற் பெண்ணேநான் கண்க ளுறக்கங் கொள்ளேனே. 1

**திருமால்** வணங்கு மொற்றிநகர் செழிக்குஞ் செல்வத் தியாகரவர்
கருமா லகற்றுந் தொண்டர்குழாங் கண்டு களிக்க வரும்பவனி
மருமாண் புடைய மனமகிழ்ந்து மலர்க்கை கூப்பிக் கண்டலது
பெருமான் வடுக்கட் பெண்ணேநான் பெற்றா ளோடும் பேசேனே. 2

**சேலார்** தடஞ்சூ ழொற்றிநகர் சேருஞ் செல்வத் தியாகரவர்
ஆலார் களமேல் விளங்குமுக மழகு ததும்ப வரும்பவனி
நாலா ரணஞ்சூழ் வீதியிடை நாடிப் புகுந்து கண்டலது
பாலார் குதலைப் பெண்ணேநான் பாயிற் படுக்கை பொருந்தேனே. 3

**செல்வந்** துறழும் பொழிலொற்றித் தெய்வத் தலங்கொள் தியாகரவர்
வில்வந் திகழுஞ் செஞ்சடையின் விழுங்கி விளங்க வரும்பவனி
சொல்வந் தோங்கக் கண்டுநின்று தொழுது துதித்த பின்னலது
வல்வந் தளகப் பெண்ணேநா னவிழ்ந்த குழலு முடியேனே. 4

**சேவார்** கொடியா ரொற்றிநகர் திகழுஞ் செல்வத் தியாகரவர்
பூவார் கொன்றைப் புயங்கண்மனம் புணரப் புணர வரும்பவனி
ஓவாக் களிப்போ டகங்குளிர வுடலங் குளிரக் கண்டலது
பாவார் குதலைப் பெண்ணேநான் பரிந்து நீரும் பருகேனே. 5

**சிற்றம்** பலத்தா ரொற்றிநகர் திகழுஞ் செல்வத் தியாகரவர்
உற்றங் குவந்தோர் வினைகளெலா மோட நாடி வரும்பவனி
சுற்றுங் கண்கள் களிகூரத் தொழுது கண்ட பின்னலது
முற்றுங் கனிவாய்ப் பெண்ணேநான் முடிக்கோர் மலரு முடியேனே.

**சிந்தைக்** கினியா ரொற்றிநகர் திகழுஞ் செல்வத் தியாகரவர்
சந்தத் தடந்தோள் கண்டவர்கள் தம்மை விழுங்க வரும்பவனி
முந்தப் புகுந்து புளகமுடன் மூடிக் குளிரக் கண்டலது
கந்தக் குழல்வாய்ப் பெண்ணேநான் கண்ணி ரொழியக் காணேனே.

**தென்னஞ்** சோலை வளரொற்றி யூர்வாழ் செல்வத் தியாகரவர்
பின்னுஞ் சடைமேற் பிறைவிளங்கிப் பிறங்கா நிற்க வரும்பவனி
மன்னுங் கரங்கள் தலைகுவித்து வணங்கி வாழ்த்திக் கண்டலது
துன்னுந் துவர்வாய்ப் பெண்ணேநான் சோறெள் ளளவு முண்ணேனே.

சிந்தா குலந்தீர்த் தருளொற்றி யூர்வாழ் செல்வத் தியாகரவர்
வந்தார் கண்டா ரவர்மனத்தை வாங்கிப் போக வரும்பவனி
நந்தா மகிழ்வு தலைசிறப்ப நாடி யோடிக் கண்டலது
பந்தார் மலர்க்கைப் பெண்ணேநான் பாட லாடல் பயிலேனே. 9

செக்கர்ச் சடையா ரொற்றிநகர்ச் சேருஞ் செல்வத் தியாகரவர்
மிக்கற் புதவாண் முகத்தினகை விளங்க விரும்பி வரும்பவனி
மக்கட் பிறவி யெடுத்தபயன் வசிக்க வணங்கிக் கண்டலது
நக்கற் கியைந்த பெண்ணேநான் ஞாலத் தெவையு நயவேனே. 10

திருச்சிற்றம்பலம்

திருவொற்றியூர்

## 9. வியப்புமொழி

### நற்றாய் நயத்தல்

*அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்*

திருச்சிற்றம்பலம்

மாதர் மணியே மகளேநீ வாய்த்த தவந்தான் யாதறியேன்
வேத ரனந்தர் மாலனந்தர் மேவி வணங்கக் காண்பரியார்
நாதர் நடன நாயகனார் நல்லோ ருளத்துள் நண்ணுகின்றோர்
கோத றியாத் தியாகர்தமைக் கூடி யுடலங் குளிர்ந்தனையே. 1

திருவிற் றோன்று மகளேநீ செய்த தவந்தான் யாரறிவார்
மருவிற் றோன்றுங் கொன்றையந்தார் மார்ப ரொற்றி மாநகரார்
கருவிற் றோன்று மெங்களுயிர் காக்க நினைத்த கருணையினாற்
குருவிற் றோன்றுந் தியாகர்தமைக் கூடி யுடலங் குளிர்ந்தனையே. 2

என்னு ருயிர்போன் மகளேநீ யென்ன தவந்தா னியற்றினையோ
பொன்னார் புயனு மலரோனும் போற்றி வணங்கும் பொற்பதத்தார்
தென்னு ரொற்றித் திருநகரார் தியாக ரெனுமோர் திருப்பெயரார்
கொன்னார் சூலப் படையவரைக் கூடி யுடலங் குளிர்ந்தனையே. 3

சேலை நிகர்கண் மகளேநீ செய்த தவந்தான் செப்பரிதான்
மாலை யயனை வானவரை வருத்தும் படிக்கு மதித்தெழுந்த
வேலை விடத்தை மிடற்றணிந்தார் வீட்டு நெறியா மரசியற்செங்
கோலை யளித்தா ரவர்தம்மைக் கூடி யுடலங் குளிர்ந்தனையே. 4

தேனேர் குதலை மகளேநீ செய்த தவந்தா னெத்தவமோ
மானேர் கரத்தார் மழவிடைமேல் வருவார் மருவார் கொன்றையினார்
பானேர் நீற்றர் பசுபதியார் பவள வண்ணர் பல்சடைமேற்
கோனேர் பிறையா ரவர்தம்மைக் கூடி யுடலங் குளிர்ந்தனையே. 5

வில்லார் நுதலாய் மகளேநீ மேலை நாட்செய் தவமெதுவோ
கல்லா ருள்ளங் கலவாதார் காம னெரியக் கண்விழித்தார்
வில்லார் விசையற் கருள்புரிந்தார் விளங்கு மொற்றி மேவிநின்றார்
கொல்லா நெறியா ரவர்தம்மைக் கூடி யுடலங் குளிர்ந்தனையே. 6

**அஞ்சொற்** கிளியே மகளேநீ யரிய தவமே தாற்றினையோ
வெஞ்சொற் புகலார் வஞ்சர்தமை மேவார் பூவார் கொன்றையினர்
கஞ்சற் கரியார் திருவொற்றிக் காவ லுடையா ரின்மொழியாற்
கொஞ்சத் தருவா ரவர்தம்மைக் கூடியுடலங் குளிர்ந்தனையே. 7

**பூவாய்** வாட்கண் மகளேநீ புரிந்த தவந்தா னெத்தவமோ
சேவாய் விடங்கப் பெருமானர் திருமா லறியாச் சேவடியார்
காவாய்ந் தோங்குந் திருவொற்றிக் காவ லுடையா ரெவ்வெவர்க்குங்
கோவாய் நின்றா ரவர்தம்மைக் கூடி யுடலங் குளிர்ந்தனையே. 8

**மலைநேர்** முலையாய் மகளேநீ மதிக்குந் தவமே தாற்றினையோ
தலைநே ரலங்கற் றாழ்சடையார் சாதி யறியாச் சங்கரனார்
இலைநேர்தலைமூன் றொளிர்படையா ரெல்லா முடையா ரெருக்கின்மலர்க்
குலைநேர் சடையா ரவர்தம்மைக் கூடி யுடலங் குளிர்ந்தனையே. 9

**மயிலி** னியல்சேர் மகளேநீ மகிழ்ந்து புரிந்த தெத்தவமோ
வெயிலி னியல்சேர் மேனியினர் வெண்ணீ றுடையார் வெள்விடையார்
பயிலின் மொழியாள் பாங்குடையார் பணைசூழொற்றிப் பதியமர்ந்தார்
குயிலிற் குலவி யவர்தம்மைக் கூடி யுடலங் குளிர்ந்தனையே. 10

திருச்சிற்றம்பலம்

திருவொற்றியூர்

## 10. புணராவிரகு பொருந்துறு வேட்கையின் இரங்கல்

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

**உள்ளார்** புறத்தா ரொற்றியெனு மூரா ரொப்பென் றொன்றுமிலார்
வள்ளா லென்று மறைதுதிக்க வருவா ரின்னும் வந்திலரே
எள்ளா திருந்த பெண்களெலா மிகழா நின்றா ரினியமொழித்
தெள்ளா ரமுதே யென்னடிநான் செய்த தொன்றுந் தெரிந்திலனே.1

**மாலே** றுடைத்தாங் கொடியுடையார் வளஞ்சே ரொற்றி மாநகரார்
பாலே றணிநீற் றழகரவர் பாவி யேனைப் பரிந்திலரே
கோலேறுண்ட மதன்கரும்பைக் குனித்தா னம்புங் கோத்தனன்கரண்
சேலே றுண்க ணென்னடிநான் செய்வ தொன்றுந் தெரிந்திலனே.2

**பொய்ய** ருளத்துப் புகுந்தறியார் போத னெடுமால் காண்பரிதாம்
ஐயர் திருவா ழொற்றிநக ரமர்ந்தா ரின்னு மணைந்திலரே
வைய மடவார் நகைக்கின்றார் மாரன் கணையாற் றிகைக்கின்றேன்
செய்ய முகத்தா யென்னடிநான் செய்வ தொன்றுந் தெரிந்திலனே.3

நந்திப் பரியார் திருவொற்றி நாத ரயன்மா றடுகினுஞ்
சந்திப் பரியா ரென்னருமைத் தலைவ ரின்னுஞ் சார்ந்திலரே
அந்திப் பொழுதோ வந்ததினி யந்தோ மதிய மனல்சொரியுஞ்
சிந்திப் புடையே னென்னடிநான் செய்வ தொன்றுந் தெரிந்திலனே.4

என்ன ருயிர்க்கோர் துணையானா ரென்னாண் டவனா ரென்னுடையார்
பொன்னா ரொற்றி நகரமர்ந்தார் புணர்வா ரின்னும் போந்திலரே
ஒன்னா ரெனவே தாயுமெனை யொறுத்தா ளுனு முயிர்பொறுத்தேன்
தென்னார் குழலா யென்னடிநான் செய்வ தொன்றுந் தெரிந்திலனே.5

மாணி யுயிர்காத் தந்தகனை மறுத்தா ரொற்றி மாநகரார்
காணி யுடையா ருலகுடையார் கனிவா யின்னுங் கலந்திலரே
பேணி வாழாப் பெண்ணெனவே பெண்க ளெல்லாம் பேசுகின்றார்
சேணின் றிழிந்தா யென்னடிநான் செய்வதொன்றுந் தெரிந்திலனே.6

வன்சொற் புகலா ரோருயிரும் வருந்த நினையார் மனமகிழ
இன்சொற் புகல்வா ரொற்றியுளா ரென்னா யகனார் வந்திலரே
புன்சொற்செவிகள்புகத்துயரம்பொறுத்துழடியேன்புலம்பிகின்றேன்
தென்சொற்கிளியே யென்னடிநான் செய்வதொன்றுந் தெரிந்திலனே.

எட்டிக் கனியு மாங்கனிபோ லினிக்க வுரைக்கு மின்சொலினர்
தட்டிற் பொருந்தா ரொற்றியில்வாழ் தலைவ ரின்னுஞ் சார்ந்திலரே
மட்டிற் பொலியு மலர்க்கணைசெல் வழியே வழிசெல் வழியன்றே
தெட்டிற் பொலியும் விழியாய்நான் செய்வ தொன்றுந் தெரிந்திலனே.

காலை மலர்ந்த கமலம்போற் கவின்செய் முகத்தார் கண்ணுதலார்
சோலை மலர்ந்த வொற்றியினர் சோகந் தீர்க்க வந்திலரே
மாலை மலர்ந்த மையலேனை வசந்த மதனல் வளர்ந்ததையோ
சேலை விழியா யென்னடிநான் செய்வ தொன்றுந் தெரிந்திலனே. 9

உலக முடையா ரென்னுடைய வுள்ள முடையா ரொற்றியினர்
அலகில் புகழா ரென்றலைவ ரந்தோ வின்னு மணைந்திலரே
கலக முடையார் மாதரெலாங் கன்னெஞ் சுடையார் தூதரெலாந்
திலக முகத்தா யென்னடிநான் செய்வ தொன்றுந் தெரிந்திலனே.10

மாலு மறியா னயனறியான் மறையு மறியா வானவரெக்
காலு மறியா ரொற்றிநிற்குங் கள்வ ரவரைக் கண்டிலனே
கோலு மகளி ரலரொன்றே கோடா கோடி யென்பதல்லாற்
சேலுண் விழியா யென்னடிநான் செய்வ தொன்றுந் தெரிந்திலனே.11

உந்து மருத்தோ டைம்பூத மானா ரொற்றி யூரமர்ந்தார்
இந்து மிருந்துஞ் சடைத்தலையா ரென்பா லின்னு மெய்திலரே
சந்து பொருந்து வாரறியேன் றமிய ளாகத் தளர்கின்றேன்
சிந்துற் பவத்தா யென்னடிநான் செய்வ தொன்றுந் தெரிந்திலனே.12

**ஆட** லழக ரம்பலத்தா ரையா றுடையா ரன்பர்களோ(டு)
ஊட லறியா ரொற்றியினு ருவகை யோங்க வுற்றிலரே
வாட லெனவே யெனைத்தேற்று வாரை யறியேன் வாய்ந்தவரைத்
தேட லறியே னென்னடிநான் செய்வ தொன்றுந் தெரிந்திலனே.13

**தொழுது** வணங்குஞ் சுந்தரர்க்குத் தூது நடந்த சுந்தரனார்
அழுது வணங்கு மவர்க்குமிக வருளொற் றியினா ரணைந்திலரே
பொழுது வணங்கு மிருண்மாலைப் பொழுது முடுகிப் புகுந்ததுகாண்
செழுமை விழியாயென்னடிநான் செய்வ தொன்றுந் தெரிந்திலனே.14

**பாவ** மறுப்பார் பழியறுப்பார் பவமு மறுப்பா ரவமறுப்பார்
கோவ மறுப்பா ரொற்றியிலென் கொழுந ரின்னுங் கூடிலரே
தூவ மதனெங் கணைமாதர் தூறு தூவத் துயர்கின்றேன்
தேவ மடவா யென்னடிநான் செய்வ தொன்றுந் தெரிந்திலனே.15

**உயிர்க்குள்** ளுயிரா யுறைகின்றா ரொற்றி நகரார் பற்றிலரைச்
செயிர்க்கு ளழுத்தார் மணிகண்டத் தேவ ரின்னுஞ் சேர்ந்திலரே
வெயிற்கு மெலிந்த செந்தளிர்போல் வேளம் பதனுன் மெலிகின்றேன்
செயற்கை மடவா யென்னடிநான் செய்வ தொன்றுந் தெரிந்திலனே.

**ஊன** மடையா ரொற்றியினா ருரைப்பா ருள்ளத் துறைகின்றோர்
கான முடையார் காடுடையார் கனிவா யின்னுங் கலந்திலரே
மான முடையா ரெம்முறவோர் வாழா மைக்கே வருந்துகின்றார்
தீன மடையா யென்னடிநான் செய்வ தொன்றுந் தெரிந்திலனே.17

**மலையை** வளைத்தார் மால்விடைமேல் வந்தார் வந்தென் வளையினொடு
கலையை வளைத்தா ரொற்றியிலென் கணவ ரென்னைக் கலந்திலரே
சிலையை வளைத்தான் மதனம்பு தெரிந்தான் விடுக்கச் சினக்கின்றான்
திலக நுதலா யென்னடிநான் செய்வ தொன்றுந் தெரிந்திலனே. 18

**பிரமன்** றலையிற் பலிகொள்ளும் பித்த ரருமைப் பெருமானார்
உரமன் னியசீ ரொற்றிநக ருள்ளா ரின்னு முற்றிலரே
அரமன் னியவேற் படையன்றோ வம்மா வயலா ரலர்மொழிதான்
திரமன் னுகிலே னென்னடிநான் செய்வ தொன்றுந் தெரிந்திலனே.

**பவள** நிறத்தார் திருவொற்றிப் பதியி லமர்ந்தார் பரசிவனார்
தவள நிறநீற் றணியழகர் தமியேன் றன்னைச் சார்ந்திலரே
துவளு மிடைதா னிறமுலைக ளுள்ளா நின்ற தென்னளவோ
திவளு மிழையா யென்னடிநான் செய்வ தொன்றுந் தெரிந்திலனே.20

**வண்டார்** கொன்றை வளர்சடையார் மதிக்க வெழுந்த வல்விடத்தை
உண்டா ரொற்றி யூரமர்ந்தா ருடையா ரென்பா லுற்றிலரே
கண்டார் கண்ட படிபேசக் கலங்கிப் புலம்ப லல்லாது
செண்டார்முலையாயென்னடிநான் செய்வதொன்றுந் தெரிந்திலனே.21

**உணவை** யிழந்துந் தேவரெலா முணரா வொருவ ரொற்றியிலென்
கணவ ரடியேன் கண்ணகலாக் கள்வ ரின்னுங் கலந்திலரே
குணவ ரெனினுந் தாய்முதலோர் கூறா தெல்லாங் கூறுகின்றார்
திணிகொண் முலையா யென்னடிநான் செய்வ தொன்றுந் தெரிந்திலனே.

**வாக்குக்** கடங்காப் புகழுடையார் வல்லா ரொற்றி மாநகரார்
நோக்குக் கடங்கா வழகுடையார் நோக்கி யென்னை யணைந்திலரே
ஊக்கமிகுமார் கலியொலியென் னுயிர்மேன் மாறேற் றுரப்பொலிகாண்
டேக்கங் குழலா யென்னடிநான் செய்வதொன் றுந்தெரிந்திலனே. 23

**தரையிற்** கீறிச் சலந்தரனைச் சாய்த்தா ரந்தச் சக்கரமால்
வரையற் களித்தார் திருவொற்றி வாண ரின்னும் வந்திலரே
கரையிற் புணர்ந்த நாரைகளைக் கண்டேன் கண்ட வுடன்காதல்
திரையிற்புணர்ந்தேனென்னடிநான் செய்வதொன் றுந்தெரிந்திலனே.

**பெற்ற** மிவரும் பெருமானார் பிரம னறியாப் பேரொளியாய்
உற்ற சிவனார் திருவொற்றி யூர்வாழ் வுடையா ருற்றிலரே
எற்றென் றுரைப்பேன் செவ்வியவ ளேறு மட்டு மேறுகின்றாள்
செற்ற மொழியா ளென்னடிநான் செய்வதொன் றுந் தெரிந்திலனே.

**போக** முடையார் பெரும்பற்றப் புலியூ ருடையார் போதசிவ
யோக முடையார் வளரொற்றி யூர்வாழ வுடையா ருற்றிலரே
சோக முடையேன் சிறிதேனுந் துயிலோ வணையா குயிலொழியா
தேக மயர்ந்தே னென்னடிநான் செய்வ தொன்றுந் தெரிந்திலனே.

**தாமப்** புயனார் சங்கரனார் தாயி னினியார் தற்பரனார்
ஓமப் புகைவா னுறுமொற்றி யூர்வாழ் வுடையா ருற்றிலரே
காமப் பயலோ கணையெடுத்தான் கண்ட மகளிர் பழிதொடுத்தார்
சேமக் குயிலே யென்னடிநான் செய்வ தொன்றுந் தெரிந்திலனே. 27

**ஆரூ** ருடையா ரம்பலத்தா ராலங் காட்டா ரரசிலியார்
ஊரூர் புகழுந் திருவொற்றி யூரா ரின்னு முற்றிலரே
வாரூர் முலைக ளிடைவருத்த மனமொந் தயர்வ தன்றியினிச்
சீரூ ரணங்கே யென்னடிநான் செய்வ தொன்றுந் தெரிந்திலனே. 28

**காலங்** கடந்தார் மாலயன்றன் கருத்துங் கடந்தார் கதிகடந்தார்
ஞாலங் கடந்த திருவொற்றி நாத ரின்னு நண்ணிலரே
சாலங் கடந்த மனந்துணையாய்த் தனியே நின்று வருந்தலல்லாற்
சீலங் கடந்தே னென்னடிநான் செய்வ தொன்றுந் தெரிந்திலனே.29

**சங்கக்** குழையார் சடைமுடியார் சதுரர் மறையன் றலைநடிப்பார்
செங்கட் பணியார் திருவொற்றித் தேவ ரின்னுஞ் சேர்ந்திலரே
மங்கைப் பருவ மணமில்லா மலர்போ லொழிய வாடுகின்றேன்
திங்கண் முகத்தா யென்னடிநான் செய்வ தொன்றுந் தெரிந்திலனே.

திருச்சிற்றம்பலம்

திருவொற்றியூர்

# 11. குறியாராய்ச்சி

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

**நந்தி** மகிழ்வாய்த் தரிசிக்க நடனம் புரியு நாயகனார்
அந்தி நிறத்தார் திருவொற்றி யமர்ந்தா ரென்னை யணைவாரோ
புந்தி யிலளென் றணையாரோ யாதுந் தெரியேன் புலம்புகின்றேன்
சிந்தை மகிழக் குறமடவாய் தெரிந்தோர் குறிதான் செப்புவையே. 1

**தரும** விடையார் சங்கரனார் தகைசே ரொற்றித் தனிநகரார்
ஒருமை யளிப்பார் தியாகரென்னை யுடையா ரின்று வருவாரோ
மருவ நாளை வருவாரோ வாரா தென்னை மறப்பாரோ
கரும மறிந்த குறமடவாய் கணித்தோர் குறிதான் கண்டுரையே. 2

**ஆழி** விடையா ரருளுடையா ரளவிட் டறியா வழகுடையார்
ஊழி வரினு மழியாத வொற்றித் தலம்வா ழுத்தமனார்
வாழி யென்பால் வருவாரோ வறியேன் வருந்த வாராரோ
தோழி யனைய குறமடவாய் துணிந்தோர் குறிநீ சொல்லுவையே. 3

**அணியா** ரடியார்க் கயன்முதலா மமரர்க் கெல்லா மரியரென்பாம்
பணியா ரொற்றிப் பதியுடையார் பரிந்தென் முகந்தான் பார்ப்பாரோ
தணியாக் காதல் தவிர்ப்பாரோ சார்ந்து வரவு தாழ்ப்பாரோ
குணியா வெழில்சேர் குறமடவாய் குறிதா னொன்று கூறுவையே. 4

**பொன்னார்** புயத்துப் போர்விடையார் புல்லர் மனத்துட் போகாதார்
ஒன்னார் புரந்தீ யுறநகைத்தா ரொற்றி யெனுமோ ரூரமர்ந்தார்
என்னை யகனு ரென்மருவ லின்றே நாளை யோவறியேன்
மின்னார் மருங்குற் குறமடவாய் விரைந்தோர் குறிநீ விளம்புவையே. 5

**பாலிற்** றெளிந்த திருநீற்றர் பாவ நாசர் பண்டரங்கர்
ஆலிற் றெளிய நால்வர்களுக் கருளுந் தெருள ரொற்றியினார்
மாலிற் றெளியா நெஞ்சகத்தேன் மருவிக் கலக்க வருவாரோ
சேலிற் றெளிகட் குறப்பாவாய் தெரிந்தோர் குறிநீ செப்புகவே. 6

**நிருத்தம்** பயின்றா ரித்தியனார் நேச மனத்தார் நீலகண்டர்
ஒருத்தர் திருவா ழொற்றியினா ரும்ப ரறியா வென்கணவர்
பொருத்த மறிந்தே புணர்வாரோ பொருத்தம் பாரா தணைவாரோ
வருத்தந் தவிரக் குறப்பாவாய் மகிழ்ந்தோர் குறிதான்வழுத்துவையே.

**கமலன்** திருமா லாதியர்கள் கனவி னிடத்துங் காண்பரியார்
விமலர் திருவா ழொற்றியிடை மேவும் பெருமை வித்தகனார்
அமல ரவர்தா மென்மனைக்கின் றணைகு வாரோ வணையாரோ
தமல மகன்ற குறப்பாவாய் தனித்தோர் குறிதான் சாற்றுவையே. 8

**வன்னி** யிதழி மலர்ச்சடையார் வன்னி யெனவோர் வடிவுடையார்
உன்னி யுருகு மவர்க்கெளியா ரொற்றி நகர்வா ழுத்தமனார்
கன்னி யழித்தார் தமைநானுங் கலப்பேன் கொல்லோ கலவேனோ
துன்னி மலைவாழ் குறமடவாய் துணிந்தோர் குறிநீ சொல்லுவையே. 9

**கற்றைச்** சடைமேற்கங்கைதனைக் கலந்தார்கொன்றைக் கண்ணியினார்
பொற்றைப்பெருவிற்படையுடையார்பொழில்சூ ழொற்றிப்புண்ணியனார்
இற்றைக் கடியேன் பள்ளியறைக் கெய்து வாரோ வெய்தாரோ
சுற்றுங் கருங்கட் குறமடவாய் சூழ்ந்தோர் குறிநீ சொல்லுவையே. 10

**அரவக்** கழலார் கருங்களத்தா ரஞ்சைக் களத்தா ரரிபிரமர்
பரவப் படுவார் திருவொற்றிப் பதியி லமர்ந்தார் பாசுபதர்
இரவு வருமுன் வருவாரோ வென்னை யணைதற் கிசைவாரோ
குரவ மணக்குங் குறமடவாய் குறிநீ யொன்று கூறுவையே. 11

திருச்சிற்றம்பலம்

திருவொற்றியூர்

## 12. காட்சி அற்புதம்

### இரங்கல்

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

**பூணு** வணிபூண் புயமுடையார் பொன்னம் பலத்தார் பொங்குவிடம்
ஊணு வுவந்தார் திருவொற்றி யூர்வாழ் வுடையா ருண்மைசொலி
நீணு லிருந்தா ரவரிங்கே நின்றார் மீட்டு நின்றிடவே
காணு தயர்ந்தே னென்னடிநான் கனவோ நனவோ கண்டதுவே. 1

**ஓட்டி** விரந்துண் டொற்றியிடை யுற்றா ருலகத் துயிரையெலாம்
ஆட்டி நடிப்பா ராலயத்தி னருகே யெளிய ளாமெனவே
ஏட்டி லடங்காக் கையறவா லிருந்தே னிருந்த வென்முனுருக்
காட்டி மறைத்தா ரென்னடிநான் கனவோ நனவோ கண்டதுவே. 2

**ஈத** லொழியா வண்கையினா ரெல்லாம் வல்ல சித்தரவர்
ஓத லொழியா வொற்றியிலென் னுள்ள முவக்க வுலகமெலாம்
ஆத லொழியா வெழிலுருக்கொண் டடைந்தார்கண்டே னுடன்காணேன்
காத லொழியா தென்னடிநான் கனவோ நனவோ கண்டதுவே. 3

**தொண்டு** புரிவோர் தங்களுக்கோர் துணைவ ராவார் சூழ்ந்துவரி
வண்டு புரியுங் கொன்றைமலர் மாலை யழகர் வல்விடத்தை
உண்டு புரியுங் கருணையினா ரொற்றி யூரா ரொண்பதத்தைக்
கண்டுங் காணே னென்னடிநான் கனவோ நனவோ கண்டதுவே. 4

**அடியார்** வருந்த வுடன்வருந்து மாண்டை யவர்தா மன்றயனும்
நெடிய மாலுங் காணாத நிமல வுருவோ டென்னெதிரே
வடிய லறியா வருள்காட்டி மறைத்தார் மருண்டேன் மங்கைநல்லார்
கடிய வயர்ந்தே னென்னடிநான் கனவோ நனவோ கண்டதுவே. 5

**கொற்ற** முடையார் திருவொற்றிக் கோயி லுடைய ரென்னெதிரே
பொற்றை மணித்தோட் புயங்காட்டிப் போனாரெனனைப புலமபவைததுக
குற்ற மறியேன மனநடுககங கொணடே னுடலங குழைகினறேன
கற்றின் முலையா யெனனடிநான கனவோ நனவோ கண்டதுவே. 6

**ஆல** நிழற்கீ ழனறமாநதா ராதி நடுவி ருககினரூர்
நீல மிடற்ரா திருவொறறி நியமத் தெதிரே நீற்றுருவக
கோல நிகழக கணடேனபின குறிககக காணேன கூட்டுவிககுங
கால மறியே னெனனடிநான கனவோ நனவோ கணடதுவே. 7

**சலங்கா** தலிககுந தாழசடையா தாமே தமககுத் தாதையனூர்
நிலங்கா தலிககுந திருவொறறி நியமத தெதிரே நினறனர்காண்
விலஙகா தவரைத் தரிசித்தேன மீட்டுங காணேன மெயமறநதேன
கலஙகா நினறே னென்னடிநான கனவோ நனவோ கண்டதுவே 8

**நிரந்தார்** கஙகை நீளசடையார் நெறறி விழியார் நித்தியனூர்
சிரநதா ராகப புயத்தணிவார திருவா ழொறறித தியாகரவா
பரநதார கோயிற கெதிரநிறகப பார்த்தேன மீடடும பாரப்பதனமுன
கரநதார் கலுழநதே னெனனடிநானகனவோ நனவோ கணடதுவே

**அளித்தா** ருலகை யமபலத்தி லாடி வீணையா லாடடிநின்றூர்
தளிததார் சோலை யொறறியிடைத் தமது வடிவங காடடியுடன
ஒளித்தார் நானு மனமயஙகி யுழலா நினறே னொணடொடிககைக
களித்தார் குழலா யெனனடிநான கனவோ நனவோ கணடதுவே. 10

திருச்சிற்றம் பலம்

திருவொற்றியூர்

## 13. ஆற்ருக்காதலின் இரங்கல்

அறுசீரக கழிநெடிலடி ஆசிரிய விருததம

திருச்சிற்றப பலம்

**மந்தா** கினிவான மதிமத்த மருவுஞ சடையார மாசடையார
நுந்தா விளககின் சுடரனையார நோவ நுதலார் கணணுதலார
உநதா வொலிககு மோதமலி யொறறி யூரி லுறறெனககுத்
தநதார மைய லெனனேவென சகியே யினிநான சகியேனே. 1

**பூமே** லவனு மாலவனும போறறி வழுத்தும பூஙகழலார
சேமேல வருவார் திருவொறறித தியாக ரவாதந திருப்புயததைத்
தேமே லலஙகன முலையழுநதச சேர்ந்தா லனறிச சிததசனகைத
தாமே லழறபூத் தாழாதென சகியே யினிநான சகியேனே. 2

**கருணைக்** கொருநே ரில்லாதார் கல்லைக் கரைக்குங் கழலடியார்
அருணைப் பதியா ராமாத்தூ ரமர்ந்தார் திருவா வடுதுறையார்
இருணச் சியமா மணிகண்ட ரெழிலா ரொற்றி யிறைவரிந்த
தருணத் தின்னுஞ் சேர்ந்திலரென் சகியே யினிநான் சகியேனே. 3

**ஆரா** வமுதா யன்புடையோ ரகத்து ளினிக்கு மற்புதனூர்
தீரா வினையுந் தீர்த்தருளுந் தெய்வ மருந்தார் சிற்சபையார்
பாரார் புகழுந் திருவொற்றிப் பரமர் தமது தோளணையத்
தாரா ரின்னு மென்செய்கேன் சகியே யினிநான் சகியேனே. 4

**துதிசெய்** யடியர் தம்பசிக்குச் சோறு மிரப்பார் துய்யரொரு
நதிசெய் சடையார் திருவொற்றி நண்ணு மெனது நாயகனூர்
மதிசெய் துயரு மதன்வலியு மாற்ற வின்னும் வந்திலரே
சதிசெய் தனரோ வென்னடியென் சகியே யினிநான் சகியேனே. 5

**எங்கள்** காழிக் **கவுணியரை** யெழிலார் சிவிகை யேற்றிவைத்தோர்
திங்க ளணியுஞ் செஞ்சடையார் தியாகர் திருவா மொற்றியினர்
அங்க ளணியூந் தார்ப்புயத்தி லணைத்தா ரல்ல ரெனைமடவார்
தங்க ளலரோ தாழாதென் சகியே யினிநான் சகியேனே. 6

**காவி** மணந்த கருங்களத்தார் கருத்த ரெனது கண்ணனையார்
ஆவி யனையார் தாயனையா ரணிசே ரொற்றி யாண்டகையார்
பூவி னலங்கற் புயத்திலெனைப் புல்லா ரந்திப் பொழுதின்மதி
தாவி வருமே யென்செயுமோ சகியே யினிநான் சகியேனே. 7

**மலஞ்சா** திக்கு மக்கடமை மருவார் மருவார் மதிலழித்தார்
வலஞ்சா திக்கும் பாரிடத்தார் மாலு மறியா மலர்ப்பதத்தார்
நிலஞ்சா திக்கு மொற்றியினர் நினையா ரென்னை யணையாமற்
சலஞ்சா தித்தா ரென்னடியென் சகியே யினிநான் சகியேனே. 8

**நாக** வணியார் நக்கரெனு நாம முடையார் நாரணனோர்
பாக முடையார் மலைமகளோர் பாங்க ருடையார் பசுபதியார்
யோக முடையா ரொற்றியுளா ருற்ரு ரல்ல ருறுமோக
தாக மொழியா தென்செய்கேன் சகியே யினிநான் சகியேனே. 9

**நீர்ந்தார்** தலையே கலனுகச் செறித்து நடிக்குந் திருக்கூத்தர்
தேர்ந்தார் தம்மைப் **பித்தடையச்** செய்வா ரொற்றித் தியாகரவர்
சேர்ந்தா ரல்ல ரின்னுமெனைத் தேடி வருமத் தீமதியஞ்
சார்ந்தா லதுதா னென்செயுமோ சகியே யினிநான் சகியேனே. 10

**ஆயும்** படிவத் தந்தணனய் ஆரு ரன்ற னணிமுடிமேல்
தோயுங் கமலத் திருவடிகள் சூட்டு மதிகைத் தொன்னகரார்
ஏயும் பெருமை யொற்றியுளா ரின்னு மணையா ரெனையளித்த
தாயுந் தமரு நொடிக்கின்ரூர் சகியே யினிநான் சகியேனே. 11

திருச்சிற்றம்பலம்

திருவொற்றியூர

# 14. திருக்கோலச் சிறப்பு

## தலைவி வியத்தல்

அறுசீரக கழிநெடிலடி ஆசிரிய விருததம

திருச்சிற்றம்பலம்

**பொன்னென்**றெளிரும புரிசடையாாபுனை நூலிடையாாபுடையுடையாா
மனனென றுலகம புகழொறறி வாணர் பவனி வரககணடேன்
மின்னென றிலங்கு மாதரெலாம வேடகை யடைய விளஙகினற
தின்னென றறியே னவரழகை யெனனென் றுரைபப தேநதிழையே.

**அள்ளிக்** கொடுககுங கருணையினு ரணிசே றொற்றி யாலயத்தார்
வளளிக குவநதோன் றனையீனற வளளல பவனி வரககண்டேன
துளளிக குதித்தென மனமவரைச சூழநத தினனும வநததிலை
எளளிக கணியா வவரழகை யெனனென றுரைப்ப தேநதிழையே. 2

**அனத்துப்** படிவங கொண்டயனு மளவா முடியார் வடியாத
வனததுச சடையார் திருவொறறி வாணர் பவனி வரககணடேன்
மனத்துக கடங்கா தாகிலதை வாயகொண டுரைகக வசமாமோ
இனத்துக குவப்பா மவரழகை யெனனென றுரைப்ப தேநதிழையே.

**கொழுந்தி** யளிதே னுழுதுண்ணுங கொனறைச் சடையார் கூடலுடை
வழுதி மருகா திருவொறறி வாணா பவனி வரககணடேன்
பழுதி லவனுந திருமாலும படைககுங கமலப் பண்ணவனும
எழுதி முடியா வவரழகை யென்னென றுரைப்ப தேநதிழையே. 4

**புன்னை** யிதழிப பொலிசடையாா போக யோகம புரிநதுடையார்
மனனும விடையார் திருவொறறி வாணர் பவனி வரககண்டேன
உன்னு முடலங குளிர்நதோஙக வுவகை பெருக வுறறுகினற
எனனை விழுஙகு மவரழகை யெனனென றுரைப்ப தேநதிழையே

**சொல்லுண்** ணிறைநத பொருளானர் துயய ருளததே துனனிநினறூர்
மலலல வயறசூழ திருவொறறி வாணா பவனி வரககணடேன்
கலலு மாழு மானநதக கணணீா கொண்டு கண்டதெனில
எலலை யில்லா வவரழகை யெனனென றுரைப்ப தேநதிழையே. 6

**நீர்க்கு** மதிககு நிலையாக நீணட சடையாா நின்றுநரு
வாாககும பொழிலசூழ திருவொற்றி வாணர் பவனி வரககண்டேன்
பார்ககு மரிககும பஙகயறகும பனமா தவர்ககும பண்ணவர்ககும
யாாககு மடஙகா வவரழகை யெனனென றுரைப்ப தேநதிழையே. 7

**கலங்க** வமணக கைதவரைக கழுவி லேறறுங கழுமலத்தோன
வலகை குவிததுப் பாடுமொறறி வாணா பவனி வரககண்டேன
உலக நிகழவைக காணேனென னுளள மொனறே யறியுமடி
இலகு மவர்தந திருவழகை யெனனென் றுரைப்ப தேநதிழையே 8

கண்ண னறியாக் கழற்பதத்தார் கண்ணார் நெற்றிக் கடவுளருள்
வண்ண முடையார் திருவொற்றி வாணர் பவனி வரக்கண்டேன்
நண்ண விமையா ரெனவிமையா நாட்ட மடைந்து நின்றனடி
எண்ண முடியா வவரழகை யென்னென் றுரைப்ப தேந்திழையே. 9

மாழை மணித்தோ ளெட்டுடையார் மழுமா னேந்து மலர்க்கரத்தார்
வாழை வளஞ்சூ ழொற்றியூர் வாணர் பவனி வரக்கண்டேன்
யாழை மலைக்கு மொழிமடவார் யாரு மயங்கிக் கலையவிழ்ந்தார்
ஏழை யேனு னவரழகை யென்னென் றுரைப்ப தேந்திழையே. 10

திருச்சிற்றம்பலம்

திருவொற்றியூர்

## 15. சோதிட நாடல்

### தலைவி மிகு கழிகாதல்

*அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்*

திருச்சிற்றம்பலம்

**பொன்னஞ்** சிலையிற் புரமெரித்தார் பொழில்சூ ழொற்றிப் புண்ணியனார்
முன்னஞ் சருந்து முக்கணனார் மூவ ரறியா முதல்வர்வர
இன்னஞ் சிலநாள் சென்றிடுமோ விலதே யின்று வருவாரோ
உன்னஞ் சிறந்தீர் சோதிடம்பார்த் துரைப்பீர் புரிநூ லுத்தமரே.1

**பெற்றி** யறியாப் பிரமனுக்கும் பெரிய மாற்கும் பெறவரியார்
புற்றி னரவார் கச்சையுடைப் புனித ரென்னைப் புணருமிடந்
தெற்றி மணிக்கால் விளங்குதில்லைச் சிற்றம் பலமோ வன்றியிந்த
ஒற்றி நகரோ சோதிடம்பார்த் துரைப்பீர் புரிநூ லுத்தமரே. 2

**அளித்து** மூன்று பிள்ளைகளா லகில நடக்க வாட்டுவிப்பார்
தெளித்து நதியைச் சடையிருத்துந் தேவர் திருவா ழொற்றியுளார்
களித்து மாலை கொடுப்பாரோ கள்ளி யெனவே விடுப்பாரோ
ஒளித்தொன் றுரையீர் சோதிடம்பார்த் துரைப்பீர் புரிநூ லுத்தமரே.3

**எண்டோ** ளிலங்கு நீற்றணியர் யார்க்கு மிறைவ ரெனையுடையார்
வண்டோ விடும்பூங் கொன்றையணி மாலை மார்பர் வஞ்சமிலார்
தண்டோய்பொழில்சூழொற்றியினார்தமக்குமெனக்குமணப்பொருத்தம்
உண்டோ விலையோ சோதிடம்பார்த் துரைப்பீர் புரிநூ லுத்தமரே. 4

**தவர்தாம்** வணங்குந் தாளுடையார் தாய்போ லடியர் தமைப்புரப்பார்
பவர்தா மறியாப் பண்புடையார் பணைசூ ழொற்றிப் பதியமர்ந்தார்
அவர்தா மீண்டுற் றணைவாரோ வன்றி நான்போ யணைவேனே
உவர்தா மகற்றுஞ் சோதிடம்பார்த் துரைப்பீர் புரிநூ லுத்தமரே. 5

**பைத்த** வரவப் பணியணிவார் பணைசூ ழொற்றிப் பதிமகிழ்வார்
மைத்த மிடற்று ரவர்தமக்கு மாலை யிடவே நானுளத்தில்
வைத்த கருத்து முடிந்திடுமோ வறிதே முடியா தழிந்திடுமோ
உய்த்த மதியாற் சோதிடம்பார்த் துரைப்பீர் புரிநூ லுத்தமரே. 6

**தக்க** விதியின் மகத்தோடு தலையு மழித்தார் தண்ணளியார்
மிக்க வளஞ்சேர் திருவொற்றி மேவும் பரமர் வினையேன்றன்
துக்க மகலச் சுகமளிக்குந் தொடர்பு முண்டோ விலையோதான்
ஒக்க வறிந்தீர் சோதிடம்பார்த் துரைப்பீர் புரிநூ லுத்தமரே. 7

**வெண்மை** நீற்றர் வெள்ளேற்றர் வேத கீதர் மெய்யுவப்பார்
வண்மை யுடையா ரொற்றியினார் மருவ மருவி மனமகிழ்ந்து
வண்மை யகலா தருட்கடனீ ராடு வேனோ வாடேனோ
உண்மை யறிந்தீர் சோதிடம்பார்த் துரைப்பீர் புரிநூ லுத்தமரே. 8

**ஆர்த்து** மலிநீர் வயலொற்றி யமர்ந்தார் மதியோ டரவைமுடிச்
சேர்த்து நடிப்பா ரவர்தமைநான் றேடி வலியச் சென்றிடினும்
பார்த்தும் பாரா திருப்பாரோ பரிந்து வாவென் றுரைப்பாரோ
ஓர்த்து மதிப்பீர் சோதிடம்பார்த் துரைப்பீர் புரிநூ லுத்தமரே. 9

**அள்ள** மிகும்பே ரழகுடையா ரானை யுரியா ரரிக்கரியார்
வெள்ள மிகும்பொன் வேணியினார் வியன்சே ரொற்றி விகிர்தரவர்
கள்ள முடனே புணர்வாரோ காத லுடனே கலப்பாரோ
உள்ள மறியேன் சோதிடம்பார்த் துரைப்பீர் புரிநூ லுத்தமரே. 10

திருச்சிற்றம்பலம்

திருவொற்றியூர்

## 16. திருவருட் பெருமிதம்

### செவிலி கழறல்

*அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்*

திருச்சிற்றம்பலம்

**விடையார்** விடங்கப்பெருமானார் வெள்ளச்சடையார் வெண்ணகையால்
அடையார் புரங்க ளெரித்தழித்தா ரவரே யிந்த வகிலமெலாம்
உடையா ரென்று நினைத்தனையூ ரொற்றியவர்க்கென் றுணர்ந்திலையோ
இடையா மயல்கொண் டெதுபெறுவா யேழை யடிநீ யென்மகளே. 1

**கருவாழ்** வகற்றுங் கண்ணுதலார் கண்ண னயனுங் காண்பரியார்
திருவா ழொற்றித் தேவரெனுஞ் செல்வ ரவரே செல்வமதிற்
பெருவாழ் வுடையா ரெனநினைத்தாய் பிச்சை யெடுத்த தறிந்திலையோ
இருவா மயல்கொண் டெதுபெறுவா யேழை யடிநீ யென்மகளே. 2

**மட்டுக்** கடங்கா வண்கையினார் வளஞ்சே ரொற்றி வாணரவர்
பட்டுத் துகிலே திசைகளெலாம் படர்ந்த தென்னப் பரிந்தனையோ
கட்டத் துகிலுங் கிடையாது கந்தை யுடுத்த தறிந்திலையோ
இட்டுப் புணர்ந்திங் கெதுபெறுவா யேழை யடிநீ யென்மகளே. 3

**நடங்கொள்** கமலச் சேவடியார் நலஞ்சே ரொற்றி நாதரவர்
தடங்கொண் மார்பின் மணிப்பணியைத் தரிப்பார் நமக்கென் றெண்ணினையாற்
படங்கொள் பாம்பே பாம்பென்றாற் படையு நடுங்கும் பார்த்திலையோ
இடங்கொண் மயல்கொண் டெதுபெறுவா யேழை யடிநீ யென்மகளே.

**திருக்கண்** ணுதலாற நிருமகனைத் தீர்த்தா ரொற்றித் தேவரவர்
எருகக மலரே சூடுவாரீ யெழினமல விகையென் றெண்ணினையால
உருககு நெருப்பே யவருருவ முனககு மவர்ககு முறவாமோ
இருகக மயலகொண் டெதுபெறுவா யேழை யடிநீ யெனமகளே. 5

**மேலை** வினையைத் தவிர்த்தருளும விடையா ரொற்றி விகிர்தரவர்
மாலை கொடுப்பா ருணஙகுதலை மாலை யதுதான் வாஙகுவையே
ஆல மிடற்ருர் காபாலி யாகித் திரிவா ரணைவிலரே
ஏல மயலகொண் டெனபெறுவா யேழை யடிநீ யென்மகளே. 6

**மாகம்** பயிலும பொழிற்பணைகொள வளஞசே ரொற்றி வாணரவர்
யோகம பயிலவார் மோகமிலா ரெனனே வுனககிங கிணஙகுவரே
ஆகம பயிலவாள மலையாளே லவளோ வொனறு மறிநதிலளகாண்
ஏக மயலகொண் டெதுபெறுவா யேழை யடிநீ யெனமகளே. 7

**விண்பார்** புகழுந திருவொறறி மேவும புனிதா விடந்தரினும்
உண்பா ரின்னு முனககதுதா னுடனபா டாமோ வுளமுருகித்
தணபா ரெனபார் தமையெலலாஞ சாவா ரதுவுன சமமதமோ
எண்பார் மயலகொண் டெதுபெறுவா யேழை யடிநீ யென்மகளே. 8

**நீடி** வளஙகொள ளொற்றியிலவாழ நிமல ருலகத் துயிர்தோறும
ஓடி யொளிப்பா ரவர்நீயு மொககவோட வுனவசமோ
நாடி நடிபபார் நீயுமுட னடித்தா லுலகர் நகையாரோ
ஈடின மயல்கொண் டெதுபெறுவா யேழை யடிநீ யெனமகளே. 9

**உள்ளி** யுருகு மவர்ககருளு மொற்றி நகாவா ழுததமர்ககு
வெளளி மலையும பொனமலையும வீடென றுரைபபா ராஞலுங
களளி நெருஙகிப புறஙகொளசுடு காடே யிடஙகாண கணடறிநீ
எளளின மயலகொண டெதுபெறுவா யேழை யடிநீ யெனமகளே. 10

திருசசிறறமபலம

திருவொறறியூர்

## 17. காதற்சிறப்புக் கதுவாமாண்பு

### தலைவி கடிற்றெதிர் மறுத்தல்

*அறுசீரக கழிநெடிலடி ஆசிரிய விருததம*

திருச்சிறறமபலம்

**உலக** முடையார் தமமுரை யொறறி வைத்தா ரெனருலும
அலகில புகழார் காபாலி யாகத திரிநதா ரெனருலுந
திலக மனையார புறஙகாடடிற சோநது நடிததா ரெனருலுங
கலக விழியாய நானவாமேற காத லொழியேன கனவினுமே. 1

**பெருமை** யுடையார் மனைதொறுமபோயப பிசசை யெடுததா ராஞலும
அருமை மணியா ரமபலத்தி லாடித திரிநதா ராஞலும
ஒருமை யுடையார கோவணமே யுடையா யுடுததா ராஞலுங
கருமை விழியாய நானவாமேற காத லொழியேன கனவினுமே 2

**எல்லா** முடையார் மண்கூலிக் கெடுத்துப் பிழைத்தா ரானாலுங்
கொல்லா நலத்தார் யானையின்றோற் கொன்று தரித்தா ராளுலும்
வல்லார் விசையன் வில்லடியால் வடுப்பட் டுவந்தா ராளுலுங்
கல்லா முலையாய் நானவர்மேற் காத லொழியேன் கனவினுமே. 3

**என்னை** யுடையா ரொருவேட னெச்சி லுவந்தா ரென்றாலும்
அன்னை யனையா ரொருமகனை யறுக்க வுரைத்தா ரென்றாலுந்
துன்னு மிறையார் தொண்டனுக்குத் தூத ராளு ரென்றாலுங்
கன்னி யிதுகே ளானவர்மேற் காத லொழியேன் கனவினுமே. 4

**என்று** மிறவார் மிடற்றில்விட மிருக்க வமைத்தா ரென்றாலும்
ஒன்று நிலையார் நிலையில்லா தோடி யுழல்வா ரென்றாலும்
நன்று புரிவார் தருமனுயிர் நலிய வுதைத்தா ரென்றாலுங்
கன்றுண் கரத்தாய் நானவர்மேற் காத லொழியேன் கனவினுமே.

**என்கண்** ணனையார் மலைமகளை யிச்சித் தணைந்தா ராளுலும்
வன்கண் ணடையார் தீக்கண்ணான் மதனை யெரித்தா ராளுலும்
புன்கண் ணறுப்பார் புன்னகையாற் புரத்தை யழித்தா ராளுலுங்
கன்னன் மொழியாய் நானவர்மேற் காத லொழியேன் கனவினுமே. 6

**வாழ்வை** யளிப்பார் மாடேறி மகிழ்ந்து திரிவா ரென்றாலுந்
தாழ்வை மறுப்பார் பூதகணத் தானை யுடையா ரென்றாலும்
ஊழ்வை யறுப்பார் பேய்க்கூட்டத் தொக்க நடிப்பா ரென்றாலுங்
காழ்கொண் முலையாய் நானவர்மேற் காத லொழியேன் கனவினுமே.

**விமலை** யிடத்தா ரின்பதுன்பம் வேண்டா நலத்தா ராளுலும்
அமல முடையார் தீவண்ண ராமென் றுரைப்பா யாளுலும்
நமல மறுப்பார் பித்தரெனு நாம முடையா ராளுலுங்
கமலை யனையாய் நானவர்மேற் காத லொழியேன் கனவினுமே. 8

**மான்கொள்** கரத்தார் தலைமாலை மார்பி லணிந்தா ரென்றாலும்
ஆன்கொள் விடங்கர் சுடலையெரி யடலை விழைந்தா ரென்றாலும்
வான்கொள் சடையார் வழுத்துமது மத்த ராளு ரென்றாலுங்
கான்கொள் குழலாய் நானவர்மேற் காத லொழியேன் கனவினுமே.9

**போர்மால்** விடையா ருலகமெலாம் போக்குந் தொழில ராளுலும்
ஆர்வாழ் சடையார் தமையடைந்தோ ராசை யழிப்பா ராளுலுந்
தார்வாழ் புயத்தார் மாவிரதர் தவஞா னியரே யாளுலுங்
கார்வாழ் குழலாய் நானவர்மேற் காத லொழியேன் கனவினுமே. 10

**கோதே** மருவார் மாலயனுங் குறியா நெறியா ரென்றாலுஞ்
சாதே மகிழ்வா ரடியாரைத் தம்போ லினைப்பா ரென்றாலும்
மாதே வருக்கு மாதேவர் மௌன யோகி யென்றாலுங்
காதேர் குழையாய் நானவர்மேற் காத லொழியேன் கனவினுமே. 11

உடையா ருலகிற் காசென்பார்க் கொன்று மூதவா ரானாலும்
அடையார்க் கரியார் வேண்டார்க்கே யருள்வார் வலிய வானாலும்
படையார் கரத்தர் பழிக்கஞ்சாப் பாசு பதரே யானாலுங்
கடையா வழுதே நானவர்மேற் காத லொழியேன் கனவினுமே. 12

திருச்சிற்றம்பலம்

திருவொற்றியூர்

## 18. ஆற்றா விரகம்

### தோழியொடு கூறல்

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

ஓண முடையான் றொழுதேத்து மொற்றி நகர்வா ழுத்தமர்பான்
மாண வலியச் சென்றென்னை மருவி யணைவீ ரென்றேநான்
நாணம் விடுத்து நவின்றாலு நாமார் நீயா ரென்பாரேல்
ஏண விழியா யென்செய்வே னென்னை மடவா ரிகழாரோ. 1

காத மணக்குங் கடிமலர்ப்பூங் காவா ரொற்றிக் கண்ணுதலார்
போத மணக்கும் புனிதரவர் பொன்னம் புயத்தைப் புணரேனேற்
சீத மணக்குங் குழலாயென் சிந்தை மயங்கித் தியங்குமடி
ஏத மணக்கு மென்செய்வே னென்னை மடவா ரிகழாரோ. 2

பண்ணார் மொழியா ருருக்காட்டும் பணைசூ ழொற்றிப் பதியினரென்
கண்ணார் மணிபோன் றென்னுயிரிற் கலந்து வாழுங் கள்வரவர்
நண்ணா ரின்னுந் திருவனையாய் நான்சென் றிடினு நலமருள
எண்ணா ராயி னென்செய்வே னென்னை மடவா ரிகழாரோ. 3

ஊரென் றுடையீ ரொற்றிதனை யுலக முடையீ ரென்னையணை
வீரென் றவர்முன் பலரறிய வெட்கம் விடுத்துக் கேட்டாலுஞ்
சேரென் றுரைத்தா லன்றியவர் சிரித்துத் திருவாய் மலர்ந்தெனைநீ
யாரென் றுரைத்தா லென்செய்வே னென்னை மடவா ரிகழாரோ. 4

சோம னிலவுந் தூய்ச்சடையார் சொல்லிற் கலந்த சுவையானார்
சேம நிலவுந் திருவொற்றித் தேவ ரின்னுஞ் சேர்ந்திலர்நான்
தாம மருள்வீ ரென்கினுமித் தருணத் திசையா தென்பாரேல்
ஏம முலையா யென்செய்வே னென்னை மடவா ரிகழாரோ. 5

வில்லை மலையாய் கைக்கொண்டார் விடஞ்சூழ் கண்டர் விரிபொழில்சூழ்
தில்லை நகரா ரொற்றியுளார் சேர்ந்தா ரல்லர் நானவர்பால்
ஒல்லை யடைந்து நின்றாலு முன்னை யணைத லொருபோதும்
இல்லை யெனிலோ வென்செய்கே னென்னை மடவா ரிகழாரோ. 6

**திருந்தா** லமர்ந்தார் திருப்புலியூர்ச சிறறம் பலத்திற் றிருநடஞ்செய்
மருநதா ரொற்றி வாணரினனும வநதா ரல்லர் நான்போயென்
அருந்தாழ வகல வருளவீரென் றுனுமொன்று மறியார்போல
இருந்தா லமமா வென்செயவே னெனனை மடவா ரிகழாரோ. 7

**அசையா** தமர்ந்து மண்டமெலா மசையப் புலியூ ரமபலத்தே
நசையா நடிககு நாதரொற்றி நாட்டா ரின்னு நண்ணிலாநான்
விசையாற்சென றிங கெனனையணை வீரென்றுரைப்பேனெனிலதற்கும்
இசையா ராகி லெனசெயவே னென்னை மடவா ரிகழாரோ. 8

**மாற்கா** தலிககு மலரடியார் மாசற் றிலஙகு மணியனையார்
சேற்கா தலிககும வயலவளஞ்சூழ திருவா ழொறறித் தேவரவர்
பாறகா தலித்துச சென்றுனுய பாவி யடிநீ யானனைதற்
கேறகா தெனறு லெனசெயவே னெனனை மடவா ரிகழாரோ. 9

**மாழை** மலையைச சிலையாக வளைத்தா ரனபர் தமைவருத்தும
ஊழை யழிப்பார் திருவொற்றி யூரா ரினனு முறறிலரென
பாழை யகறற நானசெலினும பாரா திருநதாற பைஙகொடியே
ஏழை யடிநா னெனசெயவே னென்னை மடவா ரிகழாரோ. 10

திருச்சிற்றமபலம

திருவொற்றியூர்

## 19. காதன்மாட்சி

*அறுசீரக கழிநெடிலடி ஆசிரிய விருததம*

திருச்சிற்றமபலம

**திடனுன்** மறையார் திருவொற்றித் தியாக ரவர்தம் பவனிதனை
மடனு மகன்று காணவநதான மலர்ககை வளைக விணைககவர்ந்து
படனு கணியார் நமைத்திருமபிப் பாரா தோடு கின்றுர்நாம
உடனு வோடி னுலுமவ ரோட்டம் பிடிகக வொண்ணுதே. 1

**தக்க** வளஞசே ரொற்றியிலவாழ் தமபி ரானர் பவனிதனைத்
துககு மகனறு காணவநதாற் றுகிலைக கவர்நது துணிவுகொண்டே
பககு மருவு நமைத்திருமபிப் பாரா தோடு கின்றுர்நாம
ஒககு வோடி னுலுமவ ரோட்டம பிடிகக வொண்ணுதே. 2

**தாயா** யளிககுந் திருவொறறித் தலத்தார் தமது பவனிதனை
மாயா நலததிற காணவநதான் மருவு நமது மனங்கவர்நது
பாயா விரைவி னமைததிருமபிப் பாரா தோடு கின்றுர்நாம
ஓயா தோடி னுலுமவ ரோட்டம பிடிகக வொண்ணுதே. 3

**நிலவார்** சடையார் திருவொற்றி நிருத்தர் பவனி தனைககாண
நலவா தரவின வநதுநினறு னஙகா யெனது நாண்கவர்நது
பலவா தரவா னமைததிருமபிப் பாரா தோடு கினறுர்நாம
உலவா தோடி னுலுமவ ரோடடம பிடிகக வொண்ணுதே. 4

**நாடார்** வளங்கொ ளொற்றிநகர் நாதர் பவனி தனைக்காண
நீடா சையினல் வந்துவந்து நின்று னமது நிறைகவர்ந்து
பாடார் வலரா னமைத்திருமபிப் பாரா தோடு கின்றூர்நாம்
ஓடா தோடி ஞலுமவ ரோடடம பிடிகக வொண்ணுதே. 5

**அழியா** வளத்தார் திருவொற்றி யையர் பவனி தனைககாண
விழியா மகிழ்வி ஞெடுமவநதா லென்னே பெண்ணே யெழிலகவர்ந்து
பழியா வெழிலி னமைத்திருமபிப் பாரா தோடு கின்றூர்நாம
ஒழியா தோடி ஞலுமவ ரோட்டம பிடிகக வொண்ணுதே. 6

**திரையா** ரோதை யொறறியில்வாழ தியாக ரவர்தம் பவனிதனைக
கரையா மகிழ்விற காணவநதாற் கறபி னலத்தைக கவர்நதுகொண்டு
பரையா தரிகக னமைத்திருமபிப் பாரா தோடு கின்றூர்நாம
உரையா தோடி ஞலுமவ ரோட்டம பிடிகக வொண்ணுதே. 7

**கடுக்கா** தலித்தார் திருவொறறிக காளை யவர்தம பவனிதனை
விடுககா மகிழ்விற் காணவநதால விரியு நமது விணைகவர்ந்து
படுககா மதிப்பி னமைத்திருமபிப பாரா தோடு கின்றூர்நாம
உடுககா தோடி ஞலுமவ ரோட்டம பிடிகக வொண்ணுதே. 8

**தில்லை** யுடையார் திருவொற்றித் தியாகரவர்தம பவனிதனைக
கலலை யுருககிக காணவநதாற கரண நமது கரநதிரவி
பலலை யிறுததார் னமைத்திருமபிப் பாரா தோடு கின்றூர்நாம்
ஒல்லை யோடி ஞலுமவ ரோட்டம பிடிகக வொண்ணுதே. 9

**மடையார்** வாளை வயலொற்றி வள்ளல் பவனி தனைககாண
அடையா மகிழ்வி ஞெடுமவநதா லமமா நமது விடயமெலாம
படையாற் கவர்நது னமைத்திருமபிப பாரா தோடு கின்றூர்நாம்
உடையா தோடி ஞலுமவ ரோடடம பிடிகக வொணணுதே. 10

திருச்சிற்றம்பலம்

மூன்றுவது திருமுறை
முற்றிற்று





உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

அருட்பெருஞ்ஜோதி

# திருவருட்பா

# நான்காவது திருமுறை

முதலாவது

## அன்புமாலை

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

**அற்புதப்பொன்** னம்பலத்தே யாடுகின்ற வரசே
ஆரமுதே யடியேன்றன் னன்பேயென் னறிவே
கற்புதவு பெருங்கருணைக் கடலேயென் கண்ணே
கண்ணுதலே யானந்தக் களிப்பேமெய்க் கதியே
வெற்புதவு பசுங்கொடியை மருவுபெருந் தருவே
வேதவா கமமுடியின் விளங்குமொளி விளக்கே
பொற்புறவே இவ்வுலகிற் பொருந்துசித்த ஞானப்
பொருத்தமுநின் றிருவருளின் பொருத்தமது தானே. 1

**நிறையணிந்த** சிவகாமி நேயநிறை யொளியே
நித்தபரி பூரணமாஞ் சுத்தசிவ வெளியே
கறையணிந்த களத்தரசே கண்ணுடைய கரும்பே
கற்கண்டே கனியேயென் கண்ணேகண் மணியே
பிறையணிந்த முடிமலையே பெருங்கருணைக் கடலே
பெரியவரெல் லாம்வணங்கும் பெரியபரம் பொருளே
குறையணிந்து திரிகின்றேன் குறைகளெலாந் தவிர்த்தே
குற்றமெலாங் குணமாகக் கொள்வதுநின் குணமே. 2

**ஆண்பனைபெண்** பனையாக்கி யங்கமதங் கனையா
 யாக்கியருண் மணத்திலொளி யனைவரையு மாக்கு
மாண்பனைமிக குவந்தளித்த மாகருணை மலையே
 வருத்தமெலாந் தவிர்த்தெனக்கு வாழ்வளித்த வாழ்வே
நாண்பனையுந் தந்தையுமென் னறகுருவு மாகி
 நாயடியே னுள்ளகத்து நண்ணிய நாயகனே
வீண்பனைபோன் மிகநீண்டு விழற்கிறைப்பே னெனினும்
 விருப்புமெலா நின்னருளின் விருப்பமன்றி யிலையே. 3

**சித்தமனே** கம்புரிந்து திரிந்துழலுஞ் சிறியேன்
 செயவகையொன் றறியாது திகைக்கின்றே னந்தோ
உத்தமனே யுன்னையலா லொருதுணைமற் றறியேன்
 உன்னாணை யுன்னாணை யுண்மையிது கண்டாய்
இத்தமனே யச்சலந் மினிப்பொறுக்க மாட்டேன்
 இரங்கியருள் செயல்வேண்டு மிதுதருண மெந்தாய்
சுத்தமனே யத்தவாக்கு மெனைப்போலு மவர்க்குந்
 துயர்தவிர்ப்பான் மணிமன்றிற் றுலங்குநடத் தரசே. 4

**துப்பாடு** திருமேனிச் சோதிமணிச் சுடரே
 துரியவெளிக் குள்ளிருந்த சுத்தசிவ வெளியே
அப்பாடு சடைமுடியெம் மானந்த மலையே
 அருட்கடலே குருவேயென் னுடையவனே யரசே
இப்பாடு படவெனக்கு முடியாது துரையே
 இரங்கியருள் செயல்வேண்டு மிதுதருணங் கண்டாய்
தப்பாடு வேனெனினு மெனைவிடத் துணியேல்
 தனிமன்றுள் நடம்புரியுந் தாணுமலரெந் தாயே. 5

**கண்ணோங்கு** நுதற்கரும்பே கரும்பினிறை யமுதே
 கற்கண்டே சர்க்கரையே கதலிநறுங் கனியே
விண்ணோங்கு வியன்சுடரே வியன்சுடராக்குஞ் சுடரே
 விடையவனே சடையவனே வேதமுடிப் பொருளே
பெண்ணோங்கு மொருபாகம் பிறங்குபெருந் தகையே
 பெருமானே யொருகரங்கொள் பெரியபெரு மானே
எண்ணோங்கு சிறியவனே னென்னினுநின் னடியேன்
 எனைவிடத் துணியேனின் னின்னருட்ந் தருளே. 6

**திருநெறிசேர்** மெய்யடியர் திறனொன்று மறியேன்
 செறிவறியே னறிவறியேன் செய்வகையை யறியேன்
கருநெறிசேர்ந் துழல்கின்ற கடையரினுங் கடையேன்
 கறங்கினறேன் சாகாத கலவிநிலை காணேன்
பெருநெறிசேர் மெய்ஞ்ஞான சித்திநிலை பெறுவான்
 பிதற்றுகின்றே னதற்குரிய பெற்றியிலே னந்தோ
வருநெறியி லெனைவலிந் தாட்கொண்ட மணியே
 மன்றுடைய பெருவாழ்வே வழங்குகநின் னருளே. 7

குன்றாத குணக்குன்றே கோவாத மணியே
குருவேயென் குடிமுழுதாட் கொண்டசிவக் கொழுந்தே
என்றாதை யாகியெனக் கன்னையுமாய் நின்றே
எழுமையுமென் றனையாண்ட வென்னுயிர்நற் றுணையே
பொன்றாத பொருளேமெய்ப் புண்ணியத்தின் பயனே
பொய்யடியேன் பிழைகளெலாம் பொறுத்தபெருந் தகையே
அன்றால நிழலமர்ந்த வருளிறையே யெளியேன்
ஆசையெலா நின்னடிமே லன்றியொன்று மிலையே. 8

பூணாத பூண்களெலாம் பூண்டபரம் பொருளே
பொய்யடியேன் பிழைமுழுதும் பொறுத்தருளி யென்றுங்
காணாத காட்சியெலாங் காட்டியெனக் குள்ளே
கருணைநடம் புரிகின்ற கருணையையென் புகல்வேன்
மாணாத குணக்கொடியே னிதைநினைக்குந் தோறும்
மனமுருகி யிருகண்ணீர் வடிக்கின்றேன் கண்டாய்
ஏணாத னென்னனினுமையா னம்மையினின் னடியேன்
எனவறிந்தே னறிந்தபினென் னிதயமலர்ந் தேனே. 9

அந்தோவீ ததிசயமீ ததிசயமென் புகல்வேன்
அறிவறியாச் சிறியேனை யறிவறியச் செய்தே
இந்தோங்கு சடைமணிநின் னடிமுடியுங் காட்டி
இதுகாட்டி யதுகாட்டி யென்னிலையுங் காட்டிச்
சந்தோட சித்தாந்தத் தனிச்சூதுங் காட்டிச்
சாகாத நிலைகாட்டிச் சகசநிலை காட்டி
வந்தோடு நிகாமனம்போய்க் கரைந்தவிடங் காட்டி
மகிழ்வித்தாய் நின்னருளின் வண்மையெவர்க் குளதே. 10

அன்பருளக் கோயிலிலே யமர்ந்தருளும் பதியே
அம்பலத்தி லாடுகின்ற வானந்த நிதியே
வன்பருளத் தேமறைந்து வழங்குமொளி மணியே
மறைமுடியா கமமுடியின் வயங்குநிறை மதியே
என்பருவங் குறியாம லென்னைவலிந் தாட்கொண்
டின்பநிலை தனையளித்த வென்னறிவுக் கறிவே
முன்பருவம் பின்பருவங் கண்டருளிச் செய்யு
முறைமைநின் றருணெறிக்கு மொழிதலறிந் திலனே. 11

பால்காட்டு மொளிவண்ணப் படிகமணி மலையே
பத்திக்கு நிலைதனிலே தித்திக்கும் பழமே
சேல்காட்டும் விழிக்கடையா றிருவருளைக் காட்டுஞ்
சிவகாம வல்லிமகிழ் திருநடநா யகனே
மால்காட்டி மறையாதென் மதிக்குமதி யாகி
வழிகாட்டி வழங்குகின்ற வகையதனைக் காட்டிக்
கால்காட்டிக் காலாலே காண்பதுவு மெனக்கே
காட்டியநின் கருணைக்குக் கைம்மாறொன் றிலனே. 12

**என்னையொன்று** மறியாத விளமபருவந தனிலே
யென்னுளத்தே யமர்நதருளி யான்மயங்குந் தோறும்
அன்னையெனப் பரிநதருளி யப்போதைக கப்போ(து)
அப்பனெனத் தெளிவிததே யறிவுறுததி நினறுய
நின்னையெனக கெனனெனபே னெனனுயி ரெனபேனே
நீடியவென னுயிரத்துணையா நேயமதென பேனே
இன்னலறுத தருளகினற வெனகுருவென் பேனே
என்னென்பே னெனனுடைய இன்பமதென பேனே. 13

**பாடும்வகை** யணுததுணையும பரிநதறியாச **சிறிய**
**பருவத்தே யணிந்தணிந்து பாடும்வகை** புரிநது
நாடுமவகை யுடையோர்கள நனகுமதித் திடவே
நலலறிவு சிறிதளித்துப் புலலறிவு போககி
நீடுமவகை சனமார்கக சுததசிவ நெறியில்
நிறுததினையிச சிறியேனை நினனருளென் னென்பேன்
கூடுமவகை யுடையரெலாங குறிபபெதிரபார்க கினறூர்
குற்றமெலாங குணமாகக கொண்டகுணக குன்றே. 14

**சற்றுமறி** வில்லாத வெனையுமவலிந தாண்டு
தமியேனசெய குறறமெலாஞ சமமதமாக கொண்டு
கற்றுமறிந துஙகேட்டுந தெளிநதபெரி யவருங
கணடுமகி ழபபுரிநது பணடைவினை யகறறி
மற்றுமறி வனவெலலா மறிவித்தென னுளத்தே
மனனுகின்ற மெயயினப வாழககைமுதற பொருளே
பெறறுமறி விலலாத பேதையெனமீ துனககுப்
பெருஙகருணை வநதவகை யெநதவகை பேசே. 15

**கற்றதுமற்** றவவழிமா சூததுவென றெண்ணுத்
தொணடரெலாங கறகினறூர் பண்டுமின்றுங் காணூர்
எற்றதுமபு மணிமனறி லினபநடம புரியும
எனனுடைய துரையேநா னினனுடைய வருளால
கற்றதுநின னிடததேபின கேட்டதுநின னிடததே
கணடதுநின னிடத்தேயுட கொண்டதுநின னிடத்தே
பெறறதுநின னிடததேயின புறறதுநின னிடத்தே
பெரியதவம புரிநதேனென பெறறியதி சயமே. 16

**ஏறியநா** ளுருகிலையி லேறவறி யாதே
இளைககினற காலத்தென னிளைப்பெல்லா மொழிய
வீறியவோர பருவசததி கைகொடுததுத தூககி
மேலேறறச செயதவளை மேவுறவுஞ் செய்து
தேறியநீ போலெனது சிததமிகத தேறித
தெளிநதிடவுஞ செயதனையிச செயகையெவர் செய்வார்
ஊறியமெய யனபுடையா ருளளமெனும பொதுவில
உவநதுநடம புரிகினற வொருபெரிய பொருளே. 17

**தருநிதியக்** குருவியற்றச் சஞசலிககு மனத்தால
தளர்நதசிறி யேனறனது தளர்வெலலாந் தவிர்த்து
இருநிதியத் திருமகளி ரிருவரைன வணஙகி
இசைநதிடுவந தனமபபா வெனறுமகிழந் திசைத்துப்
பெருநிதிவாயத் திடவெனது முனபாடி யாடும
பெற்றியளித தனையிநதப் பேதமையேன றனககே
ஒருநிதிநின னருணிதியு முவநதளிததல வேண்டும
உயர்பொதுவி லினபநட முடையபரம பொருளே. 18

**அஞ்சாதே** யெனமகனே யநுககிரகம புரிநதாம
ஆடுகநீ வேணடியவா றாடுகவிவ வுலகில்
செஞசாலி வயலோஙகு திலலைமனறி லாடுந
திருநடஙகண டனபுருவாயச சிததசுத்த னாகி
எஞசாத நெடுஙகால மினபவெளளந திளைததே
இனிதுமிக வாழியவென றெனககருளிச செய்தாய்
துஞசாதி யநதமிலாச சுததநடத தரசே
துரியநடு வேயிருநத சுயஞசோதி மணியே. 19

**நான்கேட்கின்** றவையெல்லா மளிககின்றா யெனககு
நலலவனே யெலலாமும வலலசிவ சித்தா
தானகேட்கின றவையினறி முழுதொருங்கே யுணர்ந்தாய்
தத்துவனே மதியணிநத சடைமுடியெம மிறைவா
தேனகேட்கு மொழிமஙகை யொருபஙகி னுடையாய்
சிவனேயெம பெருமானே தேவாபெரு மானே
வானகேடகும புகழததிலலை மனறினடம புரிவாய
மணிமிடறறுப் பெருஙகருணை வளளலெனகண் மணியே. 20

**ஆநந்த** வெளியினிடை யாநந்த வடிவாய
ஆநநத நடமபுரியு மாநநத வமுதே
வானநத முதலெலலா வநதமுஙகண டறிந்தோர்
மதிககினற பொருளேவெண மதிமுடிசசெங கனியே
ஊனநதங கியமாயை யுடலினிடத திருநதும
ஊனமிலா திருககினற வுளவருளிச செயதாய
நானநத வுளவுகணடு நடததுகினற வகையும
நலலவனே நீமகிழநது சொலலவரு வாயே. 21

**ஆரணமு** மாகமமு மெதுதுணிந்த ததுவே
அமபலத்தி லாடுகினற வாட்டமென வெனககுக
காரணமுங காரியமும புலபபடவே தெரித்தாய்
கணணுதலே யிஙகிதறகுக கைமமாறென றறியேன்
பூரணநின னடிததொணடு புரிகினற சிறியேன
போறறிசிவ போறறியெனப் போறறிமகிழ கின்றேன்
நாரணநான முகன்முதலோர காணபருமந நடததை
நாயடியே னிதயததி னவிற்றியருள வாயே. 22

**இறைவநின்** தருளாலே யெனைக்கண்டு கொண்டேன்
எனக்குளுனைக் கண்டேனப் பின்னிருவருமொன் றாக
உறைவதுகண் டதிசயித்தே னதிசயத்தை யொழிக்கும்
உளவறியே னவ்வுளவொன் றுரைத்தருளல் வேண்டும்
மறைவதிலா மணிமன்றுள் நடம்புரியும் வாழ்வே
வாழ்முதலே பரமசுக வாரியெனக் கண்மணியே
குறைவதிலாக் குளிர்மதியே சிவகாம வல்லிக்
கொழுந்துபடர்ந் தோங்குகின்ற குணநிமலக் குன்றே. 23

**சத்தியமெய்** யறிவின்ப வடிவாகிப் பொதுவிற்
றனிநடஞ்செய் தருளுகின்ற சற்குருவே யெனக்குப்
புத்தியொடு சித்தியுநல் லறிவுமளித் தழியாப்
புனிதநிலை தனிலிருக்கப் புரிந்தபரம் பொருளே
பத்தியறி யாச்சிறியேன் மயக்கமினுந் தவிர்த்துப்
பரமசுக மயமாக்கிப் படிறுளத்தைப் போக்கித்
தத்துவநீ நானெனனும் போதமது நீக்கித்
தனித்தசுகா தீதமுநீ தந்தருளக் மகிழ்ந்தே. 24

**ஏதுமறி** யாதிருளி லிருந்தசிறி யேனை
எடுத்துவிடுத் தறிவுசிறி தேய்ந்திடவும் புரிந்து
ஓதுமறை முதற்கலைக ளோதாம லுணர
உணர்விலிருந் துணர்த்தியரு ளுண்மைநிலை காட்டித்
தீதுசெறி சமயநெறி செல்லுதலைத் தவிர்த்துத்
திருவருண்மெய்ப் பொதுநெறியிற் செலுத்தியுநான் மருளும்
போதுமயங் கேனமகனே யென்றுமயக் கெல்லாம்
போக்கியெனக் குள்ளிருந்த புனிதபரம் பொருளே. 25

**முன்னறியேன்** பின்னறியேன் முடிபொன்று மறியேன்
முன்னியுமுன் னதுமிங்கே மொழிந்தமொழி முழுதும்
பன்னிலையிற் செறிகின்றோர் பலருமன முவப்பப்
பழுதுபடா வண்ணமருள் பரிந்தளித்த பதியே
தன்னிலையிற் குறைவுபடாத் தத்துவப்பே ரொளியே
தனிமன்று ணடம்புரியுஞ் சத்தியதற் பரமே
இந்நிலையி லின்னுமென்றன் மயக்கமெலாந் தவிர்த்தே
எனையடிமை கொளல்வேண்டு மிதுசமயங் காணே

**ஐயறிவிற்** சிறிதுமறிந் தநுபவிக்கத் தெரியா
தழுதுகளித் தாடுகின்ற வப்பருவத் தெளியேன்
மெய்யறிவிற் சிறந்தவருங் களிக்கவுனைப் பாடி
விரும்பியரு ணெறிநடக்க விடுத்தனைநீ யன்றோ
பொய்யறிவிற் புலைமனத்துக் கொடியேன்முன் பிறப்பிற்
புரிந்ததவம் யாதததனைப் புகன்றருளல் வேண்டும்
துய்யறிவுக் கறிவாகி மணிமன்றி னடஞ்செய்
சுத்தபரி பூரணமாஞ் சுகரூபப் பொருளே. 27

அருணிறைந்த பெருந்தகையே யானந்த வமுதே
அற்புதப்பொன் னம்பலத்தே யாடுகின்ற வரசே
தெருணிறைந்த சிந்தையிலே தித்திக்குந் தேனே
செங்கனியே மதியணிந்த செஞ்சடையெம் பெருமான்
மருணிறைந்த மனக்கொடியேன் வஞ்சமெலாங் கண்டு
மகிழ்ந்தினிய வாழ்வளித்த மாகருணைக் கடலே
இருணிறைந்த மயக்கமின்னுந் தீர்த்தருளல் வேண்டும்
என்னுடைய நாயகனே யிதுதருணங் காணே. 28

மன்னியபொன் னம்பலத்தே யானந்த நடஞ்செய்
மாமணியே யென்னிருகண் வயங்குமொளி மணியே
தன்னியல்பி னிறைந்தருளுஞ் சத்துவ பூரணமே
தற்பரமே சிற்பரமே தத்துவப்பே ரொளியே
அந்நியமில் லாதசுத்த வத்துவித நிலையே
ஆதியந்த மேதுமின்றி யமர்ந்தபரம் பொருளே
என்னியல்பி னென்னக்கருளி மயக்கமின்னுந் தவிர்த்தே
எனையாண்டு கொளல்வேண்டு மிதுதருணங் காணே. 29

பூதநிலை முதற்பரம நாதநிலை யளவும்
போந்தவற்றி னியற்கைமுதற் புணர்ப்பெல்லாம் விளங்க
வேதநிலை யாகமத்தி னிலைகளெலாம் விளங்க
வினையேனற் றுளத்திருந்து விளக்கியமெய் விளக்கே
போதநிலை யாயதுவுங் கடந்தவின்ப நிலையாய்ப்
பொதுவினின்மெய் யறிவின்ப நடம்புரியும் பொருளே
ஏதநிலை யாவகையென் மயக்கமின்னுந் தவிர்த்தே
எனைக்காத்தல் வேண்டுகின்றே னிதுதருணங் காணே. 30

செவ்வண்ணத் திருமேனி கொண்டொருபாற் பசந்து
திகழ்படிக வண்ணமொடு தித்திக்குங் கனியே
இவ்வண்ண மெனமறைக்கு மெட்டாமெய்ப் பொருளே
என்னுயிரே யென்னுயிர்க்கு ளிருந்தருளும் பதியே
அவ்வண்ணப் பெருந்தகையே யம்பலத்தே நடஞ்செய்
ஆரமுதே யடியேனிங் ககமகிழ்ந்து புரிதல்
எவ்வண்ண மதுவண்ண மிசைந்தருளல் வேண்டும்
என்னுடைய நாயகனே யிதுதருணங் காணே. 31

திருச்சிற்றம்பலம்



## இரண்டாவது

# அருட்பிரகாசமாலை

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

**உலகமெலா** முதிக்கின்ற வொளிநிலைமெய் யின்பம்
உறுகின்ற வெளிநிலையி னுபயநிலை யாகி
இலகியநின் சேவடிகள் வருந்தியிட நடந்தே
இரவிலெளி யேனிருக்கு மிடந்தேடி யடைந்து
கலகமிலாத் தெருக்கதவங் காப்பவிழ்க்கப் புரிந்து
களித்தெனையங் கழைத்தெனது கையிலொன்று கொடுத்தாய்
அலகிலருட் கடலாமுன் பெருமையையென் னெனவேன்
ஆனந்த வல்லிமகி ழருணடநா யகனே 1

**ஒளிவண்ணம்** வெளிவண்ண மென்றநந்த வேத
உச்சியெலா மெச்சுகின்ற வுச்சமல ரடிகள்
அளிவண்ணம் வருந்தியிட நடந்தருளி யடியேன்
அடைந்தவிடத் தடைந்துகத வந்திறக்கப் புரிந்து
களிவண்ண மெனையழைத்தென் கையிலவண்ண மளித்த
கருணைவண்ண தனைவியந்து கருதுமவண்ண மறியேன்
தெளிவண்ண முடையரன்பு செய்யுமவண்ணம் பொதுவிற்
றெய்வநடம் புரிகின்ற சைவபரம் பொருளே. 2

**திருமாலு** முருமாறிச் சிரஞ்சீவி யாகித்
தேடியுங்கண் டறியாத சேவடிகள் வருந்த
வருமாலை மண்ணுறுத்தப் பெயர்த்துநடந் தருளி
வஞ்சகனே னிருக்குமிடம் வலிந்திரவிற் றேடித்
தெருமாலைக் கதவுதனைத் திறப்பித்து நின்று
செவ்வண்ணத் திடைபசந்த திருமேனி காட்டிக்
குருமாலைப் பெருவண்ணக் கொழுந்தொன்று கொடுத்தாய்
குருமணிநின் றிருவருளைக் குறித்துமகிழ்ந் தனனே. 3

**அன்றொருநா** ளிரவிடைவந் தணிக்கதவந் திறப்பித்
தருண்மலர்ச்சே வடிவாயிற் படிப்புறத்து மகத்து
மன்றவைத்துக் கொண்டெனை வரவழைத்து மகனே
வருந்தாதே யிங்கிதனை வாங்கிக்கொள் ளென்ன
ஒன்றுசிறி யேனமறுப்ப மறித்துமவலிந் தெனது
ஒருகைதனிற் கொடுத்திங்கே யுறைதியென்று மறைந்தாய்
இன்றதுதா னனுபவத்துக் கிசைந்ததுநா யடியேன்
என்னதவம் புரிந்தேனோ வினித்துயரொன் றிலனே. 4

**இரவிலடி** வருந்தநடந் தெழிற்கதவந் திறப்பித்
தெனையழைத்து மகனேநீ யிவ்வுலகிற் சிறிதும்
கரவிடைநெஞ் சயர்ந்திளைத்துக் கலங்காதே யிதனைக்
களிப்பொடுவாங் கெனவெனது கைதனிலே கொடுத்து
உரவிடையிங் குறைகமகிழ்ந் தெனத்திருவாய் மலர்ந்த
உன்னுடைய பெருங்கருணைக் கொப்பிலையென் புகலவேன்
அரவிடையி லசைந்தாட வம்பலத்தி னடுவே
ஆனந்தத் திருநடஞ்செய் தாட்டுகின்ற வரசே. 5

**இயங்காத** விரவிடையன் றொருநாள்வந் தெளியேன்
இருக்குமிடந் தனைத்தேடிக் கதவுதிறப் பித்துக்
கயங்காத மலரடிகள் கவின்வாயிற் படியின்
கடைப்புறத்து மகத்தும்வைத்துக் களித்தெனையங் கழைத்து
மயங்காதே யிங்கிதனை வாங்கிக்கொண் டுலகின்
மகனேநீ விளையாடி வாழ்கவென வுரைத்தாய்
புயங்காநின் னருளருமை யறியாது திரிந்தேன்
பொய்யடியே னறிந்தின்று பூரித்தே னுளமே. 6

**ஒருநாளன்** றிரவிலடி வருந்தநடந் தடியேன்
உற்றவிடந் தனைத்தேடிக் கதவுதிறப் பித்து
மறுநாள மலரடியொன் றுள்ளகத்தே பெயர்த்து
வைத்துமகிழ்ந் தெனையழைத்து வாங்கிதனை யென்று
தருநாளில் யானமறுப்ப மறித்தும்வலிந் தெனது
தடங்கைதனிற் கொடுத்திங்கே சாகவென வுரைத்தாய்
வருநாளி லதனருமை யறிந்துமகிழ் கின்றேன்
மணிமன்றுள் நடம்புரியு மாணிக்க மணியே. 7

**நெடுமாலும்** பன்றியென நெடுங்காலம் விரைந்து
நேடியுங்கண் டறியாது நீடியபூம் பதங்கள்
தொடுமாலை யெனவருபூ மகள்முடியிற் சூட்டித்
தொலைவினையே னிருக்குமிடந் தனைத்தேடித் தொடர்ந்து
கடுமாலை நடுவிரவிற் கதவுதிறப் பித்துக்
கடையேனை யழைத்தெனது கையிலொன்று கொடுத்துக்
கொடுமாலை விடுத்துமகி ழெனத்திருவாய் மலர்ந்தாய்
குணக்குன்றே யிந்நாணின் கொடையையறிந் தனனே. 8

**மறைமுடிக்கு** மணியாகி வயங்கியசே வடிகள்
மண்மீது படநடந்து வந்தருளி யடியேன்
குறைமுடிக்கும் படிக்கதவந் திறப்பித்து நின்று
கூவியெனை யழைத்தொன்று கொடுத்தருளிச் செய்தாய்
கறைமுடிக்குங் களத்தரசே கருணைநெடுங் கடலே
கண்ணோங்கு மொளியேசிற் கநவெளிக்குள் வெளியே
பிறைமுடிக்குஞ் சடைக்கடவுட் பெருந்தருவே குருவே
பெரியமன்றுள் நடம்புரியும் பெரியபரம் பொருளே. 9

அன்றகத்தே யடிவருந்த நடந்தெனனை யழைத்திங
கஞ்சாதே மகனேயென் றளித்தனையொன் றதனைத்
துன்றகத்துச சிறியேனு னறியாது வறிதே
'சுழன்றதுகண் டிரஙகிமிகத் துணிநதுமகிழ விப்பான்
இன்றகத்தே புகுநதருளி யெனககனைத தெரிவித
தின்புறசசெய் தருளியநின் னிரககமெவர்க ளுளதோ
மன்றகத்து நடமபுரிநது வயங்குமொரு குருவே
வல்லவரெல லாமவணங்கு நலலபரம பொருளே. 10

அன்பர்மனக் கோயிலிலே யமர்ந்தருளி விளஙகும
அருமபொருளா முனதுமல ரடிவருநத நடந்து
வன்பர்களிற் றலைநின்ற வஞசகனே னிருநத
மனைககதவு திறப்பித்து மகிழநதெனையங கழைத்துத்
துன்பமெலா நீங்குகவிங் கிதுதனைவாங் குகநீ
தொழுமபனெனற வெனனுடைய துரையேநின் னருளை
என்பகாவே னென்வியப்பே னெஙஙனநான் மறப்பேன்
என்னுயிருக குயிராகி யிலஙகியசற் குருவே. 11

ஞாலநிலை யடிவருந்த நடந்தருளி யடியேன்
நண்ணுமிடந் தனிற்கதவ நன்றுதிறப் பித்துக
காலநிலை கருதிமனங கலஙகுகின்ற மகனே
கலஙகாதே யெனறெனது கையிலொன்று கொடுத்துச்
சீலநிலை யுறவாழக வெனத்திருவாய மலர்நத
சிவபெருமா னினபெருமைத் திருவருளென் னென்பேன்
ஆலநிலை மணிகண்டத் தருமபெருஞசீ ரொளியே
அம்பலத்திற் றிருநடஞசெய் தாட்டுகின்ற வரசே. 12

இருணிறைந்த விரவிலடி வருநதநடந தடியேன்
இருககுமிடந் தனைத்தேடிக கதவுதிறப் பித்து
மருணிறைந்த மனத்தாலே மயங்குகின்ற மகனே
மயஙகாதே யென்றென்னை வரவழைத்துப் புகன்று
தெருணிறைநத தொன்றெனது செஙகைதனிற் கொடுத்துத்
திகழநதுநின்ற பரமபொருணினறிருவருளெனனென்பேன்
அருணிறைந்த மெய்ப்பொருளே யடிமுடியொன் றில்லா
ஆநந்த மன்றினட மாடுகின்ற வரசே. 13

கன்மயமுங் கனிவிககுந் திருவடிகள் வருந்தக
கடைப்புலையே னிருககுமிடந தனைத்தேடி நடந்து
தொனமயமா மிரவினிடைக கதவுதிறப் பித்துத்
துணிந்தழைத்தென் கைதனிலே தூயவொன்றை யளித்து
வன்மயமில லாமனத்தால் வாழகவென வுரைத்த
மாமணிநின் றிருவருளின் வணமையையென னென்பேன்
தன்மயமே சினமயபொன் னமபலத்தே யினபத்
தனிநடஞசெய தருளுகின்ற தத்துவபபே ரொளியே. 14

**பிரணவத்தி** னடிமுடியி னடுவினுநின் றோங்கும்
 பெருங்கருணைத் திருவடிகள் பெயர்ந்துவருந் திடவே
கரணமுற்று நடந்தடியே னிருக்குமிடந் தேடிக்
 கதவுதிறப் பித்தருளிக் கடையேனை யழைத்துச்
சரணமுற்று வருந்தியவென் மகனேயிங் கிதனைத்
 தாங்குகவென் றொன்றெனது தடங்கைதனிற் கொடுத்து
மரணமற்று வாழ்கவெனத் திருவார்த்தை யளித்தாய்
 மன்றுடையாய் நின்னருளின் வண்மையெவர்க் குளதே. 15

**ஓங்காரத்** துள்ளொளியா யவ்வொளிக்கு ளொளியாய்
 உபயவடி வாகியநின் னபயபதம் வருந்த
ஈங்கார நடந்திரவில் யானிருக்கு மிடம்போந்
 தெழிற்கதவந் திறப்பித்தங் கென்னைவலிந் தழைத்துப்
பாங்காரும் வண்ணமொன் றென் கைதனிலே யளித்துப்
 பண்பொடுவாழ்ந் திடுகவெனப் பணித்தபரம் பொருளே
ஆங்கார வண்ணமகன் றதையறிந்து மகிழ்ந்தே
 அநுபவிக்கின் றேன்பொதுவி லாடுகின்ற வரசே. 16

**அரிபிரமா** தியரெல்லா மறிந்தணுக வொண்ணா
 அரும்பெருஞ்சீ ரடிமலர்க ளன்றொருநாள் வருந்தக்
கரியிரவி னடந்தருளி யானிருக்கு மிடத்தே
 கதவுதிறப் பித்தெனது கையிலொன்று கொடுத்து
உரிமையொடு வாழ்கவென வுரைத்ததுவு மன்றி
 உவந்தின்றை யிரவினும்வந் துணர்த்தினையென் மீது
பிரியமுனக் கிருந்தவண்ண மென்புகல்வேன் பொதுவிற்
 பெருநடஞ்செய் யரசேயென் பிழைபொறுத்த குருவே. 17

**காரணனென்** றுரைக்கின்ற நாரணனு மயனுங்
 கனவிடத்துங் காண்பரிய கழலடிகள் வருந்த
ஊரணவி நடந்தெளியே னுறையுமிடந் தேடி
 உவந்தெனது கைதனிலே யொன்றுகொடுத் திங்கே
ஏரணவி யுறைகமகிழ்ந் தெனவுரைத்தாய் நின்சீர்
 யாதறிந்து புகன்றேன்முன் யாதுதவம் புரிந்தேன்
பாரணவி யன்பரெலாம் பரிந்து புகழ்ந் தேத்தப்
 பணியணிந்து மணிமன்று ளணிநடஞ்செய் பதியே. 18

**துரியவெளி** தனிற்பரம நாதவணை நடுவே
 சுயஞ்சுடரிற் றுலங்குகின்ற துணையடிகள் வருந்தப்
பிரியமொடு நடந்தெளியே னிருக்குமிடந் தேடிப்
 பெருங்கதவந் திறப்பித்துப் பேயனெனை யழைத்து
உரியபொரு ளொன்றெனது கையிலளித் திங்கே
 உறைகமகிழ்ந் தெனவுரைத்த வுத்தமநின் னருளைப்
பெரியபொரு ளெவற்றினுக்கும் பெரியபொரு ளென்றே
 பின்னறிந் தேனிதற்கு முன்னறறி யேனே. 19

**நீளாதி** மூலமென நின்றவனு நெடுநாள்
தேடியுங்கண் டறியாத நின்னடிகள் வருந்த
ஆளாநா னிருக்குமிட மதுதேடி நடந்தே
அணிக்கதவந் திறப்பித்துள் ளன்பொடெனை யழைத்து
வாளாநீ மயங்காதே மகனேயிங் கிதனை
வாங்கிக்கொள் ளென்றெனது மலர்க்கைதனிற் கொடுத்தாய்
கேளாயென் னுயிர்த்துணையாய்க் கிளர்மன்றில் வேத
கீதநடம் புரிகின்ற நாதமுடிப் பொருளே. 20

**சத்தவுரு** வாமறைப்பொற் சிலம்பணிந்தம் பலத்தே
தனிநடஞ்செய் தருளுமடித் தாமரைகள் வருந்தச்
சித்தவுரு வாகியிங்கே யெனைத்தேடி நடந்து
தெருக்கதவந் திறப்பித்தென் செங்கையிலொன் றளித்து
மத்தவுரு வாமனத்தான் மயக்கமுறேல் மகனே
மகிழ்ந்துறைக வெனத்திருவாய் மலர்ந்தகுண மலையே
சுத்தவுரு வாய்ச்சுத்த வருவாகி யழியாச்
சுத்தவரு வுருவான சுத்தபரம் பொருளே. 21

**பலகோடி** மறைகளெலா முலகோடி மயங்கப்
பரநாத முடிநடிக்கும் பாதமலர் வருந்தச்
சிலகோடி நடந்தெளியே னிருக்குமிடந் தனைநந்து
தெருக்கதவந் திறப்பித்தென் செங்கையிலொன் றளித்தே
அலகோடி வருந்தேலிங் கமர்கவெனத் திருவாய்
அலர்ந்தவருட் குருவேபொன் னம்பலத்தெம் மரசே
விலகோடி யெனத்துயர்க ளொன்றொடொன்று புகன்று
விரைந்தோடச் செய்தனையிவ் விளைவறியேன் வியப்பே. 22

**செய்வகையொன்** றறியாது திகைப்பினொடே யிருந்தேன்
திடுக்கெனவிங் கெழுந்தருளித் தெருக்கதவந் திறப்பித்
துய்வகையொன் றெனதுகரத் துவந்தளித்து மகனே
உய்கமகிழ்ந் தின்றுமுத லொன்றுமஞ்சே லென்று
மெய்வகையிற் புகன்றபின்னு மஞ்சியிருந் தேனை
மீட்டுமின்றை யிரவிலுணர் வூட்டியச்சந் தவிர்த்தாய்
ஐவகையாய் நின்றுமன்றி லாடுகின்ற வரசே
அற்புதத்தாண் மலர்வருத்த மடைந்தனவென் பொருட்டே.

**உள்ளிரவி** மதியாய்நின் றுலகமெலா நடத்தும்
உபயவகை யாகியநின் னபயபதம் வருந்த
நள்ளிரவின் மிகநடந்து நானிருக்கு மிடத்தே
நடைக்கதவந் திறப்பித்து நடைக்கடையி லழைத்து
வெள்ளிரவு நினைந்துமயக் கெய்தியிடேல் மகனே
என்றெனக்கை தனிலொன்றை யீந்துமகிழ் வித்தாய்
அள்ளிரவு போனமிடற் றிலழகுகிளர்ந் தாட
அம்பலத்தி லாடுகின்ற செம்பவளக் குன்றே. 24

**விளங்கறிவுக்** கறிவாகி மெய்த்துரிய நிலத்தே
விளையுமநு பவமயமா மெல்லடிகள் வருந்தத்
துளங்குசிறி யேனிருக்கு மிடந்தேடி நடந்து
தொட்டக்கதவந் திறப்பித்துத் தொழும்பனெனை யழைத்துக்
களங்கமிலா வொன்றெனது கைதனிலே கொடுத்துக்
களித்துறைக வெனத்திருவாக் களித்தவருட் கடலே
குளங்கொள்விழிப் பெருந்தகையே மணிமன்றி னடஞ்செய்
குருமணியே யென்பாமனக் கோயிலில்வாழ் குருவே. 25

**வேதமுடி** மேற்சுடரா யாகமத்தின் முடிமேல்
விளங்குமொளி யாகியநின் மெல்லடிகள் வருந்தப்
பூதமுடி மேனடந்து நானிருக்கு மிடத்தே
போந்திரவிற் கதவுதனைக் காப்பவிழக்கப் புரிந்து
நாதமுடி மேல்விளங்குந் திருமேனி காட்டி
நற்பொருளென் கைதனிலே நல்கியநின் பெருமை
ஓதமுடி யாதெனில்என் புகல்வேனம் பலத்தே
உயிர்க்கின்பந் தரநடன முடையபரம் பொருளே 26

**தங்குசரா** சரமுழுது மளித்தருளி நடத்துந்
தாண்மலர்கண் மிகவருந்தத் தனித்துநடந் தொருநாள்
கங்குலில்யா னிருக்குமனைக் கதவுதிறப் பித்துக்
கையிலொன்று கொடுத்தவுன்றன் கருணையையென் னென்பேன்
இங்குசிறி யேன்பிழைக ளெத்தனையும் பொறுத்த
என்குருவே யென்னுயிர்க் கின்பருளும் பொருளே
திங்களணி சடைப்பவளச் செழுஞ்சோதி மலையே
சிவகாம வல்லிமகிழ் திருநடநா யகனே. 27

**மாமாயை** யசைந்திடச்சிற் றம்பலத்தே நடிக்கும்
வருந்தாத மலரடிகள் வருந்தநடந் தருளி
ஆமாறன் றிரவினிடை யணிக்கதவந் திறப்பித்
தங்கையிலொன் றளித்தினிநீ யஞ்சேலென் றுவந்து
தேமாவின் பழம்பிழிந்து வடித்துநறு நெய்யுந்
தேனுமொக்கக் கலந்ததென்னத் திருவார்த்தை யளித்தாய்
கோமானின் னருட்பெருமை யென்னுரைப்பேன் பொதுவிற்
கூத்தாடி யெங்களையாட் கொண்டபரம் பொருளே 28

**படைப்பவனுங்** காப்பவனும் பற்பலநாண் முயன்று
பார்க்கவிரும் பினுங்கிடையாப் பாதமலர் வருந்த
நடைப்புலையேன் பொருட்டாக நடந்திரவிற் கதவம்
நன்குதிறப் பித்தொன்று நற்கியது மன்றி
இடைப்படுநா ளினுமவந்தென் னிதயமயக் கெல்லாம்
இரிந்திடச்செய் தனையுன்றன் னின்னருளென் னென்பேன்
தடைப்படுமா றில்லாத பேரின்பப் பெருக்கே
தனிமன்றி லானந்தத் தாண்டவஞ்செய் யரசே. 29

**முன்னைமறை** முடிமணியா மடிமலர்கள வருந்த
முழுதிரவி னடநதெளியேன முயங்குமிடத் தடைந்து
அன்னையினும பரிநதருளி யணிகக்தவந திறப்பித்
தஙகையிலொன றளிததெனையு மனபினொடு நோககி
என்னையினி மயஙகாதே யெனமகனே மகிழவோ
டிருததியென வுரைத்தாயநின னினனருளெனனென்பேன்
மின்னைநிகா செஞசடைமேன மதியமசைந தாட
வியன்பொதுவிற றிருநடஞசெய விமலபரம பொருளே. 30

**மீதானத்** தருளொளியாய் விளஙகியநின னடிகள்
மிகவருநத நடநதிரவில வினையேனறன பொருட்டாச்
சீதானக கதவுதனைத திறப்பித்துச சிறியேன
செஙகையிலொன றளித்தினிநீ சிறிதுமஞசே லிங்கு
மாதானத தவாசூழ வாழகவென வுரைததாய
மாமணிநின றிருவருளின வண்மையெவர்க குளதே
ஓதானத் தவர்தமககு முணர்வரிதாம பொருளே
ஓஙகியசிற றமபலததே யொளிநடஞசெய் பதியே. 31

**வேதாந்த** சித்தாநத மெனனுமந்த மிரண்டும
விளஙகவமர்ந தருளியநின மெலலடிகள வருநத
நாதாநத வெளிதனிலே நடநதருளு மதுபோல
நடநதருளிக கடைநாயே னண்ணுமிடத் தடைநது
போதாநத மிசைவிளஙகுந திருமேனி காட்டிப்
புலையேனகை யிடதொனறு பொருநதவைத்த பொருளே
சூதாநத மனைததினுகசு மப்பாறபட் டிருநத
துரியவெளிக கேவிளஙகும பெரியவருட் குருவே. 32

**ஒருமையிலே** யிருமையென வுருககாட்டிப் பொதுவில்
ஒளிநடஞ்செய தருளுகின்ற வுபயபதம வருநத
அருமையிலே நடநதெளியே னிருககுமிடத் தடைநதே
அணிககதவந திறப்பிதெனை னஙகையிலொன் றளித்துப்
பெருமையிலே பிறஙகுகநீ யெனததிருவாய மலாநத
பெருஙகருணைக கடலேநின பெறறியையென் னெனபேன்
கருமையிலே நெடுஙகாலங கலந்துகலக குறற
கலககமெலாந தவிர்ததெமமைக காத்தருளும பதியே. 33

**விந்துநிலை** நாதநிலை யிருநிலைககு மரசாய்
விளஙகியநின சேவடிகண் மிகவருநத நடந்து
வநதுநிலை பெறசிறியே னிருககுமிடத் தடைநது
மணிககதவந திறபபிதெனை மகனேயென றழைத்து
இந்துநிலை முடிமுதலாந திருவுருவங காட்டி
ஏனகையிலொன றளிததினப மெயதுகவென றுரைத்தாய்
முநதுநிலைச சிறியேன்செய தவமறியேன பொதுவில
முத்தாமனந திததிகக நிர்ததமிடும பொருளே. 34

**நவநிலைக்கு** மதிகார நடத்துகின்ற வரசாய்
நண்ணியநின் பொன்னடிகள் நடந்துவருந் திடவே
அவநிலைக்குங் கடைப்புலையே னிருக்குமிடத் திரவில்
அணைந்தருளிக் கதவுதிறந் தடியேனை யழைத்தே
சிவநிலைக்கும் படியெனது செங்கையிலொன் றளித்துச்
சித்தமகிழ்ந் துறைகவெனத் திருப்பவளந் திறந்தாய்
பவநிலைக்குங் கடைநாயேன் பயின்றதவ மறியேன்
பரம்பரமா மன்றினடம் பயின்றபசு பதியே. 35

**புண்ணியர்தம்** மனக்கோயிற் புகுந்தமர்ந்து விளங்கும்
பொன்மலர்ச்சே வடிவருத்தம் பொருந்தநடந் தெளியேன்
நண்ணியவோ ரிடத்தடைந்து கதவுதிறப் பித்து
நற்பொருளொன் றென்கைதனி னல்கியநின் பெருமை
எண்ணியபோ தெல்லாமென் மனமுருக்கு மென்றால்
எம்பெருமா னின்னருளை யென்னெனயான் புகல்வேன்
தண்ணியவெண் மதியணிந்த செஞ்சடைநின் றாடத்
தனித்தமன்றி லானந்தத் தாண்டவஞ்செய் யரசே. 36

**மூவருக்கு** மெட்டாது மூத்ததிரு வடிகண்
முழுதிரவில் வருந்தியிட முயங்கிநடந் தருளி
யாவருக்கு மிழிந்தேனிங் கிருக்குமிடத் தடைந்தே
எழிற்கதவந் திறப்பித்து ளெனையழைத்து மகனே
தேவருக்கு மரிதிதனை வாங்கெனவென் கரத்தே
சித்தமகிழ்ந் தளித்தனைநின் றிருவருளென் னென்பேன்
பூவருக்கும் பொழிற்றில்லை யம்பலத்தே நடநம்
புரிந்துயிருக் கின்பருளும் பூரணவான் பொருளே. 37

**கற்றவர்தங்** கருத்தினின்முக் கனிரசம்போ லினிக்குங்
கழலடிகள் வருந்தியிடக் கடிதுநடந் திரவின்
மற்றவர்கா ணுதெளியே னிருக்குமிடத் தடைந்து
மனைக்கதவு திறப்பித்து வலிந்தெனையங் கழைத்து
நற்றவர்க்கு மரிதிதனை வாங்கெனவென் கரத்தே
நல்கியநின் பெருங்கருணை நட்பினையென் னென்பேன்
அற்றவர்க்கும் பற்றவர்க்கும் பொதுவினிலே நடஞ்செய்
அருட்குருவே சச்சிதா நந்தபரம் பொருளே. 38

**கருணைவடி** வாயடியா ருள்ளகத்தே யமர்ந்த
கழலடிகள் வருந்தியிடக் கங்குலிலே நடந்து
மருணிறையுஞ் சிறியேனு னிருக்குமிடத் தடைந்து
மணிக்கதவந் திறப்பித்து மகிழ்ந்தழைத்து மகனே
பொருணிறையு மிதனையிங்கே வாங்கெனவென் கரத்தே
பொருந்தவளித் தருளியநின் பொன்னருளென் னென்பேன்
அருணிறையும் பெருங்கடலே யம்பலத்திற் பரமா
நந்தவுரு வாகிநட மாடுகின்ற வரசே. 39

**அருளுருவா** யைந்தொழிலு நடத்துகின்ற வடிகள்
அசைந்துவருந் திடவிரவில் யானிருக்கு மிடத்தே
தெருளுருவி னடந்துதெருக் கதவுதிறப் பித்துச்
சிறியேனை யழைத்தெனது செங்கையிலொன் றளித்து
மருளுருவின் மற்றவர்போன் மயங்கேலென் மகனே
மகிழ்ந்துதிரு வருள்வழியே வாழ்கவென வுரைத்தாய்
இருளுருவின் மனக்கொடியேன் யாதுதவம் புரிந்தேன்
எல்லாம்வல் லவனாகி யிருந்தபசு பதியே. 40

**முழுதுமுணர்ந்** தவர்முடிமேன் முடிக்குமணி யாகி
முப்பொருளு மாகியநின் னொப்பிலடி மலர்கள்
கழுதுமுணர் வரியநடுக் கங்குலிலே வருந்தக்
கடிதுநடந் தடிநாயேன் கருதுமிடத் தடைந்து
பழுதுபடா வண்ணமெனைப் பரிந்தழைத்து மகனே
பணிந்திதனை வாங்கெனவென் பாணியுறக் கொடுத்துத்
தொழுதெனைப்பா டுகவென்று சொன்னபசு பதிநின்
தூயவருட் பெருமையையென் சொல்லிவியக் கேனே. 41

**மானினைத்த** வளவெல்லாங் கடந்தப்பால் வயங்கு
மலரடிகள் வருந்தியிட மகிழ்ந்துநடந் தருளிப்
பானினைந்த சிறியேனா னிருக்குமிடத் தடைந்து
பணைக்கதவந் திறப்பித்துப் பரிந்தழைத்து மகனே
நீநினைத்த வண்ணமெலாங் கைகூடு மிதுவோர்
நின்மலமென் றெனக்கைதனி னோர்ந்தளித்தாய் நினக்கு
நானினைத்த நன்றியொன்று மிலையேநின் னருளை
நாயடியே னென்புகல்வேன் நடராச மணியே. 42

**சூரியசந்** திரரெல்லாந் தோன்றாமை விளங்கும்
சுயஞ்சோதி யாகுமடித் துணைவருந்த நடந்து
கூரியமெய் யறிவென்ப தொருசிறிதுங் குறியாக்
கொடியேனா னிருக்குமிடங் குறித்திரவி னடந்து
காரியமுண் டெனக்கூவிக் கதவுதிறப் பித்துக்
கையிலொன்றையளித்த தனையுன் கருணையையென் னென்பேன்
ஆரியாதம் மளவுகடந் தப்பாலுங் கடந்த
ஆனந்த மன்றினட மாடுகின்ற வரசே. 43

**தற்போதந்** தோன்றாத தலந்தனிலே தோன்றுந்
தாண்மலர்கள் வருந்தியிடத் தனித்துநடந் தருளி
எற்போதங் கன்றிரவில் யானிருக்கு மிடம்போந்
தெழிற்கதவந் திறப்பித்திவ் வெளியேனை யழைத்துப்
பொற்போத வண்ணமொன்றென் கைதனிலே யளித்துப்
புலையொழிந்த நிலைதனிலே பொருந்துகவென் றுரைத்தாய்
சிற்போத மயமான திருமணிமன் றிடத்தே
சிவமயமா மநுபோகத் திருநடஞ்செய் யரசே. 44

**கற்பனைக** ளெலலாமபோயக கரைநததலந தனிலே
கரையாது நிறைநததிருக கழலடிகள வருநத
வெறபனையு மினறியொரு தனியாக நடநது
விரைநதிரவிற கதவுதனைக காப்பவிழககப் புரிநது
அறபனையோா பொருளாக வழைததருளி யடியேன
அஙகையிலொன றளிததனைநின னருளினையென புகலவேன
நறபனவா துதிககமணி மனறகததே யினப
நடமபுரியும பெருஙகருணை நாயகமா மணியே. 45

**ஒன்றாகி** யிரண்டாகி யொனறிரண்டி னடுவே
உறறவநு பவமயமா யொளிரடிகள வருநத
அனறிர நடநதிரவில யானுரையு மிடத்தே
அடைநதுகத வநதிறபபித தனபொடெனை யழைதது
நனறீர வெனதுகரத தொனறருளி யிஙகே
நணணிநீ யெணணியவா நடததுகவென றுரைத்தாய
இனறீர வநததனை யுணாததினைநின னருளை
எனபுகலவேன மணிமனறி லிலஙகியசற குருவே. 46

**எங்குமாய்விளங்** குவதாகி யினபமய மாகி
எனனுணாவுக குணாவுகரு மிணையடிகள வருநத
பொஙகுமிர விடைநடநது நானுறையு மிடத்தே
போநதுமணிக கதவுதனைக காப்பவிழககப் புரிநது
தஙகுமடி யேனையழைத் தஙகையிலொன றளித்தே
தயவினொடு வாழகவெனத தனிததிருவாய மலர்நதாய்
இஙகுநின னருடபெருமை யெனனுரைபபேன பொதுவில்
இனபநடம புரிகினற வெனனுடைநா யகனே. 47

**சித்தெவையும்** வியததியுறுஞ் சுத்தசிவ சித்தாயச
சிததமதிற றித்திககுந திருவடிகள வருநத
மததவிர விடைநடநது வநதருளி யடியேன
வாழுமனைத தெருககதவு திறபபித்தங கடைநது
அத்தகவி னெனையழைததெனன னஙகையிலொன றளித்தாய
அனனைபினு மனபுடையாய நினறருளென னெனபேன
முததாகுழுக காணமனறி லினபநடம புரியும
முககணுடை யாநநதச செககர்மணி மலையே. 48

**சகலமொடு** கேவலமுந தாககாத விடத்தே
தற்பரமாய் விளஙகுகினற தாண்மலாகள் வருந்த
பகலொழிய நடுவிரவி னடநதருளி யடியேன
பரியுமிடத தடைநதுமணிக கதவுதிறப் பித்துப்
புகலுறக வருகவென வழைததெனது கரததே
பொருநதவொனறு கொடுததனைநின பொனனருளென னெனபேன
உகலொழியப பெருநதவாக ளுறறுமகிழந தேதத
உயாபொதுவி லினபநட முடையபரம பொருளே. 49

**உள்ளுருகுந்** தருணத்தே யொளிகாட்டி விளங்கும்
உயர்மலர்ச்சே வடிவருந்த வுவந்துநடந் தருளிக்
கள்ளமனத் தேனிருக்கு மிடந்தேடி யடைந்து
கதவுதிறப் பித்தருளிக் களித்தெனையங் கழைத்து
நள்ளுலகி லுனக்கிதுநா நல்கினநீ மகிழ்ந்து
நாளுமுயிர்க் கிதம்புரிந்து நடத்தியென வுரைத்தாய்
தெள்ளுமமு தாயன்பர் சித்தமெலா மினிக்குஞ்
செழுங்கனியே மணிமன்றிற் றிருநடநா யகனே. 50

**தன்னுருவங்** காட்டாத மலவிரவு விடியுந்
தருணத்தே யுதயஞ்செய் தாண்மலர்கள் வருந்தப்
பொன்னுருவத் திருமேனி கொண்டுநடந் தடியேன்
பொருந்துமிடத் தடைந்துகத வந்திறக்கப் புரிந்து
தன்னுருவம் போன்றதொன் றங்கெனையழைத்தென் கரத்தே
தந்தருளி மகிழ்ந்திங்கே தங்குகவென் றுரைத்தாய்
என்னுருவ மெனக்குணர்த்தி யருளியநின் பெருமை
என்னுரைப்பேன் மணிமன்றி லின்பநடத் தரசே. 51

**அண்டவகை** பிண்டவகை யனைத்துமுதித் தொடுங்கும்
அணிமலர்ச்சே வடிவருத்த மடையநடந் தருளிக
கண்டவருங் காணாத நடுவிரவு தனில்யான்
கருதுமிடத் தடைந்துகத வந்திறக்கப் புரிந்து
தொண்டனென வெனையுமழைத் தென்கையிலொன் றளித்தாய்
துரையேநின் னருட்பெருமைத் தொன்மையையென் னென்பேன்
உண்டவர்க ளுணுந்தோறு முவட்டாத வமுதே
உயர்பொதுவி லின்பநட முடையபரம் பொருளே. 52

**அறிவுடையா** ருள்ளகப்போ தலருகின்ற தருணத்
தருண்மணத்தே னாகியுற்ற வடியிணைகள் வருந்தப்
பிரிவுடையே னிருக்குமிடந் தேடிநடந் தடைந்து
பெருங்கதவந் திறப்பித்துப் பேயனெனை யழைத்துச்
செறிவுடையா யிதுவாங்கென் றுதவவுநான் மறுப்பத்
திரும்பவுமென் கைதனிலே சேரவளித் தனையே
பொறிவறியே னளவினிலுன் கருணையையென் னென்பேன்
பொற்பொதுவி னடம்புரியும் பூரணவான் பொருளே. 53

**விடையமொன்றுங்** காணாத வெளிநடுவே யொளியாய்
விளங்குகின்ற சேவடிகண் மிகவருந்த நடந்து
கடையனையுங் குறிக்கொண்டு கருதுமிடத் தடைந்து
கதவுதிறப் பித்தெனது கையிலொன்று கொடுக்க
இடையினது நான்மறுப்ப மறுக்கேலென் மகனே
என்றுபின்னுங் கொடுத்தாய்நின் னின்னருளென் னென்பேன்
உடையபரம் பொருளேயென் னுயிர்த்துணையே பொதுவில்
உய்யும்வகை யருணடஞ் செய்யுமொளி மணியே. 54

**நான்றனிக்குந்** தருணத்தே தோன்றுகின்ற துணையாய்
நான்றனியா விடத்தெனக்குத் தோன்றாத துணையாய்
ஏன்றருளுந் திருவடிகள் வருந்தநடந் தருளி
யானுறையு மிடத்தடைந்து கதவுதிறப் பித்து
ஆன்றவெனை யழைத்தெனது கையிலொன்று கொடுத்தாய்க்
கறிவிலியேன் செய்யுமவ கையறியே னின்கருணை
ஈன்றவட்கு மில்லையென நன்கறிந்தேன் பொதுவில்
இன்பநடம் புரிகின்ற வென்னுயிர்நா யகனே 55

**அருள்விளங்கு** முள்ளகத்தே யதுவதுவாய் விளங்கும்
அணிமலர்ச்சே வடிவருந்த மடையநடந் தருளிப்
பொருள்விளங்கா நடுவிரவி னானுறையு மிடத்தே
போந்துதெருக் காப்பவிழ்க்கப் புரிந்தெனையங் கழைத்துத்
தெருள்விளங்கு மொருபொருளென் செங்கைதனி லளித்தாய்
சிவபெருமான் பெருங்கருணைத் திறத்தினையென் னென்பேன்
மருள்விளங்கி யுணர்ச்சியுறத் திருமணிமன் றிடத்தே
மன்னுயிருக் கின்பருள வயங்குநடத் தரசே 56

**பருவமுறு** தருணத்தே சர்க்கரையுந் தேனும்
பாலுநெய்யு மளிந்தநறும் பழரசமும் போல
மருவுமுள முயிருணர்வோ டெல்லாந்தித் திக்க
வயங்குமடி யிணைகணமிக வருந்தநடந் தருளித்
தெருவடைந்து நானிருக்கு மனைக்காப்புத் திறக்கச்
செய்தருளிப் பொருளொன்றென் செங்கைதனி லளித்தாய்
திருமணிமன் றிடைநடிக்கும் பெருமானின் கருணைத்
திறத்தினையிச் சிறியேனோ செப்புதலெங் ஙனமே. 57

**என்னறிவை** யுண்டருளி யென்னுடனே கூடி
என்னின்ப மெனக்கருளி யென்னையுந்தா னாக்கித்
தன்னறிவாய் விளங்குகின்ற பொன்னடிகள் வருந்தத்
தனிநடந்து தெருக்கதவந் தாழ்திறப்பித் தருளி
முன்னறிவி லெனையழைத்தென் கையிலொன்று கொடுத்த
முன்னவனின் னின்னருளை யென்னெனயான் மொழிவேன்
மன்னறிவுக் கறிவாம்பொன் னம்பலத்தே யின்ப
வடிவாகி நடிக்கின்ற மாகருணை மலையே. 58

**பரயோக** வநுபவத்தே யகம்புறந்தோன் றாத
பரஞ்சோதி யாகுமிணைப் பாதமலர் வருந்த
வரயோகர் வியப்பவடி யேனிருக்கு மிடத்தே
வந்துதெருக் கதவுதனைக் காப்பவிழ்க்கப் புரிந்து
திரயோகர்க் கரிதிதனை வாங்குகவென் றெனது
செங்கைதனி லளித்தாயின் றிருவருளென் னென்பேன்
உரயோக ருளம்போல விளங்குமணி மன்றில்
உயிர்க்கின்பந் தரநடன முடையபரம் பொருளே. 59

சொன்னிறைந்த பொருளுமத னிலககியமு மாகித்
துரியநடு விருநதவடித துணைவருநத நடநது
கொன்னிறைநத விரவினிடை யெழுநதருளிக கதவங
கொளுஙகாபபை யவிழவிததுக கொடியேனை யழைத்து
எனனிறைநத வொருபொருளென கையிலளித தருளி
யெனமகனே வாழகவென வெழிறறிருவாய மலாநதாய
தனனிறைநத நினகருணைத தனமையையென புகலவேன
தனிமனறி லானநதத தாணடவஞசெய யரசே. 60

முத்தியொன்று வியததியொனறு காணமினெனரு கமத்தின
முடிகணமுடித துரைககினற வடிகணமிக வருநதப்
பத்தியொனறு மிலலாத கடைபபுலையேன பொருடடாப
படிறறுளததே னிருககுமிடந தனைததேடி நடநது
சித்தியொனறு திருமேனி காடடிமனைக கதவந
திறபபிததங கெனை யழைததெனை செஙகையிலே மகிழநது
சகதியொனறு கொடுததாயநின றணணருளென னெனபேன
தனிமனறு ளாநநதத தாணடவஞசெய யரசே. 61

எனக்குநன்மை தீமையெனப திரணடுமொதத விடத்தே
இரணடுமொததுத தோனறுகினற வெழிறபதஙகளவருநதத
தனககுநலல வணணமொனறு தாஙகிநடந தருளித
தனிததிரவிற கடைபபுலையேன றஙகுமிடத தடைநது
கனககுமனைத தெருககதவுக காபபவிழககப புரிநது
களிபபொடெனை யழைததெனது கையிலொனறு கொடுதது
உனககினிய வணணமிதென றுரைததருளிச சென்றாய
உடையவநின னருடபெருமை யுரைககமுடி யாதே 62

இம்மையினு டமமையினு மெயதுகினற வினபம
எனைததொனறும வேணடாத வியற்கைவருந தருணம
எமமையினு நிறைசொருப சுததசுகா ரமபம
இயறசொருப சுததசுக வநுபவமென றிரண்டாயச
செமமையிலே விளஙகுகினற திருவடிகள வருநதச
சிறியேனபா லடைநதெனது செஙகையிலொன றளித்தாய
உமமையிலே யானசெயதவம யாதெனவு மறியேன
உயாபொதுவி லினபநட முடையபரம பொருளே. 63

அன்பளிப்ப தொனறுபினன ரினபளிபப தொனறென்
றறிஞரெலா மதிககினற வடிமலர்கள வருநத
எனபளிதத வுடலகடொறு முயிாககுயிரா யிருககும
எமபெருமான நடநதருளிக கதவுதிறப பிததுத்
துனபளிககு நெஞசகததெனை றணைககூவி யழைததுத்
தூயவிள நகைமுகததே துளுமபவெனை நோககி
முன்பளிதத தெனறெனது கையிலொனறை யளிததாய
முனனவநின னருடபெருமை முனனவறி யேனே. 64

**மோகவிருட்** கடல்கடத்தும் புணையொன்று நிறைந்த
மோனசுக மளிப்பதற்குந் துணையொன்றென் றுரைக்கும்
யோகமலர்த் திருவடிகள் வருந்தநடந் தருளி
உணர்விலியேன் பொருட்டாக விருட்டிரவி லடைந்து
போகமனைப் பெருங்கதவந் திறப்பித்துட் புகுந்து
புலையேனை யழைத்தொன்று பொருந்தவெனக் கைகொடுத்தாய்
நாகமணிப் பணிமிளிர வம்பலத்தே நடஞ்செய்
நாயகநின் பெருங்கருணை நவிற்றமுடி யாதே. 65

**காணுகின்ற** கண்களுக்குக் காட்டுகின்ற வொளியாய்க்
காட்டுகின்ற வொளிதனக்குக் காட்டுவிக்கு மொளியாய்ப்
பூணுகின்ற திருவடிகள் வருந்தநடந் தடியேன்
பொருந்துமிடத் தடைந்துகத வந்திறக்கப் புரிந்து
கோணுகின்ற மனத்தாலே நாணுவதேன் மகனே
குறைவறவாழ் கெனமகிழ்ந்து கொடுத்தனையொன் றெனக்கு
மாணுகின்ற நின்னருளின் பெருமையையென் னென்பேன்
மணிமன்றி லானந்த மாநடஞ்செய் யரசே. 66

**ஆறாறு** தத்துவத்தின் சொருபமுத லனைத்தும்
அறிவிக்கு மொன்றவற்றி னப்பாலே யிருந்த
வீறாய தற்சொருப முதலனைத்து மறிவில்
விளக்குவிக்கு மொன்றென்று விளைவறிந்தோர் விளம்பும்
பேறாய திருவடிகள் வருந்தநடந் திரவிற்
பேயடியே னிருக்குமிடத் தடைந்தெனை யழைத்துச்
சோறாய பொருளொன்றென் கரத்தளித்தாய் பொதுவிற்
சோதிநின் தருட்பெருமை யோதிமுடி யாதே. 67

**கருவிகளை** நம்முடனே கலந்துளத்தே யியக்கிக்
காட்டுவதொன் றக்கருவி கரணங்க ளனைத்தும்
ஒருவியப்பாற் படுத்திநமை யொருதனிப்பாக் குவதொன்
றுபயமெனப் பெரியர்சொலு மபயபதம் வருந்தத்
துருவியடி யேனிருக்கு மிடத்திரவி லடைந்து
துணிந்தெனது கையிலொன்று சோதியுறக் கொடுத்து
வெருவியிடே லின்றுமுதன் மிகமகிழ்க வென்றாய
வித்தகநின் திருவருளை வியக்கமுடி யாதே. 68

**ஆதியிலே** கலப்பொழிய வானமுதத்தி யளித்தாங்
கதுவதுவாக் குவதொன்றா மதுவதுவா யாக்குஞ்
சோதியிலே தானுகிச் சூழ்வதொன்றா மென்று
சூழ்ச்சியறிந் தோர்புகலுந் துணையடிகள் வருந்த
வீதியிலே நடந்தடியே னிருக்குமிடந் தேடி
விரும்பியடைந் தெனைக்கூவி விளைவொன்று கொடுத்தாய
பாதியிலே யொன்றான பசுபதிநின் கருணைப்
பணையையறிந் தேனொழியா நணையையடைந் தேனே 69

**இருட்டாய** மலசசிறையி லிருககுநமை யெலலாம
எடுப்பதொனரு மினபமிலலை கொடுபபதொனரு மெனவே
பொருட்டாயா போறறுகினற பொனனடிகள வருநதப்
பொறையிரவில யானிருககு மிடநதேடிப புகுநது
மருட்டாயத திருநதேனைக கூவிவர வழைதது
வணணமொனமறென கைதனிலே மழநதளிததாய நினறன
அருட்டாயப பெருமைதனை யெனனுரைபபேன பொதுவில
ஆநநதத திருநடஞசெய தருளுகினற வரசே. 70

**உன்மனியி** னுளளகததே யொளிருவதொன ருகி
உறறவதன வெளிபபுறததே யோஙகுவதொன ருகிச
சினமயமாய விளஙகுகினற திருவடிகள வருநதச
சிறுநாயேன பொருட்டாக தெருவினடந தருளிப்
பொனமயமாந திருமேனி விளஙகவெணபா லடைநது
பொருளொனறென கைதனிலே பொருநதவளித தனையே
நினமலனே நினனருளை யெனபுகலவேன பொதுவில
நிறைநதவினப வடிவாகி நிருததமிடும பதியே. 71

**ஐவர்களுக்** கைநதொழிலு மளிததிடுவ தொனறும
அததொழிறகா ரணமபுரிநது களிததிடுவ தொனறுந
தெயவநெறி யெனறறிஞர புகழநது புகழந தேததுந
திருவடிகண மிகவருநதத தெருவினடை நடநது
கைவரயா னிருககுமனைக கதவுதிறப பிததுக
களிததெனையங கழைததெனது கையிலொனறு கொடுத்தாய்
சைவமணி மனறிடததே தனிநடஞம புரியுந
தறபரநின னருடபெருமை சாறறமுடி யாதே. 72

**அருளுதிக்குந்** தருணததே யமுதவடி வாகி
ஆநநத மயமாகி யமாநததிரு வடிகள
இருளுதிககு மிரவினிடை வருநதநடந தருளி
யானிருககு மனைககதவந திறபபிததங கடைநது
மருளுதிககு மனததேனை வரவழைதது நோககி
மகிழநதெனது கரததொனறு வழஙகியசற குருவே
தெருளுதிககு மணிமனறி றிருநடஞசெய யரசே
சிவபெருமா னினகருணைத திறததைவியக கேனே. 72

**நான்கண்ட** போதுசுயஞ சோதிமய மாகி
நானபிடிதத போதுமதி னளிநவண்ண மாகி
தேனகொணட பாலெனநான சிநதிககுந தோறும
தித்திபப தாகியெனறன செனனிமிசை மகிழநது
தானகொணடு வைததவநநாள சிலலெனறென னுடமபுந
தகவுயிருங குளிரவிதத தாணமலாகள வருநத
வான்கொணடு நடநதிஙகு வநதெனககு மளிததாய
மனறிநடத தரசேநின மாகருணை வியபபே. 74

**யோகாந்த** மிசையிருப்ப தொன்றுகலாந் தத்தே
உவந்திருப்ப தொன்றெனமெய் யுணர்வுடையோ ருணர்வால்
ஏகாந்தத் திருந்துணரு மிணையடிகள் வருந்த
என்பொருட்டா யானிருக்கு மிடந்தேடி நடந்து
வாகாந்தச் சணிக்கதவந் திறப்பித்தங் கென்னை
வரவழைத்தென் கைதனிலே மகிழ்ந்தொன்று கொடுத்தாய்
மோகாந்த காரமறுத் தவரேத்தப் பொதுவின்
முயங்கிநடம் புரிகின்ற முக்கணுடை யரசே. 75

**மகமந்திர** மறையுமறை யான்மதிக்கு மயனும்
மகிழ்ந்தயனுன் மதிக்குநெடு மாலுநெடு மாலான்
மிகமதிக்கு முருத்திரனு முருத்திரனன் மதிக்கும்
மேலவனு மவன்மதிக்க விளங்குசதா சிவனுந்
தகமதிக்குந் தோறுமவ ரவருள்ளத்தின் மேலுந்
தலைமேலு மறைந்துறையுந் தாண்மலர்கள் வருந்த
அகமதிக்க நடந்தென்பா லடைந்தொன்று கொடுத்தாய்
அம்பலத்தி லாடுகின்ற யருட்பெருமை வியப்பே. 76

**இருவினைபொப்** பாகிமல பரிபாகம் பொருந்தல்
எத்தருண மத்தருணத் தியன்ஞான வெளியாம்
உருவினையுற் றுள்ளகத்தும் பிரணவமே வடிவாய்
உற்றுவெளிப் புறத்துமெழுந் துணர்த்தியுரைத் தருளுந்
திருவடிகண் மிகவருந்த நடந்தெளியேன் பொருட்டாத்
தெருக்கதவந் திறப்பித்துச் சிறியேனை யழைத்துக்
குருவடிவங் காட்டியொன்று கொடுத்தாயென் கரத்தே
குணக்குன்றே நின்னருட்கென் குற்றமெலாங் குணமே. 77

**தம்மடியார்** வருந்திலது சகியாதக் கணத்தே
சார்ந்துவருத் தங்களெலாந் தயவினொடு தவிர்த்தே
எம்மடியா ரென்றுகொளு மிணையடிகள் வருந்த
இரவினிடை நடந்தெளியே னிருக்குமிடத் தடைந்து
கம்மடியர்க் கதவுபெருங் காப்பவிழப் புரிந்து
கடையேனை யழைத்தனது கையிலொன்று கொடுத்து
நம்மடியா னென்றெனையுந் திருவுளத்தே யடைத்தாய்
நடம்புரியு நாயகநின் னற்கருணை வியப்பே. 78

**உம்பருக்குங்** கிடைப்பரிதா மணிமன்றிற் பூத
உருவடிவங் கடந்தாடுந் திருவடிக ளிடத்தே
செம்பருக்கைக் கல்லுறுத்தத் தெருவினடந் திரவில்
தெருக்கதவந் திறப்பித்துச் சிறியேனை யழைத்து
வம்பருக்குப் பெறலரிதா மொருபொருளென் றெத்தே
மகிழ்ந்தளித்துத் துயர்தீர்ந்து வாழ்கவென வுரைத்தாய்
இம்பருக்கோ வும்பருக்கு மிதுவியப்பா மெங்கள்
இறைவநின தருட்பெருமை யிசைப்பதெவ னணிந்தே. 79

**உருவமொரு** நானகாகி யருவமுமவ் வளவாய்
உருவருவொன் றாகியிவை யொன்பானுங் கடந்து
துருவமுடி யாப்பரம துரியநடு விருந்த
சொருபவநு பவமயமாந் துணையடிகள் வருந்தத்
தெருவமிசை நடந்துசிறு செமபரற்கல் லுறுத்தச்
சிறியேனபா லடைந்தெனது செங்கையிலொன் றளித்தாய்
மருவவினி யாயமன்றி னடமபுரிவாய கருணை
மாகடலே நினபெருமை வழுத்தமுடி யாதே. 80

**பக்குவந்தா** லுயர்வாழைப் பழங்கனிந்தாற் போலும்
பரங்கருணை யாற்கனிந்த பத்தாசித்கந் தனிலே
பொக்கமிலப் பழந்தனிலே தெள்ளமுதங் கலந்தாற்
போற்கலந்து தித்திக்கும் பொன்னடிகள் வருந்த
மிக்கவிரு ளிரவினிடை நடந்தெளியே னிருக்கும்
வியன்மனையி லடைந்துக்க வந்திறக்கப் புரிந்து
ஒக்கவெனை யழைத்தொன்று கொடுத்திங்கே யிருவென
றுரைத்தனையெம் பெருமானின் னுயர்கருணை வியப்பே 81

**உளவறிந்தோர்** தமக்கெல்லா முபநிடதப் பொருளாய
உளவறியார்க் கிகபரமு முறுவிக்கும் பொருளாய்
அளவறிந்த வறிவாலே வறிந்திடநின் றிடும்
அடிமலர்கள் வருந்தியிட நடந்திரவி லடைந்து
களவறிந்தேன் றனைக்கூவிக் கதவுதிறப் பித்துக்
கையிலொன்று கொடுத்தாய்நின் கருணையையென் னென்பேன்
விளவறிந்தோ னயனமுதலோர் பணிந்தேத்தப் பொதுவில்
விளங்குநடம் புரிகின்ற துளங்கொளிமா மணியே. 82

**எவ்வுலகு** மெவ்வுயிரு மெச்செயலுந் தோன்றி
இயங்குமிட மாகியெல்லா முயங்குமிட மாகித்
தெவ்வுலகு நண்புறக்குஞ் சமனைக்கக் கண்ட
சித்தர்கட்குஞ் சித்தத்தே தித்திக்கும் பதங்கள்
இவ்வுலகில் வருந்தநடந் தெனபொருட்டா விரவில்
எழிற்கதவந் திறப்பித்தங் கெனகையிலொன் றளித்தாய்
அவ்வுலக முதலுலக மனைத்துமகிழந் தேத்த
அம்பலத்தே நடமபுரியுஞ் செம்பவளக் குன்றே. 83

**மானினொடு** மோகினியு மாமாயை யுடனே
வைந்துவமு மொன்றினொன் றதிந்தசைய வசைத்தே
ஊனினொடு முயிருணர்வுங் கயிந்துகலப் புறுமா
றுறுவித்துப் பினகருமம் வொப்புவருந் தருணந்
தேனினொடு கலந்தவமு தெனருசிக்க விருந்த
திருவடிகள் வருந்தநடந் தடியேனபா லடைந்து
வானினொடு விளங்குபொரு ளொனறெனக்கு மளித்தாய்
மன்றினடத் தரசேநின் மாகருணை வியப்பே 84

**பசுபாச** பந்தமறும் பாங்குதனைக் காட்டிப்
பரமாகி யுள்ளிருந்து பற்றறவும் புரிந்தே
அசமான மானசிவா னந்தவநு பவமும்
அடைவித்தவ் வநுபவந்தா மாகியசே வடிகள்
வசுமீது வருந்தியிட நடந்திடியே னிருக்கும்
மனையையடைந் தணிகதவந் திறப்பித்து நின்று
விசுவாச முறவெனையங் கழைத்தொன்று கொடுத்தாய்
விடையவநின் னருட்பெருமை யென்புகல்வேன் வியந்தே

**ஆதியுமா** யந்தமுமாய் நடுவாகி யாதி
அந்தநடு வில்லாத மந்தணவான் பொருளாய்ச்
சோதியுமாய்ச் சோதியெலாந் தோன்றுபர மாகித்
துரியமுமாய் விளங்குகின்ற துணையடிகள் வருந்த
பாதியிர விடைநடந்து நானிருக்கு மிடத்தே
படர்ந்துதெருக் கதவங்காப் பவிழ்த்திடவும் புரிந்து
ஓதியிலங் கெனையழைத்தென் கரத்தொன்று கொடுத்தாய்
உடையவநின் னருட்பெருமை யென்னுரைப்பே னுவந்தே.

**பாடுகின்ற** மறைகளெலா மொருபுறஞ்சூழ்ந் தாடப்
பத்தரொடு முத்தரெல்லாம் பார்த்தாடப் பொதுவில்
ஆடுகின்ற திருவடிகள் வருந்தநடந் தடியேன்
அடையுமிடத் தடைந்திரவிற் காப்பவிழ்க்கப் புரிந்து
நாடுகின்ற சிறியேனை யழைத்தருளி நோக்கி
நகைமுகஞ்செய் தென்கரத்தே நலக்கிணையொன் றீதல்
வாடுகின்ற வாட்டமெலாந் தவிர்ந்துமகிழ் கின்றேன்
மன்னவநின் பொன்னருளை யென்னென்வாழ்த் துவனே.

**எம்மதத்தி** லெவரெவர்க்கு மியைந்தவநு பவமாய்
எல்லாமா யல்லவுமா யிருந்தபடி யிருந்தே
அம்மதப்பொன் னம்பலத்தி லானந்த நடஞ்செய்
அரும்பெருஞ்சே வடியிணைக ளசைந்துமிக வருந்த
இம்மதத்தி லென்பொருட்டா யிரவினடந் தருளி
எழிற்கதவந் திறப்பித்தங் கெனையழைத்தென் கரத்தே
சம்மதத்தா லொன்றளித்த தயவினையென் புகல்வேன்
தம்மையறிந் தவரறிவின் முன்னுமொளி மணியே. 88

**பூதவெளி** கரணவெளி பகுதிவெளி மாயா
போகவெளி மாமாயா யோகவெளி புகலும்
வேதவெளி யபரவிந்து வெளியபர நாத
வெளியேக வெளிபரம வெளிஞான வெளிமா
நாதவெளி சுத்தவெறு வெளிவெட்ட வெளியா
நவில்கின்ற வெளிகளெலா நடிக்குமடி வருந்த
ஏதவெளி யேன்பொருட்டா நடந்தென்பா லடைந்தே
என்கையிலொன் றளித்தனைநின் னிரக்கமெவர்க் குளதே

வானதுவாய்ப் பசுமலமபோய்த் தனித்துநிற்கு தருணம்
வயஙகுபரா நநதசுகம விளைநதுகொளளுந தருணந
தானதுவா யதுதானுயச சகசமுறுந தருணந
தடையறற வநுபவமாந தனமையடி வருநத
மானதுவாய நடநதெளியே னிருககுமிடத் தடைநது
மணிககதவந திறபபிதது மகிழநதெனையங கழைத்து
ஆனதொரு பொருளளிததாய நினனருளென னெனபேன்
அமபலததே நடமபுரியு மெமபெருஞசோ தியனே. 90

புன்றலையென் றலையெனநா னறியாம லொருநாள
பொருததியபோ தினிறசிவநது பொருநதியபொன் னடிகள்
இனறலைவின் மிகசசிவநது வருநதநடந தெளியேன்
இருககுமிடத் தடைநதுகதவ வநதிறககப புரிநது
மன்றலினங கெனையழைததென கையிலொனறு கொடுத்தாய்
மனனவநின பெருஙகருணை வண்மையையென னென்பேன்
பொன்றலிலாச சிததாமுததா போறறமணி மன்றிற
புயஙகநடம புரிகினற வயஙகொளிமா மணியே. 91

தஞ்சமுறு முயிர்ககுணர்வா யினபமுமாய நிறைநத
தமபெருமை தாமறியாத் தனமையவா யொருநாள
வஞ்சகனேன புனறலையில வைததிடவுஞ சிவநது
வருநதியசே வடிபினனும வருநதநடந தருளி
எஞசலிலா விரவினிடை யானிருககு மிடஞசோந
தெழிறகதவந திறபபித்தங கெனையழைத்தொன றளித்தாய்
விஞ்சுபரா நநதநடம வியனபொதுவிற புரியும
மேலவநின னருடபெருமை விளமபலெவன வியநதே. 92

எழுத்திறெடு பதமாகி மநதிரமாயப் புவந
மெலலாமாய்த் தததுவமா யியமபுகலை யாகி
வழுத்துமிவைக குளளாகிப் புறமாகி நடத்தும
வழியாகி நடததுவிககு மனனிறையு மாகி
அழுத்துறுமிங் கிவையெலலா மல்லனவா யப்பா
லாகியதற கபபாலு மானபதம வருநத
இழைத்துநடந திரவிலென்பா லடைநதொனறு கொடுத்தாய்
எமபெருமா னினபெருமை யெனனுரைப்பேன வியந்தே.

மாவின்மணப் போர்விடைமே னநதிவிடை மேலும
வயஙகியனபர் குறைதவிாத்து வாழவளிபப தனறிப்
பூவினமணம போலுயிருக குயிராகி நிறைநது
போகமளித தருளகினற பொனனடிகள வருந்தத்
தாவிநடந திரவினமனைக கதவுதிறப பிததே
தயவுடனங கெனையழைததுத தககதொனறு கொடுத்தாய்
நாவினமணந துறபபுலவா வியநதேததும பொதுவில
நடமபுரியு நாயகநின னறகருணை யிதுவே 94

**மணப்போது** வீற்றிருந்தான் மாலவன்மற் றவரும்
மனவழுக்கா றறச்சிறியேன் வருந்தியநா ளந்தோ
கணப்போதுந் தரியாமற் கருணையடி வருந்தக்
கங்குலிலே நடந்தென்னைக் கருதியொன்று கொடுத்தாய்
உணப்போது போக்கினன்முன் னுளவறியா மையினல்
உளவறிந்தே னிந்நாளென் னுள்ளமகிழ் வுற்றேன்
தணப்போது மறைகளெலாந் தனித்தனிநின் றேத்தத்
தனிமன்றி லாநந்தத் தாண்டவஞ்செய் யரசே. 95

**நடங்கமலக்** கண்குறுகி நெடுங்கமலக் கண்விளங்கும்
நல்லதிரு வடிவருந்த வல்லிரவி னடந்து
தொடுங்கதவந் திறப்பித்துத் துணிந்தெனையங் கழைத்துத்
துயரமெலாம் விடுகவிது தொடுகவெனக் கொடுத்தாய்
கொடுங்குணத்தே னளவினிலென் குற்றமெலாங் குணமாக்
கொண்டகுணக் குன்றேநின் குறிப்பினையென் புகல்வேன்
இடுங்கடுக வென்றுணர்த்தி யேற்றுகின்ற வறிவோர்
ஏத்தமணிப் பொதுவிலருட் கூத்துடைய பொருளே. 96

**வெய்யபவக்** கோடையிலே மிகவிளைத்து மெலிந்த
மெய்யடியர் தமக்கெல்லாம் விரும்புகுளிர் சோலைத்
துய்யநிழ லாயமுதாய் மெலிவனைத்துந் தவிர்க்கும்
துணையடிகண் மிகவருந்தத் துணிந்துநடந் தடியேன்
உய்யநடு விரவினில்யா னிருக்குமிடத் தடைந்தே
உயர்கதவந் திறப்பித்தங் குவந்தழைத்தொன் றளித்தாய்
வையகமும் வானகமும் வாழமணிப் பொதுவின்
மாநடஞ்செய் யரசேநின் வண்மையெவர்க் குளதே. 97

**சிறியவனேன்** சிறுமையெலாந் திருவுளங்கொள் ளாதென்
சென்னிமிசை யமர்ந்தருளுந் திருவடிகள் வருந்தச்
செறியிரவி னடந்தணைந்து நானிருக்கு மிடத்தே
தெருக்கதவந் திறப்பித்துச் சிறப்பினெனை யழைத்துப்
பிறிவிலதிங் கிதுதனைநீ பெறுகவெனப் பரிந்து
பேசியொன்று கொடுத்தாய்நின் பெருமையையென் னென்பேன்
பொறியினற வோர்துதிக்கப் பொதுவினடம் புரியும்
பொருளேநின் னருளேமெய்ப் பொருளெனத்தேர்ந் தனனே.

**அடிநாளி** லடியேனை யறிவுகுறிக் கொள்ளா
தாட்கொண்டென் சென்னிமிசை யமர்ந்தபதம் வருந்தப்
படிநாளி னடந்திரவி லடைந்தருளித் தெருவிற்
படர்கதவந் திறப்பித்துப் பரிந்தெனையங் கழைத்துப்
பிடிநாளு மகிழ்ந்தெனது மனங்கொண்ட படியே
பேரறஞ்செய் துறுகவெனப் பேசியொன்று கொடுத்தாய்
பொடிநாளு மணிந்துமணிப் பொதுவினடம் புரியும்
பொருளேநின் னருளேமெய்ப் பொருளெனத்தேர்ந் தனனே.

**உலகியலோ** டருளியலு மொருஙகறியச சிறியேன
உணர்விலிருந துணாததியென துயிாககுயிராய விளஙகித
திலகமெனத திகழுநதெனது சென்னிமிசை யமாநத
திருவடிகள வருநதநடை செயதருளி யடியேன
இலகுமனைக கதவிரவில திறபபிததஙகு கெனனை
இனிதழைததொன் றளிததுமகிழந தினனுநெடுங காலம
புலவாதொழ வாழகவெனறுய பொதுவினடம புரியும
பொருளேநின னருளேமெயப பொருளெனததேர்ந தனனே.

திருச்சிற்றம்பலம் 100

---

மூன்ருவது

# பிரசாதமாலை

எணசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருததம

திருச்சிற்றம்பலம்

**திருவுருக்கொண்** டெழுநதருளிச சிறியேனமுன னடைநது
திருநீறறுப் பையவிழததுச செஞசுடாபபூ வளிககத
தருவுருககொண் டெதிாவணஙகி வாஙகியநான மீட்டுந
தயாநிதியே திருநீறுந தருகவெனக கேடப
மருவுருககொண டனறளிததாந திருநீறின றுனககு
மகிழநதளிததா மிவையெனறு வாயமலாநது நினறுய
குருவுருககொண டமபலததே யருணடகம புரியுங
குருமணியே யெனனைமுனனுட கொணடகுணக குனறே. 1

**என்வடிவந்** தழைபபவொரு பொனவடிவந தரிததே
எனமுனனடைந தெனைநோககி யிளநகைசெய தருளித
தனவடிவத திருநீறறுத தனிபபையவிழத தெனககுத
தகுசுடாபபூ வளிககவுநான றுனவாஙகிக களிததது
மினவடிவப பெருநதகையே திருநீறுந தருதல
வேண்டுமென முனனரது விருமபியளித தனநாம
உனவடிவிற காணடியென வுரைததருளி நினறுய
ஒளிநடஞ்செய யமபலததே வெளிநடஞ்செய யரசே. 2

**அழகுநிறைந்** திலகவொரு திருமேனி தரிததே
அடியேனமுன னெழுநதருளி யருணகைகொண டடியார்
கழகநடு வெனையிருததி யவாககெலலா நீறு
களிததருளி யெனனளவிற கருணைமுக மலர்நது
குழகியறசெஞ சுடாபபூவைப பொககணததி லெடுததுக
கொடுததருளி நினறனைநின குறிபபறியேன குருவே
மழகளிறறி னுரிவிளஙக மணிபபொதுவிற சோதி
மயவடிவோ டினபநடம வாயநதியறறும பதியே 3

விலைகடந்த மணியெனவோர் திருமேனி தரித்து
வினையேன்முன் னெழுந்தருளி மெய்யடியார் விரும்பக்
கலைகடந்த பொருட்கெல்லாங் கரைகடந்து நாதக்
கதிகடந்த பெருங்கருணைக் கடைக்கண்மலர்ந் தருளி
அலைகடந்த கடன்மலர்ந்த மணச்செழும்பூ வடியேன்
அங்கைதனி லளித்ததனி னருட்குறிப்பே தறியேன்
மலைகடந்த நெடுந்தோள் விதழியசைந் தாட
மன்றினடம் புரிகின்ற வள்ளலருட் குருவே 4

உலர்ந்தமரந் தழைக்குமொரு திருவுருவந் தாங்கி
உணர்விலியேன் முன்னருவந் துறுகருணை துளும்ப
மலர்ந்தமுகங் காட்டிநின்று திருநீற்றுப் பையை
மலர்க்கரத்தா லவிழ்த்ததங்கு வதிந்தவர்கட் கெல்லாம்
அலர்ந்ததிரு நீறளித்துப் பின்னரென்றன் கரத்தில்
அருணமணப் பூவளித்ததனி னருட்குறிப்பே தறியேன்
கலந்தவரைக் கலந்துமணிக் கனகமன்றி னடஞ்செய்
கருணைநெடுங் கடலேயென் கண்ணமர்ந்த வொளியே 5

பிழையலதொன் றறியாத சிறியேன்முன் புரிந்த
பெருந்தவமோ திருவருளின் பெருமையிதோ வறியேன்
மழையெனநின் றிலகுதிரு மணிமிடற்றிற் படிக
வடந்திகழ நடந்துகுரு வடிவதுகொண் டடைந்து
விழைவினொடென் னெதிர்நின்று திருநீற்றுக் கோயில்
விரித்தருளி யருணமணப் பூவிளக்கமொன்று கொடுத்தாய்
குழையசையச் சடையசையக் குலவுபொன்னம் பலத்தே
கூத்தியற்றி யென்னைமுன்னுட் கொண்டசிவக் கொழுந்தே.

முத்தேவ ரழுக்காற்றின் மூழ்கியிடத் தனித்த
முழுமணிபோன் றொருவடிவென் முன்கொடுவந் தருளி
எத்தேவர் தமக்குமிக வரியவெனு மணப்பூ
என்கரத்தே கொடுத்ததனி னெண்ணமீதென் றறியேன்
சித்தேயென் பவருமொரு சத்தேயென் பவருந்
தேறியபின் னொன்றாகத் தெரிந்துகொள்ளும் பொதுவில்
அத்தேவர் வழுத்தவின்ப வுருவாகி நடஞ்செய்
ஆரமுதே யென்னுயிருக் கானபெருந் துணையே. 7

தெள்ளமுத மனையவொரு திருவுருவந் தாங்கிச்
சிறியேன்முன் னெழுந்தருளிச் செழுமணப்பூ வளித்தாய்
உள்ளமுத மாகியநின் றிருக்குறிப்பே துணரேன்
உடையவனே யுடையவனே யுலகுணரா வொளியே
கள்ளமிலா வறிவாகி யவ்வறிவுக் கறிவாய்க்
கலந்துநின்ற பெருங்கருணைக் கடலேயென் கண்ணே
கொள்ளுதொறுங் கரணமெலாங் கரைந்துகனிந் தினிக்குங்
கொழுங்கனியே கோற்றேனே பொதுவிளங்குங் குருவே

**கண்விருப்பங்** கொளககரணங கனிந்துகனிந துருகக
கருணைவடி வெடுத்தருளிக கடையேனமுன கலநது
மண்விருப்பங கொளுமணபபூ மகிழநதெனககுக கொடுத்து
வாழகவென நினறனைநின மலாககுறிபபே தறியேண
பெண்விருபபந தவிாககுமொரு சிவகாம வலலிப
பெணவிருபபம பெறவிருவா பெரியருளங களிப்பப்
பண்விருபபந தருமறைகள பலபலநின றேத்தப்
பரமசிதம பரநடநம பயினறபசு பதியே 9

**உன்னுதற்கு** முணர்வதறகு முவட்டாத வடிவம
ஒனறெடுத்து மெயயனப ருவககவெழுந தருளி
முனனுதறகோ ரணுததுணையுந தரமிலலாச சிறியேன்
முகநோககிச செழுமணபபூ முகமலாநது கொடுத்தாய்
துனனுதறகிங கரிதாநின றிருவுளளக குறிப்பைத
துணிநதறியேன எனனினுமோா துணிவினுவக கின்றேன்
பொன்னுதறகுத திலகமெனுஞ சிவகாம வலலிப
பூவையொரு புறஙகளிப்பப பொதுநடஞசெய பொருளே. 10

திருச்சிற்றம்பலம்

---

நான்காவது

# ஆநந்தமாலை

எணசீரக கழிநெலடி ஆசிரிய விருததம

திருச்சிற்றம்பலம்

**திருவருடுந்** திருவடிபபொற சிலமபசைய நடநதென்
சிநதையிலே புகுநதுநினபாற சோநதுகலந திருநதாள்
தெருமரலற றுயாநதமறைச சிரததமாநத புநிதை
சிவகாம வலலிபெருந தேவியுளங களிபபப
பொருவருமெய யனபுடையா ாிருவருஙகண டுவநது
போறறமணிப பொதுவிலடம புரிகினற துரையே
பருவரலற றடிச்சிறியேன பெருவரமபெற றனையே
பாடுகினறேன பெரியவருட பருவமடைந தனனே. 1

**சண்பைமறைக் கொழுந்து**மகிழ தரவமுதங கொடுத்தாள்
தயவுடையா ளெனையுடையாள சாவசகதி யுடையாள
செண்பகபபொன மேனியினள செயயமலாப் பதததாள்
சிவகாம வலலிபெருந தேவியுளங களிபபப
பண்பகர்பொன னமபலததே யாநநத நடஞ்செய
பரமபரநின றிருவருளைப பாடுகினறேன மகிழ்ந்து
எண்பகாகுற் றஙகளெலலாங குணமாகக கொளளுமு
எநதுரையென றெணணுகினற வெணணமத னலே 2

1 இருவர் பெரியா எனபது—பதஞ்சலி, வியாக்கிரமபாதர்.

